# மின்னூல் வெளியீடு

மின்னூல் வெளியீட்டாளர்: http://freetamilebooks.com

அட்டைப்படம்: லெனின் குருசாமி - guruleninn@gmail.com

மின்னூலாக்கம்: ஐஸ்வர்யா லெனின் - aishushanmugam09@gmail.com

மின்னூலாக்க செயற்திட்டம்: கணியம் அறக்கட்டளை - kaniyam.com/foundation

## Ebook Publication

Ebook Publisher: http://freetamilebooks.com

Cover Image: Lenin Gurusamy - guruleninn@gmail.com

Ebook Creation: Iswarya Lenin - aishushanmugam09@gmail.com

Ebook Project: Kaniyam Foundation - kaniyam.com/foundation

# பொருளடக்கம்

# 1. இணையவெளித் துன்புறுத்தல்கள் -- சட்டப் பாதுகாப்பிற்கான சாத்தியங்களும் சவால்களும்: கோசலை மதன்

ஒக்டோபர் 2020/சிறப்புக் கட்டுரை

BY கோசலை மதன்

**அறிமுகம்**

நவீன தொடர்பு சாதனங்களின் புதிய பரிணாமங்களை அடுத்து மனித சமூகத்தின் கல்வி, பொருளதாரம், சமூகக் கட்டமைப்பு, தனிமனித உறவு முதலான இன்னோரன்ன தளங்களில் பல நேர்மறைத் தாக்கங்கள் ஏற்படுத்தப்பட்டிருப்பதை நாம் வெளிப்படையாகவே அறிந்துகொள்ள முடிகிறது. கொரோனா வைரஸ் தொற்றுக் காரணமாக உலகநாடுகள் பலவற்றிலும் வழமையான இயங்குநிலை பாதிக்கப்பட்டு இருந்த சூழ்நிலையில் கல்வி, பொருளாதாரம் முதல் நாளாந்த செயற்பாடுகள் வரை இணையச் சாதனங்களின் துணையோடு ஓரளவிற்காவது இயல்புநிலையில் செயற்பட்டிருந்தமை மிக அண்மைய உதாரணமாகும்.

இணையச் சாதனங்களின் பாவனையால் கிடைக்கக்கூடிய நன்மைகளுக்குச் சமாந்தரமான வகையில் பல தீமைகளையும் மனித சமூகம் முகங்கொடுக்க வேண்டியிருப்பதுவும் மறுபுறத்தில் மனங்கொள்ளப்படல் வேணடியது அவசியமாகும்.

இணையச் சாதனங்களின் தன்மை, அவற்றைப் பயன்படுத்துபவர்களின் மனநிலை, பயன்படுத்தப்படும் விதம் ஆகியவை காரணமாக தனிமனிதர்களையும் குழுவினரையும் ஒட்டுமொத்த சமூகத்தையும் துன்பத்தில் ஆழ்த்தக்கூடியதான பல்வேறுவிதமான பிறழ் நடவடிக்கைகள் நிகழ்த்தப்பட்டு வருகின்றன. இணையவழித் துன்புறுத்தல்களின் பாரதூரத்தன்மை உணரப்பட்டிருக்கின்ற ஒரு சூழ்நிலையில் அதன் வடிவங்கள், விளைவுகள், தீர்வுகள் முதலானவை தொடர்பில் சட்டப்பின்னணியிலான ஆய்வொன்றை இக்கட்டுரையாளர் செய்ய முனைந்திருக்கிறார்.

**இணையவழிச் சாதனங்கள்**

கணணியை மையப்படுத்திய தொடர்பாடல்கள் இடம்பெறும் சுற்றாடலானது இணைவெளி எனப் பொதுவாக அறியப்படுகிறது. இணையவெளியில் கூகிள் (Google), யாகூ (Yahoo), முகப்புத்தகம் (Facebook), ருவிற்றர் (Twitter) ஆகிய சாதனங்களின் அதிகரித்த பாவனை காணப்படுகின்றது. இவை தவிர வைபர் (Viber) வட்ஸ்அப் (WhatsApp) முதலான

தளங்களும் அதிகளவில் பயன்பாட்டிலுள்ளன.

இச்சாதனங்களை சமூக ஊடகங்கள், விளையாட்டுத் தளங்கள் (Gaming platforms), தகவல் அனுப்பும் தளங்கள் (Messaging platforms) மற்றும் கைத்தொலைபேசிகள் எனப் பொதுவில் வகைப்படுத்திக்கொள்ள முடியும்.

சிறுவர்கள் முதல் பெரியவர்கள் வரை இத்தகைய இணையச் சாதனங்களைப் பயன்படுத்துகின்றனர். UNICEF ஐச் சேர்ந்த Ramiz Behbudov இன் கருத்துப்படி இலங்கையில் 6ம் தரத்திலிருந்து 12ம் தரத்தில் கல்விகற்கும் மாணவர்களில் 90சதவீதமானவர்கள் நவீன தொடர்பு சாதனங்களை அணுகும் வாய்ப்பினைப் பெற்றிருக்கிறார்கள் எனத் தெரியவருகிறது. இவர்களுள் 53 சதவீதமானவர்கள் இணையவசதியைப் பெற்றுக் கொண்டிருப்பதாகவும் சொல்லப்படுகிறது. 39 சதவீதமானவர்கள் இணைய வசதியற்ற தொடர்பாடல் சாதனங்களைப் பயன்படுத்துகிற பொழுதிலும் இணையப் பாவனையைக் கொண்டிருக்கவில்லை எனக் கூறுகிறார். இலங்கையில் 67வீதமான இணையப்பாவனையாளர்கள் ஆண்கள் என UNICEF இன் அறிக்கை தெரிவிக்கிறது. இலங்கையைப் பொறுத்தவரை அதிபிரசித்தமான சமூக ஊடகமாக முகப்புத்தகமும் (61.7%) அடுத்தபடியாக வட்ஸ் அப்பும் (whatsapp) காணப்படுகிறது.

**இணையவெளித் துன்புறுத்தல்கள்**

துன்புறுத்தல்களும், வன்முறைகளும் தனிமனித மற்றும் சமூகத் தாக்குதல்களும் இணையச் சாதனங்களின் அறிமுகம் மற்றும் பாவனைக்கு முற்பட்ட காலத்திலேயே ஆரம்பித்திருந்தன. இன்றைக்கும் தொடர்கின்றன. இணையத்தோடு தொடர்புபடாமல் நிகழ்த்தப்படுகிற அவமதிப்பு, பாலியல் தொந்தரவு, மிரட்டல், வதந்திகளைப் பரப்புதல், தற்கொலைக்குத் தூண்டுதல் முதலான குற்றங்களுக்கு மேலதிகமாக இத்தகைய குற்றங்கள் இணையச் சாதனங்களின் துணையோடு புரியப்படுவதானது நவீன சவால்களுள் ஒன்றாகும்.

மேலே விபரித்த இணையச் சாதனைகள் மூலமாக பல்வேறு தன்மைத்தான துன்புறுத்தல்கள் நிகழ்த்தப்படுகின்றன. பொய்ச்செய்திகளைப் பரப்புதல், முகம் சுழிக்க வைக்கும் படங்களைப் பிரசுரித்தல், மனம் புண்படத்தக்க செய்திகளை அல்லது அச்சுறுத்தல்களை அனுப்புதல், ஆள்மாறாட்டம் செய்தல், அதன் பின்னர் ஆள்மாறாட்டம் செய்யப்பட்டவர் சார்பில் மற்றவர்களுக்குச் செய்தி அனுப்புதல், வெறுப்புப் பேச்சுப் பேசுதல், பாலியல் கருத்திடல், நிர்வாணப் படங்கள் பிரசுரிக்கப்படும் அல்லது பாலியல் தகவல்கள் பகிரப்படும் என அச்சுறுத்தி பாலியல் நடத்தைகளில் ஈடுபடக் கட்டாயப்படுத்துதல், இணையத்தில் இல்லாத போதும் (offline) குற்றங்களைச் செய்யக்கூடிய வகையில் வாய்ப்புக்களை (இணையத்தளத்தைப் பாவித்து) உருவாக்கிக் கொள்ளுதல் என்பன அடங்கும்.

இத்தகைய துன்புறுத்தல்கள் ஆரம்பத்தில் பகிடிகளாகவே ஆரம்பிக்கின்றன. பின்னர்

தனிமனித கௌரவத்தைப் பொதுவெளியில் சேதப்படுத்துகின்ற மோசமான கைங்கரியமாக மாறிவிடுகின்றன. இணையவெளித் துன்புறுத்தல்கள் தனிமனிதர்களையும் குழுக்களையும் இலக்கு வைத்து அவர்களுக்குப் பாதிப்பை ஏற்படுத்தும் நோக்கில் திட்டமிட்டு நிகழ்த்தப்படுபவையாகும். இத்துன்புறுத்தல்கள் சம்பந்தப்பட்டவர்களை உடல்ரீதியாகவும், உளரீதியாகவும், உணர்வுரீதியாகவும் பாதிக்கவல்லது என்பதோடு இப்பபாதிப்புகள் நீண்டகாலம் தொடரக் கூடியன என்பதுவும் கவலைக்குரிய விடயமாகும். தான் சிரிப்புக்கிடமான ஒருவராக மாற்றப்படுவதும் துன்புறுத்தப்படுவதும் ஒருவனை அல்லது ஒருத்தியை மிகப்பெரிய அளவில் பாதிக்க இடமுண்டு. பிரச்சினைக்கு முகங்கொடுக்கும் தைரியத்தை இழக்கச் செய்வதோடு பிரச்சினை பற்றிப் பேசுவதற்கான துணிவையும் இழக்கச் செய்து விடுகிறது. இத்துன்பம் உயிரை மாய்த்துக்கொள்ளும் மோசமான விளைவுக்கு இட்டுச் செயன்ற சம்பவங்களும் இடம்பெறாமல் இல்லை. இணையவெளியில் இத்தகைய துன்புறுத்தல்கள் மீளமீள (repeatedly) நிகழ்த்தப்படுவதே அதன் பாரதூரத்தன்மைக்கான அடிப்படைக் காரணமாகும்.

இணையவெளித் துன்புறுத்தல்களால் சிறுவர்கள் மோசமாகப் பாதிக்கப்பட்டுள்ளார்கள். சிறுவர்களின் சுகாதார மற்றும் உணர்வுசார் நலன்கள் பாதிக்கப்படுவதோடு கல்வி நடவடிக்கைகளும் பாரியளவில் பாதிக்கப்படுவதாக ஆய்வுகள் கூறுகின்றன. இவை அவர்களது வாழ்வில் நீண்டகாலத் தாக்கங்களை தவிர்க்க முடியாதபடி ஏற்படுத்துகின்றன. சிறுவர்களின் அதிகரித்த இணையப்பாவனையே அவர்களை இணையத் துன்புறுத்தல்களின் பலிக்கடாவாக்கியிருக்கிறது.

பெண்கள் பலர் இணையவெளித் துன்புறுத்தல்களுக்கு உள்ளாகியுள்ளனர். இணையவெளித் துன்புறத்தல்கள் தொடர்பாக யாழ்மாவட்டத்திலுள்ள புதுமுக பெண் அரசியல்வாதிகள் சிலரோடு கலந்துரையாடக் கிடைத்த சந்தர்ப்பத்தின்போது அவர்கள் பல்வேறுவிதமான துன்புறுத்தல்களுக்கு ஆளாகியிருந்தமையை அறிய முடிந்தது. ஒருவரது பெயரில் போலி முகப்புத்தகக் கணக்கொன்று உருவாக்கப்பட்டு சர்ச்சைக்குரிய கருத்துக்கள் பகிரப்பட்டமை ஒரு உதாரணமாகும். மற்றொரு பெண் அரசியல்வாதிக்கு கொரோனா தொற்று இருப்பதாக பொய்யான செய்தி பரப்பப்பட்டு விளைவாக பல அசௌகரியங்களை எதிர்கொள்ள நேரிட்டது. இன்னொருவரது விடயத்தில் உத்தியோக செயற்பாட்டின்போது எடுக்கப்பட்ட புகைப்படம் ஒன்று முகநூலில் பகிரப்பட்டு குறித்த படத்தில் இருந்த ஆணிற்கும் குறித்த பெண் அரசியல்வாதிக்கும் இருக்கும் உறவை விமர்சித்து பின்னூட்டல்கள் செய்யப்பட்டமை அவரது வாழ்வில் ஏற்படுத்திய தாக்கங்கள் பற்றி பகிரப்பட்டது. மற்றொரு பெண் அரசியல் ஆர்வலர் சக பெண் அரசியல்வாதியொருவரை ஆதரித்து முகநூல் பதிவொன்றைச் செய்ததன் பிற்பாடு எதிர்கொண்ட மிக மோசமான முகநூல்வழித் தாக்குதல்களையும் அவை அவரது தனிப்பட்ட மற்றும் பொது வாழ்வில் ஏற்படுத்திய தாக்கங்களையும் கூறக்கேட்டு அறிய முடிந்தது. தவிரவும் சமூக செயற்பாட்டாளர்களாக உள்ள பெண்களுக்கு எதிராகத் தாக்குதல்கள் இணையவழியில் நடந்தேறுகின்றன. இத்தகைய பெண்ணொருவரை பாலியல் உறவுக்கு அழைத்து தொடர் மின்னஞ்சல்கள்

வெவ்வேறு இணையக் கணக்குகளிலிருந்து அனுப்பப்பட்டதாகத் தெரிவிக்கப்பட்டது.

மோகனதர்சினி என்கிற பெண் தன்னுடைய முகநூலில் பதிந்து கொண்ட தகவல்களுக்காக அவரைக் குறிவைத்து அரச அதிகாரி ஒருவர் தொடர்ச்சியாக வசைபாடுவதும், முறைகேடாக நடந்துகொள்வதும் தற்போது முகநூல் உலகில் பரவலாகப் பேசப்பட்டு வருகின்ற விடயமாகவுள்ளது.

பல்கலைக்கழக மாணவர்களும் இதற்கு விதிவிலக்கல்ல. கொரோனா கால சூழ்நிலையில் பல்கலைக்கழக சிரேஷ்ட மாணவர்கள் புதுமுக மாணவர்களை இணையவழியில் பகிடிவதை செய்யும் சம்பவங்கள் பற்றித் தற்போது பொதுவெளியில் பேசப்பட்டு வருகிறது. பேராதனைப் பல்கலைக்கழகம் மற்றும் யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம் என்பன இந்த பகிடிவதை வடிவங்களைப் புரிந்தவர்களைத் தண்டிப்பதற்கான நடவடிக்கைகளில் முனைப்போடு ஈடுபட்டுக் கொண்டிருப்பதாக அறிய முடிகிறது.

இணையவழித் துன்புறுத்தல்கள் வயது, பால், சமூக, பொருளாதார அந்தஸ்து இத்தியாதிகளைக் கடந்து மனிதர்களை பாதிக்கவல்ல ஒரு வன்முறை வடிவமாக உருவெடுத்து வருவதை நாங்கள் புரிந்துகொள்ள வேண்டும். தடுப்பு, நிவாரணம், பாதுகாப்பு பற்றி அதிக சிரத்தை கொள்ளவும் கடமைப்பட்டுள்ளோம்.

**பாதுகாப்பும் தீர்வும்**

மேலே சொன்ன விதங்களில் இணையவெளித் துன்புறுத்தலுக்கு உள்ளாகும் நபர் ஒருவருக்கு எத்தகைய பாதுகாப்பு கிடைக்கின்றது என்பது கரிசனைக்குரிய விடயமாகும்.

இணையவெளியில் துன்புறுத்தலுக்கு உள்ளாகுபவர்கள் குறித்த பாதிப்பிலிருந்து விடுபட வேண்டுமாயின் இணையத்திலிருந்து விலகியிருத்தல் சரியான தீர்வு எனச் சிலர் ஆலோசனை கூறுவதுண்டு. இவ்வாலோசனை பாதிப்பிலிருந்து விடுபட உடனடித் தீர்வாக அமைந்தாலும் கூட, தவறேதும் புரியாத, குற்றமிழைக்காத நபரொருவர் மற்றவரால் புரியப்படும் குற்றத்திலிருந்து தன்னைப் பாதுகாப்பதற்காக இணையப் பாவனையை நிறுத்துவதும், விலகியிருப்பதும் முறையான தீர்வா என்ற கேள்வி எழுகிறது.

அவ்வாறே துன்புறுத்தலுக்குள்ளாகுபவர் அதனைச் செய்பவர் அல்லது அவரது கணக்குத் தொடர்பில் முறைப்பாடு செய்தல் என்பது மற்றொரு தீர்வாக கொள்ளப்படுகிறது. முறையிடலைப் பாதிக்கப்பட்டவர் நேரடியாகச் செய்யலாம். தனது நண்பர்கள் மூலமாகவும் செய்து கொள்ளலாம். முறையிடலைத் தொடர்ந்து துன்புறுத்தலைச் செய்பவருடைய கணக்கு முடக்கப்படும். Facebook, Instagram, Twitter ஆகிய இணையச் சேவைகளில் இத்தகைய முறையிடலுக்கான வாய்ப்புக்கள் ஏற்படுத்திக் கொடுக்கப்பட்டுள்ளன. இலங்கையில் SRI LANKA COMPUTER EFFECTIVE READINESS TEAM என்கிற அமைப்பிடமும் இத்தகைய முறைப்பாடுகளைச் செய்ய முடியும். தவிரவும் குற்றப் புலனாய்வுத் திணைக்களத்திலும் இவ்வகை முறைப்பாடுகளைச் செய்ய முடியும்.

முறைப்பாடுகளைச் செய்வதற்கான பலவிதமான கட்டமைப்புக்கள் உருவாக்கப்பட்டுள்ள போதிலும், இவற்றைத் தீர்வு முறைகளாகக் கருத்தில் கொள்ளுதல் சரியாகுமா என்கிற விவாதம் காணப்படுகிறது. முறையிடுவதன் மூலம் குறித்த துன்பம், துன்பங்கள் மேற்கொண்டு நிகழாமல் அல்லது தொடராமல் இருப்பதை உறுதி செய்ய முடியும். அந்தவகையில் முறையிடல் பொறிமுறையானது உடனடி அல்லது குறுங்காலத் தீர்வாக அமையும். ஆனாலும் பாதிக்கப்பட்டவருக்கு ஏற்பட்ட இழப்பை (உடல், உள, உணர்வுசார்) ஈடுசெய்யும் வகையில் அல்லது நட்டஈடு வழங்கும் வகையில் நீண்ட காலத்தீர்வொன்றாக முறையிடல் அமையாது என்பது குறிப்பிடத்தக்கது.

முறையிடல் என்பது காத்திரமான குறுங்காலத் தீர்வாகத் தன்னிலும் அமைகிறதா என்ற சந்தேகம் அண்மைக்காலத்தில் எழுந்திருக்கின்றது. உதாரணமாக மோகனதர்சினி என்பவர் மீதான முகநூல் தாக்குதல் (இச்சம்பவம் பற்றி மேலே வேறோர் இடத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது) தொடர்பில் முகநூல் வழியாக முறைப்பாடுகள் செய்யப்பட்டபோது குறித்த துன்புறுத்தும் நபரின் கணக்கு தொடர்ந்து இயக்கப்படுவதற்கு தடைவிதிக்காத அதேநேரம் குறித்த மோகனதர்சினியின் முகநூல் கணக்கு ஒரு சில தினங்களுக்கு இயக்கப்பட முடியாமல் தடை விதிக்கப்பட்டமை பற்றி முகநூல் பக்கங்களில் கடும் விமாசனங்கள் நிகழ்த்தப்படுவதைக் காண முடிகிறது. முகநூல் குற்றவாளிகள் பக்கம் சார்ந்திருப்பதாக கடுமையான விமர்சனம் முன்வைக்கப்படுகிறது.

உடனடி மற்றும் குறுகியகாலத் தீர்வுகளுக்கு அப்பால் பாதிக்கப்பட்டவருக்கு நிரந்தரத் தீர்வுகளைப் பெற்றுக்கொடுக்கும் உறுதியான சட்டக் கட்டமைப்பொன்று இருத்தல் அவசியமாகும். இலங்கையில் இணையவெளித் துன்புறுத்தல்களுக்குத் தீர்வு தரும் வகையில் சட்டக் கட்டமைப்பொன்று உண்டா என ஆராய்தல் இவ்விடத்தில் பொருத்தமான செயலாகும்.

**சட்டப் பாதுகாப்பு**

இணைய வழித்துன்புறுத்தல் வடிவங்களாக அடையாளங் காணப்பட்டவற்றுள் அநேகமானவை தனிநபர் அவமதிப்புக் குற்றங்களே. சட்டத்தின் கீழ் ஒருவரை அவமதித்தல் என்பது தீங்கியல் குற்றமாகும். அவமதித்தல் நிகழ்ந்திருக்கிறது என நிரூபிக்கப்படும் பட்சத்தில் தீங்கியல் சட்டத்தின் கீழ் பாதிக்கப்பட்டவருக்கு இழப்பீடு அல்லது நட்டஈட்டைப் பெற்றுக் கொள்வதற்கான சட்ட உரிமை உண்டு. சாதாரண சூழ்நிலைகளில் நிகழும் அவமதிப்புக் குற்றங்களுக்கு தீங்கியல் சட்டத்தின் மூலம் மாவட்ட நீதிமன்றில் வழக்குத் தாக்கல் செய்யப்பட்டு நிவாரணம் பெறும் வழமை காணப்படுகிறது. அவமதிப்புக் குற்றத்திற்கான அதே மூலக்கூறுகளைக் கொண்ட குற்றம் இணையவெளியில் நிகழ்த்தப்படும்போது மேலே ஆராய்ந்த முறையிடல் மற்றும் கணக்கை முடக்குதல் என்பவற்றிற்கு அப்பால் மாவட்ட நீதிமன்றில் வழக்கொன்றைத் தாக்கல் செய்யக்கூடிய சட்டவெளி காணப்படுகின்றது. இருந்த போதிலும் அவமதிப்பு என்கிற வகையில் இணையவெளித் துன்புறுத்தல்கள் கையாளப்படுவது அரிதலும் அரிதான நிகழ்வாகவே

காணப்படுகிறது.

அவ்வாறே 2005ம் ஆண்டின் 34ம் இலக்க குடும்ப வன்முறைத் தவிர்ப்புச் சட்டம் இணையவெளித் துன்புறுத்தல்கள் குடும்ப உறுப்பினர்களுக்கிடையே நிகழ்த்தப்படும்போது பாதுகாப்புத் தரக்கூடிய சட்டமாகக் காணப்படுகிறது. குடும்ப வன்முறைத் தவிர்ப்புச் சட்டமானது குடும்ப உறுப்பினர்களுக்குள்ளே வீட்டிற்குள்ளேயும், வெளியேயும் நிகழ்த்தப்படும் உடல் மற்றும் உளம்சார் வன்முறைகளைத் தடுக்கும் நோக்கில் ஆக்கப்பட்ட சட்டமாகும். இணையப் பாவனை அதிகரித்த பின்னர் கணவன் மனைவிக்கிடையிலான உறவில் பாதிப்புக்கள் பல ஏற்பட்டிருப்பது வெளிப்படை. இத்தகைய தனிப்பட்ட உறவுமுறைசார் பிரச்சினைகள் இணையவெளியில் ஏற்படுத்தப்படும்போது கூட குடும்ப வன்முறைத் தவிர்ப்புச் சட்டம் பயன்படுத்தப்படலாம். ஆனாலும் இணையவெளித் துன்புறுத்தல்களிலிருந்து பாதுகாப்புப் பெறும் சட்ட வழியாக குடும்ப வன்முறைத் தவிர்ப்புச் சட்டம் பயன்படுத்தப்படுவது மிகக் குறைவு என்பதே உண்மை.

பல்கலைக்கழக மாணவர் மத்தியில் இணையவெளியில் நிகழ்த்தப்படும் பகிடிவதைகள் பற்றி ஏலவே பார்த்திருந்தோம். பகிடிவதைகளைக் கட்டுப்படுத்தும் நோக்கில் கல்வி நிறுவனங்களில் பகிடிவதை மற்றும் ஏனைய வன்முறைகளைத் தடுக்கம் வகையில் உருவாக்கப்பட்ட 1998ம் ஆண்டின் 20ம் இலக்கச் சட்டம் உருவாக்கப்பட்டது. இச்சட்டத்தின் கீழ் இணையவெளியில் நிகழ்த்தப்படும் பகிடிவதைகளும் உள்ளடக்கப்பட்டு குற்றஞ்சாட்டப்பட்டவர்கள் விசாரிக்கப்பட்டு தண்டனை அளிப்பதற்கு இடமுண்டு. இணையவெளிப் பகிடிவதை முறைப்பாடுகள் அதிகரித்துவரும் இக்காலத்தில் பகிடிவதை தொடர்பான சட்ட ஏற்பாடுகளைப் பரந்தளவில் வியாக்கியானம் (Interpretation) செய்து செயற்படுத்துவது பல்கலைக்கழகங்கள் மற்றும் உயாகல்வி நிறுவனங்களின் தலையாய கடமையாகும்.

அவ்வாறே இலங்கையைப் பொறுத்தவரையில் குற்றங்களை இனங்கண்டு, வகைப்படுத்தி அடிப்படை மூலக்கூறுகளை விபரித்து தண்டனைக்கான ஏற்பாடுகளை விதந்துரைக்கிற சட்டமாகத் தண்டனைச் சட்டக்கோவை காணப்படுகிறது. இணையவெளித் துன்புறுத்தல்களாக அடையாளங் காணப்படக்கூடிய மூன்று குற்றங்கள் தண்டனைச் சட்டக்கோவையில் காணப்படுகின்றன.

பிரிவு 345 ஆனது பாலியல் தொந்தரவு என்பதைத் தண்டனைக்குரிய குற்றமாகக் குறிப்பிடுகிறது. அவ்வாறே பிரிவு 372 ஆனது குற்றமுறையாகப் பணம்பறித்தல் (Criminal extortion) என்பதைக் குற்றமொன்றாக வரையறுக்கிறது. அவ்வாறே பிரிவு 483ல் குற்றவியல் மிரட்டல் (Criminal intimidation) என்பது அதாவது ஒருவர் சட்டரீதியாகச் செய்ய வேண்டிய செயல் அல்லாதவொன்றைச் செய்யும்படி தூண்டுதல், அச்சுறத்தல் முதலானவை குற்றமொன்றாகச் சொல்லப்படுகிறது. இம்மூன்று குற்றங்களும் இணையவெளியில் நிகழ்த்தப்பட்டதென்பதை நிரூபிக்கக்கூடியதாக உள்ள பட்சத்தில் தண்டனைச் சட்டக்கோவையின் கீழ் குற்றவியல் வழக்கொன்றைத் தாக்கல் செய்து குற்றம் புரிபவரைத் தண்டிப்பதற்கான வாய்ப்புக்கள்

உள்ளன. தண்டனைச் சட்டக்கோவையின் கீழ் இலங்கைக்கு உள்ளேயும், வெளியேயும் நிகழ்த்தப்படும் குற்றங்கள் கையாளப்படலாம் என்பது குறிப்பிடத்தக்கது.

அவ்வாறே சிறுவர் பாதுகாப்பு அதிகாரசபைச் சட்டம் சிறுவர்களின் அதி சிறந்த நலனைப் பாதுகாக்கும் நோக்கில் பல்வேறு ஏற்பாடுகளைக் கொண்டுள்ளது. இதன்கீழ் சிறுவர்களைப் பாதிக்கும் இணையவழித் துன்புறுத்தல்களிலிருந்து சிறுவர்களைப் பாதுகாத்தல் சாத்தியமே. ஆபாசப்படங்களைப் பிரசுரித்தல் தொடர்பான கட்டளைச் சட்டமும் (Obscene Publication Ordinance No. 04 of 1927) செயற்பாட்டிலுள்ளது. ஆபாசப்படங்களை பிரசுரித்தல், திருத்தப்பட்ட (Edited) நெருக்கமான புகைப்படங்களைப் பிரசுரித்தல் முதலானவை இச் சட்டத்தின் பிரிவு 2ன் கீழ் தடுக்கப்பட்டுள்ளது.

மேலே பார்த்த சட்டங்களிலெல்லாம் இணையவெளித் துன்புறுத்தல்களை குறிப்பாக உள்ளடக்குகிற ஏற்பாடுகள் இல்லை என்பது ஒரு சவாலாகும். இச் சட்டங்கள் உருவாக்கப்பட்ட காலத்தில் இணையவெளித் துன்புறுத்தல்கள் தொடர்பில் உணரப்பட்டிருக்க வாய்ப்பில்லாமல் இருந்தமை காரணமாக இது நேர்ந்திருக்கலாம். ஆனாலும் குற்ற மூலக்கூறுகளின் ஒத்த தன்மையினை அடிப்படையாகக் கொண்டு மேற்சொன்ன அங்கீகரிக்கப்பட்ட குற்றங்கள் இணையவழியாக நடைபெற்ற போதும் இச்சட்டங்களின் உதவியுடன் பரிகாரம் பெறுவது சாத்தியமே.

இது தொடர்பில் சட்டத்தரணிகள், நீதிமன்றங்கள், காவல்துறையினர் ஆகியோர் விழிப்புணர்வு பெறுவதும், அறிவூட்டப்படுவதும் அவசியமாகும். இத்தகைய சட்டவெளிகளைப் பயன்படுத்தி இணையவெளித் துன்புறுத்தல்களைக் கட்டுக்குள் கொண்டு வருவதில் சட்டத்தரணிகள், நீதிபதிகள், காவல்துறையினர் காத்திரமான பங்களிப்புச் செய்ய முடியும். இத்தகைய சட்டங்களைப் பயன்படுத்தி இணையவெளித் துன்புறுத்தல்களுக்கான நிவாரணம் பெற முடியுமா என்பது இரண்டாம் பட்சமான கேள்வி. இச் சட்டங்களிலுள்ள வெளியை (Space) பரீட்சாத்தமாகவேனும் முயற்சித்துப் பார்ப்பதுதான் முதற்பட்சமான கடமையாகும்.

சில சிரேஷ்ட சட்டத்தரணிகள் குடியியல் அரசியல் உரிமைகள் தொடர்பான சட்டத்தைப் (ICCPR 2007) பயன்படுத்திச் சில உரிமை மீறல் விடயங்கள் இணைவெளியில் செயற்படுத்தப்பட்டமைக்கு எதிராக வழக்குத் தாக்கல் செய்தமை குறிப்பிட்டுச் சொல்லத்தக்க முன்மாதிரியான சம்பவமொன்றாகும். இப்படியான முயற்சிகள் மற்றும் முனைப்புக்கள் பரவலாக இடம்பெறும்போது தற்போதிருக்கக்கூடிய சட்டக்கட்டமைப்பு வெளியைப் பயன்படுத்திப் பெறக்கூடியதாகவுள்ள உச்ச நன்மைகளை அடைதல் சாத்தியமாக்கப்படும்.

தவிர 2007ம் ஆண்டின் Computer Crimes Act இனைப் பயன்படுத்தி இணையவெளித் துன்புறுத்தல்களுக்குத் தீர்வு பெறமுடியுமா என்கிற ஒரு வினா காணப்படுகிறது. இச் சட்டத்திலும் இணையவெளித் துன்புறுத்தல்கள் குற்றமாக அடையாளப்படுத்தப்படவில்லை. ஆனாலும் பிரிவு 6 ஆனது பொது ஒழுங்கைப் (Public order) பாதிக்கும் வகையில் கணனியைப் பயன்படுத்தி வேண்டுமென்றே செய்யப்படும் செயல்கள் குற்றமாகும்

என வரையறை செய்கிறது. பொது ஒழுங்கு என்பதால் குறிக்கப்படுவது யாது என்பது இச்சட்டத்தில் தெளிவாகச் சொல்லப்படவில்லை. அரசியலமைப்பிலும் அதற்கான வரைவிலக்கணமில்லை. ஆனாலும் இணையவெளித் துன்புறுத்தல்கள் பொது ஒழுங்கைப் பாதிக்கும் செயல்கள் என்பதாக நீதிமன்றம் பொருள் கோடல் செய்கிறபோதே அவை உத்தியோகபூர்வமான அங்கீகாரத்தைப் பெறும். இது தொடர்பில் நீதிமன்றங்களும், சட்டவாளர்களும் சிரத்தை கொள்ள வேண்டியது அவசியமாகும்.

இதுவரையில் ஏற்கெனவே இருக்கிற சட்டவெளியைப் பயன்படுத்தி இணையவெளித் துன்புறுத்தல்களுக்கான பாதுகாப்புப் பற்றியும், அதன் போதான சவால்கள் பற்றியும், சாத்தியங்கள் பற்றியும் ஆராய்ந்திருந்தோம். அடுத்து சட்டக் கட்டமைப்பில் ஏற்படுத்த வேண்டிய அவசியமான மாற்றங்கள் மற்றும் சீர்திருத்தங்கள் பற்றி ஆராய்வோம்.

இணையவெளிக் குற்றங்களானவை பிரத்தியேகமான சட்ட அங்கீகாரத்தைப் பெற்றிராமை அல்லது குற்றங்களாக இனங்காணப்படாமை என்பது ஒரு பாரிய குறைபாடாகும். இதனை நிவர்த்தி செய்யும் வகையில் இத்தகைய குற்றங்களை ஏற்கனவே உள்ள சட்டங்களுக்குள் உள்ளீர்த்துக் கொள்வது ஒரு பரிந்துரையாகும். இந் நடைமுறை அமெரிக்காவில் பின்பற்றப்பட்டுள்ளது.

இணையவெளித் துன்புறுத்தல்களைக் கட்டுப்படுத்திப் பாதுகாக்கும் நோக்கில் தனித்த, பிரத்தியேகமான சட்டமொன்றை ஆக்குவது மற்றொரு பரிந்துரையாக முன்வைக்கப்படுகிறது. சிங்கப்பூரில் வெவ்வேறு இணையவெளிக் குற்றங்களைக் கையாளவென தனித்தனிச் சட்டங்கள் ஆக்கப்பட்டிருப்பது கவனிக்கத்தக்கது.

இலங்கையில் இணையவெளித் துன்புறுத்தல்களைக் கையாளக்கூடிய சட்டங்கள் உள்ளன. பாலியல் தொந்தரவு, குற்றமுறையான அச்சுறுதல், பணம் பெறல் ஆகியவை அத்தகைய சட்டங்களிற்கான உதாரணங்களாகும். ஆனாலும் பாதுகாப்பை வினைத்திறனாக்கும் வகையில் சட்டங்களை ஒருமைப்படுத்தல் அல்லது அனைத்தையும் உள்ளடக்கிய சட்டமொன்றை இணையவெளித் துன்புறுத்தல்களிலிருந்து பாதுகாப்புத் தரக்கூடிய சட்டமொன்றினை உருவாக்கல் காலத்தின் தேவையாகும் எனச் சிறுவர் பாதுகாப்பு அதிகாரசபையின் தலைவர் ரஷானி மீஹம (Rashani Meegama) ஐக்கிய நாடுகள் சபையின் பால்நிலைக் குழுவினால் ஒழுங்கு செய்யப்பட்டிருந்த கொள்கை ஆய்வு நிகழ்வொன்றில் (2016ல்) தெரிவித்திருந்தார்.

எனவே இலங்கைக்குப் பொருத்தமானதொரு சட்டக் கட்டமைப்பை உருவாக்கி இணையவெளித் துன்புறுத்தல்களிலிருந்து சட்டரீதியாகப் பாதுகாப்புப் பெறும் வகையில் இலங்கைச் சட்டவாளர்கள் காய்நகர்த்த வேண்டியுள்ளது. சட்டச் சீர்திருத்தங்களோடு இணைந்ததாக தகவல் பாதுகாப்புக்கான பொறிமுறைகள் மற்றும் இலங்கைக்கு வெளியில் இருந்து புரியப்படும் இணையவெளித் துன்புறுத்தல்களைக் கட்டுப்படுத்தும் பொறிமுறைகள் முதலானவற்றை உருவாக்குவதிலும் கவனஞ் செலுத்த வேண்டியது அவசியமானதாகும்.

**முடிவுரை**

இணையவெளித் துன்புறுத்தல்களின் வடிவங்களும், அவை ஏற்படுத்தும் தாக்கங்களும் இலகுவில் கடந்து செல்ல முடியாதவை. பொருத்தமான சட்டக் கட்டமைப்பொன்றினூடாக ஆக்கபூர்வமான தீர்வினைப் பெறக்கூடியதாக இலங்கைச் சட்டங்கள் பிரயோகிக்கப்படல் வேண்டும், கட்டமைப்புச் செய்யப்படல் வேண்டும். இணையவெளித் துன்புறுத்தல்களிலிருந்து மீள்வதற்கு சமூக விழிப்புணர்வு அவசியம் என்பதும் உணரப்பட வேண்டும் இணையப்பாவனை நெறிப்படுத்தப்பட்ட விதத்தில் அமைய வேண்டும் என்பதை சமூகத்திலுள்ளவர்கள் உணர்ந்து செயற்படுவது உறுதிப்படுத்தப்படுவதோடு மீறி ஏற்படும் தீங்குகளிலிருந்து பாதுகாப்புப் பெற்றுத்தரும் வகையில் சட்டக்கட்டமைப்பு அமைந்திருத்தல் என்பதுவும் சமாந்தர முக்கியத்துவம் கொண்டவை.

கூட்டுப் பொறுப்பின் மூலமே நல்ல விளைவுகள் சாத்தியப்படும்.

# 2. வேண்டும் புதிய பாதை! முற்றிலும் புதிய அணுகுமுறை:

## ஏ.ஜி.யோகராஜா

ஒக்டோபர் 2020/பனுவல்கள்

BY ஏ.ஜி. யோகராஜா

இதன்பொருட்டு இதுவரை தமிழ்த் தலைமைகள் எண்ணிப்பார்க்காத முறைமையில் எமது வேலை முறைமைகளை "அகநிலைச் செயற்பாடு", "புறநிலைச் செயற்பாடு" எனும் வகைகளுக்குள் ஆய்வு செய்யவேண்டியது அவசியமாகிறது. அகநிலைச் செயற்பாட்டின் முக்கிய அம்சமாக இருப்பது தேசியத்தின் முக்கிய கூறாக விளங்கக்கூடிய முதலாளித்துவக் கட்டமைப்பை நோக்கி தேசத்தை நகர்த்துதல் ஆகும்.

சயந்தன் என்னிடம் இப்படிக் கேட்டிருந்தார்:

இலங்கையின் இன்றைய அரசியல் – குறிப்பாக சாதிய மற்றும் தமிழ்த் தேசிய – பிரச்சனைகள் குறித்த உங்கள் கருத்தியலை, (அதாவது மார்க்ஸியமா, அல்லது பெரியார் மற்றும் அம்பேத்கார் வழியிலா அல்லது வேறு எந்த அடிப்படையில்) கட்டுரையாக எழுதித்தரும்படி. இவ் வருட ஆரம்பத்தில் யாழ்ப்பாணத்தில் வெளியிடப்பட்டிருந்த "எழுவோம்! நிமிர்வோம்! திரள்வோம்! சமூக சமத்துவம்: அடுத்தகட்ட நகர்வு குறித்த முன்வரைவு" எனும் எனது நூலை வாசித்ததன் பிரகாரம் இம் முடிவுக்கு வந்திருப்பார் என்பது எனது எண்ணம்.

சோவித் யூனியனின் வீழ்ச்சிக்குப் பின் மார்க்ஸிய உலகங்கள் பின்னடைவைச் சந்தித்து வருகின்றன என்பது உலகளாவிய கவனிப்பாக இருந்து வருகிறது. ஆனால் மனித சமூக விடுதலையின் அடிக்குரலாக இன்றும் இருந்து வருவது மார்க்ஸியச் சிந்தனை முறைமை என்பதை நுனித்து நோக்குவோர் விளங்கிக்கொள்வர். அதேவேளை...

"இயற்கையிலும் சமுதாயத்திலுமுள்ள அனைத்து விடயங்களுக்கும் மானுடர்கள் தொடர்பான அனைத்துப் பிரச்சனைகளுக்கும் தன்னிடம் விளக்கம் இருப்பதாக மார்க்ஸியம் உரிமை கொண்டாடுவதில்லை. மானிட குலத்தால் வரலாற்றின் போக்கில் கட்டம் கட்டமாகப் பெறப்படும் அறிவு; பேரண்டம், இயற்கை, மனித மனம் முதலியவற்றைப் பற்றிய சார்புநிலை அறிவேயன்றி முழுமுற்றான (absolute) அறிவு அல்ல. மாறாக, முழுமுற்றான அறிவை நோக்கிய இடையறாப் பயணமே. அதேபோல் மானிட சுதந்திரம் என்பது ஒருபோதும் முழு முற்றானதாக இருக்க முடியாது. அது ஒப்பீட்டு அளவிலான சுதந்திரமே..."

எஸ்.வி.இராஜதுரை, இருத்தலியமும் மார்க்ஸியமும் நூலிலிருந்து

இவ்விதம் மார்க்ஸியம் குறித்த பரந்துபட்ட கருத்தியலையும், பெரியாரதும் அம்பேத்காரதும் மற்றும் மகாத்மா காந்தி அடங்கலாக இன்னும் ஏனைய முன்னோடிகள்

பலரதும் வழிமுறைகளையும் உள்வாங்கிக்கொண்டும், உருவாக்கிக்கொண்டும் கடந்தும், இன்றைய உலகமயமாக்கற் சூழலின் தாக்கத்திற்கு ஏற்ப, மேற்குலக நவீன வழிமுறைமைகளையும் கவனத்திற்கு உட்படுத்தவேண்டிய காலகட்டம் இது. அவ்வகையில் தமிழ்ச் சமூகத்தில் பரந்துபட்டரீதியில், நடைமுறைக்கு உகந்த வகையில் (ஸ்தூல நிலைமைக்கேற்ப) புதிய கருத்தியல்கள் தோற்றம்பெறவேண்டியது அவசியமாகிறது. சுருங்கக் கூறின் கருத்தியல் வறுமையில் இருந்து ஈழத்தமிழ்த் தேசம் விடுபடவேண்டும்.

**தேசியம்:**

முதலாளித்துவத்தின் தோற்றத்துடன் கருத்தரித்த ஒன்றுதான் தேசியம். அந்த வகையில் தேசியத்தின் வருகைக்கான வயதை 200 பிளஸ் எனக் குறிப்பிடலாம். அதனால்தான்; அதாவது அன்றைய சூழலில் தேசம் பற்றிய தேசியக் கட்டமைப்பு வலுப்பெற்றிருக்கவில்லை என்பதனால்தான் கங்கை கொண்டு கடாரம்வரை வென்று வந்த தமிழ் மன்னர்கள், தமிழர்க்கான நாடொன்றைத் தக்கவைக்கும் எண்ணக்கருவைப் பெற்றிருக்கவில்லை. அவர்களுக்கிடையிலான அதிகாரப் போட்டிகளும் அந்நியர்கள் வந்துபுகக் காரணமாக அமைந்திருக்கலாம். ஆனால் பார்ப்பனியத்தின் ஆளுமைக்குட்பட்டு பிராமணியத்தின் அடையாளங்களாக ஆங்காங்கே புதிது புதிதாக பாரிய அளவில் கோவில்களைக் கட்டினர். வர்ணாச்சிரம சாதியக் கருத்தியல்களையும் பரப்பினர். எது எப்படியோ அவர்களது தமிழின் மீதான காதலுக்கு தலை வணங்குவோம்.

தமிழ்த் தேசத்திற்கான போராட்டம் மௌனிக்கப்பட்டதில் இருந்து சுமார் 10 ஆண்டுகள் கடந்துவிட்ட இன்றைய சூழலிலும் அரசியல் நிலைமைகளிலும் தமிழர்க்கான ஒரு தீர்வுப் பொதியைப் பெற்றுவிடுவது என்பது இலகுவான காரியமாக இல்லை. தொடர்ச்சியான நாடாளுமன்றப் பிரசன்னமும் சிறு கல்லைத்தன்னும் கையில் எடுக்குமளவுக்குக் கைகொடுக்கவில்லை.

இந் நிலைமைகளில், தமிழர்க்கு மட்டுமன்றி ஒட்டுமொத்த சிறுபான்மைத் தேசங்களும் முழுமையான “தேசிய உருவாக்கம்” பெறவேண்டியமை குறித்து சீரியசாகச் சிந்திக்கவேண்டிய தருணம் இது. பௌதீக முறைமையிலும் பண்பாட்டு வடிவிலும் இது நடந்தேறவேண்டும். அரசின் அனுசரணையின்றி மேற்கொள்கொள்வதற்கான நடவடிக்கை இது. ஒட்டுமொத்த நாட்டுக்கும், சிங்கள தேசத்துக்கும் கூட நன்மை பயப்பதாக அமையும். இதன்பொருட்டு இதுவரை தமிழ்த் தலைமைகள் எண்ணிப்பார்க்காத முறைமையில் எமது வேலை முறைமைகளை “அகநிலைச் செயற்பாடு”,“புறநிலைச் செயற்பாடு” எனும் வகைகளுக்குள் ஆய்வு செய்யவேண்டியதும் அவசியமாகிறது.

**அகநிலைச் செயற்பாடு:**

அகநிலைச் செயற்பாட்டின் முக்கிய அம்சமாக இருப்பது தேசியத்தின் முக்கிய கூறாக விளங்கக்கூடிய முதலாளித்துவக் கட்டமைப்பை நோக்கி தேசத்தை நகர்த்துதல் ஆகும்.

முதலில், தமிழ்த் தேசத்தைக் காப்பாற்றும் பொருட்டு உடனடிக் கடமையாக தமிழர்களின்

– இளந்தலைமுறையினரின் – புலப்பெயர்வு தடுக்கப்படவேண்டும். புலப்பெயர்வைத் தடுக்கும் வகையில் இளைஞர்களுக்கான வேலை வாய்ப்பை அதிகரிக்கவேண்டும். வேலைவாய்ப்பை அதிகரிக்கும் பொருட்டு, பாரிய தொழில் நிறுவனங்களை உருவாக்குதல் வேண்டும். இதன் நிமித்தம் தமிழ்ப் பிரதேசங்களில் பேரளவிலான முதலீடுகளைக் குவிக்கும் வகையில் புலம்பெயர்ந்து வாழும் தமிழ்ச் செல்வந்தர்களை ஊக்குவிக்க வேண்டும். புதிய தொழில் நிறுவனங்களை உருவாக்கும் முறைமையிலும், நவீன தொழில் நுட்பங்களைக் கையாளும் வகையிலும் உள் ஊர்த் தொழில் நுட்ப வல்லுனர்களுக்கு போதியளவு சந்தர்ப்பம் வழங்கவேண்டும். மட்டுமன்றி, மேலும் மேலதிக பயிற்சிகளைப் பெற்றுக்கொள்ளும் நோக்குடன், புலம்பெயர்ந்த தேசங்களில் கல்வி கற்றுத் தொழில்நுட்பத் துறையில் வல்லுனர்களாக விளங்கும் இளைய தலைமுறை உறவுகளையும் வரவைத்து தொழிற் கூடங்களை வளப்படுத்த முடியும்.

முற்று முழுதான நவீன முதலாளித்துவக் கட்டமைப்பின் அடிக்கட்டுமானமாக இருப்பது (பொருளியல் கட்டுமானமாகிய) பாரிய முதலீடுகளும் தொழில் நிறுவனங்களும் ஆகும். அதேவேளை இக்கட்டுமானம் ஒழுங்கமைக்கப்பட்ட முறைமையில் இயங்குவதற்குத் துணைசக்தியாக விளங்குவது மேற்கட்டுமானமாகிய நவீன முதலாளித்துவக் கட்டமைப்பை நோக்கிய பண்பாட்டு உருவாக்கம். எமக்கான அரசியலை ஆணையில் வைப்பதற்கும் இதுவே அடித்தளம்.

(இவ்விடத்தில் எழும் கேள்வி- ஏன் சோசலிசக் கட்டுமானத்தை உருவாக்க முடியாதா என்பது. பதில்: சோசலிசக் கட்டுமானத்தை நோக்கி நகர்வது சிறப்புத்தான். ஆனால் எமது இன்றைய சமூக நிலைமையில் அல்லது சூழலில் அத்தைகைய செயல், வண்டிப் பயணத்தில் மாட்டுக்கு முன்பாக வண்டியைக் கட்டிவிடுவதற்கு ஒப்பானதாகும்.)

தமிழ்ச் சமூகத்தில் பண்பாட்டு உருவாக்கம் என்பது என்ன?

பல நூற்றாண்டுகளுக்கு முந்தைய பண்ணை அடிமை முறைமையின் மிச்ச சொச்சங்கள் இன்னும் எம்மிடத்தில் பின்னிப் பிணைந்து இருக்கின்றன. இவற்றில் இருந்து விடுபடுவதையே நவீன பண்பாட்டு உருவாக்கம் என்கிறோம்.

இன்றும் நிலவுகின்ற, சாதிய அதிகாரத்துவப் பண்பாடுகள் தொடங்கி, மனிதர்களுக்குள் ஏற்றத் தாழ்வுகளை உண்டு பண்ணும் கலாச்சாரப் பண்புகள் வரை அனைத்தும் பண்ணை அடிமைத்தனத்தின் பிறப்புகள்தாம். குறிப்பாக…

1. சாதிய அதிகாரத்துவமும் சாதிய ஏற்றத் தாழ்வுகளும்
2. பெண் ஒடுக்குமுறையும் பெண்களை சுயமரியாதைக் குறைவாக நடத்துதலும்
3. மூன்றாவது பாலினத்தவர்களை (அரவாணிகள், திருநங்கையர்கள்) சுயமரியாதைக் குறைவாக நோக்குதலும் கீழ்நிலையில் வைத்துப் பார்த்தலும்
4. மாற்றுத் திறனாளிகளை கீழ்நிலையில் வைத்துப் பார்க்கும் பண்பு

5. பிரதேசரீயான ஏற்றத்தாழ்வும் பாகுபாடும்
6. முன்னைய (குறிப்பாக பெண்) போராளிகளை இழிவாகவும் சுயமரியாதைக் குறைவாகவும் வைத்துப் பார்க்கின்ற பண்பு
7. மனிதர்களை மதம், இனம், மற்றும் நிறரீதியாக நோக்குவதும் சுயமரியாதைக் குறைவாக அணுகுவதுமான பண்புகள்

மேற்படி பண்பாட்டு அசிங்கங்களின் மரிப்பில்தான் புதிய பண்பாட்டு விழுமியங்கள் உருவாக முடியும். இதனால்தான் தமிழ்த் தேசிய உருவாக்கத்தில் சமூக விடுதலைக்கான முக்கியத்துவத்தை குறைத்து மதித்துவிட முடியாது. மட்டுமல்ல, சாதிய மற்றும் பெண்ணிய ஒடுக்கு முறைகளுக்குள் தேசிய உள்ளடக்கம் உண்டு என்பதையும் வலியுறுத்துகிறோம். இத்தகைய நிலைமைகளில், தேசிய விடுதலையில் சமூக விடுதலை முன் நிபந்தனை ஆகிறது.

இயந்திர மயமாகப்போகும் எமது தேசியக் கட்டுமானத்தின் பிரதான சக்தியாக விளங்கப்போவது விளிம்புநிலைச் சமூகங்களில் தோற்றம் பெற்றிருக்கும் இளந்தலைமுறை உறவுகள்தாம். ஒன்று, இன்று எமது தேசம் பூராவும் பரந்தும் பெரும்பான்மையாகவும் வாழ்பவர்கள் இவர்கள். தமது தொழிற் சக்தியை விற்பதற்கான ஆற்றலும் அறிவும் உள்ளவர்களாகவும் இவர்கள் விளங்குகின்றனர்.

**புறநிலைச் செயற்பாடு:**

இங்கு புறநிலைச் செயற்பாடுகள் அனைத்துமே தவிர்க்க முடியாதபடி அரசியல் வேலை முறைமைகளுக்குள் அடங்குகின்றன. ஆரம்ப காலந்தொட்டு தமிழ்த் தலைமைகள் புறநிலைச் செயற்பாடுகளில் மட்டுமே பெரும்பான்மைக் காலத்தை விரயம் செய்து வந்தனர், வருகின்றனர். அவ்வகையில் அத்தகைய சரித்திரத்தை மீண்டுமொருமுறை இங்கு பதிவிடவேண்டிய அவசியத்தைத் தவிர்த்துக்கொள்கிறேன். முக்கியமாக நாடாளுமன்ற நுழைவிலும் “அகிம்சை” வழியிலும் இறுதியாக ஆயுதப் போராட்டத்தின் மூலமும் புறநிலைச் செயற்பாடுகள் முனைப்புப் பெற்றிருந்தன.

போராட்டம் முடிவுற்ற காலத்தில் இருந்து, முன்னைய அதே வழிமுறை -நாடாளுமன்ற நுழைவு- இன்றும் தொடர்வது கண்கூடு. உண்மையைக் கூறினால், எமது தலைமைகளைப் பொறுத்தவரை நாடாளுமன்ற நுழைவு என்பது ஒரே செக்கைச் சுற்றி செக்கு மாடுகள் சுற்றிச் சுற்றி வருவதைப்போன்ற ஒரு நிகழ்வுதான். (இலங்கையில் ஜனநாயக ஆட்சி நிகழ்கிறது என்கின்ற ஆதாயத்தை அரசுக்கு வழங்கிவிட்டு) மாடுகளுக்கு எவ்வித ஆதாயமும் அற்ற முறையில் அவை மீண்டும் மீண்டும் சுற்றிச் சுற்றி வலம் வந்துகொண்டே இருக்கின்றன.

இன்றைய சூழலில் ஓர் அடையாளத்தின் நிமித்தம் நாடாளுமன்ற நுழைவை ஏற்றுக்கொண்டாலும், எமக்கான புறநிலைச் செயல்களுக்குரிய அடிப்படை வேலைகள் வெளியில்தான் குவிந்துள்ளன.

1. ஏனைய சிறுபான்மைத் தேசிய இனங்களுடன் ஐக்கியப்படுவதற்கான முயற்சிகளை நாடாளுமன்றத்துக்கு வெளியிலும் மேற்கொள்ளுதல்.
2. அரசாங்கத்துக்கு அப்பால், பெரும்பான்மைத் தேசத்தின் விளிம்புநிலை மக்களின் நம்பிக்கையைப் பெறும் வகையில் எமது நடைமுறைகளை அமைத்தலும் கருத்தியல் சித்தாந்தத்தை உருவாக்குதலும்.
3. அரசியல் பேச்சுவார்த்தைகளில் கடைப்பிடிக்கவேண்டிய ராஜதந்திரம் மற்றும் நவீன அணுகுமுறை குறித்தும் செலுத்தவேண்டிய அவதானங்கள்
4. சர்வதேசரீதியாக விளிம்புநிலைச் சமூகங்கள், கட்சிகள், அமைப்புகளுடன் ஐக்கியப்படுவதற்கான வேலைமுறைகளை மேற்கொள்ளுதல்
5. தமிழர்கள், மலையகத் தமிழர்கள், முஸ்லிம்கள் மற்றும் சிங்களவர்கள் என அனைத்து இனத்தினதும், விளிம்புநிலைச் சமூகங்களின் தேவையின் அடிப்படையிலான வேலைத்திட்டத்தை முன்வைத்து, அதனை வென்றெடுப்பதற்கான முயற்சியில் அனைத்து மக்களையும் திரள்நிலையடையச் செய்தல்

மேற்படி செயற்பாடுகளில் 2, 3, 5 ஆகியன குறித்து சற்று விரிவாகப் பார்ப்போம்.

**அரசாங்கத்துக்கு அப்பால், பெரும்பான்மைத் தேசத்து விளிம்புநிலை மக்களின் நம்பிக்கையைப் பெறும் வகையில் எமது கருத்தியல் சித்தாந்தத்தை உருவாக்குதலும் ஐக்கியத்துக்கான நடைமுறைகளை முன்னெடுத்தலும்:**

இலங்கையைப் பொறுத்தவரை சிங்கள இனம் பெரும்பான்மையாக உள்ளனர் என்பது உண்மையே. ஆனால் மறுபுறத்தில் அகில உலகைப் பொறுத்தவரை அவர்கள் மிகச் சிறிய சிறுபான்மை இனங்களில் ஒரு பகுதினர் என்ற அச்சத்துடன்தான் இத் தரவை ஏற்றுக்கொள்கிறார்கள்.

சிறுபான்மைச் சமூகமாகிய முஸ்லிம்களைப் பொறுத்தவரை அவர்கள் தம்மை உலகிற் பெரிய மதமாகிய இஸ்லாத்துடன் சேர்த்து தம்மை பெரும்பான்மையாகவும் அடையாளப்படுத்திக்கொள்கின்றனர்.

அதேவேளை இலங்கையைப் பொறுத்தவரை தமிழர்கள் சிறுபான்மையாக இருப்பினும், மிக அண்மையாக, 18, 20 கிலோ மீற்றருக்கு உட்பட்ட தூரத்தில் வாழ்கின்ற சுமார் 8 கோடி தமிழர்களின் தொப்புள்கொடி உறவுகளாக உள்ளனர். ஏற்கனவே பல நூற்றாண்டுகளுக்கு மேலாக இத் தேசத்தை ஆக்கிரமித்திருந்த வரலாறும் தமிழ் மன்னர்கள் பலருக்கு உண்டு. சிங்கள – தமிழ் முரண்நிலையின் முக்கிய உளவியல் காரணம் இதுவே. சிங்களத் தலைமையினது விட்டுக்கொடுக்காத நிலைப்பாடுகளுக்கான அடிப்படையும் இதுதான். அனைத்துக்கும் மேலாக அவர்களின் மனநிலையில் என்றும் குமுறிக்கொண்டிருக்கும் அச்சமும் இங்கிருந்தே பிறப்பெடுக்கிறது.

இந்நிலைமைகளில், உலகில் பெரிய மதங்களில் ஒன்றான பௌத்த மதத்துடன்

பிணைத்த வகையில் இலங்கையைப் பௌத்த நாடாகப் பிரகடனப்படுத்தியிருப்பதும் ஒரு இராஜதந்திர வகைப்பட்ட நடவடிக்கை என்பதில் ஐயமில்லை. தம்மை உலகின் பெரும்பான்மைச் சமூகங்களுடன் சேர்த்து உணர்வதற்கும் இது வழி சமைக்கிறது.

சிங்கள சமூகத்தின் இத்தகைய உளவியல் புரிந்துகொள்ளபடவேண்டிய ஒன்று. இச்சந்தர்ப்பத்தில்தான் சிங்களத் தேசத்தில் தமிழர் மீதான நம்பிக்கையை மேம்படுத்தும் பொருட்டு; பேராசிரயர் சிவத்தம்பி இறப்பதற்குச் சில மாதங்களுக்கு முன்பு “முதலில் நான் ஓர் இலங்கையன், அதன் பின்புதான் நான் தமிழன்” என்று மொழிந்த வார்த்தைகள் சிந்திக்கற்பாலதே.

அரசியல் பேச்சுவார்த்தைகளில் கடைப்பிடிக்கவேண்டிய ராஜதந்திரம் மற்றும் நவீன அணுகுமுறை குறித்தும் செலுத்தவேண்டிய அவதானங்கள் குறித்து:

**அரசியற் பேச்சுவார்த்தைகளின்போது கடைப்பிடிக்கவேண்டிய முக்கிய மூன்று நவீன அணுகுமுறைகளாவன:**

1. காலமும் வெளியும் (Time and space)
2. முரண்பாடுகளின் உருமாற்றம் (Conflict transformation)
3. முற்று முழுதான தீர்வு

இவை பற்றிய விரிவை வேறொரு சந்தர்ப்பத்தில் நோக்குவோம்.

இச்சந்தர்ப்பத்தில், எமது தேசிய உரிமைக்காகவும் காணாமல் போன எமது உறவுகளைக் கண்டடைவதற்காகவும் எதிரியுடன் சமாதானப் பேச்சுவார்த்தைகளில் ஈடுபடுவதற்கான சந்தர்ப்பத்திற்கும் எதிரியைப் பழிவாங்குகின்ற வழிமுறைகளில் ஈடுபடுவதற்கான சந்தர்ப்பத்திற்கும் இடையிலான கால வெளி குறித்த சாணக்கியத்தை அல்லது ராஜதந்திரத்தை தமிழ்த் தலைமைகள் கணக்கில் எடுத்துக்கொள்ளவில்லை என்பது குறித்தும் சிந்திக்கவேண்டியுள்ளது.

தமிழர்கள், மலையகத் தமிழர்கள், முஸ்லிம்கள் மற்றும் சிங்களவர்கள் என அனைத்து விளிம்புநிலைச் சமூகங்களினதும் தேவையின் அடிப்படையிலான வேலைத்திட்டத்தை முன்வைத்து, அவற்றை வெற்றிகொள்வதற்கான முயற்சியில் அனைத்து மக்களையும் திரள்நிலையடையச் செய்தல்:

தமிழ்த் தேசத்திற்கான போராட்டம் மௌனிக்கப்பட்டதில் இருந்து சுமார் 10 ஆண்டுகள் முடிந்துவிட்ட இன்றைய சூழலிலும் அரசியல் நிலைமைகளிலும் தமிழர்க்கான ஒரு பொதியைக் கூட பெற்றுவிடுவது என்பது இலகுவான காரியம் அல்ல. தொடர்ச்சியான நாடாளுமன்றப் பிரசன்னமும் சிறு கல்லைத்தன்னும் கையில் எடுக்குமளவுக்குக் கைகொடுக்கவில்லை. இனியுமோர் ஆயுதப் போராட்டத்திற்கு இடமில்லை என்பதும் தெளிவு.

இத்தகையதோர் நிலைமையில் சர்வதேச எண்ணங்களுக்கு அமைவாகவோ,

இந்தியாவின் வற்புறுத்தலுக்கு இசைவாகவோ அல்லது உள் ஊர் அறம்சார் நடவடிக்கைகளின் அடிப்படையிலோ சிறுபான்மை இனங்களின் பிரச்சனைகளுக்கான எவ்வித தீர்வையும் நோக்கி இந்த அரசோ அல்லது மாறிவரும் எந்த அரசோ ஒரு சிறிய அடியைக்கூட முன்நோக்கி வைப்பதற்கில்லை. முந்தைய பிரதமர் எஸ். டபிள்யூ. ஆர். டி. பண்டாரநாயக்கா காலத்தில் இருந்து இதுதான் நிலைமை. இந் நிலைமைக்கான அடிப்படை என்ன?

இன்றைக்கு உலகம் பூராவும் சர்வ வியாபகமாக விழித்துப் பார்க்கப்படும் மூன்று வியங்கள் குறித்து நாம் நோக்கவேண்டியிருக்கிறது.

1. (சமூக) மேலாதிக்கம்
2. (சமூக) ஆளுமை
3. அதிகாரத்துவம்

இம் மூன்று கருத்தாளுமை குறித்து இலங்கைச் சமூகத்தை நோக்குவோமாக இருந்தால்;

1. இலங்கையின் சமூக மேலாதிக்க சக்தியாக விளங்குவது சிங்கள இனம் என்பது எல்லோராலும் புரிந்துகொள்ளப்பட்ட ஒன்று.
2. இன்றைய இலங்கையில் ஆளுமை சக்தியாக வலம் வருபவர்கள் ராஜபக்ச குடும்பத்தினர். இதுவும் அறியப்பட்ட ஒன்றுதான். இதற்கு முன்பு ரணில் விக்கிரமசிங்க, ஜனாதிபதி மைத்திரிபால சிறீசேனா ஆகியோரையும் அதற்கு முன்பு சந்திரிகா பண்டாரநாயக்காவையும் குறிப்பிடலாம். இவர்களுக்கு முன்பு இலங்கை சுதந்திரமடைந்த ஆரம்ப காலம் முதல் டட்லி சேனநாயக்கா, எஸ். டபிள்யூ. ஆர். டி. பண்டாரநாயக்கா, ஜே. ஆர். ஜயவர்த்தனா ஆகியோருடன் இன்னும் சிலரைக் குறிப்பிடலாம். இவர்களுக்கு வெளியில் இன்னும் பல முதலாளித்துவ சக்திகளும் பிரபுத்துவப் பரம்பரைகளும் கூட கண்ணுக்குத் தெரியாத ஆளுமை சக்திகளாக இருப்பர். (இத்தகையவர்கள் பலர் அதிகாரத்துவ சக்திகளாக இருப்பதற்கும் வாய்ப்புண்டு.) ஆனால் இவர்கள் யாரும் அதிகாரத்துவத்தை, அரசாங்கத்தின் (Government) மீது பிரயோகித்த அளவுக்கு “அரசு” (State) என்ற கட்டமைப்பின் மீது செலுத்தியயிருக்கவில்லை.
3. அதிகாரத்துவம்: மேற்படி ஆளுமை சக்திகளிடம் அரசுக்கான அதிகாரத்துவம் இருப்பதில்லை. குறிப்பாக தேசிய இனங்களுக்கான அரசியற் தீர்வு குறித்த எந்தவொரு முடிவையும் எடுக்கும் தனி அதிகாரத்துவம் இந்த அசாங்கங்கள் எதனிடத்தும் இருப்பதில்லை என்பதே யதார்த்தம். இன்றும் மூன்றில் இரண்டு பெரும்பான்மைப் பலத்தைக் கொண்டிருக்கும் இந்த அரசாங்கம் கூட இந்தியாவின் வற்புறுத்தலுக்கு அமைவாக ஆயினும் ஒரு தீர்வுக்கு வந்துவிடப்போவதில்லை.

அப்படியானால் முக்கிய அரச தீர்மானங்களை தீர்மானிக்கக்கூடிய சக்தியாக

விளங்கக்கூடிய அரசு என்பது என்ன? அது எங்கே இருக்கிறது?

பௌத்த சிங்கள மேலாதிக்கத்தின் மற்றும் அதிகாரத்துவத்தின் ஒட்டுமொத்த கட்டமைப்பாக விளங்குபவை “அஸ்கிரிய” மற்றும் “மல்வத்த” பௌத்த பீடங்கள். இவற்றுக்குப் பின்னால் பாரிய முதலாளித்துவ சக்திகளும் பிரபுத்துவப் பரம்பரைகளும் இருப்பது தவிர்க்க முடியாதது. இவற்றின் அனுசரணையின்றி முக்கிய அரச முடிவுகள் எதுவும் தீர்மானிக்கப்படுவதில்லை. இத்தகைய பீடங்களிலும் குறிப்பிட்ட சமூக சக்திகள்தான் மேலாதிக்கத்திற்கு வர முடியும். இவற்றின் அனுசரணைக்கு அப்பாற்பட்டு தமிழர்க்கான தீர்வுத் திட்டத்தை முன்வைத்ததன் விளைவாகத்தான் முந்தைய பிரதமர் எஸ். டபிள்யூ. ஆர். டி. பண்டாரநாயக்கா பௌத்த பிக்கு ஒருவரினால் நேரடியாகச் சுட்டுக் கொல்லப்பட்டார்.

இத்தகைய நிலைமைகளில் பௌத்த பீடங்களை வழிக்குக் கொண்டுவரும் வழிமுறைதான் என்ன?

தமிழர்கள், மலையகத் தமிழர்கள், முஸ்லிம்கள் மற்றும் சிங்களவர்கள் என அனைத்து விளிம்புநிலைச் சமூகங்களினதும் தேவையின் அடிப்படையிலான வேலைத்திட்டத்தை முன்வைத்து அவற்றை வெற்றிகொள்வதற்கான முயற்சியில் அனைத்து மக்களையும் திரள்நிலையடையச் செய்தல்:

வரப்புயர நீர் உயரும்

நீருயர நெல்லுயரும்

நெல்லுயர குடி உயரும்

குடிஉயர கோன் உயரும்

ஆம்! அவ்வையாரின் செய்யுளின் வழியே கீழிருந்து மேல் செல்வதுதான் இன்றைய காலச்சூழலில் சாத்தியமானது. வாழ்வாதாரத்துக்காக ஏங்குகின்ற மக்கள் திரள், பாட்டாளிகள் கிராமங்களில்தான் செறிவாக வாழ்கின்றனர். அதிகாரத்துவத்தின் அத்துமீறல்களைச் சகித்துக்கொண்டு வாழ்பவர்களும் இந்தப் பாட்டாளிகள்தாம். எமது நாட்டு ஸ்தூல நிலைமையில் மார்க்ஸ் கூறிய பாட்டாளிகளும் இவர்கள்தாம்.

கிராமங்களுக்கான அதிகாரத்தை முன்னிறுத்தி, பெரும்பான்மைச் சிங்களத் தேசம் தொடங்கி, ஏனைய தமிழ், முஸ்லிம், மலையகம் வரையான அனைத்துச் சிறுபான்மைத் தேசங்களதும், விளம்புநிலை மக்களையும் ஒன்றிணைப்பதற்கான வேலை முறையில் சகல ஜனநாயக சக்திகளும் இணையவேண்டும்.

இத்தகைய ஒனறிணைவில் உருவாகும் தொடர்ச்சியான எழுச்சிகளும் கட்டமைக்கப்பட்ட கிளர்ச்சிகளும் கிளர்ச்சி வகையிலான போராட்டங்களுமே, பௌத்த பீடங்களின் மீதும் அவற்றுக்குப் பின்பலமாக விளங்கும் மகா சக்திகளினதும் அதிகாரத்துவ மன நிலையிலும் பாரிய தாக்கத்தை உண்டுபண்ணும். இவ் வகையிலான தொடர் நடவடிக்கைகளே எதிர்கால அரசியலில் மாற்றத்தை உண்டுபண்ணும் கருவிகளாக அமையும்.

சிறுபான்மைத் தேசங்கள் தமது தேசங்களை ஆளுமைக்குட்படுத்துவதற்கும் இதுவே வழி. “முற்போக்குத் தேசியம்” என்பதன் உள்ளார்ந்த அர்த்தமும் இதுவாகத்தான் இருக்க முடியும். இவற்றுக்கான செயற்திட்டங்களை முன்னிறுத்தி, முன் கை எடுக்கவேண்டியது சகல இடதுசாரிகளினதும் ஜனநாயக சக்திகளினதும் உடனடி வரலாற்றுக் கடமையாகும்.

# 3. நீலச் சுழி: கே.டீ. தர்ஷன

ஒக்டோபர் 2020/சிறுகதைகள்

□□□□ □□□□□□ | □□.□□. □□□□□□ | தமிழில்: எம்.ரிஷான் ஷெரீப்

BY கே.டீ. தர்ஷன AND எம்.ரிஷான் ஷெரீப்

நான் பலமுறை அறைக்குள் எட்டிப் பார்த்து விட்டேன். அவள் இன்னும் உறக்கத்திலேயே இருந்தாள். அவளிடமிருந்து எந்தவித அசைவும் இல்லை. ஒருவேளை விடிகாலை தாண்டியும் விழித்திருந்ததால் இப்போதுதான் நன்றாக உறங்கிப் போயிருக்கக் கூடும். கதவின் திரைச்சீலை வழியாக நிறையத் தடவைகள் அவளை எட்டிப் பார்த்து விட்டதால் ஏதாவது சாப்பிட்டு விட்டு வரலாம் என்று சமையலறைப் பக்கமாகப் போனேன். அம்மாவும் அயல் வீடுகளிலிருக்கும் பெண்கள் சிலருமாக சேர்ந்து ஏதோ ஆழமான பேச்சில் மூழ்கியிருந்தார்கள். எனக்கு, அதற்கு மேலும் முன்னால் அடியெடுத்து வைக்கத் தேவைப்படவில்லை. எனது பார்வை சுற்றி வரப் பார்த்து விட்டு சமையற்கட்டின் மீதிருந்த மூன்று அடுப்புக் கற்களின் மேல் நிலைத்து நின்றது. பழைய சாம்பலும், நேற்றைய உணவின் மீதங்கள் படிந்திருந்த கழுவப்படாத பானைகள் சிலவும் எனது கேள்விக்கு பதிலளித்தன. அங்கிருந்து நூற்றெண்பது பாகையில் திரும்பிய நான் மீண்டும் விறாந்தைப் பக்கமாகச் செல்ல முற்பட்ட போதுதான் தஸ்லீமா மாமியின் கண்ணீரைக் கண்டேன். ஏனென்று விசாரிக்கவோ, கவலைப்பட வேண்டாமென்று ஆறுதல் கூறவோ நேரமிருக்கவில்லை. நடையின் வேகத்தைக் குறைத்து மெதுவாக நடந்து சென்று மீண்டும் விறாந்தைப் பக்கமாகப் போனேன். திரும்பவும் கதவின் திரைச் சீலையை விலக்கிப் பார்த்தேன். அவள் இப்போதும் உறங்கிக் கொண்டிருந்தாள். என்றபோதும் எனக்கு அங்கிருந்து விலக மனம் வரவேயில்லை. அந்த இடத்திலேயே நின்று கொண்டிருந்தேன்.

சற்று நேரத்தில் அவளிடத்தில் அசைவுகள் தென்படுவதாக எனது பார்வைக்குத் தோன்றியது. உண்மையிலேயே அப்படியேதும் நடக்கின்றதா அல்லது எனது கண்களில் பார்வை ரேகைகள் அசைகின்றனவா என்பதைச் சடுதியாக யோசிக்க முடியவில்லை. இல்லை.. மெய்யாகவே அவளிடம் அசைவொன்று தென்பட்டது. அவளுக்கு அருகாகச் சென்று பார்க்க நினைத்தேன். நானாக அல்ல தன்பாட்டிலேயே அவளருகே போய்விட்டிருந்தேன். முகம் குப்புறப் படுத்திருந்த அவளது முதுகு ஒரு வித தாளத்துக்கு ஏற்ப அசைந்து கொண்டிருந்தது. நான் அவளை சற்று நேரம் வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்து விட்டு அதற்கு மேலும் தாங்க இயலாத கணத்தில் அவளை எழுப்பினேன்.

“பா.. பாத்திமா..”

அவள் படுத்திருந்த விதத்தில் ஒரு மாற்றமும் இல்லை. அதற்குப் பதிலாக முதுகில் தென்பட்ட அந்த அசைவு வேகமானது. அடுத்த சில நொடிகளில் அது மெல்லிய விம்மலாக

வெளிப்பட்டது.

“பாத்திமா”

அவள் எழுந்து கொள்ளவில்லை. மாறாக விம்மல், அழுகையாக மாறியது. எனது இதயம் வேகமாகத் துடிக்கத் தொடங்கியது. அடுத்த கணத்தில் அது, எவ்வாறு நிகழ்ந்தது என்று எனக்குத் தெரியவில்லை. பாத்திமா எனது தோளில் தலைசாய்த்து விம்மிக் கொண்டிருந்தாள். அதை உணர்ந்த முதல் நொடியிலேயே அவளை இறுகப் பற்றிப் பிடித்து கட்டிலில் அமரச் செய்தேன். எனது உள்ளங்கையில் எதையோ உணரவும், சந்தேகத்தோடு அவளது தலையிலிருந்து கையை விடுவித்துக்கொண்டு எனது பார்வைக்குக் கிட்டவாகக் கொண்டு வந்தேன். நான் சந்தேகப்பட்டது சரிதான் என்பது புரிந்தது. ஆனாலும்.. ஆனாலும் திடீரென எனது உள்ளங்கைக்கு சூடான குருதி எங்கிருந்து வந்ததென எனக்குத் தெரியவில்லை.

“பாத்திமா இங்க பாருங்க. உங்க தலையில ஏதோ காயம் பட்டிருக்கு போல.. இங்க பாருங்க.. என்னோட கையில ரத்தம் பட்டிருக்கு..”

அவள் அதை ஏறெடுத்துப் பார்க்காமலேயே எனது கையைத் தட்டி விட்டாள்.

“நான் சொல்றது உங்களுக்குப் புரியலையா பாத்திமா? உங்க தலைல காயம் பட்டிருக்கு..”

“என்னை சும்மா இருக்க விடுங்க..”

“நான் உங்களை என்ன பண்ணினேன்?”

பாத்திமா அவளது இடது காதை எனது பக்கமாகத் திருப்பினாள். கடவுளே! காது மடல் கிழிந்து காய்ந்த இரத்தம் கட்டியாகிப் படிந்திருந்தது. அந்த கட்டியை நனைத்தவாறே புதிய குருதி வெள்ளமாகப் பெருக்கெடுக்கத் தொடங்கியிருந்தது. அவளை நான் படுக்கையிலிருந்து இழுத்தெடுத்து அமரச் செய்த வேளையில் அந்தப் பழைய காயம் மீண்டும் விரிசல் கண்டிருக்கக் கூடும் என்பது அப்போதுதான் எனக்குப் புரிந்தது.

“இருங்க பாத்திமா, ஐயோ என்னை மன்னிச்சிடுங்க..” என்று மாத்திரமே என்னால் சொல்ல முடிந்தது. அதற்குள் வார்த்தைகள் வராமல் ஊமையாகிப் போய் விட்டேன். எங்களுடைய விழிகள் ஒன்றையொன்று மோதிக் கொண்டன. என்னிடம் சொல்வதற்கு வார்த்தைகள் எதுவும் இருக்கவில்லை. அவளுக்கும் அப்படித்தான் இருந்திருக்குமோ தெரியாது. ஆனால் அந்த விழிகளில் ஆழ்ந்த வேதனையோடு கோபமும் படிந்திருந்ததாக பின்னர் எனக்குத் தோன்றியது. அந்த முகத்தில் தெரிந்தது, இரத்தம் வடிந்து கொண்டிருந்த காயத்தால் எழுந்த வலியல்ல என்பது புரிந்தது. விம்மிக் கொண்டிருந்த பாத்திமாவை கட்டில் விளிம்பில் சாய்ந்து அமர்ந்திருக்க வைத்து விட்டு நான் சமையலறைக்கு ஓடிப் போனேன்.

“மகனோட கைக்கு என்ன நடந்தது? ஏதாவது காயம் பட்டுச்சா?” என்று அம்மா பதறினாள். எனது கை காயமாகியிருப்பதாக அவள் நினைத்து விட்டாள். அது இன்னொருவருடைய இரத்தம் என்பது அம்மாவுக்கு விளங்கவில்லையா? எல்லா இரத்தமும் ஒன்று போலவே

இருக்கின்றன. எனது இரத்தத்துக்கும்,

கையிலிருக்கின்ற இந்த இரத்தத்துக்கும் இடையே எவ்வித வேறுபாடுகளும் தென்படாத போதிலும், தொடர்ந்தும் பற்றியெரிந்து கொண்டிருக்கும் இனவாதத் தீயை வரையறை செய்ய என்னிடம் யாதொரு கோட்பாடும் இல்லை. நேற்று நள்ளிரவில் தொடங்கிய இனக் கலவர வேட்டை, நெடுங்காலமாக மோப்பம் பிடித்துக் கொண்டிருந்த இரத்தப் புடையன்களது சதித் திட்டத்தின் பெறுபேறாக இருந்திருக்காவிட்டால், இன்று எனது கையில் இரத்தமும் இல்லை, எனது கட்டிலில் பாத்திமாவும் இல்லை.

“பாத்திமாவோட காதுல காயம் பட்டிருக்கு..”

தஸ்லீமா மாமி பதற்றப்படவில்லை. அதற்குப் பதிலாக சுவரில் சாய்ந்திருந்த அவரது உருவம் மெதுமெதுவாகக் கீழே சரிந்து அப்படியே தரையில் அமர்ந்து விட்டார். தஸ்லீமா மாமியின் மெலிந்த சரீரம் எந்தளவு கனத்தது என்பது அவர் நின்றிருந்த இடத்தின் சுவரில் படிந்திருந்த தடத்திலிருந்து எனக்குப் புரிந்தது. அவர் அணிந்திருந்த பர்தாவைத் தாண்டி, குச்சிகள் போன்றிருந்த முதுகெலும்புக் கூட்டின் அடையாளம் கூட சுவரில் படிந்திருந்தது. அதற்குள் அம்மா அறைக்குள் போய் விட்டிருந்தாள். மாமி அதே இருப்பில் அமர்ந்திருந்தார். நான் அறைக்குள் ஓடிப் போனேன். நான் கதவின் திரைச் சீலையை நகர்த்தி உள்ளே நுழையும் போதே, அம்மா ஈரத் துணியொன்றால் பாத்திமாவின் காதைத் துடைத்துக் கொண்டிருந்தாள். அந்தப் புடைவைத் துண்டும், தண்ணீரைக் கொண்டிருந்த பிளாஸ்டிக் கோப்பையும் கூட அதே சிவப்பில் நிறமேறிப் போயிருந்தன.

“ஆஹ்..”

“பொறுக்கிகள்..”

“ம்மா.. ஆஹ்”

“மகன் போய் மருந்துப் பெட்டியை எடுத்துட்டு வா.. அவங்க இந்தப் பிள்ளைட காதை சிதைச்சிருக்காங்க..”

“காதுல எப்படிக் காயம் பட்டது பாத்திமா?”

பாத்திமா எனது கேள்வியைக் காதில் வாங்கிக் கொள்ளாததைப் போல இருந்ததால், நான் அக்காவின் அறையில் வைக்கப்பட்டிருந்த மருந்துப் பெட்டியைக் கொண்டு வந்து சற்று ஓசையெழும் விதமாகவே அங்கிருந்த சிறிய மேசை மீது வைத்தேன். அவள் திரும்பிப் பார்த்தாள். பின்னர் மீண்டும் மறுபுறமாகத் திரும்பி விம்மத் தொடங்கினாள்.

“வாப்பாவுக்கு அவங்க அடிச்சப்போ நான் கத்திக் குழறிக் கொண்டு அவங்க மேல பாய்ஞ்சேன். அப்பதான் அவங்க என்னோட தோட்டையும் சேர்த்து...” என்றவள் வாக்கியத்தை முடிக்காமலேயே விம்மினாள். என்னைப் போலவே அம்மாவும் தனது மனதுக்குள் அந்த வாக்கியத்தைப் பூரணப்படுத்திக் கொண்டிருக்கக் கூடும்.

அவளது கிழிந்த காது மடலுக்கு அம்மா மருந்திட்டு பிளாஸ்டர் ஒட்டிய வேளையில்

எனது விழிகளிலிருந்த கண்மணிகளில் எதையோ வித்தியாசமாக உணர்ந்தேன். அது எவ்வாறானது என்பதை விபரிப்பது கடினம். வித்தியாசத்தை உணர்ந்த அந்தக் கணத்திலேயே பாத்திமாவின் காயமடைந்திருந்த காது மடல் கரு நீல நிறமாக மாறத் தொடங்கியது. அது கொஞ்சம் கொஞ்சமாக அதிகரித்து காது முழுவதையும் நீல நிறப் படலமொன்று மூடியது. எனது விழிகளில் எரிச்சலை ஏற்படுத்தியவாறே அந்த நீலப் பனிப் படலமானது, நீர்ச் சுழியொன்றைப் போலச் சுழன்று அவளது காதுக்குள் நுழையத் தொடங்கிற்று. கணப்பொழுதில் மொத்த அறையும் அடர்ந்த நீலப் பனியால் மூடுண்டு என்னையும் சுழற்ற ஆரம்பித்தது. முதலில் அம்மாவின் கையிலிருந்த ஈரத் துணித் துண்டு அச் சுழல் காற்றில் அகப்பட்டு பாத்திமாவின் காதுக்குள் இழுபட்டுச் சென்றது. பிறகு பிளாஸ்டிக் கோப்பை. அவற்றைத் தொடர்ந்து சிறிய மேசை, பூச் சாடி, எனது மேசை மீதிருந்த புத்தகங்கள், இன்னும் என்னென்னவோ எல்லாம் அந் நீல அந்தகாரத்துக்குள் அவளது காதுக்குள் இழுபட்டுச் சென்று காணாமல் போயின. அம்மாவின் உருவம் காணாமல் போய் நானும் சுற்றிச் சுழல்வது எனக்கு விளங்கியது. ஒரு கேமராவின் ஷட்டர் கணம் போன்ற மிகக் குறுகிய காலத்துக்குள் நானும் உள்ளே ஈர்க்கப்பட்டுச் சென்று விட்டேன். அந்த அனுபவம் பயங்கரமானது. சிறிய வாக்கியத்தினாலேயோ, ஒரு நீண்ட வாக்கியத்தினாலேயோ கூறி முடிக்க முடியாத அளவுக்கு பயங்கரமானது. நாங்கள் பாரிய படுகுழியொன்றுக்குள் இழுக்கப்பட்டு சுழன்று கொண்டிருப்பதாக எனக்குத் தோன்றியது. அந்தப் பயணத்தின் இடையில் ஒருவரையொருவர் முட்டி மோதிக் கொண்டும், அழுது புலம்பியவாறும் வரையறையற்ற அச்சத்தால் எழுப்பிய ஓலமானது, ஒடீஸியஸைக் கூட அசைத்துப் பார்த்திருக்கும். நீலச் சுழிக்குள் சிக்குண்டிருந்தவைகளிடையே வெளியுலகத்தின் வரையறைகளுக்கேற்ப, ஒரேயொரு உயிர்ப் பிராணி நான் மாத்திரம்தான். என்றாலும், அங்கிருந்த அனைத்திடமும் தனித் தனியான ஓலங்கள் இருந்தன. அனைத்துக்கும் குரல்கள் கூட இருந்தன. அனைத்தும் ஒன்றோடொன்றென தம் உடல்களின் மீது மோதிக் கொண்டன. அங்கிருந்த அனைத்தும் வலியையும் அனுபவித்தன. எனது சிறிய மேசை எழுப்பிய வேதனை முனகல், உள்ளத்தை உருக்கக் கூடிய அளவுக்கு உணர்வு பூர்வமாயிருந்தது. மேசை மீது வைத்திருந்த புத்தகங்கள் அனைத்தையும் நான் வாசித்திருக்காத காரணத்தால் அவை ஒவ்வொன்றும் எழுப்பிய ஓலங்கள் யாருடையவை என்பதை தனித்தனியாக என்னால் இனங்கண்டுகொள்ள இயலவில்லை. அங்கு பேராசிரியர் நளிந்த சில்வாவின் குரல் மிக மெலிதாக எனக்குக் கேட்டது. அவர் ஏதேதோ முணுமுணுத்துக் கொண்டிருந்தார். திடீரெனச் சுழன்று வந்த கனத்த அட்டையைக் கொண்ட புத்தகமொன்று எனது நெற்றியில் பட்டது. நான் பின்னால் எறியப்பட்டேன். அதற்கிடையில், விரைவாக அதலபாதாளத்துக்குள் சென்று கொண்டிருந்த, பாத்திமாவின் குளிர்ந்த இரத்தம் படிந்த துணித் துண்டு எனது நெற்றியில் விழுந்தது. நான் அதைக் கையிலெடுத்து கோபத்தோடு சுருட்டி உருண்டையாக்கி அந்தப் புத்தகத்தை நோக்கி வீசியடித்தேன். அந்தப் புத்தகம் கனத்த குரலெழுப்பியவாறு ஏதோ வசனங்களை உச்சரிக்கத் தொடங்கிற்று.

”இப்போது இப் பிரபஞ்சத்தின் மற்றுமொரு யுகத்தில் நாங்கள் வாழ்ந்து

கொண்டிருக்கிறோம்

இங்கு எழுந்துள்ளது நமது அக ஆத்மாவா எனப் பாருங்கள்

இது நமதேயான அக ஆத்மா அல்லாவிடின் வேறேதேனும் சக்தியா?

இதைப் புரிந்து கொள்ள வேண்டாமா?…"

அந்த வசனங்கள் உச்சரிக்கப்பட்டுக் கொண்டிருந்த போதே "ஸ்லாங்" எனும் ஓசையோடு சுழற்சி நின்றது. தொடர்ச்சியாக சுழன்று கொண்டேயிருந்ததால் எனக்கு வாந்தி வரும் போல இருந்தது. நான் தரையில் படுத்துக் கொண்டேன். என்னுடனே படுகுழிக்குள் தள்ளப்பட்டிருந்த புத்தகங்களும், ஏனைய பொருட்களும் ஒவ்வொன்றாகக் கீழே விழத் தொடங்கின. திரும்பவும் அந்த ஈரத் துணித் துண்டு எனது தலையிலேயே விழுந்தது. அனைத்தையும் அடித்துத் தள்ளி விட்டு சிறிய மேசையின் விளிம்பில் முதுகைச் சாய்த்து அமர்ந்து கொண்டதும்தான் நான் எங்கேயிருக்கிறேன் என்பதைக் கண்டு கொண்டேன். அது ஊரிலிருந்த பௌத்த விகாரையின் போதி மரத்தடி. மரத்தடியின் அருமையான குளிர்ச்சியும், இதயத்தைப் பிளக்கின்ற செறிவான ரசாயன வாடையும் அங்கிருந்தன. படுகுழிக்குள் விழுந்ததால், நான் மிகவும் களைப்புற்றிருந்தேன். இருந்தும் மிகுந்த சிரமத்தோடு எழுந்து, புத்தர் பெருமானைச் சுற்றி வலம் வரத் தொடங்கினேன். சற்று தூரம் நடந்த பிறகுதான் நான் தவறான திசையில் வலம் வந்து கொண்டிருப்பது புரிந்தது.

"இடதுசாரிகள்தானே.. அதனால் பரவாயில்லை.."

திடுக்கிட்டுப் போனேன். யாரது? யாருடைய குரல் இது..? யாரும் தென்படவில்லை. கண்ணுக்கெட்டிய தொலைவு வரை எவரும் இல்லை. தொலைவில் பச்சை நிற மரங்களுக்கிடையே கடும் செம்மஞ்சள் நிறத்தில் நிர்மாணிக்கப்பட்டுக் கொண்டிருந்த சிலைகளின் வரிசையும், அவற்றின் கீழே அவற்றுக்கு வர்ணம் பூசிக் கொண்டிருந்த சாயம் பூசுபவர்களும் மாத்திரம்தான் அங்கிருந்தார்கள். ஒருவேளை படுகுழியில் விழுந்ததால் உருவான தலை சுற்றலின் பலனாக இந்தக் குரல் கேட்டிருக்கக் கூடுமென்று நினைத்தேன். மீண்டும், புதிதாக வர்ணம் பூசப்படும் அந்தச் சிலைகளிலிருந்து எழுந்த கடுமையான வாடை எனது மூக்கைத் துளைத்தது.

"இடதுசாரிகள்தானே.. அதனால் பரவாயில்லை.."

மீண்டும் அதே குரல்!

ஓஹ்..! என்னுடனேயே படுகுழிக்குள் தள்ளப்பட்டிருந்த ஒரு புதிய கவிதைத் தொகுப்பிலிருந்து அந்தக் குரல் வந்திருந்தது. வாசிக்குமளவுக்கு பெறுமதியுள்ள புத்தகமாக அது எனக்குத் தோன்றாததால் அதனை நான் ஒரு புறமாகப் போட்டு வைத்திருந்தேன். அங்கு அப் புத்தகத்தைக் கையிலெடுத்து சும்மா வாசித்துப் பார்க்கத் தோன்றிய போதும், எனது பசி அதற்கு இடமளிக்கவில்லை. நான் தொடர்ந்தும் இடப் புறமாகவே புத்தர் பெருமானை வலம் வந்து கொண்டிருந்தேன். இருபத்தெட்டு புத்தர் சிலைகள் முடிவடையும் இடத்தில், சரியாகச்

சொன்னால் தீபங்கர புத்தர் சிலையின் அருகே நான் நின்றிருந்தேன்.

“தீபங்கர புத்த பிரானே, எனக்குத் தெளிவான விளக்கத்தைத் தாருங்கள் சாமி..”

நான் நிறுத்தாமல் சாப்பிட்டுக் கொண்டேயிருந்தேன். வெகுநேரமாக பட்டினியில் கிடந்ததால் மூன்றாவது சோற்றுக் கவளத்தை விழுங்கிய வேளையில் எனது தொண்டையில் விக்கியது. படையலில் வைக்கப்பட்டிருந்த தண்ணீரைக் கொஞ்சம் அருந்தி விட்டு, மீண்டும் சாப்பிடத் தொடங்கினேன். தீபங்கர புத்தரிடமிருந்து தெளிவான விளக்கத்தைப் பெற்றவனாக நான் அங்கேயே மணற் தரையில் சாய்ந்து படுத்துக் கொண்டேன்.

0

“என்னோட மகளுக்குன்னு பல லட்சங்கள் மதிப்புள்ள தங்க நகைகள் நிறைய இருந்துச்சு.. அதையெல்லாத்தையும் கொண்டு போயிட்டாங்க.. மகன் ரத்தினக் கற்கள் தோண்டுற இடத்துல வேலை செஞ்சதால கிடைச்ச சின்னச் சின்ன ரத்தினக் கற்களை எல்லாம் சேகரிச்சு அலுமாரியில் வச்சிருந்தான். அதையெல்லாத்தையும் கூடக் கொண்டு போயிட்டாங்க ஐயா… ஐயோ..! அல்லாஹ்தான் இருக்கான்…”

எம்முடன் ஒரே வகுப்பில் படித்த நூர்தீனின் அம்மா பெருமூச்சு விட்டவாறு கூறுகிறார். போலிஸ்காரர் முறைப்பாட்டைக் கேட்டு எழுதிக் கொள்கிறார். ஆனால் நூர்தீனின் அம்மா கூறிய அளவுக்கு நீண்ட வாக்கியங்கள் எவையும் போலிஸின் ஏட்டில் எழுதப்படவில்லை என்பதை நான் காண்கிறேன். முறைப்பாட்டை எழுதும் அதிகாரி வெட்டிக் கொத்தி செதுக்கிய சில வாக்கியங்கள் மாத்திரம் ஏட்டில் பதிவாகின்றன.

“என்னோட ரெண்டு சேவல்களையும், கோழியையும் கூட கொண்டு போயிட்டாங்க ஐயா..!” என்று அவர் ஓலமிடுகிறார்.

அவரது விழியோரமாகப் படிந்திருந்த கண்ணீர்ப் படலத்தின் மீது, மேலும் கண்ணீர் கீழ் நோக்கி வழிகையில் நூர்தீனின் அம்மா மயக்கமாகி விடுகிறார். சரியாக அக் கணத்திலேயே ஓஐசீயின் அறையிலிருந்து வெளியே வந்த தடியன் ஒருவன் என்னை இழுத்துக் கொண்டு தாழ்வாரம் வழியே நடக்கத் தொடங்கினான். இரும்பினாலான கை விலங்குகளுக்குள் அகப்பட்டிருந்த எனது கைகளிரண்டும் வேதனை தருகின்றன. அணுவளவேனும் அனுதாபம் காட்டாமல், அவன் எனது கழுத்தைப் பிடித்து சிறைக்குள் தள்ளி கதவைப் பூட்டுகிறான். சற்று நேரம் கழித்து எமது குழுவிலேயே இருந்த பையன்கள் எட்டுப் பேரை நான் இருந்த சிறைக்கே கொண்டு வந்து அடைத்து விடுகிறான் அதே தடியன்.

அவ்வேளையில் அச் சிறை அறைக்குள் கதைத்துக் கொள்ளப்பட்ட விடயங்கள் பலவும் அந்தளவுக்கு முக்கியத்துவம் வாய்ந்தவையல்ல. அந்தி நேரமாகும் போது வெளியே போய் விடலாம் என்று அவர்கள் கதைத்துக் கொண்டது மாத்திரம் அனைத்தையும் விட முக்கியமானது. நான் எந்தக் குற்றமும் செய்திருக்கவில்லை. எனினும் சிறைக்குள் தள்ளப்பட்டதன் பிறகு, அந்தளவு விரைவாக வெளியே வர முடியுமா என்ன? தடியன் கூறிய விதத்தில், நாளை ஓஐசீ எம்மை நீதிமன்றத்துக்கு அனுப்பி வைப்பார். அவ்வாறில்லாமல்

ஊருக்குப் புறப்பட்டுப் போவதைப் போல, இந் நாய்க் கூண்டிலிருந்து இலகுவாக வெளியே வர முடியுமென்று எனக்குத் தோன்றவில்லை. மனதை ஆற்றுப்படுத்திக் கொள்ள வேண்டும் என்பதால் இவர்கள் ஆறுதல் கதைகளைப் பகிர்ந்து கொள்கிறார்களாக இருக்கும். எனக்கு இதழோரமாக சிரிப்பும் வந்தது.

அந்தி நேரம் கடந்து இருள் சூழ்ந்தது. தாழ்வாரத்தில் மின்விளக்கு ஒளிர்ந்த போதிலும் எமக்கு மேலேயிருந்த மின் விளக்கு எரியவில்லை. மேலே தொலைவாகத் தெரிந்த காற்று இடைவெளி வழியே இருள் இன்னுமின்னும் இந் நாய்க் கூண்டுக்குள் சேகரமாகிக் கொண்டிருந்தது. நானும், ஏனைய எட்டு நாய்களும் எவ்வித மூச்சும் பேச்சுமற்று அப்படியே விழுந்து படுத்துக் கிடந்தோம். உறக்கம் வரும் சமயத்தில் கதவு திறக்கப்படும் சப்தம் கேட்டது. எங்களில் சிலர் மட்டும் விழித்துக் கொண்டோம். அந்தத் தடியன் வந்திருந்தான்.

“ஒவ்வொருத்தனா வெளியே வாங்கடா.”

தடியனும், அவனுடன் இன்னும் இரண்டு அதிகாரிகளும் எங்களை ஒவ்வொருவராக வெளியே எடுத்து கை விலங்குகளை இட்டு வரிசையாக நிற்க வைத்தார்கள்.

“எதற்காக இது..? எங்களை நீதிமன்றத்துக்கு அனுப்பப் போறாங்களா?”

நான் பக்கத்தில் நின்ற நாயொன்றிடம் கேட்டதும், அவன் பதிலளிக்காமல் நக்கலாகச் சிரித்தான். அப்போதிலிருந்து நான் வாயை மூடிக் கொண்டு என்ன நடக்கப் போகிறதோ என அமைதியாகப் பார்த்துக் கொண்டிருந்தேன். சற்று நேரம் கடந்து போனது. மேலே தொலைவில் தெரிந்த காற்று இடைவெளி வழியே மேலும் கொஞ்சம் இருள் சேகரமாகத் தொடங்கியது. பிறகு எம்மைக் கடந்து நேராக நாய்க் கூண்டின் உள்ளே சென்றது. சற்று நேரத்தில் ஓஐசீயும், வெள்ளை நிறத்தில் காற்சட்டையும், மேற்சட்டையும் அணிந்த மேலும் சிலரும் நாங்கள் இருந்த பக்கமாக வந்தார்கள். ‘அட.. அமைச்சர்.’ தொலைவில் இருந்ததால் அவரை அடையாளம் கண்டுகொள்ள முடியாமல் போய் விட்டது. நாய்கள் தமது வால்களை ஆட்டத் துவங்கின. அவற்றின் வாயிலிருந்து வீணீர் பெருக்கெடுத்து வழியத் தொடங்கியது. எனதருகே நின்றிருந்த நாயுடைய வாயின் இரு ஓரங்களிலிருந்தும் வீணீர் பெருக்கெடுத்து வழிந்து கொண்டிருந்தது. அமைச்சர் தனது கையிலிருந்த பையிலிருந்து வெளியே எடுத்த எட்டு எலும்புத் துண்டுகளையும் வரிசையாக நின்றிருந்த எங்களுக்கு முன்னால் போட்டார். எனக்கு மாத்திரம் இடவில்லை. நான் அமைச்சரின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தேன். அவர் என்னைக் கண்டுகொள்ளவில்லை. இன்னும் சில எலும்புத் துண்டுகள் பைக்குள் எஞ்சியிருப்பதை நான் கண்டேன். எட்டு நாய்களும் வீணீர் வழிய வழிய தரையில் அமர்ந்து எலும்புத் துண்டுகளைச் சுவைத்தன. நான் நின்றுகொண்டே இடையிடையே அமைச்சரையும், எலும்புத் துண்டுகள் இடப்பட்டிருந்த பையையும், எட்டு நாய்களையும் மாறி மாறி பார்த்துக் கொண்டிருந்தேன். நான் பார்த்துக் கொண்டிருந்த போதே அமைச்சரின் கை மீண்டும் பைக்குள் போயிற்று. எனது வாயோரத்திலும் வீணீரை வழிய வைக்க நான் முயற்சித்தேன். அது அந்தளவு இலகுவானதாக இருக்கவில்லை. அமைச்சர் எறிந்த எலும்புத் துண்டொன்று ஓஐசீயின் பற்களிடையே நெறிபட்டது. எஞ்சிய சிலவற்றை அருகேயிருந்த ஏனைய

அதிகாரிகளிடம் வீசியெறிந்த அமைச்சர் திரும்பி நடக்கத் தொடங்கினார். அதிகாரிகளும் தரையில் மண்டியிட்டு எலும்புத் துண்டுகளை சுவைக்கத் தொடங்கினார்கள். அந்தத் தடியன் கீழ் நோக்கிக் குனியும்போதே அவனின் வாயிலிருந்து வழிந்த வீணீர் படலமொன்று எலும்புத் துண்டின் மேலே விழுந்து, மின்விளக்கு வெளிச்சத்தில் அது, வெண்ணெய் தடவப்பட்டது போல பளபளக்கத் தொடங்கியது.



...

எலும்புத் துண்டு விளையாட்டு முடிந்தது. மீண்டும் நாய்க் கூண்டுக்குள் போக வேண்டியிருந்தது. இந்தத் தடவை நான் மட்டுமே நாயாக இருந்தேன். ஏனைய அனைவரும் அமைச்சருடைய உத்தரவின் பேரில் விடுதலை செய்யப்பட்டிருந்தார்கள். ‘அந்தி நேரமாகும் போது வெளியே போய் விடலாம்’ என்று கூறப்பட்டதன் உண்மையான அர்த்தம் இப்போதுதான் எனக்குப் புரிந்தது. வெங்காரை மரத்தின் தடி, முஸ்லிம் கடை முதலாளியின் தலையைத் தாக்க முன்பு அதைப் பறித்தெடுத்தவன் நான். அந்தப் பாவத்துக்கு நான் நாய்க் கூண்டுக்குள் அவதிப்பட்டுக் கொண்டிருக்கிறேன். தலையைச் சிதறடிக்க தடியை உயர்த்தியவர்கள்தான் எலும்புத் துண்டுகளைச் சுவைத்தவர்கள். அது போதாதற்கு இப்போது விடுதலை செய்யப்பட்டு வெளியேயும் போய் விட்டார்கள். எப்படியோ, நான் அன்று போதி மரத்தடியில் படுத்துக் கொண்ட பாவத்துக்கான நஷ்ட ஈட்டை இவ்வாறு செலுத்த நேர்த்திருக்கலாம், இல்லையா? ஆனால் கடவுளே, புத்தர் பெருமான் ஒரு கிழமையாக போதி மரத்தில் சாய்ந்திருந்தாரே. கொழும்பு, புறக்கோட்டையில் இருக்கும் போதி மரத்தின் மீது தினந்தோறும் எத்தனை எத்தனை யாசகர்கள் சிறுநீர் கழிக்கிறார்கள்? அவ்வாறிருக்கும்போது நான் சில மணித்தியாலங்கள் போதி மரத்தடியில் படுத்துக்

கொண்டால் என்ன குறைந்து விடப் போகிறது? எதுவாக இருந்தாலும் இப்போது எல்லாமுமே நடந்து முடிந்து விட்டன. நாளை வெட்கமேயில்லாமல் நான் நீதிமன்றத்துக்கும் போக வேண்டியிருக்கும்.

“டேய்..”

வெளியேயிருந்து சத்தம் கேட்டது. நான் அமர்ந்திருந்த இடத்திலிருந்து எழுந்து அவ்விடத்திலிருந்தே தாழ்வாரத்தைப் பார்த்தேன். அந்தத் தடியன் நின்றிருந்தான்.

“வந்து சோத்தை எடுத்துட்டுப் போடா..” என்றதும் எனக்கு அம்மாவின் வார்த்தைகள் நினைவுக்கு வந்தன.

‘நீ யாரையடா கூப்பிடுறாய் பொறுக்கி.. கூட்டுல இருந்தாலும் நான் நாய்னு நினைச்சியா?’ என்று கூற எனக்குத் தோன்றிய போதிலும், நான் எதுவும் கூறவில்லை. மனதுக்குள் முணுமுணுத்து விட்டு இரும்புக் கம்பிகளின் கீழேயிருந்த இடைவெளியால் சோற்றுப் பீங்கானையும், தண்ணீர்க் கோப்பையையும் பெற்றுக் கொண்டேன். திரும்பவும் முன்பு அமர்ந்திருந்த இடத்துக்கே வந்து அவற்றை ஒரு மூலையில் வைத்து விட்டு அறையை மூன்று சுற்றுச் சுற்றி விட்டு வந்து அமர்ந்து கொண்டேன்.

நேற்று களைப்பும், பசியும் சேர்ந்திருந்ததால் சட்டென்று அங்கிருந்த படையலை விழுங்கி விட்டு மணற்தரையில் சாய்ந்து கொண்டது நினைவிருக்கிறது. திரும்ப விழித்துப் பார்த்தபோது நள்ளிரவு கடந்து விட்டிருந்தது. அந்த விடிகாலைப் பொழுதில் நானாக விழித்துக் கொள்ள முன்னரே, போதி மரத்தடியில் கேட்ட கலவர ஓசைகளால் விழிப்பு வந்து விட்டிருந்தது. உடனடியாக எழுந்து அமர்ந்து கொண்டேன். உறக்கத்திலிருந்து விழித்து நிஜ உலகத்துக்கு வரும்போதே, கட்டப்பட்டுக் கொண்டிருந்த சிலைகளின் அருகிலிருந்து எழுந்த வாடை முகத்திலடித்தது. இரண்டாவது தடவை சோம்பல் முறிக்க எனக்கு சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. அந்தக் கலவரக் குழு போதி மரத்தடிக்கே வந்திருந்தது. அது குண்டாந்தடிகளையும், வாள்களையும் கையிலேந்திய ஆண்கள் படையொன்று. இளைஞர்கள், முதியவர்கள், நடுத்தர வயதினர்கள் என கிட்டத்தட்ட ஐம்பது பேர்களைக் கொண்ட குழு. என்னால் எதுவும் செய்ய இயலவில்லை. கண்ணிமைக்கும் நேரத்தில் அடுத்து நடக்கப் போவது என்னவென எனக்கு விளங்கவில்லை. நான் கண்களைக் கசக்கிப் பார்த்தேன். கைகளைக் கிள்ளிப் பார்த்தேன். அது கனவில்லை. நிஜம். நானும் எழுந்து அந்த குண்டாந்தடிகளையும், வாள்களையும் ஏந்தியிருந்த குழுவினரோடு இணைந்து கொண்டேன்.

ஏதோவொரு விடயம் குறித்து உசுப்பேற்றப்பட்டிருந்த அவர்களுக்கு நான் ஒரு பொருட்டாகவே தெரியவில்லை. ஓரிருவர் எனது தோளில் கையைப் போடவும் தொடங்கியிருந்தார்கள். சற்று நேரத்தில் தலைமைப் பிக்கு போதி மரத்தடிக்கு வருகை தந்தார். அனைத்து ஓசைகளும் அடங்கிப் போயின. ஒரு சிறு சத்தம் கூட இல்லை.

“எல்லோரும் புத்த பிரானை வணங்கி நமஸ்காரம் செய்து கொள்ளுங்கள்..”

என்ன நடந்து கொண்டிருக்கிறது இங்கே? வாள்களையும், தடிகளையும் ஏந்தியவாறு

புத்தரை வணங்கச் சொல்ல இந்த பிக்குவுக்கு என்ன பைத்தியம் பிடித்திருக்கிறதா? இல்லை. உண்மைதான்! புத்த பிரான் அங்குலிமாலாவையும் இவ்வாறுதானே தட்டிக் கேட்டார். எதற்கும் இருக்கட்டும் என நானும் வணங்கி வைத்தேன்.

“இடதுசாரிகளையும், தூய பக்தர்களையும் புற வாசலால் துரத்தி விடுங்கள்..” என்று அந்தக் கவிதைத் தொகுப்பு ஓலமிடத் தொடங்கியது. அதிர்ஷ்டவசமாக அந்த ஓசை ஏனையவர்களுக்குக் கேட்கவில்லை. நான் ஒவ்வோர் அடியாக அடியெடுத்து வைத்து பின்னால் நகர்ந்து சென்று சிறிய மேசையை எடுத்து கவிதைத் தொகுப்பின் மேலால் வைத்து விட்டு, அதே பாதச் சுவடு வழியே திரும்பவும் வந்து அப் படையோடு சேர்ந்து கொண்டேன். பூஜை வழிபாடுகள் பூர்த்தியடைந்தன. தலைமைப் பிக்கு தொண்டையைச் செருமியவாறு உபதேசத்தை ஆரம்பித்தார்.

“நீங்கள் எல்லோரும் இதை நன்றாகக் கேட்டு விளங்கிக் கொள்ள வேண்டும். நீங்கள் இப்போது போகப் போவது கொலைகள் செய்யவோ, அப்பாவி மக்களைத் தொந்தரவு செய்யவோ அல்ல. மேன்மை மிக்க இந்த பௌத்த மதத்தையும், சிங்களவர்களையும் பாதுகாக்கும் புண்ணிய கருமத்துக்காகத்தான் செல்கிறீர்கள். அவ்வாறே..”

“ஆகட்டும்..! ஆகட்டும்..! ஆகட்டும்..!”

“அவ்வாறே துட்டகைமுனு மன்னன் கூறியிருக்கும் வாக்கியத்தை நீங்கள் அனைவரும் உங்கள் மண்டைகளுக்குள் ஏற்றி வைத்திருப்பது நல்லது..”

“ஆகட்டும்.. ஆகட்டும்..”

ஆகட்டும் எனச் சொன்ன குழுவினரின் ஆமோதிப்பு ஓசைகளும், பிக்குவின் மென்மையான குரலில், ஆனால் கடுமையாகக் கூறப்பட்ட உபதேசங்களும் அனைவரிடமுமிருந்த வாள்கள், தடிகள் மென்மேலும் உயர்த்தப்பட ஏதுவாய் அமைந்தன. ஒருவனது கையிலிருந்த ஒரு புறம் மாத்திரம் வெட்டக் கூடிய வாள், செந்நிற வெளிச்சம் பெற்று என் கண் முன்பே இரு புறமும் வெட்டக் கூடிய வாளாக மாறியது. எனது கையிலும் கித்துள் மரத்தினாலான ஒரு நல்ல தடி திணிக்கப்பட்டது. தலைமைப் பிக்கு எமது கைகளிலிருந்த ஆயுதங்கள் அனைத்துக்கும் புத்த பிரானின் பெயரால் மந்திரிக்கப்பட்ட தண்ணீரைத் தெளித்தார். என்னிடம் தரப்பட்டிருந்த கித்துள் தடியின் முனையில் கூர்மையான முட்கள் தோன்றவாரம்பித்தன. முன்பிருந்ததை விடவும் ஒரு சக்தி வந்ததனால் நானும் அக் குழுவுடன் இணைந்து கொண்டு அவர்கள் செல்லும் திசையிலேயே எனது இனத்தைக் காக்கவெனச் சென்றேன்.

காற்று இடைவெளி வழியே வரும் இருள், நாய்க் கூண்டினுள்ளே சேகரமாவது இன்னும் நின்றிருக்கவில்லை. பசித்தது. அக் கூட்டின் மூலையில் வைக்கப்பட்டிருந்த சோற்றுப் பீங்கானைக் கையிலெடுத்தேன். அவ்விடத்துக்கு தாழ்வாரத்தின் வெளிச்சம் படிந்து கொண்டிருந்ததால் சோறு தெளிவாகத் தென்பட்டது. மோசமான சாவு விருந்து என்பது இதுதான். இதற்கு மாற்றான வேறொரு நல்ல உணவு இன்று இனிமேல் கிடைக்காதென்பது

தெளிவாகத் தெரிந்தது. உணவின் அருமையான வாடை கொஞ்சமும் இல்லை. என்றாலும் படையலில் விழுங்கிய மூன்று சோற்றுக் கவளங்களின் பின்னர் எதுவும் சாப்பிடாதிருந்த காரணத்தால் அந்த சிறையுணவை விழுங்கத் தொடங்கினேன். சில கவளங்களை விழுங்கியிருப்பேன். சடுதியாக கையில் உலோகத் துண்டு போல ஏதோவொன்று தட்டுப்பட்டது. தாழ்வாரத்திலிருந்து சோற்றுப் பீங்கானையே பார்த்துக் கொண்டிருந்த மெல்லிய வெளிச்சம் என்னை நெருங்கியது.

‘அது ஒரு தோடு’

எனது இதயம் வேகமாகத் துடிக்கத் துவங்கியது. பதற்றத்துடனே தோட்டை எடுத்து மின்விளக்கு வெளிச்சத்தில் வைத்துப் பார்த்தபோதுதான் அது தோடு மாத்திரமல்ல என்பது புலப்பட்டது.

“பாத்திமா..!”

எனது எச்சில் தொண்டையில் விக்கியது. இடக் கையிலிருந்த சோற்றுப் பீங்கான் மடி மீது, பின்னர் மடியிலிருந்து தரை மீது என நழுவி விழுந்தது. பச்சை நிறத் தோட்டோடு காது மடலின் பாகமும் தொங்கிக் கொண்டிருந்தது. அது பாத்திமாவின் கிழிந்த காது மடலின் துண்டு என்பதைப் புரிந்து கொள்ள எனக்கு வெகுநேரம் எடுக்கவில்லை. எனது இரண்டு விழிகளும் எரிவை உணரத் தொடங்கின. கொஞ்சம் கொஞ்சமாக விழிகள் மங்கத் தொடங்கி விட்டன. தோட்டோடு தொங்கிக் கொண்டிருந்த காது மடல் துண்டு, நான் பார்த்துக் கொண்டிருந்த போதே நீல நிறமாகத் தொடங்கி விட்டது. மீண்டும் அந்த நீல நிறப் பனி என்னைச் சூழ்ந்து கொண்டது. இப்போது நாய்க் கூண்டு நீல நிறப் பனியால் மூடப்பட்டிருந்தது. தாங்க முடியாத எரிச்சலால் விழிகள் எரியத் தொடங்கின. அங்கு ஏதோவொரு அதிர்வு நிகழ்ந்து கொண்டிருந்ததாக எனக்கு நினைவிருக்கிறது. நழுவி விழுந்த சோற்றுப் பீங்கான் மேலே எறியப்பட்டு சுழலத் தொடங்கியது. அது எனது கையிலிருந்த காதுத் துண்டினுள் ஈர்க்கப்பட்டுச் சென்றது. அந்தப் பனிப் படலம் எனது மூக்கினுள் நுழைவதைப் போல உணர்ந்தேன். கூடவே.. நன்றாக உணர்ந்து பழகிய வாடையொன்றை நாசியில் உணர்ந்தேன். சரிதான்.. எனக்கு நினைவிருக்கிறது. அது, அந்தப் புதிதாக நிர்மாணிக்கப்படும் சிலைகளிலிருந்து எழுந்த காரமான ரசாயனக் கலவைகளின் வாடை.. அதைத் தாண்டி, அதற்குப் பிறகு எனக்கு எதுவுமே நினைவில்லை. நானும் காதுத் துண்டுக்குள் இழுபட்டுச் சென்று விட்டேனா இல்லாவிட்டால் பனி எனது மூக்கினுள்ளே இழுபட்டு வந்ததா எதைக் குறித்தும் எனக்கு உறுதியாகத் தெரியவில்லை. மங்கலான வெளிச்சத்தினூடே நிஜ உலகம் தென்படத் தொடங்கிய வேளையில், நான் எனது அறையில், எனது கட்டிலில் கிடந்தேன். பாத்திமாவோ, அம்மா அவளது காதுக்கு ஈர ஒத்தடமிட்ட துணித் துண்டோ, குறைந்த பட்சம் அம்மாவோ அங்கிருக்கவில்லை.

“அபத்தமான கனவு..” என எனது வாய் தானாகவே முணுமுணுத்தது. அங்கு சிறிய மேசையின் மீது வைக்கப்பட்டிருந்த தண்ணீர்க் குவளையை எடுத்து அவ்வளவையும் ஒரே மூச்சில் குடித்து முடித்து திரும்பவும் இடப்புறமாகத் திரும்பி கட்டிலில் படுத்துக் கொண்டேன்.

அக் கணத்திலேயே சட்டென்று கண்ணின் கருவிழிக்கு சில சென்றிமீற்றர்கள் தொலைவில் படுக்கை விரிப்பின் மீது வரிசையாக இருந்த கறைகள் தென்பட்டன. நான் மீண்டும் எழுந்து கட்டிலின் மீது அமர்ந்து கொண்டேன்.

“பா..பாத்திமா..”

தீபங்கர புத்தரின் முன்னிலையில் சோற்றுக் கவளம் தொண்டையில் விக்கியதைப் போல, எனது தொண்டை விக்கத் தொடங்கிற்று. குருதிக் கறைகள் எனது படுக்கை விரிப்பில் ஒரு வடிவத்தை வரைந்திருந்தன. அங்கு வரையப்பட்டிருந்தது போதி மர இலையா அல்லது ஓர் இதயமா என்பதைப் புரிந்து கொள்ள சிரமமாக இருந்தது எனக்கு.

# 4. பிரியம்: ஐ. கிருத்திகா

ஒக்டோபர் 2020/சிறுகதைகள்

BY ஐ. கிருத்திகா



…

நாராயணன் இறந்து போனார். மாரடைப்பு; சாப்பிட்டு உட்கார்ந்தவர் அப்படியே சரிந்து விட்டாராம். துக்கத்துக்குத் தாத்தாவும், அப்பாவும் போய் வந்தனர். காரிய செலவுக்குத் தாத்தா பணம் கொடுத்ததாக, பேசிக் கொண்டதிலிருந்து தெரிந்தது.

தாத்தா ஒரு வாரம் யாருடனும் பேசவில்லை. மௌனமாகவே இருந்தார். அவர் சகஜநிலைக்குத் திரும்ப வெகுநாட்களானது. திண்ணைகள் நாராயணனை ஞாபகப்படுத்தின.

தாத்தாவுக்கு முடி, கால் நகம் வெட்ட நாராயணன் மாதம் தவறாமல் வந்துவிடுவார். கையோடு அவர் கொண்டுவரும் சிறு பெட்டியில் சவரம் செய்யத் தேவையான கத்தி, கத்தரி, படிகாரக்கல், சீப்பு, வட்ட வடிவ டப்பாவில் சோப்பு, பிரஷ் எல்லாம் இருக்கும்.

பெட்டியைத்திண்ணையில் வைத்துவிட்டு,

“நான் நாராயணன் வந்திருக்கம்மா..” என்று நிலையருகில் நின்று உளநோக்கி குரல் கொடுப்பார்.

ஒல்லியாக, வெடவெடவென்றிருக்கும் நாராயணன் கணுக்காலுக்கு மேலே வேட்டி கட்டியிருப்பார். மல் துணியில் தைத்த அரையளவு ஜிப்பா அணிந்திருப்பார். அதைத் தவிர்த்து வேறு உடையில் நான் அவரைப் பார்த்ததில்லை.

நாராயணனுக்கு வீடு, வீடாக சென்று தலை முடி திருத்தி,முகச்சவரம் செய்து விடுவதுதான் வேலை. சுழலும் நாற்காலியுள்ள சலூன்கள் இல்லாத காலமது. கிராமத்துக்கொரு நாராயணன் இருப்பார். அவரிடம் ஊர், உலகக் கதைகளைப் பேசியபடியே சவரம் செய்து கொள்வார்கள் ஆண்கள்.

தாத்தாவுக்கு கால் நகங்கள் கெட்டிப்பட்டுப் போயிருக்கும். அதிலும் பெருவிரல் நகங்கள் கிளிஞ்சல்கள் போல் தடித்திருக்கும். சற்றே நிறம் மங்கி பழுப்பாய் இருக்கும் நகங்களை நாராயணன் பதமாய் வெட்டிவிடுவார்.

முதலில் கிண்ணியில் இருக்கும் தண்ணீரையள்ளி நகங்களை நனைப்பார். இரண்டு முறை அப்படி விட்டுவிட்டு செய்துவிட்டு கொஞ்சநேரம் பொறுத்திருப்பார். கெட்டியான நகங்கள் தண்ணீர் பட்ட சிறிது நேரத்தில் ஊறிப்போகும். அதை உறுதிபடுத்திக்கொண்டு வேலையை ஆரம்பிப்பார்.

தாத்தா ஒயர் பின்னிய நாற்காலியில் அமர்ந்து கால்களை தரையில் அழுந்த பதிய வைத்திருப்பார்.

“அந்த நகவெட்டிய கொண்டா..”

உள்நோக்கி குரல் போகும். தாத்தாவின் மேசை இழுப்பறையில் நகவெட்டி பத்திரமாக இருக்கும். சிங்கப்பூர் நகவெட்டி. சற்றே பெரியது. இளஞ்சிவப்பு நிறத்தில் பூக்கள் வரையப்பட்டிருக்கும். தாத்தாவின் தம்பி மகன், என் சித்தப்பா சிங்கப்பூரிலிருந்து வாங்கிவந்துத் தந்தது. பாட்டி அதை மிக கவனமாக கொண்டுவந்து தருவாள்.

நாராயணனும் கை நீட்டி பொன்போல் வாங்கிக்கொள்வார். தாத்தா கேட்கும் கேள்விகளுக்கு பதில்களும், நகங்களும் வந்து விழும். நாராயணன் நகங்களை சேகரித்து குப்பையில் போட்டுவிட்டு நகவெட்டியை நன்றாக கழுவி வெயில் பட வைப்பார்.

காய்ந்ததும் பாட்டி எடுத்து சென்று மேசை இழுப்பறைக்குள் பத்திரப் படுத்துவாள். அடுத்தது முடிவெட்டும் படலம். தாத்தா சம்மணமிட்டு அமர்ந்து கொள்வார். நாராயணன் அவர் முன் கால்களை ஊன்றி குந்தாமல் அமர்ந்திருப்பார். தலையில் நீர் தெளித்து சீப்பால் வாரி கத்தரி கொண்டு வெட்டி முடியை சீராக்குவார்.

அவருடைய இரண்டு கைகளும் ஒத்திசைவோடு இயங்குவதைப் பார்க்க ஆச்சரியமாக இருக்கும். விறுவிறுவென்று சீப்பையும், கத்தரியையும் அடுத்தடுத்து பிரயோகிப்பது

அவருக்கு கைவந்த கலையாக இருந்தது. அதில் ஒன்றிய தன்மையோடு அவர் ஈடுபட்டிருப்பதை நான் கண்ணிமைக்காது பார்த்திருப்பேன்.

வெளுத்த முடி வெள்ளிக் கம்பிகளாக மடியில் விழுவதைப் பார்க்க வேடிக்கையாக இருக்கும். தாத்தாவுக்கு எழுபது வயதிலும் முடி நிறைய இருந்தது. அது பரம்பரை வாகு என்றாள் பாட்டி.

பாட்டி கையால் காபி குடிக்க கொடுப்பினை வேண்டும் என்று நாராயணன் அவளிடமே சொல்வார்.

“சங்கரி, நாராயணன் வந்துட்டான்.”

தாத்தாவின் குரல் அடுக்களையை எட்டும் முன்னரே காபி வந்துவிடும்.

“அவன்தான் வந்தவுடனேயே குரல் குடுத்துட்டானே.”

பாட்டிக்கு யார் வந்தாலும் பாரபட்சம் கிடையாது. விருந்தோம்பல் அவ்வளவு பிடிக்கும். அவள் தரும் காபியை நாராயணன் துண்டை கைகளில் பிடித்து வாங்கிக்கொள்வார்.

பின் ஓர் ஓரமாகச் சென்று காபியை ரசித்து, ருசித்து குடிப்பார். அப்போது அவர் முகத்தில் மலர்ச்சி ஒளிர்ந்து கொண்டிருக்கும்.

திடீரென்று இருட்டிக்கொண்டு மழை கொட்டும்போது ஒரு விளக்கை ஏற்றிவைத்தால் முணுக்கென்று மெல்லிய வெளிச்சம் பரவி அறையில் ததும்பி வழியுமே. அப்படியும் தோன்றும். அதற்காகவே அவர் காபி குடிப்பதை நான் மறைந்திருந்து ரசிப்பேன்.

அவர், தன் வாழ்நாளில் அப்படியொரு காபியை வேறெங்கும் குடித்ததில்லை என்று பின்னொருநாள் என்னிடம் கூறி நெகிழ்ந்து போனார். பாலில் காபிப் பொடியை போட்டு கொதிக்கவிட்டு, வடிகட்டி, சீனிபோட்டு அவர் மனைவி தருவாராம். பில்டர்காபி பற்றி அவருக்கு எதுவும் தெரியாதாம். சிரித்தபடி சொன்னார்.

நாராயணனின் அப்பா, தாத்தாவின் அப்பாவுக்கு சவரம் செய்து விட்டவர். அவருடன் நாராயணன் சிறுவனாக வருவாராம். அப்போது தாத்தா வாலிபனாக இருந்திருக்கிறார். கொள்ளுத்தாத்தா, தாத்தாவை கட்க முடி மழித்துக் கொள்ள சொல்லி வற்புறுத்துவாராம். தாத்தாவுக்கு வெட்கமாக இருக்குமாம்.

“இதுல என்னடா வெக்கம். தலை, முகத்தோட சேர்த்து அக்குளையும் சுத்தம் செஞ்சிக்கோ”என்பவர் கண்சாடை காட்டிவிட்டுப்போவாராம்.

பின்னாளில் நாராயணன் அந்த வேலையை செய்தார். எனக்கும், அப்பாவுக்கும் முடிவெட்டுவது கூட நாராயணன்தான். அப்பாவிடம் மூச்சு இழையோடும் சத்தத்தைத் தவிர வேறெதுவும் கேட்காது. தாத்தாவுக்கு முடி திருத்தும்போது நேரம் இழுபடும். தாத்தா பேசிக்கொண்டேயிருப்பார்.

நாராயணன் ஒரு கையை அவரின் தலையில் வைத்து இன்னொரு கையை ஆட்டி, ஆட்டி

பதில் சொல்லிக்கொண்டோ, மறுபேச்சு பேசிக்கொண்டோ இருப்பார். அப்போது கத்தரி காற்றைக் கிழித்து அப்படியும், இப்படியும் அலையும்.

அப்பாவுக்குப் பத்து நிமிடங்களில் வேலை முடிந்துவிடும். அவருக்கு முடி திருத்தும்போது நாராயணன் முகம் உணர்ச்சியற்ற தன்மையிலிருக்கும். செய்நேர்த்தியில் குறையிருக்காது. ஆனால் அதை எந்திரத்தனமாக செய்வார்.

தாத்தா என்றால் துள்ளியோடும் மான்குட்டிபோல் முகத்தில் உற்சாகம் துள்ளும். வாஞ்சையோடு காலை சுற்றும் நாய்க்குட்டி போல் குழைந்துபோய் அவர் அமர்ந்திருப்பார். தன் தேவனைக் கண்டுவிட்ட பரமானந்த பெருநிலையில் அவர் கண்கள் மின்னும்.

அவருக்குக் காசு கொடுக்க தாத்தா மறுமுறை பாட்டியை அழைப்பார். காபி கொடுக்க, நகவெட்டி எடுத்து கொடுக்க, பணம் தர என்று மூன்றுமுறை பாட்டி வாசலுக்கு வருவாள்.

"நாராயணன் வேலை முடிச்சிட்டான். பணம் எடுத்துட்டு வா சங்கரி.."

பாட்டி, தாத்தாவின் மேசை இழுப்பறையைத் திறந்து ஏற்கனவே தனியாக எடுத்து வைத்திருக்கும் பணத்தை எடுத்து தானும் ஒருமுறை எண்ணிப் பார்த்துவிட்டு மேசை இழுப்பறையை பூட்டி அடியில் கையைக் கொடுத்து தள்ளிப்பார்த்து திருப்திபட்டுக் கொண்டு வருவாள்.

கீழே விழுந்து கிடக்கும் முடிக்கற்றைகளைக் கூட்டி சுத்தம் செய்யும் நாராயணன் பாட்டியைக் கண்டதும் கையை வேட்டியில் துடைத்துக்கொண்டு குனிந்து இருகைகளையும் ஏந்தி பணத்தைப் பெற்றுக்கொள்வார்.

மேசைக்குள்ளிருக்கும் பணத்தை முன்னதாகவே வெளியில் எடுத்து வைக்கும் பழக்கம் தாத்தாவுக்கில்லை. பாட்டியும் அப்படி செய்யச்சொல்லி கேட்கமாட்டாள். நாராயணனைப் பார்த்து இரண்டு அதட்டல்கள் போடக்கூட அவளுக்குப் பிடிக்கும்.

"கல்யாண வயசாச்சு பொண்ணுக்கு. வரன் பாக்க ஆரம்பிக்கலியா..?"

ஒருமுறை அவளின் கேள்விக்கு நாராயணன் மையமாக தலையசைத்து வைத்தார்.

"இப்படின்னா என்ன அர்த்தம்?"

தலையை இடவலமாக அசைத்து புருவம் உயர்த்தி கேட்டாள். தாத்தா, அவளை ரசித்துப் பார்த்துக் கொண்டிருந்தார்.

"நேரங்காலம் கூடி வரணும் இல்லீங்களா.. நடக்குறப்ப தான எல்லாம் நடக்கும்."

"ஆடி மாசம் பொறந்தா ஆத்துத்தண்ணி தன்னால ஓடிவரப்போவுதுன்னு சொல்ற மாதிரியில்ல இருக்கு. மண்வெட்டி எடுத்து வழி பண்ணி விடாம சளக், புளக்குன்னு மடைத்தண்ணி வரப்பு தாண்டி பாயுமா..?"

பாட்டி லேசில் விடமாட்டாள். படிமானம் வரும்வரையில் பிடிமானம் அவள் கையில்தான் இருக்கும். இது நாராயணனுக்கும் தெரியும். அதனால்,

“சரிம்மா. ஆக வேண்டியத செய்யிறேன்”என்று சரணாகதி அடைந்தார்.

ரெட் ஆக்ஸைடு பூசப்பட்ட திண்ணைகள் சற்று உயரமானவை. அதில் கீழிருந்து எம்பி குதித்து ஏறிக்கொண்டோ, எதிர்த்திண்ணையிலமர்ந்து கொண்டோ நான் அவர்களை வேடிக்கைப் பார்ப்பேன்.

தாத்தா எழுந்து சென்றபிறகு என்னிடம் கேள்வி கேட்டபடியே நாராயணன் பெட்டிக்குள் உபகரணங்களை வைத்து மூடுவார். முதலில் கத்தியை தண்ணீரில் கழுவி வேட்டியில் நன்றாக துடைத்துவிட்டு உள்ளே வைப்பார்.

கத்திரியின் இரண்டு இறகுகளையும் அகல விரித்து முடி எதுவும் சிக்கியிருக்கிறதா என்று பார்த்து, இருந்தால் எடுத்தெறிந்துவிட்டு அலம்பி துடைத்து வைப்பார். படிக்காரக்கல் நுங்கு போல் இருக்கும். கையில் வைத்துக்கொண்டால் ஜிலுஜிலுவென்று சில்லிடும். என் கண்களில் மிதக்கும் ஆவலைக் கண்டு,

“கைக்குள்ள வச்சி பாக்குறீங்களா தம்பி….?” என்பார்.

நான் ஆசையோடு வாங்கி இரண்டு கைகளிலும் மாற்றி, மாற்றி வைத்துப் பார்ப்பேன். பின் கன்னங்களில் பதித்துக்கொள்வேன். முகச்சவரம் செய்தபிறகு கத்தியில் இழுபட்டு எரியும் கன்னங்களில் அதை வைத்து தேய்த்துக்கொள்வார்களாம். குளுமையாக இருக்குமாம்.

அதோடு வெட்டுக்காயங்களால் ஏற்படும் கிருமி தொற்று உண்டாகாமல் படிகாரம் தடுக்குமாம். தாத்தா அவரிடம் முகச்சவரம் செய்து கொள்வதில்லை. அதனால் அது பெட்டிக்குள்ளேயே இருக்கும். அப்போதெல்லாம் ஆஃப்டர் ஷேவிங் லோஷன் இருந்ததா என்று தெரியவில்லை.

“தம்பி, தர்றீங்களா..?”

நாராயணன் கைநீட்டுவார். நான் மனமின்றி கொடுப்பேன். வாங்கி பத்திரப்படுத்தி பெட்டியைக் கட்கத்தில் வைத்துக்கொண்டு கிளம்பிவிடுவார். அவர் மகன் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தான்.

“நம்ம குலத்தொழில அவன் தலையில கட்ட வேணாம்னுதான்..”

ஒருமுறை தன் பக்க நியாயத்தை சொல்லிக் கொண்டிருந்தார். தாத்தா, அதுவும் சரிதான் என்பது போல கேட்டுக் கொண்டிருந்தார்.

“பி. ஏ பொருளாதாரம் படிக்கிறேன்னான். பாலிடெக்னிக் படிச்சா ஒடனே வேல கெடைக்கும்னு சொல்றாங்களேன்னேன். அதெல்லாம் முடியாதுன்னுட்டான். இந்த படிப்பு படிச்சா பெரிய, பெரிய வேலயெல்லாம் கெடைக்குமாம். என்னென்னமோ பேரு சொன்னாங்கய்யா. ஒண்ணும் புரில. சரின்னுட்டேன்.”

அவர் கையிலிருந்த கத்தரி அலைந்து சிக், சிக்கென்று காற்றை வெட்டியது.

“எங்கங்கய்யா.. இந்தப் பயலுவோ நம்ம பேச்ச எங்க கேக்குறானுவோ. பேண்டு, சட்ட போட்டதும் எல்லாந் தெரிஞ்சவன் மாதிரி தல கொழுப்பெடுத்து அலையிறானுவோ.”

“ஆமாமா.. நம்ம வைத்தியரு பேரன்கூட சொல்லா, கொள்ளாம மெட்ராஸ் கௌம்பிப் போயிட்டானாம். ஒசரமா, செவப்பா இருக்குறதுக்கு சினிமாவுல நல்ல சான்ஸ் கெடைக்கும்னு யாரோ சொன்னாங்களாம். அத கேட்டுக்கிட்டு இந்தப்பய இப்படி பண்ணியிருக்கான். வைத்தியரு சொல்லிட்டு ரொம்ப வருத்தப்பட்டாரு.”

தாத்தா மஞ்சள் வெயில் பழுத்துக்கிடந்த தெருவைப் பார்த்தபடி சொன்னார். அவர் சொல்லி முடித்ததும் நாராயணன் மடக்குக் கத்தியை விரித்து இடது உள்ளங்கை ஓரத்தில் இரண்டு, மூன்று முறை தேய்த்துவிட்டு தாத்தாவின் கிருதாவை மழிக்கத்தொடங்கினார்.

அவர் கிருதா அடர்த்தியாயிருக்கும். அதை நாராயணன் கவனமாகத் திருத்துவார். சிற்பி சிலை செதுக்குவதை விட கடினமாயிருக்குமோ என்று எண்ணவைப்பதுபோல அவர் முகபாவனை இருக்கும்.

நாராயணன் முதலில் கத்தியால் கிருதாவின் இருபக்கமும் மழிப்பார். ஒரு சாண் நீள கிருதா காதின் நடுமையத்தில் முடியும்படி கீழேயும் மழிப்பார். பின் பெரிதாக நீட்டிக்கொண்டிருக்கும் முடிகளை கத்தரியால் வெட்டி சீராக்குவார். வெகு ஜாக்கிரதையாக அவ்வேலையை அவர் செய்வார். அப்போது அவர் வாய் மூடியே கிடக்கும். வலது பக்கத்தை முடித்துவிட்டு இடப்பக்கம் வரும்போது கூடக்குறைய ஆகிவிடக்கூடாதே என்கிற ஜாக்கிரதையுணர்வு முகத்தில் தெரியும். அதையும் கவனத்துடன் மழிப்பார்.

அதன்பின் முடிச்சு அவிழ்வது போல அவர் முக இறுக்கம் மெதுமெதுவாக தளரும். விட்ட இடத்திலிருந்து பேச்சை தொடர்வார்.

இரண்டு கிருதாக்கள் எடுப்பாய் பளிச்சென்று மின்னும்போது தாத்தாவின் முகத்தில் ஒரு அகல்விளக்கை ஏற்றிவைத்ததுபோல் பிரகாசம் ஜொலிக்கும். ஒருமுறை முடிவெட்டி முடித்துவிட்டு நாராயணன் வெகுநேரம்வரை தாத்தாவை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார்.

“என் முகத்துல வித்தியாசமா ஏதாவது தெரியுதா நாராயணா.. ரொம்ப நேரமா பாத்துக்கிட்டிருக்கியே..”

தாத்தா எழுந்து நின்று வேட்டியை உதறிக் கொண்டார்.

“அப்புடியே நில்லுங்கய்யா.....”

நாராயணன் எழுந்து நெடுஞ்சாண்கிடையாக அவர் காலில் விழுந்தார்.

“அட, இதென்ன கூத்து. எந்திரி, எந்திரி.”

தாத்தாவுக்கு ஒன்றும் விளங்கவில்லை. நாராயணனுக்கு கண்கள் கசிந்துவிட்டன. துண்டை கட்கத்தில் சொருகிக்கொண்டு கைகட்டி நின்றிருந்தார்.

“நம்ம ஊரு கரைவீரநாதராட்டம் இருக்கீங்கய்யா. அதுக்குமேல சொல்லத் தெரில.”

“அது சாமியாச்சே. நான் அப்புடியா இருக்கேன்.”

“என்னவோ பாத்ததும் பட்டுன்னு அதுதான் தோணுச்சு. மனசுல களங்கமில்ல. ஒவ்வொரு முறையும் சொல்லணும்னு நெனப்பேன். சோடா பாட்டில ஒடைச்சாப்ல பட்டுன்னு பொங்கி வந்து சட்டுன்னு அடங்கிரும். ஏதோ ஒரு தடை சில்லு, சில்லா ஒடைச்சு போட்ரும். அதுவும் ஒரு காரணம். இன்னிக்கு மனசு பொங்குனது அடங்கவேயில்ல. சட்டுன்னு வுழுந்துட்டேன்.”

“சரி, சரி. நல்லாயிரு போ.”

தாத்தா இயல்பாய் விலகிவிட்டார். பார்த்துக் கொண்டிருந்த என்னைப் பார்த்து நாராயணன் கண்கள் பூக்க சிரித்தார்.

“தம்பிக்கு ஏதும் வெளங்குச்சா..?”

நான் மையமாக தலையாட்டினேன்.

“நல்லது. கல்லு வேணுமா....?”

படிக்காரக்கல்லை பெட்டியிலிருந்து எடுத்து நீட்டினார். நான் வாங்கி கன்னத்தில் வைத்துக்கொண்டேன். சில்லிட்டது. நாராயணன் கொட்டிக் கிடந்த முடியை சுத்தம் செய்ய ஆரம்பித்தார்.

2

அவருடைய மகளுக்குத் திருமணம் முடிவானபோது தாத்தா இரண்டு மூட்டை நெல்லும், நூறு ரூபாய் பணமும் தந்தார். நாராயணனுக்கு சந்தோஷம் பிடிபடவில்லை. எண்பதுகளில் நூறு ரூபாய் மிகப்பெரிய பணம். இரண்டு மூட்டை நெல்லும் சாதாரணமல்ல.

தாத்தாவுக்கு, நாராயணன்மேல் தனி வாஞ்சையுண்டு. வெளிப்படையாக அதைக் காண்பித்ததில்லை.கரிசனமான அந்தப் பார்வையிலிருந்து எளிதாக புரிந்து கொண்டு விடலாம்.

கல்யாணத்துக்குத் தாத்தா மட்டும் கிளம்பியபோது நான் பிடிவாதம் பிடித்து அவருடன் சென்றேன். அன்று நாராயணன் புதிய அரை ஜிப்பா, வேட்டி அணிந்திருந்தார். துண்டு கூட ஓரத்தில் பில் ஒட்டப்பட்டு புதிதாக இருந்தது.

எங்களைக் கண்டதும் வாசலுக்கே ஓடிவந்துவிட்டார். நெற்றியில் சுண்டுவிரல் அகலத்துக்கு விபூதியணிந்து பளிச்சென்று இருந்தார். தாத்தாவை எதிர்பார்க்கவில்லை என்று புரிந்தது.

வீட்டிற்கு, ஆசீர்வாதம் வாங்க அழைத்து வரலாமென்றிருந்ததாக சொன்னார். இரண்டு மடக்கு நாற்காலிகள் விரித்துப் போடப்பட்டு நாங்கள் அதில் அமரவைக்கப்பட்டோம். அவருடைய பிள்ளை சோடா உடைத்துக் கொண்டுவந்தான். நாராயணன் அருகிலேயே நின்றுகொண்டிருந்தார்.

“மாப்ள ஜோரா இருக்கான் நாராயணா..”

“சரிங்க...”

நாராயணன் குழைந்தார். கல்யாணம் முடிந்ததும் அவர்களை தாத்தா காலில் விழச்சொன்னார். தாத்தா ஆசீர்வாதம் செய்தபோது அவர் முகத்தில் அவ்வளவு பெருமிதம். விடைபெற்றுக்கொண்டு கிளம்பியபோது வாசல்வரை வந்து வழியனுப்பினார்.

“நல்லதுங்க. நீங்க வந்தது நிறைவா இருந்துச்சு.”

வலதுகையை நெஞ்சில் வைத்துப் பணிவாக சொன்னார்.

“சடங்கு, சாங்கியமெல்லாம் முடிச்சுப் பொண்ண அனுப்புனா பெரிய வேல முடிஞ்சிரும்.” மேற்கொண்டு அவரே சொன்னார்.

“பாத்துக்க.....”

தாத்தா அவர் தோளில் தட்டிக்கொடுத்தார். குடித்த கலர் நாக்கில் அசட்டுத் தித்திப்பாய் தித்தித்தது. அவர் எங்களை சாப்பிட சொல்லவில்லை. காரணம் என்னவென்று அப்போது விளங்கவில்லை. ஒரு வாரத்துக்குப் பிறகு நாராயணன் வழக்கம்போல பெட்டியோடு வந்துவிட்டார்.

“ஒருவழியா பொண்ண கரையேத்திட்ட.”

பாட்டி சொல்ல அவர் முகத்தில் வெட்கம் கலந்த புன்னகை இழையோடியது.

கொஞ்சநாட்களாக வலதுகாதில் இரைச்சல் சத்தம் கேட்டுக் கொண்டேயிருப்பதாக நாராயணன் ஒருமுறை சொன்னார்.

“திடீர்னு காதுக்குள்ள உஸ்ஸுன்னு ஒரு சத்தம். வாயுவா இருக்கும்னு நெனச்சேன். ஆனா ஒரு வாரமாச்சு. சத்தம் நின்னபாடில்ல. இதோ, இப்பக்கூட கேட்டுக்கிட்டே இருக்குங்கய்யா. ரொம்ப தொந்தரவா இருக்கு.”

“திருவாரூர்ல அய்யாச்சாமின்னு ஒரு டாக்டர் இருக்காரு. நல்லாப் பாப்பாரு. அவருகிட்ட கொண்டுபோயி காட்டு. என்னா, ஏதுன்னு கண்டுபுடிச்சு அதுக்குத் தகுந்தாப்ல மருந்தெழுதி குடுத்துடுவாரு.”

தாத்தா பத்து ரூபாய் தந்து அட்ரஸ் குறித்துக் கொடுத்தார். நாராயணன் திருவாரூர் சென்று காண்பித்துவிட்டு நேராக இங்குதான் வந்தார். தாத்தா திண்ணையில் நாற்காலி போட்டு அமர்ந்திருந்தார். மரத்தாலான சாய்வு நாற்காலி அது.

நாற்காலியின் கை வழுவழுவென்று நீளமாக இருக்கும். உடலை கிடத்திக் கொள்ளும் பகுதியில் வரிசையாக துண்டுப்பலகைகள் பொருத்த ப்பட்டிருக்கும். மாலை நேரம் காபி குடிக்க, புத்தகம் படிக்க, ஆட்கள் வந்தால் பேசிக்கொண்டிருக்க தாத்தாவுக்கு அது வேண்டும்.

அவர் உட்காராத சமயங்களில் நான் அதை ஆக்கிரமித்திருப்பேன். என்னைப்

போல் இருவர் படுத்துக்கொள்ளலாம். அவ்வளவு பெரிசு. நாராயணன் முகம் சோர்ந்து போயிருந்தது. வெயிலில் வந்த களைப்போடு தாத்தாவின் காலருகில் அமர்ந்துகொண்டார்.

“என்னா சொன்னாரு.....?”

“அவரு காதுக்கு பாக்குற டாக்டரு இல்லியாம். பொது டாக்டராம். இருந்தாலும், தனக்கு தெரிஞ்சவரைக்கும் இது குணப்படுத்த முடியாத வியாதிங்குறாரு.”

நாராயணன் குரல் மெலிதாக வந்தது. தாத்தா விரல்களைக் கோர்த்து, கோர்த்து பிரித்தார். கால் கட்டை விரல்கள் தானாக சொடக்கிட்டுக் கொண்டன.

“எதுக்கும் காது டாக்டரப் போயிப் பாக்க சொன்னாரு. இந்தோ பாருங்க.”

சட்டைப் பையிலிருந்து ஒரு காகிதத்தை எடுத்து நீட்டினார். பின் என்ன நினைத்தாரோ சடுதியில் கசக்கி எறிந்தார். முகத்தில் வியர்வை ஊறியிருந்தது. தலை முடி முன்நெற்றி வியர்வையில் படிந்து போயிருந்தது.

“அதையேன்டா கசக்கிப் போட்ட.... ஒரு எட்டு போயிப் பாத்துட்டு வந்துரலாமில்ல.”

“வேணாங்கய்யா. குணமாவாதுன்னு தெரிஞ்சும் எதுக்கு அலையணும். காசும் செலவாவும். கெளம்புறங்க..”

மெதுவாக எழுந்து போனார்.

3

அன்று மாலை நாராயணன் தன் மகனோடு தாத்தாவைப் பார்க்க வந்திருந்தார். எப்போதும் காலையில்தான் வருவார். அதுவும் பெட்டியோடு வருவார். இப்போது கையில் பெட்டியில்லை.

அவர் மகன் பெல் பாட்டம் பேண்ட்டும், பட்டை, பட்டையாக கோடுகள் போட்ட சட்டையும் அணிந்து சட்டைக் கைகளை முழங்கை வரை மடக்கி விட்டிருந்தது பார்க்க வேடிக்கையாக இருந்தது. கிருதா திமுசுக்கட்டை போன்ற வடிவத்தில் அடர்ந்திருந்தது. நாராயணன், மகனை தாத்தா காலில் விழச்சொன்னார்.

“மொத வகுப்புல பாஸ் பண்ணியிருக்காங்கய்யா. ஆசீர்வாதம் பண்ணுங்க.”

வலதுகையை கீழ்நோக்கி நீட்டி சொன்னார். சற்றே உள்ளடைந்திருக்கும் அவர் கண்களில் மின்னல் கீற்றொளி மின்னியது. தாத்தா சந்தோஷமாக தலையாட்டினார்.

“நல்லா இருடா.. கஷ்டப்பட்டு உங்கப்பா படிக்க வச்சிட்டான். வேலைக்குப் போயி அவன் கஷ்டத்த நீ போக்கணும்.”

விபூதி மடலை எடுத்துவந்து நெற்றியில் இட்டுவிட்டார். பாட்டியைக் கூப்பிட்டு விபரம் சொன்னார்.

“நாராயணன் புள்ள டிகிரி வாங்கிட்டான்னா நமக்கெல்லாம் சந்தோஷந்தான். மனசுக்கு நிறைவா இருக்கு. அப்படியே ஒரு வேலைய தேடிக்கிட்டு அப்பனை உட்கார வச்சி சோறு போடணும். புரியுதா..?”

சிறு குழந்தைக்குச் சொல்வது போல சொல்ல நாராயணன் மகன் தலை மெல்ல அசைந்தது. தாத்தா இருபது ரூபாய் பணம் தந்தார். நாராயணனுக்கு இன்னும் ஏதோ தேவையாயிருந்தது போலத் தோன்றியது.

அவரது கண்களில் எதையோ எதிர்பார்த்த ஆவல் மிதந்தது. பாட்டி இருவரையும் இருக்க சொல்லிவிட்டு உள்ளே போனாள். தாத்தா, நாராயணன் மகனிடம் வேலை விபரம் பற்றி விசாரித்துக் கொண்டிருந்தார்.

நாராயணன் தூணில் சாய்ந்தமர்ந்தார். இடதுகால் பாதத்தை வலது குதிகால் பின்புறம் பொருத்தி தொடையிடுக்கில் வேட்டியை மன்னிக் கொண்டு பவ்வியமாய் அமர்ந்திருந்தது சிரிப்பை வரவழைத்தது. அவர் மகன் கைகள் கட்டி நின்றபடி தாத்தாவின் கேள்விகளுக்கு பதில் சொல்லிக் கொண்டிருக்க, பாட்டி காபியோடு வந்தாள்.

“குடிங்க..”

தாத்தா அகன்றார். பாட்டியும் உள்ளே சென்றுவிட, நாராயணன் கண்கள் விரிந்தன. நாசி விடைத்துக்கொள்ள கையிலிருந்த காபியைப் பார்த்து தலை பெரிதாக அசைந்தது.

“ஐயா வூட்டு காப்பி சுவையா இருக்கும். குடிடா..”

மகனிடம் சொன்னவர், என்னைப் பார்த்து சிரித்தார்.அப்போது கனிந்த பழம் போலிருந்தது அவர் முகம்.

“தம்பி காபி குடிச்சாச்சிங்களா..?”

நடுவில் திரும்பி கேட்டார். நான் தலையாட்டியதும் மறுபடியும் கொஞ்சம் கொஞ்சமாக காபியைக் குடித்தார். குடித்துவிட்டு மகனிடமிருந்த தம்ளரையும் வாங்கி தெருவிலிருந்த அடி பைப்பில் நான்கைந்து முறை அலம்பி கொண்டுவந்து நிலைப்படியருகில் வைத்தார்.

“வர்றங்கய்யா.. தம்பி வரட்டுங்களா.. ஐயாவோட பேரப்புள்ள. நல்ல சுதாரிப்பு.. தங்கமான புள்ள..” மகனுடன் பேசியபடியே நடந்தார்.

தெருமுனை சென்று திரும்பும் வரை நான் அவரைப் பார்த்துக் கொண்டிருந்தேன். ஒரு நேர்கோடு போலிருந்த அந்த உருவம் சற்று சாய்மானமாக நடைப் போட்டு நடந்து போனது.

அவரது நினைவுகள் எப்போதாவது வரும். அப்போது அவரின் மகனைப்பற்றி நினைத்துக் கொள்வேன். நாராயணன் இறந்து சில வருடங்கள் கழித்து ஊரில் சலூன் கடை திறக்கப்பட்டது. சுழலும் நாற்காலியுள்ள சலூன் கடை.

முகச்சவரம் செய்ய ஒருமுறை சென்றேன். நாராயணின் மகனும் இன்னும் இரண்டு பணியாளர்களும் பரபரப்பாக வேலையில் இருந்தார்கள். நாராயணின்

மார்பளவு புகைப்படம் சட்டமிடப்பட்டு சுவரில் மாட்டப்பட்டிருந்ததைப் பார்த்தேன். மனம் வெற்றிடத்துக்குள் அமிழ்ந்து போனது.

# 5. சாபம், நீதியின் இன்னொரு வடிவம் -- 'பாங்சு' கலைஞர்களுடன் ஒரு சந்திப்பு: ரேகா நிலுக்ஷி ஹேரத்

ஒக்டோபர் 2020/பனுவல்கள்

தமிழில் பிரியதர்ஷினி சிவராஜா

BY பிரியதர்ஷினி சிவராஜா

1988-89 காலப்பகுதியில் இலங்கையில் தென்பகுதியில் இடதுசாரி ஆயுதப்புரட்சியில் ஈடுபட்டு , அரச பாதுகாப்புப் படையினரால் கடத்தப்பட்டுக் காணாமல்போன தன்னுடைய மகனைத் தேடியும், அவனுக்கு நீதி தேடியும் பொலிஸ் நிலையங்கள், நீதிமன்றங்கள், மருத்துவமனைகள், சிறைச்சாலைகள் என அலையும் ஒரு தாயின் கதைதான் பாங்சு (□□□□□) என்ற சிங்கள மொழியிலான திரைப்படம். இப்பொழுது இலங்கைத் திரையரங்குகளில் வெளியாகியிருக்கிறது. ஏற்கனவே 2018இல் மொன்றியல் திரைப்படவிழாவிலும் 2019இல் ஆசிய திரைப்பட விழாவிலும் பார்வையாளர்களின் கவனத்தினை இத்திரைப்படம் ஈர்த்திருந்தது.

இத்திரைப்படத்தின் இயக்குனரான விசாகேச சந்திரசேகரத்துடனும், படத்தில் முன்னணிப் பாத்திரத்தில் நடித்த நீட்டா பெர்ணாந்துடனும் ரேகா நிலுக்ஷி ஹெராத் நடத்திய உரையாடலின் தமிழ் வடிவம் இது.

**89 பயங்கர வன்செயல் காலப்பகுதியில் காணாமற்போன தனது மகனை ஐந்தாண்டுகளாக தேடும், அதற்காக பொலிஸ் நிலையங்களிலும், நீதிமன்றங்களிலும் அலைந்து திரியும் பபா நோனா என்ற பெண்ணை கதைக்கருவாகக் கொண்டது பாங்சு திரைப்படம். திரைப்படத்தில் பாபா நோனாவுக்கு நீதி கிட்டியிருக்கின்றது என்று நீங்கள் கருதுகின்றீர்களா?**

**விசாகேச சந்திரசேகரம் (இயக்குனர்):** பபா நோனாவின் யதார்த்தம் என்னவென்பதனை நாங்கள் எங்கள் நம்பிக்கைகள் மற்றும் கற்பனைகளை மறந்துவிட்டு பார்க்க வேண்டும். தன்னிடம் இருக்கின்ற ஒரே ஒரு சேலையை உடுத்திக் கொண்டு நீதிமன்றங்களில் அலைந்து திரிவதுதான் அவரது யதார்த்த நிலை. அவரைப் பொறுத்தவரையில் இந்த திரைப்படத்தின் முடிவில் அவருக்கான நீதி நிலைநாட்டப்படவில்லை என்று கருதப்படவே முடியும்.

காலனித்துவ ஆட்சியில் எமக்கு வழங்கப்பட்ட நீதி என்ற எண்ணக்கருவினையே நாமும் நீதி என்று ஏற்றுக் கொள்கின்றோம். ஆனால் நீதி என்பது அது மட்டும் தானா என்று நாங்கள் ஆராய்ந்து பார்க்க வேண்டும். அந்த நீதி போதுமான அளவுக்கு, திருப்தி தரக் கூடியவாறு கிடைக்கின்றதா என்றும் பார்க்க வேண்டும். அதன் தரம் என்ன? நீதி என்பது அது மட்டும்

அல்லவெனின் நீதியின் வேறு வடிவங்கள் என்ன? பபா நோனா அந்த கேள்வியைத்தான் கேட்கின்றார். அவர் முதலில் நீதியின் தரம் என்று கேட்கின்றார். அத்துடன் அவர் இது தான் நீதியா என்றும் கேட்கின்றார்.

அத்துடன் அவர் வேறு ஒரு இடத்திற்கும் செல்கின்றார். அங்கு அவர் சபிக்கின்றார். என்னைப் பொறுத்தவரையில் சாபமிடல் என்பது நீதியின் மற்றொரு வடிவம். நீதி என்பது இந்த வாழ்க்கைக்கு மட்டும் உரியதா என்பது மற்றொரு கேள்வியாகும். இன்னொரு வாழ்வில் நீதி என்பது உள்ளதா? போன்ற பல கேள்விகள் பபா நோனாவிடம் காணப்படுகின்றன. காணாமற்போன தனது பிள்ளையை எங்கேயாவது மறைத்து வைத்திருப்பார்கள் என்ற சிந்தனையில் தான் அவர் தனது பணிகளை தொடங்குகின்றார். எனினும் அவர் பின்பு பிள்ளையின் ஆன்மா பற்றியும் சிந்திக்கின்றார்.

நாம் நவீன உளவியலின் அடிப்படையில் பார்த்தாலும், அந்த பிரச்சினைகளை எதிர்கொள்பவர்களின் எண்ண ஓட்டம் என்பது மிகவும் வேறுப்பட்டதாக இருக்கின்றது. நான் எனது தாயாருடனும், அம்மம்மாவுடனும் மிகவும் நெருங்கிப் பழகுகின்றேன். ஒருவேளை நான் காணாமற்போனால், நான் இன்னொரு கருவினை தேடிக் கொள்ள முடியாமல் கருவற்ற ஆன்மாவாக இருப்பேன் என்று எனது தாயார் கருதினால், அவரின் பிரதான இலக்கு தான தர்மங்களை செய்து எனது ஆன்மாவைப் பலப்படுத்துவதாகவே இருக்கும். தெற்காசிய உரிமைப் போராட்டங்களில் மறக்க முடியாத ஓர் முக்கிய அம்சமாக இவ்விடயம் உள்ளது.




...

**அந்த மனநிலையை அடைவதற்கு மத பின்னணி தான் காரணமாக உள்ளதா?**

**விசாகேச சந்திரசேகரம் (இயக்குனர்):** நான் அவதானிக்கும் மற்றுமொரு விடயம் எமது

ஆக்கிரமிப்பு மனோபாவம். பிறப்பிலேயே எமக்கு கிடைக்கும் சில உரிமைகள் உள்ளன. பிறப்பிலேயே கிடைக்காத சில உரிமைகள் உள்ளன. முன் பிறப்பில் செய்த வினைகள் காரணமாக பிறப்பிலேயே சில உரிமைகள் எமக்கு கிடைக்காமல் போகின்றன. இதன்படி பிறப்பில் சில உரிமைகள் கிடைக்காத ஒருவர் நீதியை அடைவதற்கு வேறு இடத்தினை நாடிச் செல்ல வேண்டியிருக்கும். அதனையே நான் காண்கின்றேன்.

**நீட்டா பெர்ணாந்து:** நான் இது பற்றி பபா நோனா என்ற ஒரு அன்னையின் கதாப்பாத்திரத்தின் அடிப்படையில் பேச விரும்புகின்றேன். அன்னையின் வேதனையும், சோகமும் இந்த கதையின் கருவாக உள்ளது. பொதுவாக இவ்வாறான ஒரு சம்பவம் நடைபெற்றவுடன் அவரைச் சூழவுள்ள உற்றார் உறவினர்கள் அவரை பொலிஸ் நிலையம் செல்லுமாறே அறிவுரை கூறுவர். அதன் பின்னர் அந்த அன்னை பலவிதமான நிறுவனங்களுக்கு செல்ல நேரிடும். அது முடிவில்லாத ஒரு பயணம். இறுதியில் தனது பிள்ளையும் இல்லாத நிலையில், நீதி கிடைத்தமைக்கான நிறைவான உணர்வும் கிடைக்காமல் போகலாம். பபா நோனா யாருக்காக போராடுகின்றார்? நாட்டுக்காகவா, இனத்திற்காகவா, தனக்காகவா என்று அவருக்கும் தோன்றக் கூடும். அவருக்கு இனியும் இந்த துன்பம் வேண்டாம் என்ற மனநிலை ஏற்பட்டிருக்கும்.

**கிராமத்தில் வசிப்பவர்களும் பாதிக்கப்பட்ட அன்னையர் நீதியை தேடிச் செல்வதனை விரும்பவில்லை. வடக்கில் யுத்தம் செய்ய உள்ள படையினர் மீது வீண் பழி சுமத்தி, அவர்களை நீதிமன்றங்களை நோக்கி அலைய விடுகின்றார்கள் என்ற குற்றச்சாட்டும் பபா நோனா போன்ற அன்னையர் மீதும் சுமத்தப்பட்டிருக்கின்றது…**

**நீட்டா**: அது தான். அது போன்று கிராமத்திற்குள் பல அழுத்தங்கள் வரும். இவை அனைத்துடனும் உள் மனப் போராட்டம் ஒன்றை பபா நோனா எதிர்கொள்வதாக இருக்கலாம். ஏன் நான் போராடுகின்றேன் என்று அவருக்கு தோன்றக் கூடும். காணாமற்போன புதல்வர் தனது உயிருக்கு உயிரானவர் எனின், அவரின் பாசம் அவருக்குரியது எனின் அவரது நலனை மட்டுமே அவர் விரும்புவார். அவர் நாட்டுக்காகவும், இனத்திற்காவும் போராடுபவர் அல்ல. நீதிக்காக போராடுவது பற்றியும் அவருக்கு தெரியாது.

பபா நோனாவின் தீர்மானங்கள், முடிவுகள் தொடர்பில் பார்வையாளர்கள் இணங்காமல் இருக்கலாம். ஏனெனில் குற்றவாளிக்கு தண்டனை வழங்கி தான் நீதியை நிலைநாட்டப்பட வேண்டும் என்று பார்வையாளர்கள் கருதுகின்றனர். ஆனாலும் பபா நோனாவின் தேவை அதுவல்ல.

**விசாகேச**: 89ன் பின்னர் குற்றம் சுமத்தப்பட்ட மற்றும் பாதிக்கப்பட்ட இரு தரப்பினரினதும் குடும்ப உறுப்பினர்களும் ஒரே இடத்தில் வாழ நேர்ந்தது. ஒருவருக்கு குற்றவாளியாக தென்படுபவர் மற்றவருக்கு பாதிக்கப்பட்டவராக தென்படுகின்றார். இந்த திரைப்படத்தின் கதாப்பாத்திரங்களும் அவ்வாறானவை தான். ஒரு கோணத்தில் பாதிக்கப்பட்டவர் மற்றொரு கோணத்தில் குற்றவாளி. லயனல் என்ற இராணுவத்தினனும் அவ்வாறு தான். அவர் இரவில் படுக்கையை நனைத்துக் கொள்பவர். இவை அனைத்துமே

மனச்சாட்சியுடன் பிணைந்துப்போயுள்ளது. பபா நோனா, இராணுவத்தினன் ஆகிய இருவருமே மனச்சாட்சியினை எதிர்கொள்பவர்களாகவே உள்ளனர்.

**நீட்டா**: பபா நோனாவுக்கு தனது மகன் செய்த சில செயல்கள் தொடர்பிலும் பிரச்சினைகள் உள்ளன. அது பற்றியும் அவருக்கு கேள்விகள் உள்ளன அல்லவா?

**இவ்வாறான குற்றச் செயல்கள் தொடர்பில் அரசாங்க தரப்பினரும், அதேபோன்று ஜே.வி.வி போன்ற புரட்சிகர போராட்டங்களில் ஈடுபட்ட குழுக்களும் பொறுப்பினை ஏற்க வேண்டும் என்று இந்த திரைப்படத்தி;ன் முடிவில் கூறப்படுகின்றது. முப்பத்தியொரு ஆண்டுகளுக்கு பின்பு ஜே.வி.பி அதற்கான பொறுப்பினை ஏற்க வேண்டும் என்று கூறப்படுவது ஏன்?**

**விசாகேச**: இத்தனைக் காலம் கடந்த பின்னரும் அவ்வாறு கூறப்படுவதற்கு காரணம் உண்டு. நாம் 89 லும், அதன் பின்பும் பலவிதமான துன்புறுத்தல்களை பார்த்திருக்கின்றோம். எனக்கு 50 வயதாகின்றது. அக்காலகட்டத்தில் புலிச் சந்தேக நபர்கள் என்று அழைத்து வரப்படுபவர்களை ஓர் சட்டத்தரணியாக நான் சந்தித்திருக்கின்றேன். களுத்துறை சிறைச்சாலையில் ஒரு நாளில் மட்டும் இருபது பேருடன் உரையாடியிருக்கின்றேன். நாங்கள் கேட்கும் போது எல்லோரும் அடித்து துன்புறுத்தப்பட்டிருப்பார்கள். பொதுவாகவே செய்யக் கூடாத அனைத்தையும் செய்திருப்பார்கள். பிளேட்டால் சுரண்டியிருப்பார்கள். மேற் சட்டையை அகற்றிக் காட்டும் போது பல காயங்கள் தென்படும். இன்றும் அவற்றை நினைத்துப் பார்க்கையில் நான் உணர்ச்சி வசப்படுகின்றேன். எனது கருத்தின்படி இவ்வாறான குற்றச்செயல்களுக்கு எந்தவிதமான வேறுபாடுகளும் இன்றி அரசாங்கமும் ஆயுதம் ஏந்திய குழுக்களும் கூட்டாக பொறுப்பு ஏற்க வேண்டும். விடுதலைப் புலிகளும், ஜே.வி.பியும் அவ்வாறான நிலைக்கு ஏன் தள்ளப்பட்டனர் என்பது குறித்து பரிசீலித்துப் பார்க்க வேண்டும் என்பது உண்மை தான். ஆனால் அந்த குழுக்களை பிரதிநிதித்துவம் செய்தவர்கள் சம அளவில் அதற்காக பொறுப்பு கூறியே ஆக வேண்டும்.

இந்த திரைப்படத்தின் கதையை நான் மேடை நாடகமாக சுமார் 11 ஆண்டுகளுக்கு முன்பு எழுதியிருந்தேன். யாரும் அக்கறைக் காட்டாததினாலும், வெளிநாட்டில் இருந்த என்னால் எதுவும் செய்ய முடியாததினாலும் அதனை ஒரு புறம் வைத்து விட்டேன். எனினும் 2009ல் நான் மீண்டும் அதிர்ச்சியடைந்தேன். அந்த ஆண்டில் முல்லைத்தீவில் சிறைப்பட்ட ஆயிரக்கணக்கானோர் கொல்லப்பட்டனர். ஏன் இவ்வாறு மீண்டும் நடைபெறுகின்றது என்று நான் சிந்தித்துப் பார்த்தேன். 1989 பிரச்சினை சரியான முறையில் முடிவுக்கு வராமையினால் 2009ல் அதன் தொடர்ச்சியாக மீண்டும் அவ்வாறு நடைபெறுகின்றது. 89ல் எமது பிரச்சினை அநாகரிகமான முறையில் எவ்வாறு தீர்க்க முயற்சிக்கப்பட்டது என்பது பற்றி பகிரங்கமாக பேசியிருக்க வேண்டும். அதைப் பற்றி பேசுவது கடினமானது அல்லவே? அப்பொழுது தமிழர் சிங்களவர் என்ற பேதம் இருக்கவில்லையே? அங்கு ஒரே கிராமத்தில் இருந்த எமது மக்களே கொல்லப்பட்டனர். அந்த பிரச்சினையை தீர்க்க முடியாத நாம் இன ரீதியில் மற்றவர்களுடனான பிரச்சினையை தீர்ப்பது எப்படி? எமது அயல் வீட்டில் இருப்பவர்களுடன்

நாம் எவ்வாறு இப்படி வன்முறையாக நடந்து கொண்டோம் என்ற கேள்விக்கு இன்னும் பதில் இல்லை. செய்த தவறுகளுக்கு மன்னிப்புக் கோரப்படவும் இல்லை. முதல் பிரச்சினைக்கு சரியான முறையில் தீர்வு காணப்படாததன் காரணமாக மீண்டும் அது அரசியல் சாபமாக தலைத்தூக்கி விடுமோ என்ற அச்சம் எனக்கு உள்ளது.

**பபா நோனா கதாப்பாத்திரத்தினை ஏற்பதில் நீட்டாவுக்கு சவால்கள் ஏதும் இருந்தனவா?**

**நீட்டா**: விசாகேசவும் நானும் நேருக்கு நேர் சந்தித்திராத போதிலும் இவ்வாறான ஓர் கதாப்பாத்திரம் உண்டு என்பதனை அவர் தொலைபேசி உரையாடல்களின் போது என்னிடம் தெரிவித்திருந்தார். நான் 89களில் இலங்கையில் வசித்திராத போதிலும் அக்காலப்பகுதியில் நடைபெற்ற விடயங்கள் பற்றி நன்கு அறிந்திருந்தேன். காணாமற்போன தனது மகனை தேடி அலையும் ஒரு அன்னை என்ற பின்னணி விபரங்கள் பற்றி விளக்கிக் கூறியவுடன் நான் அந்த கதாப்பத்திரத்தில் நடிப்பதற்கு விருப்பம் தெரிவித்தேன். ஆனாலும் நான் நீந்த கற்றுக் கொள்ள வேண்டும் என்று கூறப்பட்டது. எனக்கு நீச்சல் தெரியாது. ஆனால் எப்படியாவது கற்றுக்கொள்ளுமாறு அவர் கூறினார். எவ்வளவு தான் முயற்சி எடுத்தாலும் என்னால் கற்றுக்கொள்ள முடியவில்லை. ஆறு மாதங்களின் பின்பு நான் விசாகேசவிடம் என்னால் நீச்சல் கற்றுக் கொள்ள முடியவில்லை அதனால் கதாப்பாத்திரத்தினை ஏற்பது கடினம் என்று மிகவும் சோகத்துடன் கூறினேன். பிரச்சினையில்லை மேல்நோக்கி நீச்சலடிக்க தெரிந்தால் போதும் என்று விசா கூறினார். அதன்பின் எப்படியாவது அவ்வாறு நீந்துவதற்கு கற்றுக்கொண்டேன்.

அதன் பின்னர் அவர் ஸ்டோரிபோர்ட்டுடன் என்னை சந்தித்தார். சில மணித்தியாலங்களை செலவிட்டு பபா நோனாவின் கதாப்பாத்திரத்தினைப் பற்றி விளக்கமளித்தார். அதன் பின் திரைப்படத்தின் அனைத்து குழுவினரையும் ஒன்றிணைத்து செயலமர்வு ஒன்றினை நடத்தினார். அவர் தனது கருத்துக்களைக் கூறினார். அதன் பின்பு அந்தந்த கதாப்பாத்திரங்கள் தொடர்பில் எங்களின் கருத்துக்களைக் கேட்டறிந்தார். உதாரணமாக பபா நோனா சிறு வயதில் எவ்வாறானவர் என்று விசாகேச என்னிடம் கேட்டார். நான் எனது மனதில் பட்டதை சொன்னேன். அம்மா துணி துவைக்கும் வரை ஆற்றின் அருகில் கல்லின் மீது அமர்ந்துகொண்டு காலை ஆட்டிக்கொண்டு இருந்த சிறுமியாக இருக்கலாம் என்று பதில் கூறினேன். அவர் அந்த பதில் தொடர்பில் திருப்தியடைந்திருப்பார் என்று நினைக்கின்றேன். திரைப்படத்தின் பிரதியில் உள்ள சில காட்சிகளை நடித்துக் காட்டுமாறு எம்மிடம் கூறினார். அதன்போது நடிக நடிகைகள் தமது சுயமான சிந்தனையுடன் நிகழ்வுகளை உருவாக்கியிருந்தனர்.

**நடிப்பு கடினமாக இருந்ததா?**

நீட்டா: எந்தவிதமான கஷ்டமும் இருக்கவில்லை. கல்கமுவ பிரதேசத்தில் காட்சிகளைப் படம் பிடிக்கும் போது கடுமையான வெயில், வசதி குறைவு போன்ற வெளிப்புற பிரச்சினைகள் இருந்தன. அங்குள்ள மக்களுக்கு தண்ணீர் வசதி கூட இல்லை. அதனைத் தவிர முன்பே நாங்கள் பயிற்சி செய்து கொண்டதால் நடிப்பு கடினமாக இருக்கவில்லை.

இந்த கதாப்பாத்திரத்தினுள் ஒன்றித்து நடிப்பதற்கு எனது தனிப்பட்ட வாழ்க்கை அனுபவமும் ஓரளவுக்கு உதவியது. 71 ல் எனது இளைய சகோதரனை இந்த திரைப்படத்தில் சித்திரிப்பது போன்று கடத்திச் சென்றனர். வீட்டுக்கு வந்து அழைத்துச் செல்லும் போது எனது அம்மா ஜீப் வண்டியின் பின்னாலேயே நீண்ட தூரம் ஓடிச் சென்றார். ஆனால் எனது சகோதரர் உயிரிழக்கவில்லை. ஆனால் அந்த காலப்பகுதியில் அம்மாவின் செயற்பாடுகள் எனக்கு நினைவுக்கு வந்தன.

**விசாகேசவின் முதல் திரைப்படமான 'சயபெத்தி குசும' திரைப்படத்தை விட சினிமா மொழியில் பாங்சு திரைப்படம் மிகவும் முன்னேற்றகரமானது என்று கூறின்...**

**விசாகேச**: எனக்கும் அவ்வாறு தான் தோன்றுகின்றது. அதற்கான ஒரு காரணமாக வளங்கள் அதிகளவு உள்ளமையைக் குறிப்பிடலாம். முதலாவது திரைப்படம் மிகவும் குறைந்த செலவில் எடுக்கப்பட்டது. அதில் இருந்தவர்கள் பெரும்பாலானவர்கள் புதியவர்கள். நான் உட்பட தொகுப்பாளர், கெமரா இயக்குநர் அனைவருமே புதியவர்கள். ஒப்பனைக் கலைஞருக்கு மட்டுமே அனுபவம் இருந்தது. பாங்சு திரைப்படத்தினைப் போன்று நாம் சயபெத்தி குசும திரைப்படத்திற்கும் முன்னரேயே காட்சிகளைத் திட்டமிட்டு, செயலமர்வு நடத்தியே வேலையில் இறங்கினோம். எனினும் அதில் பெரும்பாலான விடயங்கள் எனது ஆதிக்கத்திற்குட்பட்டிருந்தது. நான் அதிகம் தலையிட்டு படத்தை நீண்ட தூரம் இழுத்துச் சென்று விட்டேன் என்றே நினைக்கின்றேன். பாங்சு திரைப்படத்தில் நான் அடிப்படை விடயங்களை திட்டமிட்டாலும் மற்றவர்களின் பங்குபற்றல் அதிகமாக இருந்தது. நான் காட்சித் தளத்தில் இருந்தாலும், சில காட்சிகளை எடுக்கும் போது நான் சற்று தொலைவில் அமர்ந்திருந்தேன். நாம் அனைத்தையும் முன்பே திட்டமிட்டிருந்த நிலையில் சும்மா குழம்பிக் கொண்டிருக்கும் தேவை இருக்கவில்லை. திரைப்படத்தின் முதல் பாகத்தில் இருந்து நானும், கெமரா இயக்குனர் திமுத்து காலிங்க தஹாநாயக்கவும், தொகுப்பாளர் சித்தும் சமரஜீவவும் வைட்போட்டில் காட்சிகளை வரைந்து அனைத்தையும் திட்டமிட்டுக் கொண்டோம். அதனால் அவர்களின் ஒவ்வொரு காட்சி தொடர்பிலும் சரியான கருத்துக்கள் வெளியாகின. தொகுப்பாளர் சித்தும் சமரஜீவ முதல் பாகத்திலும் காட்சிகளை படம் பிடிக்கும் போதும் அருகில் இருந்தார். அவருக்கு அங்கு செய்வதற்கு ஒன்றும் இல்லாத போதிலும் அவர் அங்கு பிரசன்னமாக இருந்தார். அவ்வாறு இருந்தமையினால் தொகுப்பு வேலைகளின் போது திரைப்படம் தரமாக இருந்தது.

நீட்டா, விசாகேச சந்திரசேகரம்

கெமரா இயக்குனர் திமுத்து காலிங்க தஹாநாயக்கவின் பங்களிப்பும் காட்சி மொழியின் செழுமைக்கு காரணமாகியது. திமுத்து ஓவியக் கலைஞர் என்பதும், அவர் இசை ஞானம் உள்ளவர் என்பதும் பலரும் அறியாத விடயமாகும். கலைத்துறையில் முன்னேறிய ஒருவரிடம் கெமராவை வழங்கும் போது அவர் அனைத்தையும் சரியான ஓட்டத்தில் படம் பிடித்துக் கொள்வார். எல்லா காட்சிகளிலும் கலைத்துவத்தைக் காண்பார். கலை இயக்கத்திற்கென அனுபவம் வாய்ந்த ஐந்து கலை இயக்குனர்கள் பங்களிப்பு செய்தனர்.



...

அதனைத் தவிர திரைப்படத்தின் முக்கியமான காட்சிகள் அனைத்தையும் அவர்கள் உருவாக்கியிருந்தனர். அதன் சிறப்பினை திரைப்படத்திலும் காணக் கூடியதாக உள்ளது என்றே எனக்கும் தோன்றுகின்றது.

**சிந்தக்க ஜயகொடியின் இசையமைப்பு திரைப்படத்தின் காட்சிகளுடன் நன்கு பொருந்தியுள்ளது அல்லவா?**

**நீட்டா**: திரைப்படத்தில் உள்ள தாலாட்டுப் பாடல்களைத் தழுவிய இசை மிகவும் அற்புதமாக இருந்தது. ஆடைகளை உலர வைக்கும் இடத்தின் காட்சிகளுடன் அந்த இசை இணையும் போது தான் அந்த காட்சி முழுமையடைகின்றது.

**விசாகேச**: அவர் ஏனோதானோ என்று இசை அமைக்கவில்லை. நாம் நிறைய பேசியிருந்தோம். நானும் அவர் இசை பதிவு செயற்பாடுகளை சென்று பார்த்தேன். உண்மையில் சயபெத்தி குசும திரைப்படத்தின் இசையமைப்பில் எனது ஆதிக்கம் அதிகளவில் இருந்தது. அதில் சில மெட்டுக்களை நான் அமைத்திருந்தேன். இசையை கற்றிராத போதிலும் நான் மெட்டுக்களை அமைத்திருந்தாமையினால் அச்சந்தர்ப்பங்களில் என் தலையீடு அதிகம் இருந்தது. எனினும் பாங்சு திரைப்படத்தின் போது இசை மெட்டுக்கள் தொடர்பில் எந்தவிதமான கருத்துக்களையும் தெரிவிக்காமல் இருக்க வேண்டும் என தீர்மானித்திருந்தேன்.

**பாங்சு திரைப்படம் பொதுவாக மக்கள் மத்தியில் நீட்டாவின் திரைப்படம் என்றே அறியப்படுகின்றது. இந்தியாவில் அண்மைக் காலங்களில் பெண்கள் பிரதான பாத்திரங்களை ஏற்று நடிக்கும் திரைப்படங்கள் பலவற்றை காண முடிந்தது. ஓர் நடிகையாக உங்கள் முகத்துடன் கூடிய சுவரொட்டியுடன் வெளியாகும் திரைப்படம் குறித்தான உங்கள் உணர்வு என்ன?**

**நீட்டா**: எனக்கென ரசிகர்கள் உள்ளனர். நான் நடித்த திரைப்படங்களில் முக்கியத்துவம் மிக்க படங்கள் பல உள்ளன. அவற்றுள் 'துஹுலு மலக்', 'பவுரு வளலு' மற்றும் 'பாங்சு' என்பன முக்கியமான மூன்று திரைப்படங்களாகும். கடந்த கால திரைப்படங்களில் எனது நடிப்பைப் பார்த்த ரசிகர்கள், நீட்டா அடுத்து என்ன செய்யப் போகின்றார் என்று ஆவலாக எதிர்பார்த்திருப்பார்கள். இந்த திரைப்படத்திலும் முன்னைய திரைப்படங்களைப் போன்று காதலும் அன்பும் தான் பிரதானமாக உள்ளது. துஹுலு மலக் திரைப்படத்தில் சமூகம் ஏற்காத காதல் இருந்தது. அந்த திரைப்படத்தில் காட்டுமிராண்டித்தனமான பாத்திரத்தினை நான் மிகவும் சிறப்பாக ஏற்று நடித்திருந்ததாக யாரோ ஒருவர் குறிப்பிட்டிருந்தது எனக்கு ஞாபகம் இருக்கின்றது. பவுரு வளலு திரைப்படத்திலும் முன்னாள் காதலனை மீண்டும் சந்தித்து காதல் வயப்பட்டு கருவுறும் கதாப்பாத்திரத்தை ஏற்றிருந்தேன். அதிலும் காதலே பிரதானமாக உள்ளது. அதேபோன்று பாங்சு திரைப்படத்திலும் பிள்ளை மீதான அன்பு பிரதானமாக உள்ளது. ரசிகர்கள் எந்தவிதத்திலாவது என்னிடம் அன்பினை எதிர்பார்க்கின்றார்கள் என்றே இதனூடாகக் கருத முடியும்.

**விசாகேச**: நீட்டாவின் திறமையின் அளவுக்கு இலங்கையில் வேறு நடிகைகள் இருக்க முடியுமா என்று நான் சிந்தித்துப் பார்க்கின்றேன். அவர் சர்வதேச விருதுகளைப் பெற்றுள்ளார். மிகவும் சவால் மிக்க சர்ச்சைக்குரிய பாத்திரங்களை ஏற்று நடித்துள்ளார். அவ்வாறான நடிகைகள் மிகவும் அரிதாகவே உள்ளனர். இதன் காரணமாக இத் திரைப்படம் நீட்டாவின் திரைப்படம் என்று கூறுவதற்கான தகுதி அவருக்கு முழுமையாக உண்டு. திரைப்படத்தினை உருவாக்கும் செயற்பாடுகளில் நீட்டா மிகவும் முக்கிய பங்காற்றியுள்ளார். ஒரு தாயாக, சகோதரியாக அவர் தலைமை ஏற்றார். படப்பிடிப்புகளில் யாராக இருந்தாலும் முரண்பாடுகள் ஏற்படுவது சகஜமான விடயம் தான். அவற்றை சரியானமுறையில் நிர்வகித்துக் கொள்வதே மிகவும் அவசியம். நீட்டாவின் நடுநிலைமையான செயற்பாடுகள் அவ்வாறான முரண்பாடுகளின் போது மிகவும் சாதகமாக அமைந்திருந்தது. அவருக்கு பதிலாக தன் மீது கவனத்தினை ஈர்க்கும் செயற்பாடுகளில் மட்டும் ஈடுபடும் ஒருவர் இருந்திருப்பின் படப்பிடிப்புகள் முற்றிலும் வேறுப்பட்டிருக்கும். அனைத்து செயற்பாடுகளையும் சமப்படுத்தி நடுநிலையாக சிந்திக்கும் பாத்திரத்தினை நீட்டா வகித்தார். அவரின் ஒழுக்கம், இயக்குனர் உட்பட மற்ற அனைவரின் மீதான மரியாதை என்பன திரைப்படத்தின் படப்பிடிப்புகளில் சாதகமான நிலைமையை ஏற்படுத்தியிருந்தது. நான் முதலில் பபா நோனா கதாப்பாத்திரத்திற்கு பொருத்தமானவர் என்று நீட்டா பற்றி சிந்தித்தாலும், அவருடன் பேச நினைத்திருக்கவில்லை. அவர் எங்களுக்கு வெகு தொலைவானவர் என்று நான் நினைத்திருந்தேன். எனினும் நடிகர் ஜெஹான் பெர்ணாந்து தான் நீட்டாவுடன் பேசிப் பார்க்குமாறு வலியுறுத்திக் கூறினார். அப்பொழுது பேச முடிந்தது குறித்து நான் இப்பொழுது மகிழ்ச்சி அடைகின்றேன். இப்பொழுது நீட்டாவும் நானும் நல்ல நண்பர்கள்.

# 6. அரபு ஈச்சை மரங்கள் காத்தான்குடியில் பெரிதாக வளர்ந்துவிட்டன: சக்கரவர்த்தி

ஒக்டோபர் 2020/நேர்காணல்

நேர்கண்டவர்: அனோஜன் பாலகிருஷ்ணன்

BY அனோஜன் பாலகிருஷ்ணன்

சக்கரவர்த்தி கிழக்கிலங்கையில் தேத்தாத்தீவில் பிறந்தவர். ஆயுதப்போராட்டம் வலுவடைந்த காலத்தில் குழந்தைப் போராளியாக டெலோ இயக்கத்தில் இணைந்து பின்னர் வெளியேறியவர். கனடாவுக்கு புலம்பெயர்ந்த பின்னர் மும்மரமாக எழுத்துச் செயற்பாட்டில் ஈடுபட்டார். யுத்தம் மீதான எதிர்ப்பே அவரது கதைகளில் மண்டிக்கிடக்கிறது. யுத்தத்தின் நேரடி சிதைவான மானுட அழிவு கொடுக்கும் வாழ்க்கை மீதான விரக்தி அவரது கவிதைகள் முழுவதும் விரவியிருக்கிறது. சக்கரவர்த்தி முஸ்லீம் தமிழ் சமூக உறவுப் பிளவின் மீது தீராத கவலை கொண்டவர். இவருடைய 'என்ட அல்லாஹ்' கதையை ஈழத்தின் தலைசிறந்த அரசியல் கதைகளில் ஒன்றாகத் தயக்கமின்றிச் சொல்லலாம்.

'யுத்தசன்யாசம்' என்ற கவிதை நூலும், 'யுத்தத்தின் இரண்டாம் பாகம்' என்ற சிறுகதைத் தொகுப்பும் இதுவரை வெளியாகியுள்ளன.

**கிழக்கிலங்கையில், படுவான்கரையை பெருமளவிற்கு இலக்கியத்தில் பதியப்படாத பிரதேசமென்று சொல்லலாம். நீங்கள் படுவான்கரையையும் அந்த ஊரின் வட்டார வழக்குகையும் புனைவில் கொண்டு வந்தவர்களில் முக்கியமானவர். உங்களுக்கும் படுவான்கரை மக்களுக்கும் இடையிலான தொடர்புகளிலிருந்து இந்த நேர்காணலைத் தொடங்குவோம்.**

என்னுடைய ஊருக்கும் படுவாங்கரைக்கும் இடையில் ஒரு ஆறு மட்டும்தான் இருக்கின்றது. அந்த ஆற்றைக் கடந்தால் படுவான்கரை. மட்டக்களப்பு மாவட்டத்தின் முக்கிய பகுதிகள் எழுவான்கரை, படுவான்கரை என்று இரண்டாக பிரிக்கப்பட்டுள்ளன என்பது உங்களுக்குத் தெரியும்தானே.

எழுவான்கரையையும் படுவான்கரையையும் அந்த ஆறு பிரிப்பதால் இரண்டு பகுதி மக்களின் வாழ்க்கை முறையும் வாழ்வியல் முறையும் 100 விகிதம் வித்தியாசப்படுகின்றன. எழுவான்கரை மக்களுக்கு கல்வி, தொழில்வாய்ப்பு என்பன கிடைக்கும் அதேவேளை படுவான்கரை மக்களுக்கு இவை கிடைப்பதில்லை என்றே சொல்லலாம். எங்களுடைய வயல் மற்றும் தாத்தாவுடைய தொழில் எல்லாம் படுவான்கரையைச் சார்ந்தே இருந்ததால் சிறுவயதில் படுவான்கரைக்கு அடிக்கடி போகவேண்டிய சந்தர்ப்பம் இருந்தது.



...

அவர்களுடைய வயலும் வயல் சார்ந்த வாழ்க்கையும் எனக்கு மிகவும் பிடித்திருந்தது.

அதன் பிறகு யுத்தம் வந்தபின் தப்பியோடுவதற்கும் அடைக்கலம் புகுவதற்கும் உகந்த இடமாகவும் படுவான்கரைதான் இருந்தது. ஆற்றைக்கடந்து விட்டால் உயிருக்கு பாதுகாப்பு கிடைக்கும். ஏனென்றால் அங்கே இராணுவம், பொலிஸ்.. இப்படியொருவரும் வரமாட்டார்கள். இப்படித்தான் அந்த மக்களுக்கும் எனக்கும் உறவு ஏற்பட்டது.

அந்த மக்களுடைய உதவியால்தான் எங்களுடைய பகுதி மக்கள் வாழவேண்டி இருந்தது. அந்த நேரத்தில் நான் அங்கே அடிக்கடி போய் வந்திருந்ததால் அந்த ஊரின் நில அமைப்பு, கலாச்சாரம் என்பன மிகவும் பரிச்சயமாக இருந்தது. சிறுவயதில் எங்களுக்கு வீட்டை விட்டு வெளியே சுற்றிப் பார்க்கவேண்டுமென்றால் வயலும், மடையும், ஆறும் என்று நாங்கள் படுவான்கரைக்குத் தான் போவோம். 14, 15 வயதுக்குப் பிறகு தனியே சுற்றிப்பார்ப்பதென்றாலும் நாங்கள் செல்லுமிடம் படுவான்கரை தான். அந்த மக்களுடன் பழகும் வாய்ப்பு அந்தகாலப்பகுதியில்தான் அதிகம் கிடைத்தது.

துயரம் என்ன தெரியுமா? ஈழ விடுதலை போருக்கான காரணிகள் எதுவும் படுவான்கரை மக்களுக்கு பொருந்தவில்லை. இருந்தாலும் நடந்து முடிந்த போருக்காக இயக்கங்கள் அவர்களை துஸ்பிரயோகம் செய்தன. புலிகளுக்காக அந்த பகுதி சிறுவர்கள் வன்னிக்கு கொண்டு செல்லப்பட்டதை எப்படி மன்னிக்க முடியும்?

ரெலோக்காரர்களை படுவான்கரைக்கு கொண்டு சேர்த்த பழி என்னைத்தான் சேர வேண்டும்.

**அந்தக்காலத்தில், அதாவது உங்களுடைய சிறுபிராயத்தில் உங்கள் ஊரைச் சுற்றி வசித்த முஸ்லீம் மக்களுக்கும், தமிழர்களுக்கும் இடையிலான சமூக உறவு எப்படி இருந்தது? அவர்களுடன் நெருங்கிப் பழகும் வாய்ப்பு இருந்ததா?**

அந்த வயதில் முஸ்லீம்களுடன் எனக்கு நட்பு என்று சொல்ல முடியாது. அவர்கள் பெருமளவிற்கு வியாபார சமூகம் என்பதால் எங்களுடைய குடும்பமும் வியாபாரம் சம்பந்தப்பட்டதால் அந்த மாதிரியான உறவுகள் இருக்கும். ஆனால் நெருங்கிப்பழகும் உறவுகள் இல்லை. அவர்களுடைய விழாக்களுக்கு வீடுகளுக்குப் போய் ஒரு பழக்கம் இருக்கும்.

எங்களுடைய ஊரில் இருந்து வடக்குப் பக்கமாக 15 கிலோ மீற்றர் போனால்தான் காத்தான்குடி வரும். அதே போல் தெற்குப்பக்கம் 15 கிலோ மீற்றர் போனால் சாய்ந்தமருது, மருதமுனை, கல்முனை பகுதிகள் வரும். அதனாலேயோ என்னவோ தனிப்பட்ட முஸ்லிம் நண்பர்கள் எனக்கு இருந்ததில்லை. அதே நேரத்தில் எங்களுடைய பகுதி மக்களின் தேவைகளை நிவர்த்தி செய்தது முஸ்லிம் சமூகம் தான். ஏற்கனவே சொன்னதுபோல வியாபார சமூகமாக அவர்கள் இருந்ததால் எங்களுடைய தேவையை நிவர்த்தி செய்வது அவர்களுடைய தேவையாகவும் இருந்திருக்கின்றது. இப்படி இரண்டு சமூகமும் ஒன்றுடன் ஒன்று சார்ந்துதான் வாழ்ந்தார்கள். தனித்தனியாக அங்கே வாழமுடியாதிருந்தது.

**ஆயுதப் போராட்டம் எழுச்சியுற்ற போது ஒரு 'குழந்தைப் போராளியாக' அதிலே இணைந்துகொண்டீர்கள். ஒரு நேரடிக் கேள்வி. ஏன் இணைந்தீர்கள்..**

இது என்னிடம் மட்டும் கேட்கவேண்டிய தனிப்பட்ட கேள்வி அல்ல. அந்தக்காலத்தில் வாழ்ந்த எல்லா சிறுவர்களிடமும், இளைஞர்களிடமும் கேட்கப்படவேண்டிய கேள்வி. அதற்கான சரியான காரணத்தை யாராலும் சொல்ல முடியாது. இயக்கத்துக்கு போகவேண்டும், அவ்வளவு தான். அது அந்த இயக்கமா, இந்த இயக்கமா, விடுதலைப்புலிகளா, ரெலோவா, ஈபிஆர்எல்ஆ என்றெல்லாம் இல்லை.

**ஒருவேளை அதைச் சாகஸமான ஒரு மனநிலையாக உணர்ந்தீர்களா?**

சாகஸம் என்பதற்கு அப்பால் இயக்கத்திற்குப் போகவிட்டால் பிழை என்ற மனநிலை இருந்தது. விடுதலைப் போராட்டத்தில் இணைய வேண்டும் என்பதற்காகச் சிலர் குறிப்பிடும் பொதுவான காரணங்கள் இருக்கின்றனதானே, அந்தக் காரணங்கள் எதுவும் எனக்கில்லை. என்றாலும் போய்விட்டேன். எந்த இயக்கமென்றெல்லாம் அப்போது பிரித்துப் பார்க்கவில்லை.

ஈ.பி.ஆர்.எல்.எப், டெலோ, புளொட், புலி என எல்லா இயக்கமும் அப்போது ஒன்றுதான், பெயர்கள் மட்டும்தான் வெவ்வேறு. கொள்கை அளவில் ஒன்றாகவே இயங்கின. அனைத்தும் யாழ்ப்பாணத்தை மையப்படுத்தி இயங்கிய இயக்கங்கள். நான் போய்ச் சேர்ந்த

இயக்கத்தின் பெயர் ரெலோ.

**போராட்டத்தில் இணைவதற்கு 'உங்களுக்குத்' தனிப்பட்ட காரணங்கள் எதுவும் இல்லை என்று சொன்னதாகப் புரிந்துகொள்கிறேன். ஏனென்றால் இராணுவ வன்முறை தமிழர் பகுதிகளில் கிழக்கில்தானே முதலில் தொடங்கியது. அதற்கு எதிரான ஆயுதவழியிலான எதிர்ப்பும் கிழக்கில்தான் முதலில் நடந்திருக்கிறது. நான் சொல்வது.. அறுபதுகளுக்கும் முன்னர்.. 58இல் துறைநீலாவணையில் பொலிஸ் ஜீப் ஒன்றின்மீது கிழக்கைச் சேர்ந்த ஒரு தமிழ்க்குழுவினர் துப்பாக்கிச் சூடு நடத்தியிருக்கிறார்கள்…**

எனக்கு தெரிந்த காலத்தில் ராணுவம் என்பது அம்பாறை சீனித்தொழிற்சாலைக்கு கரும்பு வெட்டவும் காடு வெட்டவும் சுதந்திர தின அணிவகுப்புக்குந்தான் பயன்பட்டுக்கொண்டு இருந்தது.

நான் வரலாற்றை பின் தொடர்பவன் அல்ல. நான் பட்டவற்றையும் பார்த்தவற்றையும்தான் பதிவு செய்ய முடியும். எனக்கு தெரிந்த காலத்தில் பட்டிருப்பு தொகுதிக்கான பொலிஸ் நிலையம் களுவாஞ்சிகுடியில் இருந்தது. அங்கிருக்கும் முப்பது பொலிஸ்காரர்களில் இஸ்பெக்டர் உட்பட இருபத்தி ஐந்து பேரும் யாழ்ப்பாணத் தமிழர்கள்தான்.

படுவான்கரைப் பக்கம் இயக்கங்கள் நடமாட்டம் அதிகரித்ததும் வெல்லாவெளி பொலீஸ் நிலையம் பெரிதாக்கப்பட்டு, குவிக்கப்பட்ட காவல்படைக்கு அதிகாரியாக இருந்தது யாழ்ப்பாணத்தமிழரான கணேசநாதன்.

எண்பத்தி ஏழாம் ஆண்டு என நினைக்கின்றேன். கொழும்பில் வைத்து என்னை பொலீஸ் பிடிக்கின்றது. போஹா குண்டு வெடிப்பு நடந்து அடுத்தடுத்த கிழமையாக இருக்க வேண்டும். என்னை கைது செய்த பொலீஸ் அதிகாரியின் பெயர் நடராஜா. எனக்கான சட்டத்தரணிகள் மோதிலால் நேரு, குமார் பொன்னம்பலம். என் வழக்கை விசாரித்த நீதிபதியின் பெயர் மகேந்திரன். இவர்கள் எல்லோருமே யாழ்ப்பாணத் தமிழர்கள். சிங்கள அரசுகள் எல்லாம் அடக்கு முறை அரசுகள்தான். ஆனால் அடக்கு முறையை தமிழ் மக்கள் மேல் ஏவி விட்ட அதிகாரிகள் எல்லோரும் யாழ்பாணத்தமிழர்கள்.

**'போர் எதிர்ப்பு' என்பது உங்களது புனைவுகளில் பிரதானமாக உள்ளது. வன்முறையை தவிர்க்கும் உரத்த குரல் திரும்பத் திரும்ப ஒலிக்கிறது. மனித வாழ்கையின் இருத்தலை வலியுறுத்துகிறீர்கள். வன்முறை தழுவிய ஆயுதப் போராட்டத்தில் ஒரு போராளியாக இணைந்தவர் நீங்கள். பின்னர் இந்த மாற்றத்திற்கு வந்தடைந்த அனுபவங்களைச் சொல்லுங்கள்..**

என்னுடைய 14 வயதில் இயக்கங்கள் சாதாரணமாக ஊருக்குள் வரத் தொடங்கியிருந்தன. அப்போதிருந்தே அதாவது 9ம்வகுப்பு படிக்கிற காலத்திலிருந்தே பாடசாலைக்குப் போகமுடியாத சூழ்நிலை எனக்கு உருவாகிறது. ஏனென்றால் இயக்கத்திற்கான வேலைகளைச் செய்துகொண்டிருந்தேன். அதாவது முழுநேர உறுப்பினன்

இல்லை. இயக்கத்துக்கு தேவையான பொருட்களை கொண்டு செல்லவேண்டும், கொண்டு வரவேண்டும். இந்த மாதிரி வேலைகள்..

எதிர்பாராதவிதமாக முழுநேர போராளியாக மாறியதற்காக சந்தர்ப்பம் ஒன்று ஏற்பட்டது. ரெலோ இயக்கத்தினரால் களுதாவளையைச் சேர்ந்த ஆட்டுக் கள்ளனை தேசத்துரோகி என்று அடையாளப்படுத்தி அவர்கள் அடித்துக் கொல்வதை நான் நேரில் பார்த்தேன். எனக்கது உடன்பாடு இல்லாததால் நான் வெளியில் ஊருக்குள் சொல்லிவிட்டேன். அதே காலத்தில் தங்களிடம் இருந்த வெடி மருந்துகளை பரிசோதிப்பற்கு படுவான்கரையையும் எழுவான்கரையையும் இணைக்கின்ற பட்டிருப்பு பாலத்தை உடைத்தார்கள். எனக்கிந்த சம்பவங்கள் கோபத்தை உண்டாக்கின. ரொலோகாரர்கள்தான் பாலத்தை உடைத்தார்கள் என்பதையும் ஊருக்குள் சொல்லி விட்டேன். அவர்களுடைய இரகசியங்களை பகிரங்கங்கடுத்தியதற்கு தண்டனையாகத்தான் இனி நீ மட்டக்களப்பில் இருக்க முடியாது என்று பலவந்தமாக என்னை பிடித்து படகில் ஏற்றி அனுப்பி வைத்தார்கள். மட்டக்களப்பில் இருந்து மூதூர், மூதூரில் இருந்து நிலாவெளி, நிலாவெளியிலிருந்து முல்லைத்தீவு இயக்கச்சி வழியாக ஏழு நாட்கள் தரையிலும் கடலிலுமாக இரவில் பிரயாணம் செய்து என்னை யாழ்ப்பாணத்தில் வேலணையில் கொண்டு வந்து விட்டார்கள். வேறு வழியில்லை எனக்கு. முழுநேர போராளியாக மாறியே ஆகவேண்டும். அப்போது எனக்கு 15 வயது. அப்படிதான் இயக்க போராளியாக உருவாகினேன்.

அது 1985ஆம் ஆண்டு, அங்குள்ளவர்கள் எல்லோரும் 20 தொடக்கம் 25 வயதாக இருக்கும்போது நான் மட்டும் 15 வயதுப் பையனாக இருந்தேன். அங்கேதான் இன்றைய ஷோபா சக்தியை அந்தோனிதாசனாக சந்தித்திருந்தேன். அவர் புலிகள் இயக்கத்தில் இருந்தார். அக்காலங்களில்தான் என்னுடைய இயக்கத்தின் தலைவர் சிறி சபாரத்தினம் கொல்லப்பட்டார். அந்தக் காலகட்டத்தைப் பற்றி சோபாசக்தியுடன் பிற்காலங்களில் கதைக்கும் போது நான்தான் இது(டெலோ) என்று நானும், நான்தான் அது(புலி) என்று அவரும் சொன்னோம். அந்தக் காலத்தில் சோபா சக்தியும் ஒரு சின்னப்பையனாகத் தான் இருந்திருக்க வேண்டும்.

வேலணை வங்களாவடி சந்தியில் புலிகளுக்கும் ரெலோவினருக்கும் இடையில் மிகப் பெரிய குழு ஆயுத மோதல் ஏற்பட்டது. அதில் நாங்கள் இருவரும் எதிர் எதிராக சுடுபட்டுக் கொண்டோம். இது நடந்தது மே மாதம் ஐந்தாம் திகதி எண்பத்தியாறாம் ஆண்டு. சண்டையை வேடிக்கை பார்த்த சில பொது மக்களும் ஒரு மனநோயாளியும் அன்றைய சண்டையில் பலியானார்கள். இந்த சம்பவம் நடந்து மறு நாள்தான் சபாரத்தினம் கொல்லப்பட்டார்.

**அதாவது ரெலோ இயக்கம் மீது புலிகள் தடை விதித்தபோதுதான் போராட்டத்திலிருந்து உங்களுடைய விலகல் நடக்கின்றதா..?**

அதை போராட்ட உரிமை மறுக்கப்பட்டதாகத்தான் உணர்ந்தேன். தனது மக்கள் பாதிக்கப்படுகிறார்கள் என்றுதானே ஒருவர் போராட்டத்திற்குப் போகிறார். அந்தப் பிரச்சனையைத் தீர்ப்போம் என்றுதானே போகிறார். அப்பிடியிருக்க நீ போராடத்

தேவையில்லை என்று விடுதலைப்புலிகள் எப்படிச் சொல்லமுடியும்..

நீங்கள் போராடுவதற்குரிய உரிமையை நாங்கள்தான் உங்களுக்கு தரவேண்டும் என்று விடுதலைப்புலிகள் பகிரங்கமாக அறிவித்தார்கள். யார் யார் போராட வேண்டும், யார் யார் போராடக்கூடாது என்ற அதிகாரத்தை கையிலெடுத்தார்கள். என்னுடைய போராடும் உரிமையை மறுக்க நீ யார்? அதுதான் எனக்கு விடுதலைப்புலிகள் மீது ஏற்பட்ட முதல் வெறுப்பு.

மற்றைய இயக்கங்களும் சளைத்தவை அல்ல. எந்த இயக்கமாக இருந்தாலும் அத்துமீறல், மனித உரிமை மீறல் போன்ற செயற்பாடுகள் உள்ளுக்குள்ளே நடந்தன. எதற்காக போராட வந்தார்களோ அதைச் செய்யாமல் வேறு வேறு காரியங்களில் ஈடுபட்டனர். சாதாரண விடயங்களுக்கு எல்லாம் அப்பாவி தமிழ் மக்களை பிடித்துக்கொண்டு போய் அடித்தல், கொல்லுதல் போன்ற சம்பவங்கள் எனக்கு அருவருப்பை ஏற்படுத்தின. அதன் பிறகுதான் அவன் யார் என்னைப் போராட வேண்டாம் என்று சொல்வது, நானே போராடாமல் இருக்கின்றேன் என்றுவிட்டு வெளியேறினேன்.

**இந்த நாடே வேண்டாம் என்று வெளியேற விரும்பினீர்களா?**

அது ஓர் எண்ணமாக எனக்கு இருக்கவில்லை. அக்காலத்தில்தான் இந்திய இராணுவம் நாட்டுக்குள் வந்தது. இந்திய இராணுவத்துடன் சேர்ந்து நாலைந்து இயக்கங்கள் இயங்கின. த்ரீ ஸ்ரார் என்ற பெயரில் ரெலோ, ஈபிஆர்எல்எப், புளொட் என்று புலிகளைத் தவிர அனைத்து இயக்கங்களும் இந்திய இராணுவத்துடன் சேர்ந்து இயங்கின. அந்த நேரத்தில் நான் மட்டக்களப்புக்கு வந்துவிட்டேன். எதிலும் ஈடுபடாமல்தான் இருந்தேன்.

இருந்தபோதும் இந்திய ராணுவம் இருந்த அன்றய சூழலை அசௌகரியமாக உணர்ந்தேன். எழுதுவதற்கான சுதந்திரம் எல்லாம் அப்போது இல்லை. இரவில் திருட்டுத் தனமாக துண்டுப்பிரசுரம் வெளியிடுவோம். கொழும்பில் அச்சடித்து ஊருக்கு கொண்டு வந்து இரவிரவாக விநியோகிப்போம். ஸ்டாலின் ஞானத்தை உங்களுக்கு தெரியும்தானே. கொழும்பு மட்டக்குளியில் இருக்கும் சேரிப் பகுதி ஒன்றில் வைத்துத்தான் பிரசுரங்களை தயார் செய்வோம். விடுதலைப்புலிகளுக்கு எதிராகவும் வெளியிடுவோம். இந்திய இராணுவத்துடன் சேர்ந்து இயங்கும் இயக்கங்களுக்கு எதிராகவும் வெளியிடுவோம். .போர் செய்பவர்களை நாங்கள் வெறுத்தோம்.

இது ஏதோ ஒரு வழியல் இந்திய ராணுவத்துடன் சேர்ந்து இயங்குபவர்களுக்கு தெரிந்துவிட்டது. தெரிந்தவுடன் பிடித்துக்கொண்டு போய் தேத்தாத்தீவு தேவாலயத்துக்கு முன்னால் வைத்து எனக்கு நன்றாக அடித்து விட்டார்கள். கிட்டத்தட்ட ஒரு மாதம் இரத்த வாந்தி. வீட்டுக்கார்கள் மருத்துவத்துக்காக என்னைக் கொழும்புக்கு கொண்டு வந்து விட்டார்கள். அப்போது எனக்கு ஒரு 17 அல்லது 18 வயது இருக்கும். ஒரு மாதத்தால் திரும்பவும் ஊருக்குப் போனேன்.

அங்கே அவ்வப்போது இந்திய இராணுவத்தினர் விடுதலைப்புலி இயக்கத்தைச்

சேர்ந்தவர்களைச் சுட்டுவிடுவார்கள். இரவில் புலிகள் இயக்கம் வீடு வீடாக வந்து இறந்தவருக்கு நாளைக்கு இறுதி அஞ்சலி செலுத்தும் நிகழ்வு நடைபெறவுள்ளதால் நீ வாசலில் வாழை மரம் கட்டவேண்டும் என்று சொல்லுவார்கள். பிறகு அன்றைக்கு இரவு புலிகள் வேறு இயக்கத்தைச் சேர்ந்தவர்களை சுட்டுவிடுவார்கள். அந்த இயக்கக்காரர்களும் வாழை மரம் கட்டு என்று சொல்லிக்கொண்டு மறுநாள் வருவார்கள். அதிலும் முக்கியமாக வாழை மரம் கட்டடா என்று என்னுடைய வீட்டுக்குத்தான் வருவார்கள். அப்பாவைக் கேட்டால் எடுத்துக் கட்டு என்று சொல்லுவார். ஒரு வீட்டில் எத்தனை வாழைமரங்கள் இருக்கும். ஒரு கட்டத்தில் வாழைமரங்கள் இல்லாத நிலை வந்து விட்டது. நான் என்ன செய்தேன் என்றால் ஒரு வாழை மரத்தை வேரோடு பிடுங்கி வீட்டு வாசலில் கிடங்கு கிண்டி நட்டு வேலியும் கட்டிவிட்டேன். சாகிறவன் எல்லாம் சாகுங்கள். நீங்கள் எத்தனை பேர் செத்தாலும் ஒரு வாழைமரம் நிரந்தராமாக இருக்கும் என்று கட்டிவிட்டேன். எனது கோவமான நையாண்டி, இந்திய இராணுவத்துடன் இணைந்து இயங்கிய இயக்கக்காரர்களுக்கு திரும்பவும் கோவத்தை உண்டாக்க எனக்கு திரும்பவும் நல்ல அடி அடித்துவிட்டார்கள்.

அதன் பிறகு விடுதலைப்புலிகள் என்னை அம்பிளாந்துறை என்ற கிராமத்துக்கு வரச்சொல்லி அழைத்தார்கள். ஆற்றைக் கடந்துதான் அந்த கிராமத்துக்கு போக வேண்டும். அந்தக் கிராமத்தில்தான் அவர்களுடைய அலுவலகம் இருந்தது. அங்கே எனக்கு ஓரளவுக்கு வேண்டப்பட்ட குடும்பத்தைச் சேர்ந்த ரமணன் என்ற பையன் இருந்தான். என்னை விட இரண்டு மூன்று வயது கூடியவன். அவன்தான் அங்கு அலுவலகத்துக்கு பொறுப்பாக இருந்தவன். விடுதலைப்புலிகள் என்னை அழைத்தவுடன் என் வீட்டில் இருந்தவர்கள் எல்லோரும் உன்னை விடுதலைப்புலிகள் கொல்லப்போகின்றார்கள். நீ கொழும்புக்கு ஓடி விடு என்று சொன்னார்கள். நான் வீட்டுக்குத் தெரியாமல் தோணி ஒன்றில் ஏறி காலை 10 மணியளவில் அம்பிளாந்துறைக்குப் போய் விட்டேன்.

அங்கே வைத்து, ‘த்ரீ ஸ்ராருடன் உனக்கு என்ன பிரச்சினை’ என்று ரமணன் கேட்டான். ஒரு பிரச்சினையும் இல்லை, ஏன் கேட்கிறீர்கள் என்றேன். அப்புறம் ஏன் உனக்கு அடித்தார்கள் என்று கேட்டான். பின்னர் “நான் உன்னைப் பற்றி கேள்விப்பட்டேன். எங்களுக்கு உன்னைப்பற்றி முழுத் தகவலும் வந்தது. நீ எங்கட மணியம் மாஸ்டரின் மகன் என்ற படியால் நாங்களும் ஓரளவுக்கு பொறுத்து பொறுத்துப் பார்த்தோம். இப்படியே போனால் ஒன்றில் நாங்கள் உன்னை மண்டையில் போடுவோம். அல்லது அவர்கள் உன்னை மண்டையில் போடுவார்கள். உன்னுடைட செயல்பாடுகள் தொடர்ச்சியாக இப்படியே இருக்கும் என்றால் உன்னுடைய மூளையை நாய் நக்குவது நடக்கும். நீ நாட்டை விட்டு போ. ஒரு குடும்ப நண்பன் என்ற முறையில், உறவு என்ற முறையில் சொல்கிறேன் நீ இங்கே இருக்காதே.” என்றான். முப்பத்தி இரண்டு ஆண்டுகளுக்கு முன் ரமணன் சொன்னது இப்பவும் என் மண்டைக்குள் கேட்டுக் கொண்டே இருக்கிறது. அதன் பிறகுதான் கொழும்புக்கு நிரந்தரமாக வந்தேன். அதன் பிறகு தமிழ்நாட்டுக்கு வந்து படிப்படியாக இங்கே வந்தேன். ஆனால் கட்டாயம் நாட்டை விட்டு வரவேண்டும் என்று வரவில்லை.

**சாரு நிவேதிதாவின் கோணல் பக்கங்கள் நூலில் நீங்கள் அகதியாகப் புலம்பெயரும் போது கையில் காசு ஏதும் இல்லாமல் சீனப் பெருஞ்சுவரில் தனிமையில் நின்று பீடி புகைத்த அனுபவத்தை குறிப்பிட்டு இருந்தார். அந்தக் காட்சியை கற்பனை செய்யும்போது பெரும் உளக்கிளர்ச்சி ஏற்படுகிறது. உங்களுடைய புலம்பெயர்ந்த பயண அனுபவங்கள் எப்படி இருந்தன?**

ஊரை விட்டு 18 வயதில் நான் தமிழ்நாட்டுக்கு போனேன். அட உலகம் இவ்வளவு பெரிதானதா, அழகானதா, அதிசயமானதா சந்தோசமானதா என்று தமிழ்நாட்டுக்கு வந்த பின்பு தான் தெரிந்தது. அந்த பிரமிப்பையும் பிரமாண்டத்தையும் வார்த்தைகளால் சொல்லி விளங்க வைக்க முடியாது. தமிழ்நாட்டுக்கு வந்த பின் வாழ்க்கையில் எல்லாமே சுவாரசியமானதைப்போல இருந்தது. என்னுடைய நாட்டில் இருக்கும் போது சாகஸம் தனிய இருந்தது. இங்கே வந்த பிறகு சாகஸமும் சுவாரசியமும் சேர்ந்து கொண்டது.

தமிழ்நாட்டுக்கு வந்த பிறகு பம்பாய்க்குப் போய் சிறிது காலம் தங்கியிருந்தேன். வெளிநாடுகளுக்குப் போவதற்காகப் போகவில்லை. வேறு யாராவது அங்கிருந்து களவாக வெளிநாடு போவதற்காகப் போவார்கள். அவர்களோடு நானும் சும்மா போய் சிறிது காலம் ஒரு மாதம் அல்லது இரண்டு மாதம் தங்கி இருப்பேன். இப்படி ஒவ்வொரு ஊராக சுற்றினேன்.

எனது சொந்தக்காரர்கள் நீ தமிழ்நாட்டையே சுற்றி சுற்றி வருகிறாய். ஒருமுறை சிங்கப்பூருக்கு வா என்றார்கள். சரி பார்ப்போமே என்று சிங்கப்பூருக்கு போனேன். அப்போது சிங்கப்பூரில் இருக்கும் ஒரு பயண முகவருடன் எனக்கு பழக்கமேற்பட்டது. அவர் தான் சீனாவுக்கு போவோம் வா என்று என்னை அழைத்தார். அது என்னைக் கனடாவிற்குக் கடத்துவதற்கான முயற்சி என்று எனக்கு அப்போது தெரியாது. சீனா தானே என்று நானும் எனது மாமாவிடம் திரும்ப தமிழ்நாட்டுக்கு போகின்றேன் என்று சொல்லிவிட்டு இவருடன் சீனாவுக்கு போனேன். ஆனால் என் உறவினர்களுக்கு நான் சீனாவுக்குத் தான் போகின்றேன், அங்கிருந்து கனடா வருவேன் என்று தெரியும். சீனாவில் போய் இரண்டு மாதம் தங்கினேன். என்னை சீனாவில் வைத்து உறவினர்கள் கடத்தப்போகிறார்கள் என்று எனக்கு சிறியதாக ஒரு சந்தேகம் வந்தது. அதற்கு பிறகு நான் பிரயாண முகவரிடமிருந்து தப்பி ஓடிவிட்டேன். ஒரு இரண்டு மாதம் சீனாவில் உல்லாசமாகத் திரிந்தேன். அப்போது என்னிடம் கையில் கொஞ்சம் பணம் இருந்தது

பீக்கிங்கில் இருந்து ஒரு எண்பது கிலோ மீட்டர் இருக்கலாம். பன்றிகளை கறிக்கடைக்கு இறக்கிவிட்டு திரும்பிக் கொண்டிருந்த ஒரு வானில் ஏறிக் கொண்டுதான் பெருஞ் சுவர் இருக்கும் பகுதிக்கு போனேன். சுவர் என்பது சிறுமை. மலைகளின் மேல் கட்டப்பட்ட நெடுஞ்சாலை அது. நாள் முழுவதும் அலைந்தேன். சுவரின் விளிம்பில் நான் அமர்ந்து இருந்த பகுதி சீனாவுக்கும் என் கால்கள் தொங்கிக் கொண்டிருந்த பகுதி மங்கோலியாவுக்கும் சொந்தமானது. ஒருவித பரவசம். அனுபவித்த தெல்லாவற்றையும் சந்தோசமாகத்தான் ஏற்றுக் கொண்டேன். கையிலிருந்து பணம் முடியும் தருவாயில் திரும்வும் பயணமுகவரிடமே போய் சேர்ந்தேன்.

1989இல் சீனாவில் தியானென்மென் சதுக்கத்தில் மாணவர் படுகொலை நடந்த காலத்தில் நான் அங்குதான் இருந்தேன். பிறகு பிரயாண முகவரே நீ சிங்கப்பூருக்கு போ. உன்னை வீட்டில் தேடுகின்றார்கள் என்று சொன்னார். சிங்கப்பூருக்கு போவதற்கு சீனாவிலிருந்து டோக்கியோ, பின்பு டோக்கியோவிலிருந்து சிங்கப்பூர் என பயண ஒழுங்கு செய்யப்பட்டிருந்து. சிங்கப்பூருக்கு போகும் விமானம் என்று ஒன்றில் ஏற்றிவிட்டார்கள். அதில் ஏறி இறங்கிய பிறகுதான் தெரிந்தது நான் இறங்கிய இடம் டோக்கியோ அல்ல. லொஸ் ஏஞ்சல்ஸ் என்று.

அதற்குப் பிறகு லொஸ் ஏஞ்சல்ஸ் இல் 3 மாதம் சிறையில் அடைத்தார்கள். சிறை என்றும் சொல்லமுடியாது. அது ஒரு முகாம் என்று நினைக்கின்றேன். பிறகு நீதிமன்றம் மூலம் வெளியே விட்டார்கள். லொஸ்ஏஞ்சல்சில் ஒரு வருடம் சுற்றித் திரிந்தேன். யோகன் என்கின்ற புண்ணியவானின் நட்பும் பணமும் அங்கு சுற்றித்திரிய உதவி செய்தது.

பிறகு அவர்தான் என்னை நியு யோர்க் மாநிலத்தில் இருக்கும் வபலோ நகருக்கு உள்ளூர் விமானத்தில் அனுப்பி வைத்தார். அங்கிருந்து வாடகைக் காரில் கனடாவின் எல்லைக்குப் போனேன். அங்கே Rainbow Bridge என்று கனடாவையும் நயாகராவையும் இணைக்கும் பாலம் ஒன்று இருந்தது. அந்த பாலம் வழியாக பெட்டியைத் தூக்கிக்கொண்டு நடந்தே போனேன். கனடாவிற்கு ஏன் வந்தாய் என்று அதிகாரிகள் கேட்டார்கள். முழு விபரத்தையும் சொன்னேன். சில ஆவணங்களைத் தந்து வெளியே போகத்தெரியுமா என்று கேட்டார்கள். அதற்குப் பிறகு வாழ்க்கை இப்படியே போகின்றது.

என்னுடைய வாழ்க்கை என்பது பெரிய துயரம் நிறைந்தது இல்லை. ஒரு வகையான சாகஸமும் ஒரு வகையான பரபரப்பும் நிறைந்ததுதான் அது. என்னுடைய அகதி வாழ்க்கையும் துயரம் நிறைந்தது இல்லை. புலம்பெயர்ந்த நாடுகளில் அகதி வாழ்க்கைபற்றிக் கதை எழுதுபவர்கள் துயரத்தைச் சற்று மெருகூட்டித்தான் கையாளுகிறார்கள்.

**உங்களுடைய எழுத்துக்கள் பற்றிப் பேசுவோம். ஓர் ஆயுத இயக்கத்தில் இருந்தேன் என்ற குற்ற உணர்ச்சிதானா உங்களை எழுத வைத்தது?**

ஒரு வகையான மன உளைச்சல் இருந்தது என்பது உண்மைதான். அதாவது நான் தப்பித்துவிட்டேன். ஆனால் என்னையும் விட இளம் வயதான பையன்கள் போரில் இறந்துகொண்டிருக்கிறார்கள். போர் அவர்களை பயன்படுத்திக்கொண்டே இருக்கின்றது என்ற சஞ்சலம் இருந்ததுதான். நான் 15 வயதில் இருந்தபோது எனக்குத் தெரியவில்லை. ஆனால் ஒரு 15 வயது பையனிடம் துப்பாக்கியை கொடுப்பது எவ்வளவு ஆபத்தான விடயம் என்று இப்போது தெரிகின்றது. சிறார்களிடம் துப்பாக்கியை கொடுத்து சுடு என்றால் அவன் எல்லோரையும்தான் சுடுவான். அவனுக்கு எதிரி யார் என்று தெரியவா போகிறது. துவக்கைப்போலத்தான் சிறுவர்களுக்கும் எதிரிகள் கிடையாது.

இந்தத் துயரங்களைக் கதைக்கின்றபோது, இவை பற்றி எழுதலாமே, இவை பதிவு

செய்யப்பட வேண்டியவை, வெளியே சொல்லவேண்டும் என்ற எண்ணத்தைக் கொடுத்தவர் பத்திரிகையாளரான DBS ஜெயராஜ். அதற்குப் பிற்பாடுதான் எழுத ஆரம்பித்தேன்.. அதன் பின் கவிஞர் சேரனும், எழுத்தாளர் க.நவம் அவர்களும் உரம் ஊட்ட ஓவியர் கருணாவும் இணைந்தான். பின் நாட்களில் எழுதப்பட்ட சில கதைகளுக்கு ஸ்டாலின் ஞானமும் கற்சுறாவும் பெரிசும் உந்துதல் கொடுத்தார்கள்.

**உங்களுடைய கதைகளை 'வீரத்தின் மறுபக்கம்' என்று குறிப்பிடுகிறீர்கள். இலக்கியம் ஊடாக அதனைச் சொல்ல வந்தீர்களா? அல்லது இலக்கியம் அதனைச் சொல்ல வைத்ததா?**

நான் இலக்கியவாதி இல்லை. எனக்கு இலக்கியமெல்லாம் தெரியாது. இலக்கியம் எழுத வேண்டும் என்றெல்லாம் யோசித்ததும் இல்லை. உண்மையை சொல்ல வேண்டுமானால் நான் ஒரு தற்குறி.

போரும் வீரமும் இனிமையானவை இல்லை. இதற்கு பின்னால் பெரிய துயரமும், வலியும் இருக்கின்றது. இவற்றைத்தான் பதிவு செய்ய நினைத்தேன். போர் என்பது வீரமும் கிடையாது, வெற்றியும் கிடையாது. அது வெறும் துயரம் மட்டுமே. தமிழ் இலக்கியத்தில் மார்பில் வேல் பாய்ந்தால் வீரம், முதுகில் வேல் பாய்ந்தால் கோழை என்றெல்லாம் இருக்கின்றது. உண்மையில் தன் பிள்ளை இறந்ததைக் கண்ட தாய் இப்படியெல்லாம் சொல்லியிருப்பாரா.. இவற்றை வீரமாக புகழ்ந்து எழுதியது அரசனைச் சார்ந்த ஆண் கவிஞனாக இருப்பான்.

போர், வீரம், வெற்றி இவற்றுக்கு அப்பாற்பட்ட துயரங்களை நாம் பதிவு செய்வதில்லைதானே. இப்போதுதான் இலக்கியத்தில் அப்படி நடக்கின்றது. அந்தக்காலத்தில் அதைச் சொல்ல பலர் விரும்பவில்லை. நான் வீரத்தினுடைய மறுபக்கம் துயரம் மட்டுமே என்பதைச் சொல்ல விரும்பினேன்.

**யுத்தமும் அதன் இரண்டாம் பாகமும், எண்ட அல்லாஹ் போன்ற சிறுகதைகள் அன்று தமிழர்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையில் இருந்த சிநேக உறவையும், பின்னர் அதில் இடம்பெற்ற விரிசல்களையும் பேசுகின்றன. கிழக்கில் தமிழர்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையிலான பிரிவினைக்கு ஒட்டுமொத்தமாக இயக்கங்களின் மீது பழியைப் போடுவது சரியா..?**

ஆம். அதை இயக்கங்கள்தான் செய்தன. தமிழ், முஸ்லிம் உறவுகளை உடைத்து சின்னாபின்னமாக்கியது இயக்கங்கள்தான் என்பதை நான் வெளிப்படையாகவே சொல்கின்றேன். அதே நேரம் அதனைத் தனியே விடுதலைப்புலிகள் என்றுமட்டும் சொல்லமுடியாது. புலிகளுக்கும் பங்கு உண்டு, ஈபிஆர்எல்எப் உம் உண்டு, ரெலோவும் உண்டு, புளொட்டும் உண்டு, ஈரோஸும் உண்டு. ஒருமுறை நான் மட்டக்களப்பு கல்லடி சிவானந்தா ஹொஸ்ரலில் இருக்கும் போது முஸ்லிம் கடாபி ஹொட்டலில் ஏதோ ஒரு பிரச்சினை ஏற்பட்டதில் தமிழ் முஸ்லிம் கலவரம் உண்டாகிவிட்டது. மஞ்சம்தொடுவாய், கல்லடி பக்கம் இருப்பவர்களுக்கும் காத்தான்குடி பக்கம் இருப்பவர்களுக்கும் கலவரம்

ஏற்பட்டுவிட்டது. அந்தக் கலவரத்தை தமிழ் பக்கத்திலிருந்து தலைமை தாங்கியவர்கள் ஈரோஸ்காரர்கள்தான்.

இந்திய இராணுவத்துடன் இணைந்து இயங்கிய இயக்கங்களில் எனக்குத் தெரிந்த சில புளொட் பையன்களும் இருந்தார்கள். ஒருநாள் இந்திய ராணுவமும் அவர்களும் காத்தான்குடிக்குள் நுழையப்போகிறார்கள். அந்த புளொட் பையன்கள் என்னிடம், இந்திய இராணுவத்துடன் உள்ளே போனால் முஸ்லீம் பெண்களுடைய முலைகளைப் பிடிக்கலாம் வாடா என்று என்னைக் கேட்டார்கள். கனடாவில் ஒரு சீஸனுக்கு பழம் பழுத்தால் நாங்களாகப் போய் தோட்டங்களில் செர்ரி பழம் பிடுங்கலாம். இது மாதிரியான நிகழ்வுக்கு போவதைப்போல அவர்கள் என்னைக் கூப்பிட்டார்கள்.

இனங்களைப் பகையாக்கினால் இலாபம் என்று இயக்கங்கள் கருதினார்கள் என்று நினைக்கின்றேன். முஸ்லிம்களை வேட்டையாட இந்திய ராணுவமும் ஆர்வமாகவே இருந்தது.

என்னுடைய சிறு வயதுக் காலத்தில் கல்முனை கடற்கரைப் பள்ளிவாசலுக்கு எங்களுடைய சுற்றத்தார் உறவுகள் எல்லோரும் திருவிழாவுக்கு போவார்கள். காலப்போக்கில் பகையாக மாறி முஸ்லிம்கள் என்று பிரித்துப் பார்க்கத் தொடங்கிவிட்டார்கள். இது எப்படி, ஏன் நடந்தது என்று எனக்கு விளங்கவில்லை. இயக்கங்கள் பகை ஆக்காமல் இருந்திருந்தால் இரண்டு தரப்பினரும் ஒன்றாகத்தான் இருந்திருப்பார்கள். அண்மையில் கவிஞர் ஆத்மாவுடன் கதைத்தேன். முஸ்லிம் நண்பர் என்ற முறையில் அவருக்கு காத்தான்குடியில் இருக்கின்ற பள்ளிவாசல் பெருநாட்களை விடவும் மாமாங்கப் பிள்ளையார் கோவில், களுதாவளைப் பிள்ளையார் கோவில், உகந்தை முருகன் கோவில் திருவிழாவுக்குப் போய் அங்கே கிடைத்த மகிழ்ச்சிதான் அவருடைய நினைவில் இருக்கின்றது என்பதை உணர்ந்தேன். இப்போது அப்படி நடக்க முடியுமா? முஸ்லிம் மக்கள் இந்து கோவில்களுக்கு வருவது தடை செய்யப்பட்டுள்து. தான் கோயில்களுக்கு சென்று வந்த நினைவுகளில் வாழ்வதாக ஆதங்கப்பட்டு பதிவு செய்கிறார் எஸ்.எல்.எம் ஹனிபா. இது கொடுமையில்லையா?

**இனங்களுக்கு இடையிலான விரிசலுக்கு தமிழ் இயக்கங்கள்தான் காரணம் என்கிறீர்கள்.. ஆனால் இவற்றுக்குப் பின்னணியில் சிங்கள பௌத்த பேரினவாதம் ஒரு தூபமிடும் கருவியாகச் செயற்பட்டிருக்காது என்று நம்புகிறீர்களா.. ஏனென்றால் அது தன்னுடைய துணை இராணுவக் குழுக்களில் தமிழ் இளைஞர்களைப்போலவே முஸ்லீம் இளைஞர்களையும் இணைத்துப் பயிற்சி அளித்தது. அவர்களைக்கொண்டு புலிகளுக்கு எதிராக மட்டுமல்ல, அப்பாவித் தமிழ்ப்பொதுமக்களுக்கு எதிராகவும் தாக்குதல்களை நடத்தியிருக்கிறது. உங்களுடைய படுவான்கரை கதையில்கூட அதை எழுதியிருந்தீர்கள்… ?**

ஆரைப்பற்றை, காரைதீவு போன்ற முஸ்லீம் ஊர்களின் எல்லையில் இருப்பவர்களுக்கு என்னுடைய அனுபவத்துக்கு எதிராக அவர்களுடைய அனுபவம் இருக்கும். வீரமுனை தாக்குதலை ஜிகாதிகள்தான் இலங்கை ராணுவத்துடன் சேர்ந்து நடத்தினார்கள். காரைதீவு

படுகொலைகளுக்கும் தீ வைப்புகளுக்கும் ஊர்காவல் படை என்ற பெயரில் இயங்கிய ஜிகாத் அமைப்பினர்தான் காரணம். ஆனாலும் தமிழ் இயக்கங்கள்தான் முஸ்லிம் தமிழ் பகைக்கு முதல் காரணம். அதனை சிங்கள அரசுகள், முஸ்லிம் ஜிகாதிகை உருவாக்கி கிழக்கு தமிழர்களை கொல்ல பயன்படுத்திக்கொண்டன.

தமிழ் இயக்கங்களை அழிப்பதற்கு இஸ்ரேலின் மொஸாட் உளவு நிறுவனம் இலங்கை ராணுவத்துக்கு பயிற்சி அளிக்க வந்தபோது முஸ்லிம் மக்கள் அதனை எதிர்த்து போராட்டங்கள் நடத்தினார்கள். தமிழர்கள் என்ன செய்தார்கள்? சோனியைக் கொல்ல ஜே. ஆர் இஸ்ரேல்காரனை கூப்பிட்டு இருக்கான் என்று, ஜயவர்தனாவுக்கு ஆதரவு தெரிவித்தார்கள். இத்தனைக்கும் இது நடந்தது எண்பத்தி ஐந்தில்.

**யுத்தசன்யாசம் கவிதைத்தொகுப்பில் உள்ள கவிதைகள் முழுவதிலும் விரக்தியே ஒலிக்கிறது. ஆங்காங்கே வாழ்கையின் நம்பிக்கைக்கு ஏதும் பிடி கிடைக்காதா என்று தேடுகிறது. அந்தக் கவிதைகளை தொண்ணூறுகளின் ஆரம்பத்தில் எழுதி இருந்தீர்கள். இன்று யுத்தம் முடிந்து பத்தாண்டுகள் கடந்தாகிவிட்டது. அந்த விரக்தி மனநிலையை இன்றைக்குத் திரும்பிப் பார்க்க என்ன தோன்றுகிறது?**

தொன்னூறுகளின் தொடக்கத்தில் இந்த வாழ்க்கையை நான் விரக்தி மாதிரித்தான் நினைத்தேன். இது நான் விரும்பி ஏற்றுக்கொண்ட நாடு இல்லை. யாழ்ப்பாண சமூகத்தைப் பொறுத்தவரை அவர்கள் வெளியேற வேண்டும் என்ற ஆசையுடன்தான் வெளியேறினார்கள். அதற்குப் போர் பயன்படுத்தப்பட்டது. ஒரு வித்தியாசமான, மேட்டுக்குடி வாழ்க்கைக்கு ஆசைப்பட்டுத்தான் வெளியேறினார்கள். எனக்கு நாட்டை விட்டு வெளியேற வேண்டும் என்று ஒரு தேவை இருக்கவில்லை. நான் சந்தோசத்தை நாடி வரவில்லை. அதே நேரத்தில் போர் சூழலும் எனக்கு விருப்பமானதாக இருக்கவில்லை.

அப்போது ஒரு வித உளவியல் சிக்கலுக்கு உள்ளானேன். ஒரு மீட்கப்படாத தத்தளிப்பு நிறைந்த காலமாக அதை உணர்ந்திருந்தேன். அதை என் படைப்புகளில் எழுதி இருந்தேன். அப்போதுதான் கனடாவில் இருந்து தலைமறைவாகி நேபாளத்தில் லும்பினியிலும், சோனாலியிலும் அலைந்தேன். பக்மதி நதிக்கரையோரம் இருக்கின்ற காசி விஸ்வநாதர் கோயில் கொஞ்ச காலம் தங்கி இருந்தேன். அப்புறம் அம்மாவும் காதலியும் என்னை கண்டு பிடித்து திரும்பவும் கனடாவுக்கு அனுப்பி வைத்தார்கள்.

**'எண்ட அல்லாஹ்' சிறுகதை அதனுடைய அரசியலுக்காக இலக்கிய சூழலில் காரசாரமாக விமர்சிக்கப்பட்டது. அந்த விமர்சனங்கள் உங்களை இலக்கியச் சூழலில் இருந்து ஒதுக்கின என்று கூட சொல்லலாம். அது ஏன் அவ்வாறு நிகழ்ந்தது.**

எண்ட அல்லாஹ் சிறுகதையை யாருமே விருப்பவில்லை. விடுதலை இயக்கத்துக்குள் பிழை கண்டு பிடிக்கக்கூடாது. ஒரு தமிழனை நீ, யாருக்கோ காட்டிக்கொடுத்து விட்டாய் என்று சொன்னார்கள். அந்த கதை எழுதியதற்காக மன்னிப்பு கேட்டெல்லாம் எழுதச்சொன்னார்கள். அதே போல் முஸ்லிம் சமூகத்துக்குள்ளும் அது பிரச்சனை

ஆனது. தங்கராசா என்று முஸ்லிம்களுக்கு பெயர் இல்லை என்று சொன்னார்கள். எனக்குத் தெரிய அன்று கிழக்கு முஸ்லிம்களில் அன்னலட்சுமி என்றெல்லாம் பெயர் இருந்திருக்கிறது.. முஸ்லீம் கலாசாரத்திற்கும் தமிழர்கள் கலாசாரத்திற்கும் இடையில் தொடர்புகள் இருந்தன. சில அம்மன் கோயில்களுக்கு வண்ணக்கர்களாக (தர்மகர்த்தா) முஸ்லீம்களும் இருந்திருக்கின்றார்கள். இப்போதுதான் அவர்கள் முற்றாக அரேபிய கலாசாரத்திற்குச் செல்கிறார்கள்.

மட்டக்களப்பில் கல்லடி சிவானந்தா பாடசாலை சுவாமி விபுலானந்தரால் திறக்கப்பட்ட ஒரு சைவப்பாடசாலை. அங்கே 40 பேர் படிக்கின்ற ஒரு வகுப்பறையில் 10 முஸ்லிம் மாணவர்களாவது இருப்பார்கள். காத்தான்குடியைச் சேர்ந்த நிறைய மாணவர்கள் கல்லடி சிவானந்தா பாடசாலையில் படித்தார்கள். முஸ்லீம், தமிழ் என்றெல்லாம் அப்போது அடையாளங்கள் இருக்கவில்லை. இருபத்தி மூன்று ஆண்டுகளுக்கு பின் ஊருக்கு போயிருந்தேன். எங்கள் காத்தான்குடியை காணவில்லை.

ஏ.பி.எம் இத்ரீஸிடம் பேசும்போது கூட நான் ஊரை விட்டு போகும் போது காத்தான்குடி இப்படி இல்லை. என்று கவலைப்பட்டேன். அங்கே வளர்க்கப்படுகின்ற ஈச்ச மரம் என்னை அந்நியப்படுத்துகின்றது. ஏதோ அரபு தேசத்துக்குள் போகும் ஒரு உணர்வு ஏற்படுகின்றது. இது ஏன் என்ற கேள்வி என்னிடம் எழுகிறது என்றேன்.

'இந்த அரபு ஈச்சமரங்கள் வளராது' என்று இத்திரிஸ் சொன்னார்.

'இன்று அரபு ஈச்சை மரங்கள் காத்தான்குடியில் பெரிதாக வளர்ந்துவிட்டன.'

**தீவிரமான அரசியல் கதைகள் எழுதிய அதே காலத்தில் 'முதிர்கன்னி' போன்ற கதைகளும் எழுதி இருக்கிறீர்கள். யுத்தத்தின் சிதைவில் சிக்குண்ட வாழ்கையைத்தான், ஆணாதிக்க சமூகத்தின் மத்தியில் வாழும் பெண்ணின் கதையாக அதில் சொல்லி இருந்தீர்கள். அப்படியிருக்க அந்தக் கதைக்கு பெண்ணியவாதிகளின் கண்டனக் குரல்கள் எதற்காக எழுந்தன..**

அவர்கள் நான் பெண்களின் சிக்கல்களை கவர்ச்சிகரமாக எழுதுகிறேன் என்று குற்றம் சொன்னார்கள். இங்கு ரொரண்டோவில் ஒரு பத்து தமிழ் பெண்ணியவாதிகள் இருக்கின்றார்கள். அந்த பத்துப்பேரும் ஒருவரை ஒருவர் விமர்சித்துக்கொண்டு அவர்களுக்குள் பகையாகத்தான் இருப்பார்கள். பெண்ணியத் தோழிகள் தாங்கள் முதலில் சந்திக்கின்ற ஆணின் மோசமான அனுபவங்களை கொண்டு எல்லா ஆண்களையும் அளவிடுவது சரியான பிழை.

உண்மையில் எனக்கும் சில பெண்ணியவாதிகளும் இடையே அவ்வப்போது பிரச்சினைகள் ஏற்படுவது உண்டு. அது அந்தரங்கமானது. அந்தப் பிரச்சினைகளுக்காக கதையை எதிர்மறையாக விமர்சித்தார்கள். அவர்களில் பலர் என் தோழிகள்தான். அவர்கள் அப்படிதான் கதைப்பார்கள். அவர்களுடைய காரசார விமர்சனங்களை ஏற்பது போல் நான் பாசாங்கு செய்வேன். அவர்களும் நம்பி விடுவார்கள்.

**இலட்சியவாதத்தைவிட உயிர்வாழ்தல் முக்கியம் என்பதை திரும்பத்திரும்ப உங்கள் கதைகள் பேசுகின்றன. உயிர்வாழ்தல் என்பதற்கு அப்பால் மானுடத்திற்கு வேறு தேவைகள் இல்லையா? அதை நோக்கி உங்கள் கதைகள் ஏன் செல்லவில்லை?**

அப்போதைய வயதில் நமது இருத்தலுக்காக போர் செய்யவேண்டும் என்று இருந்தது. ஆனால் போருடைய ஒட்டுமொத்த முடிவு எல்லாவற்றையும் அழிக்கப்போகின்றது என்று உணர்ந்தபோது தப்பி உயிர் வாழவேண்டும் என்ற எண்ணம்தான் எனக்கு ஏற்பட்டது. இதே போல உயிர்வாழ்வது தான் மனிதப்பிறப்பிற்கு முக்கியமா என சிலர் என்னிடம் கேட்டிருந்தார்கள். நாங்கள் கௌரவமாகவோ அல்லது ஓரளவு கௌரவமாக வாழ்வதற்குத்தான் புதிய சித்தாந்தகளை உருவாக்குகின்றோம். நாங்கள் போராடுவதெல்லாம் ஒரு கௌரவத்துக்காகத் தானே. இலட்சியவாதமோ போராட்டமோ எல்லாமே உயிர் வாழ்வதற்காகத்தானே.

தலைவர்களின் தொலை நோக்கில்லாத லட்சியத்துக்கா அப்பாவிச் சிறுவர்களை சாகடிப்பதெல்லாம் மாவீரம் என்று சொன்ன சமூகத்தைச் சேர்ந்தவர்கள்தானே நாம். லட்சியவாதத்திற்காக தெருக்களிலும் காடுகளிலும் அநாதைகளாக கௌரவம் இல்லாமல் சாவதை நான் வெறுக்கிறேன். சாவிலும் கூட ஒரு அறம் இருக்க வேணும்தானே.

முள்ளிவாய்க்கால் அழிவு வரப்போகின்றது என்பது எனக்குத் தெரியும். 2002ம் ஆண்டு குவர்னிகா என்ற ஒரு கதை எழுதியிருந்தேன். இந்தப் பேச்சுவார்த்தை முறியும். அதன் பின் ஒரு பெரிய அழிவு ஏற்படப்போகின்றது என்பது எல்லாவற்றையும் அதில் உணர்த்தியிருந்தேன். ஆனால் அந்த அழிவுக்குப் பிறகு என்ன நடக்கும், என்ன தீர்வு என்று எனக்கும் தெரியாது. இப்படி ஒரு அழிவு வரப்போகின்றது, தப்பி ஓடுங்கள் என்று சொல்லத் தெரிகின்றது. ஆனால் அதற்கு என்ன தீர்வு என்று சொல்லத் தெரியாது.

ஓரளவுக்கு கௌரவமாகவும், பிடித்த ஒரு வாழ்க்கையை வாழ்வதற்கும் முதலில் உயிர்வாழ வேண்டும். அதற்கு தப்பி ஓட வேண்டும். உங்களுக்குத் தெரியுமா.. முப்பது வருடங்களுக்கு முன்னர் இலங்கைக்குப் போய் போரில் ஈடுபடவேண்டும் என்று கனடாவில் ஓர் ஆயிரம் பேர் ஒன்று சேர்ந்தார்கள். அதாவது அங்கே போய் பிரபாகரனை வீழ்த்திவிட்டு ஆயுதப்போராட்டத்தை கைப்பற்றி நடாத்துவோம். கப்பல் வாங்குவோம், ஆயுதம் வாங்குவோம். என்றார்கள். இரண்டு மூன்று வருடங்களுக்கு பின்னர் அவர்களுக்கு திருமணம் முடிய அப்படியே விட்டுவிட்டார்கள். இப்போது அவர்களிடம் கேட்டால் அப்படியா, அப்படி ஒரு விடயம் நடந்ததா என்று கேட்பார்கள்.

**அன்று உங்களுக்கு இருத்தலியல் சிக்கல்கள் இருந்தன. அதை வெளிப்படுத்த எழுதினீர்கள். இன்று அப்படி இல்லாதபடியால் எழுதுவதை குறைத்துவிட்டீர்களா? திடீரென்று நாடகப் பக்கம் சென்றுவிட்டீர்களே?**

2002க்கு பிறகு நான் சிறுகதை எதுவும் எழுதவில்லை என்று நினைக்கின்றேன். இல்லை அதற்கு பிறகும் மூன்று கதைகள் எழுதி இருக்கின்றேன். பிறகு திடீரென்று நாடகத்துக்குள்

புகுந்துவிட்டேன். ஒரு ஆறு அல்லது ஏழு வருடங்கள் நாடகங்கள் செய்து கொண்டிருந்தேன். அதற்கு என்ன காரணமென்றால் தீவிர நாடகம் என்று ரொறன்டோவில் போடுவார்கள். ஆனால் திரைச்சீலையை திறந்து விட்டு இரண்டு பேர் நின்று கதைப்பதைத்தான் நாடகம் என்று நிகழ்த்தினார்கள். அப்படி இல்லை, இப்படியும் ஒரு நாடகம் போடலாம் என்று ஒரு முயற்சி செய்தேன். அது வெற்றியளித்தது. இங்கே நாடக பிரதிகளை எழுதி மேடையேற்றும் வழக்கம் மிக அரிதாகவே இருந்தது. ஆங்கிலம், பிரஞ்சு மொழி நாடகத்தை எடுத்து அதன் மொழிபெயர்ப்பை நாடகமாக போடும் வழக்கம் தான் இருந்தது. அப்படியில்லாமல் நாங்களே எங்கள் போர் சூழலை மையப்படுத்தி பிரதி எழுதி செய்யலாம் என்று முயற்சி செய்தேன். அதற்குப் பெருந்தொகையான மக்களை கொண்டு வந்து பார்க்க வைத்ததன் பின்னர் அதில் பெரிய ஆர்வம் வந்தது.

முதலில் கருமையம் என்ற அமைப்புடன் சேர்ந்து நாடகம் போட்டேன். ஒரு கட்டத்துக்குப் பிறகு அவர்களுக்கும் எனக்கும் ஒத்துவராததால் அதிலிருந்து விலகிவிட்டேன். பின்னர் அந்த அமைப்பு உடைத்து சின்னா பின்னமாக்கி விட்டது.

கறுப்பி சுமதி உயிர்ப்பு என்ற பெண்கள் பட்டறை வைத்திருந்தார். அந்த பெண்கள் பட்டறையுடன் சேர்ந்து மூன்று அல்லது நான்கு நாடகங்கள் போட்டிருப்பேன். மோசமான இந்த ஆணாதிக்கவாதியுடன் கறுப்பி சேர்ந்து இயங்கியதால், கறுப்பிக்கு இருந்த பெண்ணியத் தோழிகளும் விலகிக்கொண்டு போய்விட்டார்கள்.

நாங்கள் முழுக்க முழுக்க அரசியல் நாடகங்கள் மட்டுமே போட்டோம்.

அதில் ஒன்று “போர் செய்ய ஒரு சாதாரண மனிதன் உளவியல் ரீதியாக எப்படி தயார் செய்யப் படுகின்றான்.” என்பதைப்பற்றி “என் மௌனத்தின் மொழிபெயர்ப்பு” என்னும் நாடகம். அதேபோல போரில் குழந்தைகள் கொல்லப்படுவது சரியா என்பதைப் பற்றி “பகைப்புலம்” என்றொரு நாடகம் போட்டேன். பிறகு மூன்றாம் உலகப்போர் வந்து விடும் என்ற அச்சத்தில் ஒரு குழு இயேசுவைக் கடத்துவதாக “காலப்பயணம்” என்றொரு நாடகம். அவ்வாறே me from Jaffna என்றொரு நாடகம். யாழ்ப்பாணத்திலிருந்து கனடாவுக்கு புலம் பெயரும் ஒருவன் என்னென்ன கொண்டு வருவான் என்று முழுக்க முழுக்க மொழியே இல்லாத ஒரு நாடகம் அது. அதற்குப் பிறகு குட்டி குட்டி நாடகங்கள் போட்டிருக்கின்றோம். இப்போது அதுவும் இல்லை. முதலில் நாடகம் போடுவதென்றால் ஒரு நாடகத்துக்கு என்னுடன் 30 நடிகர்கள் இருந்திருக்கின்றார்கள். இப்போது இரண்டு பேரைச் சேர்த்தாலே



பெரிய விடயம் .

சக்கரவர்த்தி

**ஒரு காலத்தில் பாரிஸில் நிகழ்ந்ததைப்போல பிறகு கனடாவில்தான் ஏராளமான இலக்கிய முயற்சிகள் எழுச்சியாக நடந்தன. இன்று அப்படியல்ல. எல்லாமே ஓய்ந்து போனதைப்போலத் தோன்றுகிறது. கனடாவில் தமிழ் இலக்கிய முயற்சிகள் எப்படி இருக்கின்றன?**

இல்லை. இங்கே எதுவும் தேறாது. கனடாவில் உள்ள எழுத்தாளர்கள், தீவிரமான எழுத்தாளர்கள்கூட எண்ணிக்கைக்காகத்தான் எழுதுகின்றார்கள். இது எனக்குத் திருப்தி தருவதாக இல்லை. இனி எங்களுடைய பிள்ளைகள் எழுதினாலும் கனேடியர்களாகத்தான் எழுதுவார்கள். ஒரு ஈழத் தமிழரின் பிள்ளையாக அவர்கள் எழுத மாட்டார்கள். அதற்கான சூழல் இப்போது இல்லை.

என்னுடைய வீட்டில் வளர்கின்ற என் இரண்டு பிள்ளைகளையும் பார்க்கிறேன். அவர்கள் தமிழ் இலக்கியம், எழுத்து என எதுவும் செய்வார்கள் என்ற எந்த நம்பிக்கையும் இல்லை. அவர்கள் தமிழ் என்ற அடையாளமும் இல்லாமல்தான் வளர முற்படுகிறார்கள். ஒன்றிரண்டு உதிரிகள் இருக்கலாம். எஸ்.பொ சொன்னதுபோல புலம்பெயர் இலக்கியத்தில்தான் தமிழ் இலக்கியம் இனிமேல் வாழும் என்பது இன்று பெரும் நகைச்சுவையாகிவிட்டது. 2000ஆம் ஆண்டுடன் அந்த நிலை முடிந்துவிட்டது.

உண்மை என்னவென்றால் நாட்டின் நினைவுகளை எழுதித் தீர்த்தபிறகு இந்தப் புலம்பெயர்ந்த நாட்டிலே எங்களுக்கு அனுபங்கள் இல்லை. வேண்டுமானால் எதையாவது புனையலாம்.. 1970 ஆம் ஆண்டு நாட்டை விட்டு ஓடி வந்துவிட்டு முள்ளிவாய்க்காலில் நின்றது போல சிலர் எழுதுகிறார்கள் அல்லவா... அப்படி பொய்யான புனைவுகளை வேண்டுமென்றால் எழுதலாம்.

என்னைப் பொறுத்தவரை கனடா மாதிரியான நாட்டிலே எங்களுடைய வாழ்க்கை முறையும் எனக்கு புதிய அனுபவங்களைத் தரவில்லை. 15 வருடங்களாக எனது

வாழ்க்கையில் அனுபவங்கள் என்று எதுவும் இல்லை. திரும்பத் திரும்ப ஒரே விடயத்தைத் தான் பார்த்துக் கொண்டும் கேட்டுக்கொண்டும் இருக்கின்றோம். அதே குளிர், அதே வேலை, அதே வெயில், அதே பூ, அதே மரம், அதே செடி கொடி அவ்வளவு தான். சம்பளமும் அதே சம்பளம் தான். கூடவும் இல்லை, குறையவும் இல்லை. எல்லாம் இப்படி இருக்கும் போது எப்படி நாம் புதிய அனுபவங்களை தேடிக்கொள்வது? முற்றிலும் புனைவாக புனைவதில் எனக்கு பெரிய உடன்பாடு இல்லை. அதை என்னால் செய்ய முடியாது.

ஊரை விட்டு ஓடி வரும்போது பெட்டி நிறைய நாம் கொண்டு வந்த பழைய உடைகளைப் போட்டு போட்டு பழையதாகி விட்டது. அதை எப்படி திரும்ப திரும்ப போடுவது? நாம் புது உடை வாங்க வேண்டும். இங்கே உள்ள புது உடைகள் அவ்வளவு பொருத்தமாக இல்லை. அவ்வளவு தான்.

**அனுபவம் தீர்ந்துவிட்டதாக சொல்கிறீர்கள். ஆனால் அதே சம்பளம், அதே வேலை என்பது கூட ஓர் அனுபவம் தானே..?**

2000இல் கணையாழி கனடா சிறப்பிதழுக்கு ஒரு கதை கேட்டார்கள். அப்போது நான், அன்றைய ரொரண்டோ தமிழ் சமுகத்தை பற்றி “போங்கடா டேய்” என்றொரு கதை எழுதிக்கொடுத்தேன். அந்தக் கதையை எஸ்.பொவிலிருந்து எல்லோரும் ஒட்டுமொத்தமாக நிராகரித்தார்கள். இந்தக்கதையை வெளியிட்டால் புலம்பெயர் சூழலில் நிறையப் பிரச்சினைகள் வரும் என்றார்கள். அது மட்டுமில்லாமல் 21ம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியத்தை புலம்பெயர் இலக்கியம் தான் காப்பாற்றும் என்ற எஸ். பொவின் கூற்றுக்கு இக்கதை பிழையாக அமைகின்றது என்றார்கள்.

நீங்கள் இப்படியான கதைகளை எழுதாமல் கனடாச் சூழல் பற்றி கதை எழுதுங்கள் என்று அறிவுரையும் கூறினார்கள்.

பனியில் சறுக்கி விழுகின்ற பிரச்சினை, பலத்த காற்றில் வேலைக்குப் போகின்ற பிரச்சினை கிறடிட்கார்ட் தொல்லை இவற்றை வைத்து புலம்பெயர் சிறுகதை எழதச் சொன்னார்கள். எனக்கந்த ஞாபகம் வருகிறது இப்போது.

கனடாவிற்கு வந்த ஆரம்பத்தில் 1990, 1991களில் ஆண்டு புதிய அனுபவங்கள் கிடைத்தனதான். அதன் பிறகு ஒரு குறிப்பிட்ட வட்டத்துக்குள் தான் வாழ்க்கை போயக்கொண்டிருக்கிறது. கடந்த பத்து, பதினைந்து வருடங்களுக்கிடையில் வித்தியாசம் இல்லை. இப்போது இந்த கொரோனா காலத்தில்.. ஆறு மாதங்களாக காலையில் எழும்பி வெளியே போவேன். வீட்டுக்கு வந்து சமைப்பேன். செர்ரி மரத்துக்கு கீழே அமர்ந்திருந்து பியர் குடிப்பேன். சாப்பிடுவேன். நித்திரை கொள்ளுவேன். எழும்புவேன், தேனீர் குடிப்பேன், திரும்பவும் ஊர் சுற்றுவேன். ஒரு கியுபன் சுருட்டு புகைப்பேன். திரும்ப வருவேன். வொட்கா குடிப்பேன். யூ டியுப் பார்ப்பேன். இந்த வாழ்க்கையில் நான் என்ன அனுபவத்தைப் தேடுவது?

**கவிதை எழுதினீர்கள், சிறுகதை எழுதினீர்கள். சொல்வதற்கு ஏதோவொன்று இருக்கின்றபோது அதற்கான வடிவத்தை தேர்ந்து எடுத்தீர்கள். நாவல் வடிவத்தில்**

**சொல்வதற்கு ஏதும் இல்லையா?**

நாவல் எழுதுகின்ற திட்டம் இருந்தது. ஆனால் இனி எழுதுவதாக இல்லை. எங்களுடைய ஊரில் வன்னியன் என்று ஒருவர் இருந்தார். அவரைப்பற்றி ஒரு நாவல் எழுத வேண்டும் என்ற ஒரு ஆசை இருந்தது. அவர் பறையர் சமூகத்தால் காப்பாற்றப்பட்டு அந்த சமூகத்துக்காக உழைத்து வாழுகின்ற ஒருவர். அவர் புளொட் அமைப்பைச் சேர்ந்த ஒரு ஆயுதப்போராளி. பறையர் சமூகத்து மக்களை களுதாவளை பிள்ளையார் கோவிலுக்குள் ஆயுத காவலுடன் உட்புக வைத்தார். இந்த நிகழ்வு புலிகளை கோபமடையச் செய்து விட்டது. வன்னியனை கைது செய்த புலிகள் அவரை ட்ரைக்டரில் தலை கீழாக கட்டி ஊரெங்கும் தெருத் தெருவாக உயிருடன் இழுத்து திரிந்தார்கள். பிறகு வன்னியனின் தலையை வெட்டி பிள்ளையார் கோயில் துறையில் கம்பொன்றில் குத்தி வைத்தார்கள். இந்த போராளி வன்னியனைப் பற்றி நாவல் எழுதுகின்ற எண்ணம் தான் இருந்தது. பிறகு அது விடுபட்டு போய்விட்டது. இனி எழுதுவேன் என்ற நம்பிக்கை இல்லை. ஆனால் சிறுகதை தொடர்ச்சியாக எழுதுவதற்கான வாய்ப்புகள் இருக்கின்றன. எழுதுவேன். எழுதலாம் என்று நம்பிக்கொண்டிருக்கின்றேன். இனி அடுத்தடுத்த வருடங்களில் நிறைய ஓய்வு கிடைக்கும். இன்னும் பதுக்கி வைத்த கொஞ்சம் கொஞ்ச நினைவுகள் இருக்கின்றன. அந்த நினைவுகளை ஒருங்கிணைத்து சிறுகதை எழுதலாம் என்று ஒரு நம்பிக்கை இருக்கின்றது. அதற்கு அப்பால் எனக்கு online இல் வீடியோ கதைகள் சொல்ல விருப்பமாக இருக்கின்றது. ஏனெனில் இப்போது வாசிக்கின்ற மக்களின் எண்ணிக்கை மிகவும் குறைவு. இனி காட்சி ஊடகம் தான் சரி என்ற நம்பிக்கையும் இருக்கின்றது.

சினிமா கனவும் இருந்தது. அதுவும் மெல்ல மெல்ல விடுபட்டு போய்விட்டது. நான் நாடகங்களில் ஒளியை அதிகம் பயன்படுத்தி வந்தேன். அப்போது சினிமா கனவுகளின் எச்சம் தான் அந்த நாடகங்கள் மூலம் வெளிப்படுகின்றது என்ற விமர்சனமும் வந்தது. சிறுகதை எழுதுவது தான் எனக்கு சாத்தியமான விடயம். இப்போது இல்லாவிட்டாலும் வரும் காலத்தில் சிறுகதை மட்டுமே எழுத முடியும் என்ற நம்பிக்கை இருக்கின்றது.

**கடைசிக் கேள்வியை உங்களுடைய கவிதை ஒன்றோடு முடித்து வைப்போம். ‘என்னுடைய இதயம் யாருக்காக வெடித்துக் கண்ணீர் சிந்துகிறதோ அவர்கள் உங்களுக்காகவும் வெடித்துக் கொள்கிறார்கள்’ என்று ஒரு கவிதையில் எழுதினீர்கள்.. அந்தக் கவிதையில் தெறிக்கின்ற அத்தனை கோபமும் யார் மீது..?**

“பின்னென்ன உயர்குல வேளாளன்” என தலைப்பிட்ட அந்த கவிதை எழுதப்பட்ட சூழல் ஒரு சாதிய பிரச்சினையை சார்ந்தது. எமது நாட்டில் நடைபெறுவதைப்போன்ற பெரிய சாதியப் பிரச்சினைகள் தமிழர்களிடையே கனடாவிலும் ஏற்பட்டது. அந்தக் கவிதை தொடர்பாக ரொரண்டோ தமிழ் சூழலில் பெரிய சர்ச்சை ஏற்பட்டது. ஆதிகணபதி என்கின்ற ஒரு பல் மருத்துவர் என் மீது சட்ட நடவடிக்கை எடுப்பதற்கெல்லாம் இறங்கினார்.

இங்கே பாடசாலைகளில் கூட சாதிப்பிரச்சினை நடந்தது. நான் என்னுடைய பிள்ளைகளை தமிழ்ப் பாடசாலைக்கு அனுப்பாமல் மறித்தேன். அவர்களுடைய தமிழ்ப்

புத்தகத்தில் உயர்குலம், வெள்ளாளர் என்றெல்லாம் இருந்தது. கனடாவில் எனக்குத் தெரிந்த சிலரை கோயிலுக்குள் வரக்கூடாது என்ற மறித்து இருந்தார்கள். இங்கே உள்ள ஒரு தமிழ் பிள்ளைக்கு அந்தப்பிள்ளை சாதி மாறி காதலிக்கின்றது என்று அவருடைய மாமா Iron box ஆல் சித்திரவதை செய்திருக்கின்றார்.

இங்கு 'கரீனா மகேந்திரன்' என்று தமிழ் மக்களை பிரதிநிதித்துவப்படுத்தும் ஒரு பெண்ணிடம் பெரும்பான்மை ஊடகம் ஒன்று ஏன் தமிழ் மக்களிடம் இப்படியான பிரச்சினை நடக்கின்றது என்று கேள்வி கேட்டது. அதற்கு அவர் சொன்ன பதில் "ஒட்டுமொத்த தமிழர்களிடம் இப்படி ஒரு பிரச்சினை இருக்கின்றது என்று சொல்லக்கூடாது. இங்குள்ள சாதி குறைந்தவர்களிடம் தான் இப்படி ஒரு பிரச்சினை இருக்கின்றது" என்று பதிலளித்தார். 2000, 2001 ஆம் ஆண்டுகளில் இங்கே கனடாவில் சாதிப் பிரச்சினை அதிகமாக தலை தூக்கியது. அதனால் தான் அந்த கவிதை எழுதவேண்டி வந்தது. போயும் போயும் உங்களுக்காக அவர்கள் அங்கே இறக்கின்றார்களே என்றுதான் அதை எழுதினேன். அது சமூகத்தின் மீதான கோபம்.

**அந்த வரிகள்.. போராளிகளைக் குறித்த நெகிழ்ச்சியான உணர்வினைக் கொண்டிருக்கின்றன..**

போராளிகள் மீது எனக்கு என்ன கோபம்? ஒவ்வொரு போராளியிலும் நான் என்னைத்தானே பார்த்தேன்.. ஒரு பதினைந்து வயது பெடியனுக்கு என்னென்ன உணர்வுகள் இருக்கும். நான்தான் ஒவ்வொரு போராளியும். இரண்டு தன் முனைப்பு கொண்ட தலைமைகளுக்காக ஏன் சிறார்கள் சாக வேண்டும்.

அதனால் போரை நடாத்துபவர்கள் மேல் தான் எனக்கு கோபமே தவிர போராளிகள் மீது எனக்கு கோபம் எல்லாம் இருந்ததில்லை.

# 7. குமிழி நாவல் மீதான உள்ளடக்க உரையாடல்: அசுரா நாதன்

ஒக்டோபர் 2020/விமர்சனம்

BY அசுரா நாதன்

ஆயுதப் போராட்ட அனுபவங்களை சுமந்து வரும் இலக்கியப் பிரதிகளின் தொடர்ச்சியாக 'குமிழி' எனும் நாவல் வெளிவந்திருக்கிறது. 1985ம் ஆண்டில் வெளிவந்த கோவிந்தனின் 'புதியதோர் உலகம்' எனும் நாவலின் உரையாடல் பகுதியாகவும், தனித்துவமாகவும் ரவியின் 'குமிழி' நாவலின் சித்தரிப்பு அமைந்திருக்கிறது.

**கோவிந்தனும், ரவியும்**

இருப்பினும் 'புளட்' இயக்க தோழர்களான இரண்டு படைப்பாளிகளின் காலமும், தேர்வும் வெவ்வேறானவை. கோவிந்தன் இலட்சிய வேட்கையுடன் புரட்சிகரமான ஒரு 'மாளிகையை' கட்டியெழுப்பியவர். தாம் மேற்கொள்ளும் விடுதலைப் போராட்டமே சர்வதேசப் புரட்சிக்கும் சாதகமாக அமையப்போகிறது, அதற்காகக் கட்டப்பட்ட 'மாளிகையே' புளட் எனும் அமைப்பாக நினைத்திருந்தார். நம்பியிருந்தார். அந்த மாளிகையின் சுவர்களும், தூண்களும் இடிந்து நொருங்கிப்போன பின்பும் புதிதான ஒரு மாளிகையை அதே இலட்சிய நோக்குடன் மீளவும் புதுப்பிக்கும் நம்பிக்கையும் அவருக்கு இருந்தது. எனவேதான் 'புதியதோர் உலகம்' நாவல் எதிர்கால நம்பிக்கையுடன் இவ்வாறு நிறைவடைந்தது:

"அடக்கு முறைக்கும் ஒடுக்கு முறைக்கும் அப்பாற்பட்ட புதியதோர் உலகம் படைக்கும் வரை எமது போராட்டம் ஓயாது!

அவர்கள் தீர்க்கமான முடிவுடன் படகில் ஏறி அமர்ந்தார்கள். அந்தப் பயணம் ஒரு கடலைத் தாண்டுவதாக மட்டும் அவர்கள் கருதவில்லை. ஒரு யுகத்தைத் தாண்டுவதான பிரமிப்பில் பூரித்து மகிழ்ந்தார்கள்" என நம்பியதே 'புதியதோர் உலகம்'.

'குமிழி' நாவலின் படைப்பூக்கச் சூழல் அதிலிருந்து மாறுபட்டது. 1985ல் புளட் இயக்கத்திலிருந்து தப்பித்து நாட்டை விட்டு வெளியேறி, புகலிடம் வழங்கிய கால இடைவெளிகளின் அனுபவங்களோடு, கடந்த காலத்தின் மீள் உருவாக்கத்திற்கான நெருக்கடிகளும், அதன் படைப்பிற்குள் நிகழ்ந்திருக்கிறது.

பல 'வர்ணங்களுடன்-மினுமினுப்பாக' திகழ்ந்த 'குமிழி' (புளட்) உடைந்து போனதன் நிமித்தமாகவே அதன் படைப்புலகம் இவ்வாறு நிறைவடைகிறது:

"மனிதர்கள் எறும்புகள் போலாகி பின் மறைந்து போயினர். ஊர்கள் மறைந்து போயின. நாடுகளின் எல்லைகள் அழிந்து போயின. காடுகளின் பசுமையிலும், கடலின்

நீலமையிலும் பூமி அழகாகத் தெரிந்தது. அண்ணார்ந்து பார்த்த நிலைபோய், கவிஞர்கள் கற்பனையில் கவியெறியும் முகில்திரள்களுக்கு மேலாக பறந்து கொண்டிருந்தோம். புகைப்பாலைவனத்தில் குன்றுகளாய் திரட்சியுற்றிருந்தன, இளஞ் சாம்பல்நிற முகில் கூட்டங்கள்! அவைகளின் பின்னாலும் தேடிப் பார்க்கிறேன். ஏந்திய கனவுகளைக் காணவில்லை. மாலியையும் காணவில்லை. காற்றின் இரகசிய மூச்சொலியில் கலைந்துவிடக்கூடிய மென்மைகொள் முகில்திரள்மேல் ஓர் இறகாய்க் கிடக்க ஏங்கினேன்" என 'குமிழி'யை பார்த்துத் தொலைத்த கனவுகளின் ஏக்கமாக நாவலின் முடிவு அமைந்திருக்கிறது. கோவிந்தனைப்போன்று மீளவும் 'மாளிகை' கட்டுவதற்கான நம்பிக்கையும் இப்படைப்பாளிக்கு இருந்ததில்லை.

கதைசொல்லியின் இறுதியான விபரிப்புக் காலமானது 1985ன் பிற்பகுதியாக புரிந்துகொள்ள முடியும். அக்காலகட்டத்தில் புகலிடத்தில் இருந்தவர்கள் தளத்திலுள்ள இயக்கங்களின் அங்கத்தவர்களாகவும், ஆதரவாளர்களாகவும், ஆயுதப்போராட்டத்தில் தொடர்ந்தும் கோவிந்தனைப் போன்று நம்பிக்கையுடையவர்களாகவே இருந்தவர்கள். புகலிடத்தில் விடுதலைப் புலிகள் தவிர்ந்த பிற இயக்கத்தவர்களின் ஆயுதப்போராட்டத்திற்கான ஆதரவு நிலை என்பது பெரும்பாலும் 1990ம் ஆண்டுவரை செல்வாக்குப் பெற்றிருந்தது. கால இடைவெளியின் மீள் உருவாக்கமே 'குமிழி' நாவலின் முடிவுச் சித்தரிப்பாக அமைந்திருக்கிறது. 'குமிழி' நாவலின் இறுதிப்பகுதியானது 1985 இன் பிற்பகுதியாக நாம் புரிந்துகொண்டாலும், நாவலில் காணும் அனுபவப் பகிர்வுகள் என்பது ஆயுதப்போராட்டம் மீதான படைப்பாளியின் 2020 ம் ஆண்டு வரையிலான அனுபவங்களோடு, 1984-1985 ம் ஆண்டுகளின் கால நினைவுகளை மீட்கிறது. 1985ம் ஆண்டிற்கு பின்பாக நடந்த பல சம்பவங்கள் ஆயுதப்போராட்டத்தின் மீதான விமர்சனங்களாக, பாத்திரங்களுக்கிடையிலான உரையாடலாக முன்வைக்கப்படுகிறது.

எனவே புதியதோர் உலகம் நாவலின் உள்ளடக்க ஒற்றுமைகள், பாத்திர ஒற்றுமைகள் (புதியதோர் உலகம்-சங்கர், குமிழி-பாலன்) என பல இருப்பினும், அதன் முடிவில் காணும் கருத்தியல் சித்தரிப்பை வாசகர்கள் அவதானிக்கும் தருணத்தில், 'புதியதோர் உலகம்' முன்வைப்பது போன்ற ஒரு ஆவணச் சான்றாக 'குமிழி' நாவலை கருதிவிட முடியாது.

2020ல் எழுதப்பட்ட 'குமிழி' நாவலில் துலங்கும் 'இளவயது வாழ்க்கையின் அலைக்கழிவென்பதும்' அதன் உள்ளடக்க உரையாடலின் கருத்துக்களமும் இலக்கியப் புனைவுச் சித்திரமாக வரையப்பட்டிருக்கிறது.

இலக்கியம் சமூகத்தை மாற்றும் கருத்தைக் கொண்டிருக்கவேண்டும் என்பதாக இலக்கியப்படைப்பில் பிரதிபலிக்கும் கருத்தியலை ஊன்றி அவதானிக்கும் வாசக மனநிலையும் இருக்கவே செய்கின்றது. அம் மன நிலையானது 'புதியதோர் உலகம்' நாவலோடு 'குமிழி' நாவலை ஒப்பிடுமாயின் 'குமிழி' நாவலில் துலங்கும் படைப்பாற்றல் கொண்ட உணர்வெளிச்சியின் வெளிப்பாட்டு அம்சங்கள் முக்கியத்தும் அற்றுப் போகலாம்.

கோவிந்தனின் 'புதியதோர் உலகம்' நாவல் வெளிவந்த போராட்டக் கால அனுபங்களோடு

நெருக்கமான வாசகர்களுக்கும், வெவ்வேறு இயக்கங்களின் ஆயுதப்போராட்ட அனுபவங்களை விமர்சனங்களோடு எதிர்கொள்ளும் வாசகர்களுக்கும், 'புதியதோர் உலகம்' எனும் நாவல் ஒரு ஆவணமாகவே உள்வாங்கும் தன்மையைக் கொண்டிருந்தது.

'புதியதோர் உலகம்' நாவலை புளட் அமைப்பின் உட்படுகொலைகளுக்கும் அதன் ஜனநாயக விரோத செயலுக்குமான ஒரு வரலாற்று ஆதாரமாகவே அக்காலத்தில் பலராலும் கையாளப்பட்டு வந்தது. அதை ஒரு இலக்கியப் பிரதியெனும் தன்மையில் பேசப்பட்டு, விமர்சிக்கப்பட்டதாக நான் அறியவில்லை.

எனவே இலக்கியத்தின் ஊடாக உண்மையைத் தேடுவதையும், உகந்த கருத்துநிலைத் தேடலையும் வாசிப்பின் நேசிப்பாக கருதும் வாசக மனநிலைக்கு 'புதியதோர் உலகம்' நாவலில் இருந்து புதிதாக எதையும், 'குமிழி' நாவலில் கண்டுகொள்ள முடியாது போகலாம்.

படைப்பாளியின் உணர்வெழுச்சியின் ஊடகமாகத் திகழ்வதே இலக்கியம். இதில் படைப்பாளியின் பரிபூரணத்தை தேடுவதாக வாசிப்பின் இலக்கு அமைந்து விடக்கூடாது. மன விரிவாக்கத்தில் ஆற்றும் செல்வாக்கை படைப்பின் அழகியல் சித்தரிப்பின் ஊடாக புரிந்துகொள்ளும்போதே ஒரு இலக்கிய பிரதி எவ்வகையில் வாசகனின் சுய-உணர்வெழுச்சியை தூண்டுகிறதென்பதை அவதானிக்க முடியும். இலக்கியப் படைப்புலகில் நிகழ்ந்து வரும் மாற்றங்களின் கூறுகளை தேடி அவதானித்து வரும் வாசகர்களுக்கு இந்த இரு நாவல்களுக்கும் இடையிலான 'வடிவ-உள்ளடக்க-கருத்தியல்' வேறுபாடுகளை புரிந்துகொள்ள முடியும்.

புதியதோர் உலகம் வெளிவந்து முப்பத்தைந்து வருடங்களுக்கு பின்பாக அதன் உரையாடல் பகுதியாக வெளிவந்திருப்பினும், 'குமிழி' நாவலின் படைப்பாளிக்கு புனைவுச் சாத்தியங்களே அதிகம் வாய்த்திருக்கிறது.

**'அறிமுகமும், அறியும் ஆவலோடும்'**

கனவில் அதிர்ந்தெழுந்து, சுவிஸ் நாட்டில் வாழ்ந்து கழிந்த காலங்களை மீட்டெடுத்து, 83 யூலை கலவரத்தின் பாதிப்பை நேரில் அனுபவித்த ஒரு பல்கலைக்கழக மாணவன் தன் கதையை சொல்ல ஆரம்பித்தான். இடையில் அவனது கதையை வளர்த்தது 'வேம்பு'. அவனது பால்ய வாழ்வையும் அவனது குடும்ப உறவுகளையும் எமக்கு சொல்லிக் கொண்டிருந்தது அந்த வேப்ப மரம். இயக்கத்தில் இணைய இருக்கும் செய்தி அறிந்து தகித்து நோக்கிய தாயின் நூலிழைப் பார்வையை அறுத்தெறிந்த வன்மன் அவன் என்பதை அந்த வேப்ப மரமே அறிந்திருந்தது. அவன் குடும்பத்தின் அங்கமான அந்த வேப்ப மரம் தான் மட்டுமே அறிந்த அச்சோகத்தை அவனைச் சார்ந்த உறவுகளுடன் பகிர்ந்து கொள்ளாது, அந்த இரகசியத்தை தனது வேருடன் இறுக அணைத்து வைத்திருந்தது.

மினு மினுக்கும் 'குமிழி'யை நோக்கி கடல் கடந்து கால் பதித்த அவனது கனவுப்-'பின்தளம்'

வந்தடைந்த செய்தியை அந்த வேப்ப மரத்திடமே தெரிவிக்கவும் விரும்புகிறான்.

தொடரும் அவனது கதையை வேப்ப மரம் ஒரு கதைசொல்லியிடம் ஒப்படைப்பதாக எமது ஊகத்தையும் அதனோடு இணைக்கலாம். அந்த கதைசொல்லி அவனை ரகுவாகவும், ஜோனாகவும் பெயர் மாற்றி கதையைத் தொடர்கிறது. தமது-சமூகத்தின் விடுதலைக்காக போராட்டப் பயிற்சிபெறும் கனவுகளோடு 'பின்தளம்' சென்றவர்களுக்கிடையில் அரசியல் பிரிவுகளாகவும், இராணுவப் பிரிவுகளாகவும் கருத்து மோதல்கள்-படுகொலைகள் தொடர்கிறது. போராட்டக் கனவோடு இணைந்தவர்களுக்கிடையில் சாதியப் பாகுபாடுகளும், கொலைகளும், நட்புகளும், துரோகங்களும், விரோதங்களும், காதலுமாக கலந்திருந்த கதைகள் சொல்லப்படுகிறது. அந்த பல்கலைக்கழக மாணவன் மீண்டும் தன் கதையை தானே தொடருகின்றான். தளம் திரும்பி தனது இரகசியத்தை புதைத்துப் பாதுகாத்து வைத்திருந்த வேப்ப மரத்தை தேடுகிறான். இரகசியத்தை காத்துவந்த வேப்ப மரம் தன்னை அழித்து அவனது குடும்பத்தின் பசியையும் தணித்திருந்த செய்தி அறிந்து நிலைகுலைந்து போகிறான். தோழர்களே எதிரிகளாகி கொலையாளிகளானபோது தனது உயிர்காக்க புகலிடம் நாடுகிறான்.

இவ்வாறு நாவலின் பாத்திரங்களை, இயற்கையை அழகியல் சித்தரிப்புகளுடன் பிணைத்துச் செல்லும் மொழி ஆளுமையில், 'குமிழி' நாவலின் படைப்பாளியான ரவி அதிக கவனம் செலுத்தியுள்ளதையும் அவதானிக்கக்கூடியதாக உள்ளது.

'குமிழி' நாவலில் பேசப்படும் பிரதான அம்சமான புளட் இயக்கத்தின் உட்படுகொலைகள் சித்திரவதைகள் என்பன புதியதோர் உலகம் நாவலூடாக நாம் ஏற்கனவே அறிந்தவைதான். தொலைத் தொடர்பு பிரிவினர் குறித்த சம்பவமே அதிலிருந்து புதிதாக அறிந்து கொள்ளும் தகவலாக இருக்கலாம்.

2020ல் எழுதப்பட்ட இந்த நாவலின் ஊடாக புளட் எனும் இயக்கத்தின் உட்படுகொலைகள் அதன் இராணுவ அராஜகப் போக்குகள் பற்றிய தகவல்கள், அக்காலகட்டத்தவர்களுக்கும் 'புதியதோர் உலகம்' நாவலை வாசித்தவர்களுக்கும் புதிதாக தோன்றாது போகலாம். ஆயினும் 'குமிழி' நாவலின் ஆளுமை என்பது எமக்கு தெரிந்த அக்கதையை இலக்கிய புனைவுச் செறிவுடன் சொல்ல முனைகிறது.

ஒரு படைப்பாளி சொல்லும் கதையினூடாக தேர்ந்த இலக்கிய வாசகனால் அக்கதையை பிறிதொரு எல்லைக்குள் கொண்டு செல்ல முடியும். இவ்வாறான முயற்சியும் புரிதலும் வாசகர்களுக்கிடையில் வேறுபட்டும் இயங்கக்கூடியது. 'குமிழி' நாவலும் அதற்குரிய 'பிரதித்' தன்மை கொண்டிருக்கிறது. ஆயினும் வாசக மனவிரிவாக்கத்திற்கு இடையூறாக நாவலின் வடிவச் சீரமைப்பு சிதைந்திருப்பதாகவே தோன்றுகிறது.

தாம் வாழும் காலத்திலிருந்து கடந்த நூற்றாண்டுகளையும், தாம் காணத உலகத்தையும் நுட்பமாக தம் இலக்;கிய படைப்பாற்றலூடாக சித்தரித்தவர்களின் நாவல்களை வாசித்த அனுபத்தில் இவ்வாறு கருதத்தோன்றுகிறது. ஒரு நாவலின் வடிவமைப்பே வாசகனின் அக உணர்வை தீண்டி அவனுக்குள்ளும் படைப்பாற்றலை தோற்றுவிக்கும். அது பாடைப்பாளியின் நோக்கத்திலிருந்து மாறுபட்டதாகவும், வாசகனின் சுய-கற்பனை

உருவாக்கமாகவும் அமையும். அதற்கு இலக்கிய படைப்பின் வடிவமைப்பே பிரதான காரணமாக இருக்கும்.

2020ல் வாழ்ந்துவரும் படைப்பாளி 1984-1985ம் ஆண்டு காலத்து கதையை சொல்வதாக ஆரம்பித்து இறுதியில் 1985ன் பிற்பகுதியிலேயே கதை முடிவடைகிறது. அக்கதைக்குள் 1985ம் ஆண்டிற்கு பிற்பட்ட காலத்து சம்பவங்கள் மீதான விமர்சனங்களும், 2009 ம் ஆண்டு 'தோற்கடிக்கப்பட்ட போராட்ட காலம்' வரையான உரையாடல்களும் நிகழ்வதை அவதானிக்க முடிகிறது. இதில்தான் இலக்கிய வடிவம் சிதைகிறதாக தோன்றுகிறது. வாசகனின் சுய-கற்பனை உலகையும் முடக்குகின்றது.

2009ம் ஆண்டு காலத்து சம்பங்களோடும் கதை நகர்ந்து வருவதால் ("… போராட்டம் இப்போ தோற்றாலும்கூட, கடந்த காலத்தில் இந்த போராட்டத்தினை ஆதரித்தபடியே அதன் பார்வையாளர்களாக இருந்தவர்களிலிருந்து தான் வேறுபட்டிருந்த புள்ளியை அவர்கள் இலகுவில் கடந்து சென்றுவிடுவார்கள் என எதிர்பார்க்கவும் முடியாது" -பக்கம் 178) அக்காலத்தோடு அல்லது தாம் வாழும் சம காலத்து இணைப்போடு நாவலின் முடிவு அமைந்திருக்க வேண்டும். அல்லது 1984ல் இருந்து 1985 காலம் வரையான சம்பவங்களை உள்ளடக்கியதாக இருந்தால் 'குமிழி' நாவலின் முடிவும் அதற்கு பொருத்தமாக இருந்திருக்கும்.




படைப்பாளியான ரவியின் மொழி ஆளுமையும் கதையின் சித்தரிப்பு முறையும் வாசகனின் உணர்வெளிச்சியை தூண்டும் வகையில் அமைந்திருக்கிறது. ஆயுதப்போராட்டத்தை மேற்கொண்ட அனைத்து இயக்கங்களிலும் இணைந்து தமது வாழ்வை, நம்பிக்கையை தொலைத்த பல்கலைக்கழக மாணவர்களின்

அவல நிலையையும், போராட்டத்தின் விளைவாக நிகழ்ந்த அனைத்துப் பேரழிவுகளையும் நினைவில் பதியும் வகையில் வடிவத்தை அமைத்திருக்கலாம். தொடங்கிய எமது ஆயுதப்போராட்டத்தின் ஆரம்பத்தில் பிரதானமான பங்கு வகித்தவர்கள் பல்கலைக்கழக மாணவர்கள். 'குமிழி' நாவலின் படைப்பாளியும் பல்கலைக்கழக மாணவராக இருந்ததையும் அறியமுடிகிறது. இந்த நாவலின் சித்தரிப்பின் பலமானது ஆயுதப்போராட்டத்தை நம்பி தமது இளமையை, வாழ்வை, உயிரை, உறவுகளை இழந்த பல்கலைக்கழ மாணவர்களின் தொலைந்துபோன நம்பிக்கைகளையும் சிந்திக்க தூண்டும் வகையில் அமையக்கூடியது. கச்சிதமாக அமைந்திருக்கும் முடிவிலிருந்தே நாவலின் கருத்தியல் உள்ளடக்கத்தை வாசகனால் வளர்த்துச் செல்லமுடியும். ஆனால் இந்நாவலின் முடிவானது உள்ளடக்க விமர்சன உரையாடல்களை பலவீனமாக்கி கதையின் பிரதான பத்திரத்தின் மீதே முடிவு.. 'மையம்' கொள்கிறது.

தாம் அறிந்த உலகத்தையும், தாம் அறியாத உலகத்தையும் நாவலாக தமது புனைவுச் சித்தரிப்பில் பலர் சாதித்திருக்கிறார்கள். அவ்வாறான நாவல்களின் இலக்கிய வடிவத்தை புரிந்துகெண்டதன் அனுபவத்தில் சில நாவல்களை அறிமுகப்படுத்தலாம்;.

அழகிய பெரியவன் 2016ல் எழுதிய 'வல்லிசை' எனும் நாவலூடாக தான் அறிந்த காலத்தை மிக அழகாக சித்தரித்துள்ளாளார். எஸ்.ராமகிருஷ்ணன் 2017ல் எழுதிய 'இடக்கை' எனும் நாவலூடாக தான் காணாத உலகை காட்டியிருக்கிறார். ஜெயமோகன் 2013ல் எழுதிய 'வெள்ளையானை' 1870ல் பஞ்சத்தில் செத்து மடிந்த இலட்சக்கணக்கான தலித் மக்களின் வாழ்க்கையோடு இணைந்த ஒரு காலத்தைக் காட்டுகிறது. சோ. தர்மன் 2019ல் எழுதிய 'சூல்' நாவலூடாக தான் காணாத உலகை எம் முன்னால் காண்பிக்கின்றார். சோபாசக்தி 2004ல் எழுதிய 'ம்' நாவலூடாக தான் அறிந்ததை, வாழ்ந்ததாக நம்பவைக்கின்றார். ஒன்றில் தமது கற்பனையின் காலத்தை பிரதிபலித்து அக்காலத்துடனேயே நாவல் நிறைவுபெறுவதாக அமைந்திருக்கும். அல்லது தாம் காணாத உலகத்தை சித்தரித்து தாம் வாழும் காலத்தோடு நிறைவு பெறுவதாக நாவல்கள் அமைந்திருக்கும். இவ்வாறான இலக்கியப் படைப்பின் வடிவமே வாசகனின் அகவயத் தூண்டலை உருவாக்கும். அவை கண்ணுக்கு புலப்படாதது. வாசகனால் உருவாக்கப்பட்டு வளர்வது. தொடர்ச்சியானது. வாசகர்களுக்கிடையில் மாறுபட்டது. உதாரணத்துக்கு 'சூல்' நாவலின் இலக்கிய சித்தரிப்பு வடிவம் அவ்வாறே எனக்குள் 'நிகழ்ந்தது'.

அந்நாவலானது தமிழகத்தில் 19ம் நூற்றாண்டு காலத்து மக்களையும் அதன் மீது செல்வாக்கு செலுத்தும் அரசியலையும் பேசுகிறது. அக்கால கட்டத்தில் வாழ்ந்த சமூகத்தின் கடவுள் உருவாக்கங்களும், அச்சமூகம் பேணிவரும் பண்பாட்டு மரபுகளும் தெரியவருகிறது. வாசிப்பின் ஊடாக இயற்கை மீதும் உயிரினங்கள் மீதும் அவர்கள் கொண்டுள்ள உறவுகள் எமக்குள் விரிகிறது. இவ்வாறு மரபுவழி பேணப்பட்டு வரும் விவசாய-நீர்ப்பாசன முறைகளின் காலத்தையும் உரையடல்களாக்கொண்டு, நவீன காலத்து இயந்திர வளர்ச்சிக்குள் எம்மை அழைத்து வந்து காட்டியதோடு ஓய்ந்து போகிறது நாவல்.

ஆனால் வாசகனால் ஓய்ந்து தணிந்துவிட முடியாது. இவ்வாறான நாவல்கள் வாசகனை ஓய்வாக இருக்க விடுவதில்லை. வாசகன் தான் படித்த நாவலை தனக்குள் புதிதாக உருவாக்கிக் கொள்வான். ‘சூல்’ நாவலானது நவீன காலத்து வளர்ச்சியினால் இயற்கை, உயிரினங்கள், விவசாயம், மனித பண்பாட்டு உறவுகள் என அனைத்தும் சீரழிந்து போவதை இன்றைய நவீன இயந்திர மயமாக்கலின் சமகாலத்தோடு பொருத்திவிடுகிறது. இந்த நவீன உருவாக்கத்தின் குறியீடாக சோ.தர்மன் பெரியார், அண்ணாத்துரை போன்றோரை குறியீட்டுப் பாத்திரங்களாக முன்வைப்பதையும் வாசகர்கள் இலகுவாக புரிந்து கொள்ளலாம். இலக்கியப் பிரதியில் ‘அரசியல் கருத்தியலையே’ முதன்மையாக எதிர்பார்க்கும் வாசகர்களுக்கு சோ.தர்மன் பெரியாரை, அண்ணாத்துரையை அவமதிக்கின்றார் என அவர் மீது சீற்றமும் கோபமும் வரலாம். ஆனால் ‘சூல்’ நாவலின் இலக்கிய வடிவச் சித்தரிப்புக்கான ஒரு கருவியாகவே பெரியாரும் அண்ணாத்துரையும் சோ.தர்மனால் பயன்படுத்தப் பட்டிருக்கிறது. (சோ.தர்மனின் நோக்கம் எதுவாக இருப்பினும்) தேர்ந்த வாசகர்களால் அதனைப் புரிந்துகொள்ள முடியும் என்றே நம்புகின்றேன்.

அவ்வாறான வாசக மனம் ‘சூல்’ நாவலை தனக்குள் வளர்த்துக்கொண்டே இருக்கும். வாசிப்பின் ஊடாக அதன் இலக்கிய வடிவத்தை அர்த்தப்படுத்துவது வாசகனின் தகைமையை பொறுத்தது. எனவேதான் இலக்கிய வடிவம் என்பது அகவயமானது. வாசிப்பில் சுயமாக உருவாகி வருவது. அதற்கு படைப்பின் வடிவமைப்பே துணைபுரிகிறது.

‘குமிழி’ நாவலின் படைப்பாற்றல் மீதான நம்பிக்கையே மேற்குறிப்பிட்ட நாவல்களை உதாரணமாக முன்வைக்கும் அவசியத்தை ஏற்படுத்தியிருக்கிறது.

இலக்கியம் என்பதாகவும், இலக்கியவாதிகளாகவும் கருதிக்கொண்டு தகவல்களாக எழுதிக் குவித்துகொண்டிருக்கும் எழுத்தாளர்களையும், பிரதிகளையும் நாம் வாசித்தும் சகித்தும் வருகின்றோம். அவர்களுக்கு மத்தியில் தனது முதலாவது நாவலை இலக்கியப் புனைவுச் சித்தரிப்புடன் மேற்கொண்ட ரவியின் முயற்சி பாராட்டக்கூடியதே.

# 8. திருமதி. பெரேரா: இஸுரு சாமர சோமவீர

ஒக்டோபர் 2020/சிறுகதைகள்

□□□□□□ □□□□□□□ | □□□□□ □□□□ □□□□□□ | தமிழில்: எம்.ரிஷான் ஷெரீப்

BY இஸுரு சாமர சோமவீர AND எம்.ரிஷான் ஷெரீப்

திருமதி. பெரேரா விழித்துக் கொண்ட போது விடிந்து விட்டிருந்தது. மின்விசிறியின் காற்றுக்கு நுளம்பு வலை இலேசாக அசைந்து கொண்டிருந்தது. முற்றத்தில் பறவைகள் கீச்சிடுவது கேட்டது. ஜன்னல் அருகேயிருக்கும் பிச்சிக் கொடியின் கிளைகள் தோற்றுவித்த நிழலானது அறையினுள்ளே ஒரு சுவரில் படிந்து ஆடிக் கொண்டிருந்தது. அலாரம் வைக்காவிட்டாலும் கூட ஏனைய நாட்களிலென்றால் இந் நேரத்தில் திருமதி. பெரேரா விழித்தெழுந்து வீட்டில் நிறைய வேலைகளை செய்து முடித்திருப்பார். இப்போது என்ன நேரமிருக்கும் என்பதை திருமதி. பெரேராவால் யோசித்துப் பார்க்க முடியவில்லை. ஜன்னலின் கண்ணாடி வழியே மிகக் கடுமையான வெயில் உள்ளே பாய்ந்து கொண்டிருந்தது.

திரு. பெரேரா உறங்கிக் கொண்டிருந்தார். அவரது முகத்தைத் தெரியவில்லை. எந்தவொரு சலனமும் இல்லாமல் உறங்கிக் கொண்டிருந்தார். திருமதி. பெரேரா, தான் படுத்திருந்த பக்கத்தின் நுளம்பு வலையைத் தூக்கிவிட்டு எழுந்து சமையலறைக்குப் போனார். காலையில் எழுந்ததுமே வரும் முதுகு வலியின் காரணத்தால் அவர் சற்று நேரம் கழியும் வரைக்கும் முதுகைக் கொஞ்சம் வளைத்து, குனிந்தவாறுதான் நடப்பார். கேத்தலுக்கு இரண்டு கோப்பைகள் தண்ணீரை அளந்து ஊற்றி அடுப்பில் வைத்துவிட்டு, இரண்டு கோப்பைகளுக்கும் பால்மாவையும், தேயிலையும் அளந்து இட்டார். இருவருமே சீனியைப் பயன்படுத்துவதில்லை. திருமதி. பெரேராவின் சமையலறை எப்போதும் மிகவும் நேர்த்தியாக இருக்கும். அங்கு அனைத்தும் இருக்கின்றன. சமையலறை பேன்ட்ரி அலமாரிகள், சிட்டைகள் ஒட்டப்பட்ட மசாலாப் பொருட்கள் அடங்கிய போத்தல்கள், ஒவன், ப்ளெண்டர், ஃபுட் ப்ரொஸெஸர், மைக்ரோவேவ் உள்ளிட்ட அனைத்துமே இருக்கின்றன. அவ்வாறே, திருமதி. பெரேராவும் மிக நேர்த்தியானவர். சமையலறையில் ஒரு துளி அழுக்கு கூட இல்லை.

பூனை வந்து காலை உரசியதுமே திருமதி. பெரேரா தகரப் பேணியிலிருந்த பிஸ்கட்டுகளை எடுத்து அதற்குக் கொடுத்தார். இவை தினந்தோறும் நடைபெறும் காரியங்கள்தாம். நேரம் சற்று முன்னே பின்னே இருக்கலாம் என்றாலும் கூட, பல வருடங்களாக இவ்வாறுதான் நடைபெற்று வருகின்றன. இது இந்த வீட்டின் எத்தனையாவது பூனை என திருமதி. பெரேரா யோசித்துப் பார்த்தார். கறுப்பு வெள்ளைப் பெண் பூனை, முழுதும் கறுப்பு நிறத்தில் ஒரு பெரிய பூனை, உடலில் மண் நிறத்தில் வரிகள் ஓடிய பூனை,

ஒரு கண் குருடான வெள்ளைப் பூனை.. அடடா, திருமதி. பெரேராவால் எண்ணிப் பார்க்கக் கூட முடியவில்லை. திருமதி. பெரேரா திருமணம் முடித்து இந்த வீட்டுக்கு வந்து இந்த வருடத்தோடு முப்பத்தொன்பது வருடங்களாகின்றன. ஒரு மாற்றமுமில்லாமல் ஒரே மாதிரியாகக் கழித்த நாட்கள்தான் எத்தனை? விறகடுப்பு, எரிவாயு அடுப்பாக மாறியது. பலகை அடுக்குகள், பேன்ட்ரி அலமாரிகள் ஆகின. சிவப்புச் சீமெந்திட்ட தரை, பளிங்கு மாபிள் தரை ஓடுகள் பொருத்தப்பட்டதாக மாறியது. இரண்டு வருடங்களுக்கு ஒரு தடவை சுவர்களிலிருந்த வர்ணங்கள் மாறின. எனினும், திருமதி. பெரேராவின் நாட்களில் பெரிதாக எவ்வித மாற்றங்களும் இல்லை. மகன் இலங்கையில் வசித்த காலத்தில் என்றால் சற்று வேலை அதிகமாக இருந்ததுதான். எனினும், அந் நாட்களில் ஏதோவொரு சந்தோஷமும் இருந்தது. இப்போதும்கூட தனக்கு கவலைப்பட எவ்விதக் காரணங்களும் இல்லையே என்று திருமதி. பெரேராவுக்கு எப்போதாவது தோன்றத்தான் செய்கிறது.

எல்லாவற்றுக்குமே ஒரு குறிப்பிட்ட நேரமும், செய்நேர்த்தியும் இருந்தன. அவை அனைத்துமே ஓர் ஒழுங்கில் நடந்தன. நேரத்துக்கு தேனீர், நேரத்துக்கு சாப்பாடு, கூட்டிப் பெருக்குதல், தூசி தட்டுதல், துணிகளைக் கழுவி, காய்த்து, மடித்து நேர்த்தியாக அலமாரியில் வைத்தல், சாரங்கள் தனியாக, சட்டைகள் தனியாக, களிசான்கள் தனியாக, உள்ளாடைகள் தனியாக.. இப்படி. திருமதி. பெரேரா சில சிறிய சிறிய விடயங்களில் மாற்றங்களைச் செய்த போதும், தவிடு நீக்காத சிவப்புச் சோறு, சீனி போடாத தேனீர் போன்ற பெரிய பெரிய தீர்மானங்களை எப்போதும் எடுப்பது திரு. பெரேராதான். இவை அனைத்துக்கும் மத்தியில், திரு. பெரேரா மாலை வேளையில் கொஞ்சம் மதுபானம் அருந்துவார். திருமதி. பெரேராவுக்கு அதுவும் இல்லை. பெண்கள் குடிக்க மாட்டார்கள், இல்லையா?. திருமதி. பெரேரா அந் நேரத்தில் தொடர் நாடகங்கள் பார்ப்பார். தொலைக்காட்சியில் கிரிக்கெட் போட்டிகளைக் காண்பிக்கும் நாட்களில் அதுவும் கிடையாது.

தேனீரை எடுத்துச் செல்லும்போதும், திரு. பெரேரா முன்பு போலவே ஆழ்ந்த உறக்கத்தில் இருந்தார். எவ்வித அசைவும் இல்லை. எட்டு மணியாக இன்னும் பதினைந்து நிமிடங்கள் இருந்தன. திருமதி. பெரேராவுக்கு பயமாகவும் இருந்தது. ஏனைய நாட்களில் இந் நேரத்திற்கு திரு. பெரேரா பத்திரிகையை வாங்கிக் கொண்டு வந்து வாசிக்கத் தொடங்கி விடுவார். திருமதி. பெரேராவைப் போல விடியற்காலையிலேயே எழுந்து கொள்ளாவிட்டாலும், திரு. பெரேரா ஆறரை, ஏழு மணியாகும்போது எழுந்து பத்திரிகை வாங்கி வரவென கடைக்குப் போவார். திருமதி. பெரேரா தேனீரை ஒரு தட்டால் மூடி கண்ணாடி மேசை மீது வைத்துவிட்டு, நுளம்பு வலையைச் சுருட்டி முடிச்சிட்டார். திரு. பெரேராவிடம் எவ்வித அசைவுகளும் இல்லை. திருமதி. பெரேராவுக்கு உடலில் கையை வைத்து அசைத்து எழுப்பிப் பார்க்கத் தோன்றிய போதும், திரும்பவும் தனது கையை இழுத்துக் கொண்டார். திருமதி. பெரேரா, கண்ணாடி மேசை மீது வைக்கப்பட்டிருந்த கோயா முகப் பவுடர் பேணியை ஒரு கையால் தட்டி தரையில் விழச் செய்தார். ம்ஹூம்... இல்லை, திரு. பெரேராவிடம் எவ்வித அசைவுகளும் இல்லை.

பல்லியொன்று அதனை விடப் பெரிய வண்ணத்துப் பூச்சியொன்றைப் பிடித்து விழுங்க முயற்சித்துக் கொண்டிருந்தது. அது இடைக்கிடையே வண்ணத்துப் பூச்சியை சுவரில் அடித்தது. தனது கீழுதடுகள் துடிப்பதை திருமதி. பெரேரா உணர்ந்தார். முந்தைய தினம் இரவில் சமையல் பாத்திரங்களையும், தட்டுகளையும் கழுவி வைத்து விட்டு, நாய்க்கும் சோறிட்டுவிட்டு படுக்கைக்கு வந்தபோது மணி இரவு ஒன்பதரை போல ஆகிவிட்டிருந்தது. அப்போதும் கூட திரு. பெரேரா இவ்வாறேதான் உறங்கிக் கொண்டிருந்தார். நுளம்பு வலையையும் திருமதி. பெரேராதான் விரித்தார். ஒவ்வொரு நாளும் அவ்வாறுதானே நிகழ்ந்து கொண்டிருந்தது. ஆனால் வழமைக்கு மாறாக இந்த ஆள் இன்று எழுந்து கொள்ளவில்லையே. திருமதி. பெரேரா ஒரு சுற்று சுற்றிச் சென்று திரு. பெரேராவின் முகத்தைப் பார்க்க முயற்சித்தும் கூட, பார்க்க முடியவில்லை. முகம் கீழ் நோக்கியிருந்தது. முதுகு உயர்ந்து தாழ்கின்ற அசைவும் இல்லை.

திருமதி. பெரேரா கண்ணாடி மேசையிலிருந்து சீப்பை எடுத்து வேகமாக தலைமயிரை வாரிக் கொண்டார். முன்பு இடுப்புக்குக் கீழே வரையும் அடர்த்தியாக இருந்த கூந்தல் இப்போது குரங்கு வால் போல ஆகி விட்டிருந்தது. அடுத்து என்ன செய்வது என்று திருமதி. பெரேராவுக்குத் தோன்றவில்லை. நேற்றிரவு நாயும் ஊளையிட்டுக் குரைத்ததுதானே என்ற நினைவு அவருக்குத் திடீரெனத் தோன்றியது. கண்ணாடியில் தென்பட்ட தனது முகத்தைக் கண்டதும் திடுக்கிட்டார். என்ன நடந்தாலும், நடப்பது ஒழுங்காக நடக்கும்வரை அமைதியாக இருக்க தீர்மானித்துக் கொண்டார். கடவுளே... பல வருடங்களாக தான் காத்திருந்த, எதிர்கொள்ளத் தயாராக இருந்த ஒன்றுதானே நடந்து கொண்டிருக்கிறது எனத் தோன்றிய போது, தனது முகத்தில் எழுந்த சிரிப்பைக் கண்ணாடியில் கண்டதும் திருமதி. பெரேராவுக்கு அச்சம் பீடித்துக் கொண்டது. அவர் அழுமூஞ்சியொன்றைத் தோற்றுவித்துக் கொண்டார்.

பல வருடங்களாக ஒழுங்காக அழுதோ, சிரித்தோ இருக்காத திருமதி. பெரேரா கண்ணாடிக்குப் பழித்துக் காட்டியவாறு பலவிதமான முகத் தோற்றங்களைச் செய்து பார்த்தார். விழிகளை விரித்துப் பார்த்தார். பல தடவைகள் திரும்பத் திரும்ப திரு. பெரேரா அருகில் போய்ப் பார்த்தார். மகனைத் தொலைபேசியில் அழைத்து விவரம் சொல்ல நினைத்தும், இன்னும் அதற்கு நேரமிருக்கிறது என்று அவருக்குத் தோன்றிற்று. இந்தத் தகவலை யாரிடம் முதலில் சொல்வது என யோசித்துக் கொண்டே சமையலறைக்குப் போன திருமதி. பெரேரா மதியத்துக்கும் சேர்த்து இருவருக்குத் தேவையான அளவு சிவப்பரிசியை அளந்து, கழுவி ரைஸ் குக்கரில் இட்டார். இரவு மீதமான பலாப்பிஞ்சுக் கறியை சூடு பண்ணவென அடுப்பில் வைத்து விட்டு, குளிர்சாதனப் பெட்டியிலிருந்த பாதித் தேங்காயை வெளியே எடுத்துக் கொண்டு வந்து, பருப்புக் குழம்பு வைப்பதற்காக துருவத் தொடங்கினார். பக்கத்து வீட்டில் வசித்து வரும் திரு. சில்வா இரண்டு தடவைகள் நெஞ்சு வலி வந்து மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டு உடல் நலம் பெற்று வீடு திரும்பியிருக்கிறார். அதனால், திருமதி. பெரேரா எவ்விதத்திலும் பதற்றப்படாமல் தேங்காயைத் துருவினார். என்றாலும் இடையிடையே கீழுதடுகள் துடிப்பதை அவரால் நிறுத்த முடியாதிருந்தது. கிட்டத்தட்ட நாற்பது வருடங்களாக திருமதி. பெரேரா இந்த வீட்டில் சமையல் செய்து

வருகிறார். வீடு வாசலைப் பெருக்கித் துடைக்கிறார். துணி கழுவுகிறார். நாயைக் குளிப்பாட்டுகிறார். தூசி தட்டுகிறார். இப்போது முன்பு போல இல்லை என்றாலும் கட்டிலில் வைத்து நெருங்கி வா, அந்தப் பக்கமாகத் திரும்பு, இப்படிக் குனி, காலை விலக்கு போன்ற கட்டளைகள் பிறப்பிக்கப்படும் போது அவற்றையும் செய்கிறார்.

பலாப்பிஞ்சுக் கறி அடிப் பிடிக்கும் வாசனைக்கு திடுக்கிட்டுப் போன திருமதி. பெரேரா உடனடியாக அடுப்பை அணைத்தார். தலைவிரி கோலமாக, ஒப்பாரி வைத்து அலறிக்கொண்டு தான் முதலில் போக வேண்டியது, வேலியோடு ஒட்டியிருந்த திரு. சில்வாவின் வீட்டுக்குத்தான். அதற்குப் பிறகு இது பலரும் நடிக்கக் கூடிய நாடகம் ஆகி விடும். திரு. பெரேராவின் இரண்டு தங்கைகளைக் குறித்துத்தான் திருமதி. பெரேராவின் மனதில் பெரும் அச்சம் தோன்றியது. மகனும் கூட வெளிநாட்டிலிருந்து வந்து ஏழு நாட்களில் திரும்பிச் சென்று விடுவான். எப்படியும் அவன் இலங்கைக்குக் குடியிருக்க வரவோ, அப்பாவின் ஓய்வூதியப் பணத்தைக் கேட்கவோ மாட்டான் என்பதில் திருமதி. பெரேராவுக்கு பூரண நம்பிக்கை இருக்கிறது. அவனது ஜீவிதம் அங்கேயேதான். இந்த வீடு மகனின் பெயருக்கு எழுதப்பட்டிருப்பதால், திரு. பெரேராவின் தங்கைகள் எப்படிக் கத்திக் கூச்சலிட்டுக் கொண்டு வந்தாலும் கூட ஒன்றும் ஆகப் போவதில்லை. எப்படியும், மூன்று மாதங்கள் கழியும் வரைக்கும் எதுவும் இலகுவாக இருக்காது. பல காலங்களாக திருமதி. பெரேரா வாங்கிச் சேகரித்து வைத்த வெள்ளை நிறப் பாவாடைகள், சட்டைகள் ஏராளமிருக்கின்றன. திரு. பெரேரா என்றைக்கும் சாப்பாட்டிலோ, உடுதுணி, ஆபரணங்களிலோ திருமதி. பெரேராவுக்கு ஒரு குறையும் வைத்ததில்லை. திரு. பெரேரா அவ்வாறுதான் நினைத்துக் கொண்டிருந்தார். உணவு, பானங்கள், ஆடை, ஆபரணங்கள், வருடத்துக்கு ஒரு தடவை ஒரு சுற்றுப் பயணம், நல்லதொரு வீடு, மின்சார சாதனங்கள். இவையெல்லாம் இருந்தால் அனைத்தும் சம்பூரணமாகி விடும். உண்மையில், ஒரு பெண்ணுக்கு இவை தவிர இன்னும் வேறு என்னதான் வேண்டும் என திருமதி. பெரேரா யோசித்துப் பார்த்த போது சடுதியாக அவருக்கு அந்த வீட்டிலிருந்த பெண் பூனையான ப்ளாக்கியின் நினைவு வந்தது. ப்ளாக்கிக்கு நேரத்துக்கு ஊசி மருந்து ஏற்றப்படுகிறது. வாலை மீனைச் சோற்றோடு பிசைந்து ஒரு நாளைக்கு இரண்டு தடவைகள் வழங்கப்படுகின்றன. கிழமைக்கு ஒரு தடவை குளிப்பாட்டப்படுகிறது. பிரதான நுழைவாயிற்கதவை மூடி வைத்து விட்டு, கூட்டின் கதவைத் திறந்து விட்டு வீடு முழுவதும் இஷ்டம் போல நடமாடித் திரிய அனுமதிக்கப்படுகிறது. ஒரு பெண் பூனைக்கு இன்னும் வேறு என்னதான் வேண்டும்?

பருப்பைக் கழுவி, மசாலாக்களைத் தூவி, தண்ணீர் கலந்த தேங்காய்ப் பாலை அவற்றின் மீது ஊற்றி பாத்திரத்தை அடுப்பில் வைத்த திருமதி. பெரேரா மீண்டும் அறைக்குள் எட்டிப் பார்த்து, முன்பு போலவே படுத்திருக்கும் திரு. பெரேராவை உற்று நோக்கினார். பின்னர் திரும்பவும் சமையலறைக்குப் போகும் வழியில், விறாந்தையில் தொங்க விடப்பட்டிருந்த தனது திருமணப் புகைப்படத்தை, அப்போதுதான் முதன்முறையாகப் பார்ப்பதைப் போல நின்று பார்த்தார். இருவரும் நிமிர்ந்து நின்றவாறு, முகங்களில் எவ்வித உணர்வுகளையும் வெளிப்படுத்தாமல் நேராகப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். கறுப்பு வெள்ளைப்

புகைப்படம் பல வர்ணங்களைச் சூடிக் கொண்டது போல திருமதி. பெரேராவுக்கு தென்படத் தொடங்கியது. இந்தப் புகைப்படத்தை எடுத்து முடித்ததும், புறப்படத் தயாரான வேளையில் எவ்வளவு அழுதேன்? அம்மா, அப்பாவைப் பிரிந்து செல்லும் துயரத்தில் அழுவதாகத்தான் அனைவரும் நினைத்தார்கள். ஆனால், அப்போது அழுதது பயத்தினாலும், செனரத் ஞாபகம் வந்ததால் எழுந்த துக்கத்தினாலும்தான்.

குணவங்சலாகே ஸ்ரியானி பத்மகாந்தி சோமரத்ன என்ற முழுப் பெயரைக் கொண்டவர், திருமதி. பெரேரா ஆன போது அவருக்கு வயது இருபத்தொன்று. கல்யாணத் தரகர் ஒருவர் தேடித் தந்த கார்தியவசம் அமரபந்து பெரேரா என்ற பெயரைக் கொண்ட, முப்பது வயதான, அரசாங்க உத்தியோகத்தர் பதவியைக் கொண்டிருந்த நபரின் ஜாதகம்தான், குணவங்சலாகே ஸ்ரியானி பத்மகாந்தி சோமரத்ன எனும் பெண்ணின் ஜாதத்தோடு மிகவும் ஏற்றதாகப் பொருந்தி வந்தது.

திருமதி. பெரேராவாக ஆனதற்குப் பிறகும் கூட பல வருடங்கள் கழியும் வரைக்கும் ஸ்ரியானியின் கனவுகளில், மீசை வைத்திருந்த செனரத் வந்து போனார். இப்போதும் கூட அவரை ஞாபகம் வரும்போது திருமதி. பெரேராவுக்கு அழுகை வருகிறது. இப்போது முப்பத்தொன்பது வருடங்களின் பிறகு அவர் உயிருடன் இருக்கிறாரா, இல்லையா என்பது கூட திருமதி. பெரேராவுக்குத் தெரியாது. திருமணம் முடித்த பிறகு திருமதி. பெரேராவுக்கு செய்வதற்கு முடிவேயில்லாமல் ஏராளமான வேலைகள் இருந்தன. திரு. பெரேராவின் பெற்றோருக்குரிய பணிவிடைகள், குழந்தை பிறந்ததற்குப் பிறகு அதனுடைய வேலைகள், மரண வீடுகள், தான வீடுகள், இப்படிப் பலவும். முப்பத்தொன்பது வருடங்கள் எவ்வாறு கடந்து போயின என்பதை திருமதி. பெரேராவால் நினைத்துக் கூட பார்க்க முடியவில்லை. அடுப்பிலிருந்த பருப்புக் குழம்புக்கு கெட்டித் தேங்காய்ப் பாலை ஊற்றிக் கிளறிய திருமதி. பெரேரா, பின்னர் குளிர்சாதனப்பெட்டியிலிருந்து வாலை மீன்களை வெளியே எடுத்து வந்து சுத்தம் செய்தார். அவற்றின் செதில்களை அகற்றிக் கொண்டிருக்கும் போது எங்கிருந்தோ பூனை முனகிக் கொண்டு வந்தது. வாலை மீன்களின் தலைகளை சிரட்டையொன்றில் இட்டு சமையலறை வெளித் திண்ணையில் வைத்து விட்டு, பருப்புக் குழம்பை அடுப்பிலிருந்து இறக்கி வைத்த திருமதி. பெரேரா, இரவு மீதமான சோற்றோடு பிசைந்து பூனைக்குக் கொடுக்கலாம் என வாலை மீன்களை அடுப்பில் வேக வைத்தார். ஒழுங்காக தேனீர் கூட போடத் தெரியாமல் அந்த வீட்டுக்கு வந்த ஸ்ரியானி, திருமதி. பெரேரா ஆனதன் பிறகு சோறு கறிகள், உறைப்பு இனிப்புகள் என அனைத்தையும் சமைக்க படிப்படியாகக் கற்றுக் கொண்டார். உணவோ, பானமோ சுவையாக இல்லாவிட்டால் தேனீர்க் கோப்பைகளையோ, உணவுத் தட்டுகளையோ தரையில் வீசியெறிந்து திட்டும் பழக்கம் திரு. பெரேராவுக்கு இருக்கவில்லை. அவர் சாப்பாட்டைப் பிசைந்துவிட்டு சாப்பிடாமலேயே எழுந்து கொண்டாரானால், உணவு சுவையாக இல்லை என்று அர்த்தம். போகப் போக திருமதி. பெரேரா, திரு. பெரேராவின் நாவுக்குச் சுவையாக சமைக்கக் கற்றுக் கொண்டார். திரு. பெரேரா, எப்போதும் தனக்குப் பிடித்தமான காய்கறி, மீன்களைத்தான் வாங்கிக் கொண்டு வந்தார். தனது தாய்வீட்டில் ஸ்ரியானி சூரை மீன், கீரி மீன் போன்றவற்றைச்

சாப்பிடுவதில்லை. வஞ்சிரம், பாரை போன்ற உஷ்ணம் குறைந்த மீன்களைத்தான் சாப்பிடுவார். எனினும் இப்போது திருமதி. பெரேரா சூரை மீன், கீரி மீன்களைக் கூட மிகச் சுவையாக உறைப்புக் கறியாகவும், புளிக் கறியாகவும் விதவிதமாகச் சமைத்து வருகிறார்.

காலத்துக்குக் காலம் திருமதி. பெரேராவுக்கு வெவ்வேறு பொழுதுபோக்குகளில் வெறித்தனமான ஈடுபாடு வரும். தோட்டத்தில் காய்கறிகளை நட்டு வளர்த்தார். ஒரு காலம் பைத்தியம் பிடித்தவர் போல குரோட்டன் செடிகளைத் தேடித் தேடி வளர்த்தார். பிறகு பிகோனியாஸை வளர்த்தார். சங்கிலித் தையல், ஒட்டுத் தையல் என காலத்துக்குக் காலம் திருமதி. பெரேராவுக்கு ஒவ்வொன்றிலும் வெறித்தனமான பிடிப்புத் தோன்றும். தனக்கு உண்மையிலேயே பைத்தியம் பிடிக்காதிருக்கத்தானா இவ்வாறான ஒவ்வொரு பைத்தியக்காரத்தனங்களையும் உருவாக்கிக் கொள்கிறேன் என தனியாக இருக்கும்போது தோன்றும். உண்மையில் தனக்கு என்னதான் வேண்டும் என யோசித்துப் பார்க்கையில் அவருக்கு அழுகை வரும். வாழ்க்கையைத் திரும்பவும் மறுபக்கமாகப் புரட்டி வாழ முடியாது. வீட்டிலிருக்கும் பெண்களுக்கு செய்யக் கூடிய வேலைகளை தொலைக்காட்சியின் பெண்களுக்கான நிகழ்ச்சிகள் கற்றுத் தருகின்றன. சமையல், பூச்செடிகள் வளர்த்தல், கைப்பணிகள் செய்தல், தையல் போன்றவை அவை. அடுத்தவர்களின் வாழ்க்கையை எட்டிப் பார்க்கவென இரவுகளில் வேண்டிய மட்டும் தொடர் நாடகங்கள் இருக்கின்றன.

வாலை மீன்களை இறக்கி வைத்து விட்டு, துவாலையை எடுத்துக் கொண்ட திருமதி. பெரேரா குளியலறைக்குச் சென்று கதவைச் சாத்திக் கொண்டார். உடுத்திருந்த ஆடைகளைக் கழற்றி விட்டு, பற்களைத் தேய்த்துக் கொண்டே பூந்துவலைக்குக் கீழே நின்று, இன்றைக்கும் நாளைக்கும் தேவைப்படக் கூடிய பணத்தைக் குறித்து யோசித்துப் பார்த்தார். திரு. பெரேராவின் பணம் முழுதும் வங்கியில்தான் இருக்கிறது. அட்டை மூலமாகக் காசு எடுக்கக் கூட, அதன் இரகசிய இலக்கத்தை திருமதி. பெரேரா அறிந்திருக்கவில்லை. இவ்வாறான ஒரு சந்தர்ப்பத்தின் போது எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்றும் கூட திரு. பெரேரா சொல்லித் தந்திருக்கவில்லை. தங்க நகைகளை வங்கியில் அடகு வைக்கவும் திருமதி. பெரேராவுக்கு மனம் இடந்தரவில்லை. ஓய்வூதியத்தை திருமதி. பெரேராவின் பெயருக்கு மாற்றிக் கொள்ளவும் சில மாதங்கள் வரை செல்லும். வீட்டின் அனைத்து இடங்களிலும், இண்டு இடுக்குகளிலெல்லாம் தேடிப் பார்த்தாலும் கூட பத்து, பதினைந்தாயிரத்துக் கூடுதலாக இருக்காது. திரு. பெரேரா, வீட்டில் அவ்வளவாக பணம் வைத்துக் கொள்வதில்லை. வருவதற்கு முகம் கொடுப்போம். திரு. பெரேராவின் பணக்காரத் தங்கைகள் இரண்டு பேரும் வருவார்கள்தானே என திருமதி. பெரேரா தீர்மானித்துக் கொண்டார்.

நாளை மறுநாள் வெள்ளிக்கிழமை என்பதால் எப்படியும் நாளை மறுநாளே இறுதிக்கிரியைகளைச் செய்ய வேண்டியிருக்கும். மகன் வரத் தாமதமானால் மாத்திரம் இன்னும் நாட்கள் நீடிக்கப்படக் கூடும். எப்படியும் மகன் தனியாகத்தான் வருவான். அவன், தான் காதலித்துக் கொண்டிருக்கும் இளம்பெண்ணையும் கூட்டிக் கொண்டு வருவான்

என்று எதிர்பார்க்க முடியாது. மகனை நினைத்துப் பார்த்த போது திருமதி. பெரேராவுக்கு சற்று ஆறுதலாக இருந்தது. அவன் எப்போதும் தன்பாட்டில் வேலைகளைச் செய்து வரும் அமைதியான பையன். முதல் நாள் வெள்ளை நிறத்தில் பட்டர் சில்க் பாவாடையும், சட்டையும் அணிந்து கொண்டிருந்து விட்டு, இரண்டாம் நாள் வெள்ளை நிறத்தில் கைத்தறிச் சேலையொன்றை அணிந்து கொள்ளலாம் என்று திருமதி. பெரேரா நினைத்துக் கொண்டார். அழுகையென்றால் தன்பாட்டில் வந்து விடும். தன்னைக் குறித்தே தொடர்ந்தும் யோசித்துப் பார்க்கும்போதெல்லாம் திருமதி. பெரேராவுக்கு கண்ணீரை நிறுத்தவே முடியாது. திரு. பெரேரா கறுப்பு கோட் சூட் அணிந்து பெட்டியில் படுத்திருக்கும் விதத்தை திருமதி. பெரேரா கற்பனை செய்து பார்த்தார். என்னதான் இருந்தாலும் பல வருடக்கணக்கில் தன்னுடைய உடலில் ஒரு பாகம் போல இருந்த மனித ஜீவியல்லவா எனத் தோன்றும்போது கவலை வருகிறதுதான். முன்பிருந்த பூனைகள், நாய்கள் மரித்துப் போன போதெல்லாம் திருமதி. பெரேராவுக்கு அழுகை அழுகையாக வந்தது. என்றாலும், தனது கடைசி காலத்திலாவது தனக்குப் பிடித்தமான முறையில் வாழவே திருமதி. பெரேரா விரும்பினார். நெடுங்காலமாக செய்ய நினைத்துக் கொண்டிருந்த திட்டங்கள் பலவும் திருமதி. பெரேராவின் சிந்தனையில் இருந்தது.

திரு. பெரேராவின் அலுவலகத்தில் கிளார்க்காகப் பணி புரிந்த, இன்னும் திருமணம் முடிக்காதிருந்த ஸ்டெல்லாவும் கூட தகவல் கிடைத்தால் வராமல் இருக்க மாட்டாள். அக் காலத்தில் திருமதி. பெரேரா, ஸ்டெல்லாவுக்கு செய்வினை சூனியம் செய்துவிட்டு வரவென அளுத்கமை வரை கூட, போயிருக்கிறார். போகப் போக அனைத்துமே திருமதி. பெரேராவுக்கு கண்டுகொள்ளத் தேவையற்றவையாகிப் போயின. மகன் இருந்தான். அடுத்தது, திரு. பெரேராவுடன் சண்டை போட்டுவிட்டு எங்கேயென்றுதான் போவது? இருக்க ஒரு இடம், தொழில் ஒன்று இரண்டுமே இல்லாத பெண்ணொருத்தி பொறுமையாக இருப்பதைத் தவிர வேறு என்னதான் செய்வது? என்னதான் இருந்தாலும் திரு. பெரேராவின் திருமதி. பெரேரா. திரு. பெரேரா செத்துப் போனாலும் கூட அது மாறாது.

மகன் படித்த பாடசாலையின் கணக்கு வாத்தியார், மகனின் வகுப்பிலிருந்த ஸிரந்தவின் அப்பா, தோட்டத்தைத் துப்புரவாக்கவென வந்து அடிக்கடி தன்னிடம் தேனீர் கேட்ட கட்டுமஸ்தான தமிழ் ஆள் போன்ற ஒரு சிலர் திருமதி. பெரேராவின் மனதை காலத்துக்குக் காலம் சலனப்படுத்திப் பார்த்த போதிலும், அவர்கள் எவரும் மனதில் நிலைத்திருக்கவில்லை. பெண்களை விடவும் ஆண்கள் மிகவும் பயந்தவர்கள் என்பதை திருமதி. பெரேரா அனுபவத்தில் அறிவார். இப்போது திருமதி. பெரேராவின் நினைவுகளில் அவ்வாறான ஆண்கள் இல்லை எனினும், மூடத்தனம்தான் என்று நன்கறிந்த போதிலும் செனரத் குறித்த மெல்லிய எதிர்பார்ப்பொன்று இப்போதும் இல்லாமல் இல்லை. இன்னும் எத்தனை விடயங்களைச் செய்ய வேண்டியிருக்கிறது. திரும்பவும் ஒரு தடவை அறையில் எட்டிப் பார்த்து விட்டு ஆடையொன்றை அணிந்து கொண்டு திரு. சில்வா வீட்டுக்குப் போகலாம் என்று தீர்மானித்த திருமதி. பெரேரா, குளித்து முடித்து விட்டு பெரிய துவாலையை உடலில் சுற்றிக் கொண்டு, சிறிய துவாலையால் கூந்தலில் அடித்து ஈரத்தைத் துடைத்தவாறே

வெளியே வந்தார்.

அவர் அறையில் நுழைந்த போது திரு. பெரேரா கட்டிலின் மீது அமர்ந்திருந்து தேனீரைப் பருகிக் கொண்டிருந்தார். திருமதி. பெரேரா சிறிய துவாலையைக் கூந்தலிலிருந்து அகற்றி விட்டு, பெரிய பற்களைக் கொண்ட சீப்பினால் சிக்குகளை அகற்றத் தொடங்கினார். கண்ணாடியில் தென்பட்ட திருமதி. பெரேராவின் முகம் ஈரமாக இருந்தது.

“தேத்தண்ணி ஆறிப் போச்சுது. இன்னுமொரு தேத்தண்ணி ஊத்திக் கொண்டு வா...” என்று திரு. பெரேரா உத்தரவிட்டதுமே திருமதி. பெரேரா எழுந்து நின்றார்.

# 9. போருக்கு எதிரானதொரு அசல் பிரகடனம் -- சக்கரவர்த்தியின் கதைகளை முன்வைத்து: சுரேஷ் பிரதீப்

ஒக்டோபர் 2020/விமர்சனம்

BY சுரேஷ் பிரதீப்

ஈழ இலக்கியம் சார்ந்த எழுத்துக்களையும் பேச்சுகளையும் கவனிக்கும் போது அதில் அரசியல் தவிர்க்க முடியாததாக இருப்பதை அவதானிக்க முடிகிறது. அரசியல் நிலைப்பாடு என்பது நேரடியாகவோ மறைமுகமாகவோ பல படைப்பாளிகளிடம் வெளிப்படவே செய்கிறது. ஷோபா சக்தி விடுதலைப் புலிகளின் மீதான விமர்சனத்தையே தன் கதைகளின்(கண்டிவீரன்) வழியாக ஒரு பிரகடனமாக மாற்றுகிறார். தெளிவத்தை ஜோசப்பின் கதைகள் (மீன்கள்) முற்போக்கு மனிதாபிமானவாதத்தை பறைசாற்றுகிறவையாகவே உள்ளன. கலாமோகனுடையது (நிஷ்டை) இடப்பெயர்வால் சிதைவுறும் அகத்தினுடைய வலிகளைப் பேசும் உலகமாக இருக்கிறது.

ஆனால் இதுபோன்ற தீர்க்கமான பின்னணியை தமிழ்நாட்டின் முதன்மை புனைவெழுத்தாளர்களிடம் காண்பது அரிது. தமிழ்நாட்டுப் படைப்பாளிகளின் அரசியல் பெரும்பாலும் வெகுமக்கள் சார்ந்ததாகவே உள்ளது. தன்னை ஏதேனும் அரசியல் கட்சியுடன் அடையாளப்படுத்திக் கொள்ளும் எழுத்தாளர்களின் படைப்புகளில் கூட அவர்களுடைய சித்தாந்த சார்புக்கான ஆதரவுத் தடயத்தைக் காண இயலாது. ஒரு வகையில் இது இயல்பானதும் கூட. ஏனெனில் தமிழகம், ஈழம் போன்ற அரசியல் மோதல்களின், பண்பாட்டு மோதல்களின், போர்களின் நிலம் அல்ல. ஆகவே தமிழகத்தையோ மலேசியா சிங்கப்பூர் போன்ற பிற தமிழ் இலக்கியச்சூழல்களையோ ஈழ இலக்கியத்துடன் ஒப்பிடும்போது இந்த வேறுபாட்டை நினைவில் கொள்வது அவசியமென நினைக்கிறேன். ஏனெனில் தமிழகத்தைப் பொறுத்தவரை 'அரசியல் எழுத்துக்கள்' என்ற பெயரில் முன்வைக்கப்படுகிறவை வெறுமனே கட்சிப் பிரகடனங்களாக மட்டுமே இருக்கின்றன. செய்தித் தாள்களில் இருந்தும், கட்சி அறிவுஜீவிகளின் கட்டுரைகளில் இருந்தும் பெறப்பட்ட செயற்கையாக உணர்ச்சி ஏற்றப்பட்ட கதைகளாகவே தமிழகத்தில் எழுதப்படும் பெரும்பாலான அரசியல் கதைகள் உள்ளன. இதன் காரணமாகவே தமிழ் இலக்கியச்சூழலில் 'சுயப்பிரகடனத்துடன்' எழுத வருகிறவர்கள் மீது ஒரு அவநம்பிக்கை உள்ளது. அரசியல் நிலைப்பாடு காரணமாக ஒரு தற்காலிகமான வெளிச்சம் இத்தகைய புனைவுகளுக்கு கிடைத்தாலும் அவை உடனடியாக மறக்கப்பட்டும் விடுகின்றன. சென்னையை மையமாக வைத்து எழுதப்பட்ட சில நாவல்கள் இப்படி சிலாகிக்கப்பட்டு மறக்கப்பட்டது சமீபத்திய உதாரணம்.

ஆனால் ஈழத்தின் புனைவெழுத்துகளுக்குப் பின்னே போர் என்ற உடனடியான அரசியல் காரணம் இருக்கிறது. ஆகவே தன்னுடைய எழுத்து இதைத்தான் சொல்லப் போகிறது என்ற பிரகடனத்துடன் ஒருவர் எழுத வந்தாலும் அப்பிரகடனம் எழுத்தின் உண்மைத்தன்மையை பெரும்பாலும் பாதிப்பதில்லை. சக்கரவர்த்தியின் யுத்தத்தின் இரண்டாம் பாகம் தொகுப்பில் உள்ள பெரும்பாலான கதைகள் போருக்கு எதிரான அத்தகையதொரு தெளிவான பிரகடனத்தைக் கொண்டுள்ளன.




...

யுத்தத்தின் இரண்டாம் பாகம் தொகுப்பில் உள்ள அனைத்துக் கதைகளும் தொன்னூறுகளில் எழுதப்பட்டுள்ளன. நூல் இரண்டாயிரத்தில் வெளிவந்துள்ளது. ஏறத்தாழ இதே காலத்தில் எழுதிய ஷோபா சக்தியின் புனைவுகளின் நிலைப்பாடு எதுவோ அதுவேதான் சக்கரவர்த்தியினுடையதாகவும் இருக்கிறது. வன்முறைக்கு எதிராக நிலைகொள்ளும் எழுத்து. ஆனால் ஷோபாவிடமிருந்து சக்கரவர்த்தியை வேறுபடுத்தும் முக்கியமான அம்சம் இவர் கதைகளில் வெளிப்படும் சமநிலை. ஷோபா சக்தியின் புனைவுகளில் புலிகளின் மீதான கோபம் பெரும்பாலும் கரும்பகடியாக வெளிப்படுகிறது. பல தருணங்களில் வன்முறை மிகத்துல்லியமாக விளக்கப்படுகிறது.

ம் நாவலில் இந்த வன்முறையை சில இடங்களில் கொண்டாடும் எல்லைக்கே ஷோபா நகர்த்திச் சென்று விடுகிறார். கதை சொல்லலை விட விமர்சனமே ஷோபாவின் நாவல்களில் பிரதானமாகின்றன. அவருடைய சிறுகதைகள் மேலும் கச்சிதமானவை என்றாலும் உடனடியாக நினைவுக்கு வரும் கண்டிவீரன், எழுச்சி போன்றவை தமிழின் சிறந்த பகடிக்கதைகளாகவே இருக்கின்றன. ஆனால் சக்கரவர்த்தி கதை சொல்வதில் ஆர்வங்கொண்டவராக இருக்கிறார். தமிழின் கதைசொல்லி எழுத்தாளர்களைப் போலவே உரையாடல்களை கலைநயத்துடன் கட்டமைக்கிறார். எந்தக் குழப்பமும் இல்லாமல் நேரடியாக கதை சொல்கிறார்.

முதிர்கன்னி, பிசாசுகளின் வாக்குமூலம் போன்ற சற்று மாயத்தன்மை கொண்ட கதைகளில் கூட எளிய ஆர்வமூட்டும் உத்திகளையே பயன்படுத்தி இருக்கிறார். இத்தொகுப்பின் கதைகள் எதிலும் உத்தி கதையை மறைப்பதில்லை. கதைக்களனும் மிகத் தெளிவாகவே இருக்கிறது. பெரும்பாலான கதைகளின் தொடக்கத்திற்கு முன்பு போருக்கு எதிரான கண்டிப்பான ஒரு வரி எழுதப்பட்டிருக்கிறது.

இனச்சுத்தம் இனச்சுத்தம் எனச்சொல்லி

சோனகரை எல்லாம்

ஒற்றைநாள் இடைவெளியில்

நாட்டைவிட்டு நாம் விரட்டியடித்தோம்

நாமென்ன நாசிகளுக்கா பிறந்தோம்?

நம் பூர்வீகம் என்ன ஜெர்மனியா?

‘யுத்தமும்…’ கதையின் முன் வரும் வரி இது.

‘யுத்தமும்’ , ‘அதன் இரண்டாம் பாகமும்’ என்ற இரு கதைகளும் தொகுப்பின் முதல் மற்றும் இறுதிக் கதைகளாக அமைகின்றன. ஆங்கிலேயர் வருகையால் ஒடுக்கப்பட்டவர்கள் மதமாற்றம் செய்யப்படுவதை தடுக்க ஒடுக்கப்பட்டோரை கொலை செய்ய முயலும் ஒரு உள்ளூர் அரசனின் கதையாக ‘யுத்தமும்’ விரிகிறது. ‘…அதன் இரண்டாம் பாகமும்’ என்ற கதை தமிழ் போராளிகள் இஸ்லாமிய விவசாயிகளின் நிலத்திற்கு தீவைப்பதையும் தீவைக்கப்பட்ட பிரதேசத்தை சேர்ந்த ஒருவன் அதனால் குற்றவுணர்வு கொள்வதையும் சித்தரிக்கிறது. இந்த கட்டமைப்பே இத்தொகுப்பை பற்றி ஒரு விஷயத்தை உணர்த்தி விடுகின்றன. இக்கதைகள்

எதுவும் சிங்களப் பேரினவாதம் பற்றியோ அதை எதிர்த்த தமிழர் வீரம் பற்றியோ தமிழர் அடைந்த வெற்றி தோல்விகள் குறித்தோ பேசவில்லை. போர்ச்சூழல் தமிழர்களிடையே ஏற்படுத்திய பிளவுகளையும் கிழக்கு இலங்கையின் தமிழர்கள் – பெரும்பாலும் முஸ்லிம்கள் – யாழ்ப்பாணத் தமிழர்களால் ஒடுக்கப்படுவதையுமே பேசுகின்றன.

ஆடு புலி புல்லுக்கட்டு, பிசாசுகளின் வாக்குமூலம், யுத்தமும், …அதன் இரண்டாம் பாகமும் ஆகிய கதைகளில் இந்த சிக்கலை பேசுவதற்கு ஆசிரியர் ஓர் ஒடுக்கும் சுயத்தை தேர்ந்து கொள்கிறார். ஆடு புலி புல்லுக்கட்டு கதை ஒரு குண்டுவெடிப்பை நிகழ்த்திவிட்டு தப்பிச் செல்வதற்காக காத்திருப்பவனின் பார்வையில் விரிகிறது. அவனுடைய உண்மையான அடையாளம் தெரியாமல் அவனுடன் தங்கி இருக்கும் நண்பர்கள், விவசாய வேலைக்கு என்று நம்பி அவனுக்கு உரமும் லாரியும் கொடுக்கும் இஸ்லாமிய வியாபாரி என்று ஒவ்வொருவரையும் நினைத்து வருந்தியபடியே அந்த குண்டுவெடிப்பினை அவன் நிகழ்த்தச் செல்வதை இக்கதை சொல்கிறது. இக்கதையினூடாக கீதையின் வரிகள் சொல்லப்படுவது கதைக்கு கூடுதல் கனத்தை அளிக்கிறது. பிசாசுகளின் வாக்குமூலம் கதை இயக்கத்தில் இருந்து எண்ணற்ற கொலைகளை செய்த ஒருவன் தற்கொலை செய்து கொண்டு பிசாசாக மாறியபின் தன்னுடைய செயல்களை சக பிசாசுகளுடன் பகிர்ந்து கொள்வதாக அமைக்கப்பட்டுள்ளது. யுத்தமும் போர்த்துகீசியர் காலத்தில் நடைபெறும் கதை. மதம் மாறுகிறவர்களை கொல்வதற்காக பணிக்கப்படும் ஒரு தளபதியைப் பற்றிய கதை.

ஆண்-பெண் உறவின் ஆணவ மோதல் என்ற தளம் பொதுவாக ஈழ எழுத்துக்களில் அதிகம் காணக்கிடைக்காத ஒரு அம்சம். இத்தொகுப்பில் உள்ள ரூபம், மனசு, இறகுகள் போன்ற கதைகளை இவ்வகைமையில் சேர்க்கலாம். மனசு இந்தத் தளத்தில் எழுதப்பட்ட சிறந்த கதை. (சக்கரவர்த்தி புலம்பெயர்ந்த பிறகே இக்கதைகளை எழுதி இருக்கிறார் என்றாலும் மனசு, நானும் ஒகஸ்டீனாவும் ஒரு பந்தையக் குதிரையும் என்ற இரு கதைகள் மட்டுமே புலம்பெயர் வாழ்வின் சிக்கல்களை பேசுகின்றன.) கலாச்சார வேறுபாட்டால் மனைவியின் நடவடிக்கைகளை ஏற்காது மண வாழ்வில் கசப்படைந்த ஒருவன் கதைசொல்லியிடம் தன் வாழ்வைச் சொல்லி புலம்புவதாகவும் கதை சொல்லி அவனைத் தேற்றுவதாகவும் எழுதப்பட்டுள்ள இக்கதை இறுதியில் அவன் தன் மனைவியிடமே திரும்ப விரும்புவதாகச் சொல்லுமிடத்தில் புதுப் பரிமாணம் பெறுகிறது. ரூபம் உறவுச்சிக்கலை தத்துவார்த்தப்படுத்த முயலும் ஒரு எளிய கதை. இறகுகள் கதை மேம்போக்கான வாசிப்புக்கு பெண்களை கேலி செய்வது போலத் தெரிந்தாலும் தமிழ்ப் பெண்களின் சில ஆழமான பண்பாட்டுச் சிக்கல்களை சக்கரக்கட்டி, வெள்ளக்குட்டான் என்ற இயக்கப் பெயர்கள் கொண்ட இரண்டு பெண்களை மையமாகக் கொண்டு பகடி தொனிக்க கூறிச் செல்கிறார்.

முதிர்கன்னி இத்தொகுப்பின் சிறந்த கதைகளில் ஒன்று. போர் என்பது ஆழமான பாதிப்பை ஏற்படுத்துவது பெண்களிலும் குழந்தைகளிலும்தான் என்பது நமக்குத் தெரிந்தாலும் அந்த பாதிப்புகளின் பரிமாணங்கள் சொல்லி முடியாதவை. தொடர்ச்சியாக ஆண்களால் வெவ்வேறு விதங்களில் ஏமாற்றப்படும் பெண் காலப்பயணம் செய்து

வேதாளத்தையும் விக்ரமாதித்தியனையும் சந்திப்பதாக இக்கதை சொல்லப்பட்டுள்ளது. ஆண்களால் ஏமாற்றப்படுதல் என்பதை ஒற்றைப்படையாக உணர்ச்சிகரமாக முன்வைக்காமல் அப்பெண்ணின் பலகீனமும் இரக்கவுணர்வும் ஒரு எல்லையில் முட்டாள்தனமும் அவள் என்று அவள் நிர்மூலமாக்கப்படுவதன் முழுப் பரிணாமமும் கதையில் வெளிப்படுகிறது.

படுவான்கரை, எண்ட அல்லாஹ் இரண்டு கதைகளும் சக்கரவர்த்தி பிரகடனமாக எதை முன்வைக்கிறாரோ அந்த நோக்கத்தை நன்கு நிறைவேற்றுகின்றன. அவ்வகையில் இத்தொகுப்பின் சிறந்த கதைகள் இவையே. படுவான்கரை கதையில் தமிழ் போராளிகளால் சிங்களர்களின் உளவாளி என்றும் சிங்களர்களால் தமிழ் போராளிகளின் உளவாளி என்றும் நம்பப்பட்டு சித்திரவதை செய்யப்படும் ஒருவனின் சித்திரம் பதிவாகி இருக்கிறது. எண்ட அல்லாஹ் மிகக் கச்சிதமான சிறுகதை. வியாபார விஷயமாக கணபதியை பார்க்க வரும் முஸ்தபா தமிழ் போராளிகளிடம் சிக்கிக் கொள்வதும் கணபதியால் அவனுக்கு இழைக்கப்படும் துரோகமுமே கதை. இந்த இரண்டு கதைகளிலும் பொது அம்சமாக தென்படுவது நம்பிக்கையின்மையும் அச்சமுமே. துன்பப்படுகிறவர்கள் மட்டுமல்ல துன்புறுத்துகிறவர்களிடமும் அச்சமே வெளிப்படுகிறது. இந்த அச்சத்தையும் நம்பிக்கையின்மையும் இக்கதைகளில் போரே உருவாக்குகிறது. குறிப்பிட்ட எத்தரப்பையும் தாக்க வேண்டும் அல்லது அம்பலப்படுத்த வேண்டும் என்ற நோக்கமெதுவும் இல்லாமால் வாழ்வின் இயல்பொழுக்கை நீர்த்துப் போகச் செய்யும் போர் என்கிற செயலின் மீதான விமர்சனமாகவே இக்கதைகள் வெளிப்பாடு கொள்கின்றன. கிழக்கு இலங்கையில் துன்புறுத்தப்பட்ட இஸ்லாமியர்கள் மீதான கரிசனம் குற்றவுணர்வாக பல கதைகளில் வெளிப்படுகிறது. மறுபுறம் பெண்களைப் பற்றிய காதல் மிகுந்த நுண்ணிய அவதானிப்புகள். இந்தக் காதலும் கரிசனமும் பகைப்புலமாகும் சக்கரவர்த்தியின் புனைவுலகில் முன்வைக்கப்படும் வன்முறை மீதான விமர்சனம் உயிர்ப்புடன் வெளிப்படுகிறது.

## 10. இலக்கியம் என்பது தான்தோன்றித்தனமாக வருவதில்லை: சேனன்

உரையாடல்/ஒக்டோபர் 2020

உரையாடல் அனோஜன் பாலகிருஷ்ணன்

BY அனோஜன் பாலகிருஷ்ணன்

நான் COPY என்று ஒருபோதும் சொல்லவில்லை. PLAGIARISM என்று எங்கும் சொல்லவில்லை. இலக்கியம் என்பது தான்தோன்றித்தனமாக வருவதில்லை. சமூகத்தின் பல்வேறு பிரச்சினைகளை உள்வாங்கும் எழுத்தாளரிடமிருந்து வருகின்ற வெளிப்பாடுதான் இலக்கியச் செயல்பாடு. அது ஏதோவொரு விடயத்தில் ஒன்றைப் பின்பற்றுதல், இன்னொன்றைப் பார்த்து எழுதுதல், போலச் செய்தல், சேர்த்து எழுதுதல், கேட்டு எழுதுதல் என்றுதான் இயங்குகின்றது. இப்படிதான் இலக்கியம் இயங்க முடியும். நேரடியாக ஒன்றைப் பார்த்து அப்படியே எழுதிய சம்பவங்களும் உண்டு. அது தவறு. வேறு சிலர் சிலதை மட்டும் பார்த்து எழுதியும் இருக்கிறார்கள் அது மன்னிக்கக்கூடிய தவறு. இந்த எந்தக் குற்றச்சாட்டையும் இச்சா விடயத்தில் நான் வைக்கவில்லை. தெளிவாகச் சொல்கிறேன். ஐடியாஸ், (IDEAS) வடிவம் சார்ந்த ஐடியாஸ் கொள்ளையடிக்கப்பட்டுள்ளது. அதைத்தான் குற்றச்சாட்டாக வைக்கின்றேன்

லெயிட்டன்ஸ்டோனில் அமைத்திருக்கும் Alfred Hitchcock பப்பில் என்னை மாலை சந்திப்பதாக சேனன் சொல்லியிருந்தார். போய்ச் சேர்ந்தபோது கறுத்த குளிரங்கியை அணிந்தவாறு கடும் களைப்புடன் அவருடைய வேலைத் தளத்திலிருந்து வந்து சேர்ந்திருந்தார். Alfred Hitchcock இங்கிலாந்தில் பிறந்து வளர்ந்து அமெரிக்காவுக்கு சென்று திரைப்படங்களை இயக்கியவர். அவர் எடுத்த சைக்கோ திரைப்படம் பெரும் புகழ்பெற்றது. அவர் சிறுவயதில் வளர்ந்த வீட்டைத்தான் விடுதியாக மாற்றியிருந்தார்கள்.

அந்த விடுதியில் இரண்டு கின்னஸ் ஸ்டவுட் பியரை ஓடர் செய்துவிட்டு வெளியே வந்து அமர்ந்தோம். வெளியே குளிர் காற்று இதமாக வீசிக்கொண்டிருந்தது.

சேனனின் முதல் நாவல் ‘லண்டன்காரர்’ வந்தபோது அதை வாசித்துவிட்டு சிறிய நூல் விமர்சனக் கூட்டத்தை யாழ்.நூலகத்தில் நண்பர்களுடன் இணைந்து ஒழுங்கமைத்து உரையாடியிருந்தோம். விமர்சனம் கடுமையாக இருந்தது. அதன் பின்னர் ஒருமுறை சேனனுடன் ஸ்கைப்பில் பேசக்கிடைத்தது. இங்கிலாந்து வந்த பின்னரே நேரில் சந்தித்தேன். எனது பல்கலைக்கழகம் லண்டனுக்கு வெளியே இருந்ததால் அடிக்கடி சேனனை சந்திக்க முடிந்ததில்லை. லண்டன் நகருக்குள் வரும்போது அவரது வீட்டிலும் இரவு படுத்துறங்கிச் சென்றிருக்கிறேன். அவரது சிறிய வீட்டில் ஒரு Sofa உண்டு. அடியில் பிடித்து இழுத்தால்

படுக்கையாக விரிந்துவிடும். அந்த Sofa வில் படுத்துறங்கியவர்களின் கதைகளை தனி நாவலாக எழுதும் அளவுக்கு நீண்டது அக்கதை.




...

அவருடன் இங்கிலாந்தில் நிகழும் போராட்டங்கள் சிலவற்றுக்கு சென்றும் இருக்கிறேன். அப்போது அடுத்ததாக ஒரு நாவல் எழுதிக்கொண்டிருப்பதாகச் சொல்லியிருந்தார். அது என்ன கதை, என்ன களம் என்பதைச் சொல்லவில்லை. சரி தலைப்பு என்ன என்று கேட்டுப் பார்த்தேன். பரம ரகசியம் என்றார். அடிக்கடி நாவல் என்ன ஆகிவிட்டது என்று விசாரிப்பது வழக்கம். இறுதியில் நாவல் வெளியாகிவிட்டது.

‘சித்தார்த்தனின் வினோதச் சம்பவங்கள்’ ஈழ யுத்தத்தையும் புலம்பெயர் சிதைவையும் மறுபடியும் ஈழ இலக்கியத்தில் பேசியிருக்கக்கூடிய ஒரு நாவல். ஆனால், இந்த நாவல் சொல்லப்பட்டிருக்கும் விதத்தில் உள்ள வித்தியாசம்தான் இந்த நாவலை மற்றையவற்றிலிருந்து வேறுபடுத்திக் காட்டுகின்றது. இதுவரை யதார்த்தவாத பாணியில் சொல்லப்பட்ட ஈழப் போர்க் கதையாடலை அதிலிருந்து விலத்தி மிகுகற்பனை, மஜிக்கல் ரியாலிசம், நொன்-லீனியர் கதையமைப்பு என்று சொல்கிறது.

‘அல்லி ராணி’ என்ற தொன்மக் கதை இன்று பலருக்குத் தெரியாது. இலங்கையை அல்லி என்ற ராணி ஆண்டதாகவும், மகாபாரதத்தில் வரும் அர்ச்சுனன் அல்லியை மணப்பதகவும், யுத்தம் செய்வதாகவும் அக்கதை செல்லும். அந்தக் கதையை ஆதிக்க பெருங்கதையாடல்களுக்கான எதிர் கதையாடலாக எடுத்துக்கொள்ளலாம். அந்தக் கதை உருவாக்கப்பட்டதற்கு அதுவொரு காரணமாக இருக்கலாம். அல்லி என்ற வரலாற்றுக் கதாப்பாத்திரம் உறுதியான, போர் குணம் கொண்ட பாத்திரம். பிடிவாதம் மிக்க பெண்களை “நீ என்ன பெரிய அல்லியா” என்று விளிப்பது இலங்கையில் வழக்கத்தில் இருந்துள்ளது. இந்த அல்லி என்ற தொன்மப் பாத்திரமும், நிகழ்காலத்தில் அல்லி என்ற இன்னுமொரு பெண் பாத்திரமும் நாவலுக்குள் வருகிறது. இன்னுமொரு பக்கம் சாதனா என்ற பெண்ணின் கதை. தொன்மக் கதையையும் நிகழ்காலக் கதையையும் இணைக்கும் சரடாக சித்தார்த்தன் வருகிறான். அவன் காணும் வினோதச் சம்பவங்கள் தான் இந்த நாவல். வேகமான வாசிப்பில் இவற்றைக் குழப்பிக்கொள்ள நேரலாம். அதே நேரம் யதார்த்தவாத கதை விரும்பிகளுக்கு உகந்த நாவல் இதுவல்ல என்பதே என் துணிபு.

சின்னச்சின்ன சம்பவங்களாக பல்வேறு காலகட்டங்களுக்கு நாவல் தாவுகிறது. அரசியல் பிரச்சினையிலிருந்து சிறிய யுத்த சம்பவங்கள் வரை அனைத்துக்கும் பின்னே சித்தார்த்தன் இருக்கிறான். சித்தார்த்தனை அரூப நிலையில் வைத்துக்கூட அணுகலாம். பௌத்தமாக, பௌத்த அதிகாரமாக, கருணையாக என்று பல்வேறு பரிமாணங்களை எடுக்கிறது அந்த பாத்திரம். இந்த நாவலில் இருக்கக்கூடிய ஒரு சிக்கல் Reference எழுத்துமுறை. நாவல் ஆரம்பிக்கும்போதே 1992ஆம் ஆண்டு ஆகஸ்ட் 9ம் திகதி இராணுவம் ஏவிய குண்டு வெடித்துச் சிதறியது என்று ஆரம்பிக்கிறது. அன்றையதினம் ஈழ யுத்த வரலாற்றில் என்ன நிகழ்ந்தது என்று தேடிப்பார்தாலே மேலதிக அர்த்தத்திற்குள் நுழைய முடியும். இது நாவல் பற்றிய விமர்சனம் இல்லை என்பதால் இதோடு அறிமுகக்குறிப்பை நிறுத்திக்கொள்கிறேன்.

‘சித்தார்த்தனின் வினோதச் சம்பவங்கள்’ நாவலுக்கும் ஷோபாசக்தி எழுதிய இச்சா நாவலுக்கும் இடையே ஆச்சரியப்படுத்தும் சில ஒற்றுமைகள் இருக்கத்தான் செய்கின்றன. ஷோபாசக்தி தன்னுடைய நாவலை படித்துவிட்டு அதிலிருந்து தாக்கம் பெற்று இச்சாவை கொண்டுவந்துள்ளதாக சேனன் குற்றம்சாட்டுகிறார். ஷோபாசக்தி சேனனின் நாவலை தான் படிக்கவில்லை என்று மறுத்துள்ளார். அப்படி என்றால் இது எப்படிச் சாத்தியம் என்ற கேள்வி வருகிறது. சமகாலத்தில் அருகருகே இருக்கும் ஊரில் வாழ்ந்த இரண்டு எழுத்தாளர்கள் ஒத்த அலைவரிசையில் சிந்தித்திருக்க முடியுமா? தற்செயலாக நடக்க முடியுமா?

இரண்டு நாவலையும் படிக்கும் எவரும் தங்களது வாசிப்புக்கு ஏற்றவகையில் ஒற்றுமைகளை பட்டியல்படுத்தலாம். அல்லது ஒற்றுமை இல்லை எனலாம். என்னுடைய வாசிப்பின்போது- புலம்பெயர்ந்து ஐரோப்பிய நாட்டுக்குள் நுழைந்து எதிர்கொள்ளும் பிரச்சினைகள் எல்லோருக்கும் பொதுவானவைதான்- என்று பார்த்தாலும்கூட கீழ்வரும்

ஒற்றுமைகள் வியக்கவைக்கும் அளவுக்கு நெருங்கி இருக்கின்றன.

---

**இச்சா**

ஆலாவை அரபு நாட்டு விமான நிலையத்திலிருக்கும் விடுதியில் வைத்து கணவர் வாமன் புணர்கிறார்.

சுல்த்தான் பாப்பா ‘ஆலா நிழலகம்’ சிறுவர்கள் இல்லம் நடாத்துகிறார்.

மர்லின் டேமியால் என்பவர் ஆலா தொடர்பான தகவல்களை கொடுக்க கதை சொல்லியை தேடிவருகிறார்

---

நாவலைப் பற்றியும் மேலே நான் எழுதிய பட்டியல் சேனன் சொல்லும் குற்றச்சாட்டுகளை மெய்ப்பிக்க போதுமானதா என்பதைப் பற்றியும் உரையாடவே இந்த சந்திப்பை ஒழுங்கு செய்தேன். அங்கு நிகழ்ந்த உரையாடலை அப்படியே எழுதியிருக்கிறேன். உரையாடல் நவீன இலக்கியப் போக்குகள் பற்றியும் விரிந்தமை கூடுதல் சிறப்பு.



…

2

**நீங்கள் எழுதிய ‘சித்தார்த்தனின் வினோதச் சம்பவங்கள்’ நாவலுக்கான கதை உண்மைச்சம்பவங்களை அடிப்படையாகக் கொண்டதா? ஏன் கேட்கிறேன் என்றால், நான் பகுதிநேரமாக வேலைக்கு செல்லும் இடத்தில் சாதனாவைப் போன்று யுத்தத்தால் பாதிக்கப்பட்டு திருமணமாகி புலம்பெயர்ந்து வந்து வீட்டு வன்முறையால் பாதிக்கப்பட்டு**

**கணவரால் கலைத்துவிடப்பட்டவர் ஒருவரை சந்தித்து இருக்கிறேன்…**

இந்த நாவல் சமகால நிகழ்வுகளுக்கு அப்பாற்பட்டதல்ல. சமகால அரசியல் சார்ந்ததுதான். நேரடியான அரசியலையும் பெயர்களையும் உபயோகித்து இருக்கிறேன். நடைமுறைக்கு அப்பாற்பட்டது, நம்பத் தகாதது என்று புராணம், தொன்மம் சார்ந்து சிலதைச் சுட்டிக்காட்டலாம். கற்பனையில் பலதை எழுதி இருந்தாலும் புலம்பெயர்ந்து வரும் பெண்கள் எதிர்நோக்கும் சிக்கல்கள் பொதுவான கதையாக தெரியலாம். பல்வேறு விதமாக இந்தப் பிரச்சினைகள் விரிவடையும். நான் எழுதியிருப்பது அதன் இன்னொரு பரிமாணம்.

**இலண்டன்காரர் நேரடியான அரசியல் நாவல். அதன் மொழி அலங்காரமற்ற எளிமையான சொற்களால் ஆனது. ‘சித்தார்த்தனின் வினோதச் சம்பவங்கள்’ அரசியல் நாவல் தான். ஆனால் முன்னையை நாவலுடன் ஒப்பிட இயலாது. மொழியை தேர்வு செய்வதிலிருக்கும் பிரக்ஞையை எப்படி கையாள்கிறீர்கள்?**

இலண்டன்காரர் நாவல் இங்கிலாந்தில் வசிக்கும் விளிம்புநிலை டயஸ்பெரா மக்களைப் பற்றி அவர்களது பிரச்சினை சார்ந்து எழுதப்பட்டது. முக்கியமான கதாபாத்திரங்கள் தமிழர்கள் அல்ல. அந்தக் கதையை எந்த மொழியில் எழுதுவது என்று சிக்கல் இருந்தது. இன்று பல மொழி பேசுபவர்களாக நாம் இருக்கிறோம். தவிர மொழிநடை எப்படி இருக்கவேண்டும் என்ற கேள்வி இருந்தது. ஈழத்து நாவலில் வரும் பாத்திரங்கள் இந்தியத் தமிழில் உரையாடினால் அது ஏற்புடையதாக இருக்காது. ஒதுக்கப்பட்ட மக்கள் சார்ந்த மொழி பாரம்பரிய காப்பிய மொழியாக இருக்க முடியாது. டானியல், தமிழ்நாட்டு தலித் எழுத்தாளர்கள் எழுதும்போது இதேவகையாக எந்த மொழியை கையாள்வது என்ற பிரச்சினையை எதிர்கொண்டார்கள்.

அழகுணர்ச்சியை தரும் மொழியை பயன்படுத்தி அவர்களது வாழ்கையின் முக்கியத்துவத்தை எழுதிவிட முடியாது. அடிப்படையில் அப்படியான மொழியில் எழுதக்கூடாது என்று நேரடியான மொழியில் தெளிவாகத் திட்டமிட்டு இலண்டன்காரரை எழுதினேன். ஆனால் எமது விமர்சகர்கள் எனது மொழி நன்றாக இல்லை என்றும், அரசியல் செயற்பாட்டில் இறங்கியதால் இலக்கியம் விட்டுப் போய்விட்டதாக சொன்னார்கள். இதனைப் பார்த்துச் சிரிக்கத்தான் முடியும்.

ஒரு படைப்பு மொழி என்று எல்லாப் படைப்புகளுக்குமான மொழி ஒன்று இருக்க முடியாது. அதனை மாற்றி நாவலுக்கான தனித்த மொழியை தேட வேண்டி இருக்கிறது. சொல்ல வரும் உள்ளடக்கத்திற்கு ஏற்ப அந்த மொழி வெளிப்பட வேண்டும் என விரும்புகிறேன். ‘சித்தார்த்தனின் வினோதச் சம்பவங்கள்’ நாவல் நேரடியாக யுத்தம் சார்ந்தது. அதற்கான மொழியில் இதனை எழுத விரும்பினேன். யுத்தம் சார்ந்து பல்வேறு விடயங்கள், உண்மைகள் அடிபட்டு போய்விடுவதாக ஒரு பயம் 2009-ல் எனக்கு ஏற்பட்டது. இங்கு யுத்தம் நடக்கும்போது பெரும்பாலான எழுத்தாளர்கள் மோசமான அரசியல் நிலைப்பாட்டை எடுத்தார்கள். யாரும் தெட்டத்தெளிவான யுத்த மறுப்பை செய்யவில்லை. இன்றும் அந்த குற்றச்சாட்டைச் சொல்வேன். இதனைக் குறிப்பிட்டு கொலை மறைக்கும்

அரசியல் என்ற புத்தகம் தொடங்கி பல்வேறு கட்டுரைகள் எழுதி உள்ளேன். நான் சொல்ல விரும்பிய பல விடயங்களை நாவலாக எழுத விரும்பினேன். அதுதான் இந்த நாவலுக்கான முதல் உந்துதல்.

பின்னர் பலர் யுத்தம் சார்ந்து எழுத வந்தார்கள். யுத்த மொழி என்பது தமிழில் அகநாறு, புறநாறு காலத்தில் இருந்து உண்டு. இன்று அது புது வடிவம் கண்டுள்ளது. ஆனால் இன்று யுத்த மொழி சார்ந்து குழப்பம் உள்ளது. அதனைப் பலர் புரிந்துகொள்ளவில்லை. அதே மொழியில் எழுத எனக்கு உடன்பாடில்லை. என்னைவிட யுத்தத்தை அறிந்தவர்கள் இன்று எழுதுகிறார்கள். அவர்களுடன் இருந்து நான் வித்தியாசப்படும் இடமாக நினைப்பது எனது அரசியல்ப் புரிதலைத்தான். அதைச் சார்ந்துதான் என்னால் எழுத இயலும். இந்த அடிப்படையில் இந்த நாவலை மீள அணுகி ஆராய்ந்தேன். எழுதுவதற்கான பல்வேறு உத்திகளை ஆராய்ந்தேன். மலேசியாவில் வாழும் எழுத்தாளர் நவீன் நடந்தும் வல்லினத்தில் சில அத்தியாங்களை எழுதிப்பார்த்தேன். ‘அப்ஸ்ராக்’ (abstract) எழுத்து முறை எனக்குப் பிடித்தது. அதில் முதலில் பரிசீலனை செய்தேன். யுத்தத்தை சுருக்க முடியாது. ஏற்கனவே அது சுருங்கிய ஒன்று.

யுத்தத்தில் சிறைபட்ட மக்கள் ஒரு பிரதேசத்திலிருந்து இன்னுமொரு பிரதேசத்திற்குப் போனேன் என்று சொல்வதைக் கேட்கும்போது ஒரு நாட்டில் இருந்து இன்னுமொரு நாட்டுக்கு போனதுபோல் சொல்வார்கள். வெளி பரந்து நேரம் சுருங்கிவிடும். மக்களிடம் பேசினால் அவர்களை அறியாமலே அது வெளிப்படுவதை அவதானிக்கலாம். முன்பு யுத்தம் சார்ந்து பாதிக்கப்ட்டவர்களின் தகவல்களை ஐ.நாவுக்கு அனுப்பும் வாய்ப்புக் கிடைத்தது. அப்போது அந்த ஆவணங்களைப் படித்துப் பார்க்க எனக்கு அதிர்ச்சியாக இருந்தது. என்னை மீறி யுத்த மொழி என்னை ஆட்கொண்டது. யுத்தத்தை அணுகும் மொழி கிடைத்தது. நாவல் எழுதுவதற்கு நான் தயராகிவிட்டதை அது உணர்த்தியது.

எனது அரசியல் ஈடுபாடு என் மொழியைத் தீர்மானித்தது. அந்த மொழியில் முற்று முழுவதாக எழுதவும் முடியாது என்பது உண்மையானது. யுத்தம் சார்ந்த பல்வேறு வரலாற்றுக் காரணங்கள் இருக்கின்றன. அவற்றை எல்லாம் எப்படி இணைக்கலாம் என்று முயன்ற பரிசோதனை முயற்சிதான் இந்த நாவல். இது வெற்றி அல்ல.

**உங்களது அரசியல் நிலைப்பாடுதான் உங்களது எழுத்தின் பலம் என்றால், ஏன் முதல் நாவல் வரைபை எழுதிவிட்டு பலருக்கு அனுப்பி கருத்துக்கேட்க வேண்டிய தேவையேற்பட்டது? சேனனின் பலவீனமா?**

எந்த ஒரு படைப்பும் தனி மனிதன் சார்ந்துதான் பிறக்கிறது. பின்னர் அது சமூகமயப்படுகின்றது. சமூகத்தில் பல்வேறு வாசிப்புகள் நிகழும். கலை சமூகத்தில் பல்வேறு பரிமாணங்களாக இயங்கும். அதனால்தான் வசதிக்கு வகைமைகள் என்று பிரிப்பதுண்டு. ஒவ்வொருவருக்கும் ஒவ்வொன்று பிடிக்கும். ஈழத்தில் – தமிழ் நாட்டில் அப்படியல்ல. இங்கு எல்லாமே ஒன்று தான்.

நான் ஒருவருக்கு மட்டும் எழுதவில்லை. மக்கள் அனைவரையும் ஒன்றாக கருதியும் எழுதவில்லை. நான் தேர்வாக எழுதுகிறேன். சிலரை குறிவைத்து எழுதுகிறேன். அதனால் பல்வேறு வாசிப்பு கொண்டவர்களிடம் கொடுத்து கருத்துக் கேட்டேன். 'வாசன்' வித்தியாசமாக வாசிப்பார். அவரால் ஜனரஞ்சமாக வாசிக்க முடியாது. அதேசமயம் நேர்கோட்டு வாசிப்பில் வாசிப்பார். அதேபோல் இலக்கிய வாசிப்பு இல்லாத ஒருவர் இன்னுமொரு வகையில் கருத்துச் சொல்வார். இவர்களின் கருத்துக்களை தொகுத்து உள்வாங்கி செல்லவேண்டிய தேவை இருந்தது. அது எல்லா எழுத்தாளர்களுக்கும் இருக்க வேண்டியது. அதற்காகத்தான் பலரிடம் வாசிக்கக் கொடுத்து கருத்து எடுப்பது. இது இல்லாது தனிமையில் சுய விசாரணை செய்வது கடினம்.

**இந்த நாவலை சிலரை குறிவைத்து எழுதியதாகச் சொல்கிறீர்கள். அது யாரை?**

ஈழ அரசியல் சார்ந்து புரிதல் அற்றவர்களுக்கு

**அவர்களுடன் உரையாடுவதற்கு கட்டுரைகள் எழுதலாம். முன்னமே நிறைய கட்டுரைகள் எழுதி உள்ளீர்கள். ஏன் நாவல் வடிவத்தைத் தேர்ந்தெடுக்கிறீர்கள்?**

இதுவொரு நல்ல தெளிவான கேள்வி. எனக்கே எழுதும்போது ஒரு சந்தேகம் வந்தது. நான் எழுதுவது புனைவா prose ஆ என்று. அதனை வாசிப்பவர்கள் தான் சொல்லவேண்டும். கலை prose ஐ விட பலமானது. குறிப்பிட்ட தளத்துக்கு நான் எழுதுகிறேன். அரசியற் செயற்பாட்டில் இருப்பவர்களின் தளம் அது. தவிர இது எல்லா இடங்களுக்கும் போய்ச் சேரவேண்டும் என்றும் விரும்புகிறேன். இதில் சிக்கல் என்னவென்றால் இந்த நாவல் பேசும் அரசியல் தளம் பரந்துபட்டது அல்ல. சில விசயங்கள் பலருக்குத்தெரியாது. அதுபோய் சேரவேண்டும் என்பதற்காக நாவலாக எழுதியுள்ளேன். நாவல் படிப்பவர்களுக்கு இது புரிந்தால் சமூகத்தில் பல தளத்திற்கு இது நகரும் என்று நம்புகிறேன். அரசியல் நாவல்களின் பங்களிப்பே அதுதான்.

**'சித்தார்த்தனின் வினோதச் சம்பவங்கள்' நாவல் யதார்த்தவாத நாவல் அல்ல. தொன்மக் கதைகள், மஜிக்கல் ரியலிச சித்தரிப்புகள் , காலத்தை கலைத்தல் என்று பல்வேறு உத்திகளை பயன்படுத்துகிறீர்கள். ஏன் இந்த வடிவம்?**

வடிவம் முக்கியம். கலைப்படைப்பின் கரு எவ்வளவு முக்கியமோ அதபோல வடிவமும் முக்கியம். இதில் பலர் முரண்படலாம். முன்பு போர்மலிஸ்ட்கள் (formalist) என்று சிலர் இருந்தார்கள். அவர்கள் வடிவம் முக்கியம் கரு அல்ல என்றார்கள். மாயக்கோவஸ்கி கவிதைகளை உதாரணமாக எடுத்துக் கொள்ளுங்கள். எனக்கு இரண்டும் முக்கியம். வடிவம் தான் கருவை சரியாக வெளிப்படுத்தும் என்பது என் நிலைப்பாடு. ஒன்றை எழுதும்போது அது என்ன வடிவத்தை நோக்கி நகர்கிறது என்ற தெளிவு இருக்க வேண்டும்.

ஆரம்ப காலத்தில் Gender neutral (பாலினம் அற்ற) – கதை ஒன்று எழுதினேன். பால் வேறுபாடு என்னவென்று வெளிப்படுத்தாமல் எழுதிய கதை. இறுதியில் மட்டுமே அதற்கான விடை சாதுவாக இருக்கும். அது பலருக்கு அன்று புரியவில்லை. இன்றும் இல்லை என்றே




…

நினைக்கிறேன்.

வடிவத்தை கவனத்தில் எடுக்க மறுக்கிறார்கள். நாங்கள் ஒன்றையே பின்பற்றி மந்திரம் ஓதுவது போல திரும்பத்திரும்ப ஓதி அதற்குள்ளே முடங்கி மங்கிப்போனோம். அது எங்கள் இயல்பாகிவிட்டது. அதனால் புதிய வடிவங்களில் கதைகள் வரும்போது அதனை புரிந்துகொள்ள பலர் தடுமாறுகின்றார்கள். வரவேற்கத் தயங்குகிறார்கள். இதனால் புதிதாக சிந்தித்தல் தமிழ் இலக்கிய உலகத்தில் அதிகம் அடி வாங்குகின்றது. இதுபற்றி நிறைய உரையாடல்கள் தேவையாக இருக்கின்றது.

உதாரணத்திற்கு ஒரு சம்பவம் சொல்கிறேன். ஒருவர் பஸ்ஸில் வருகிறார். நிறுத்தத்தில் இறங்கி தான் வந்த அனுபவத்தை அப்படியே சொல்லலாம். அந்த விடயத்தை நிறுத்தத்தில் நின்ற ஒரு இயக்குனர் அச்சொட்டாக படமாக எடுக்கலாம். இரண்டுக்கும் இடையில் என்ன வித்தியாசம்? சொற்கள் மற்றும் பார்வை சார்ந்துதானே. கலைப்படைப்பு என்பது பிரதி செய்தல் அல்ல.

**இருவரும் ஒரே சம்பவத்தைப் பார்த்தாலும், இருவருக்கும் இடையிலான அகம் என்பது வேறுதானே? ஒருவர் தன்னுடைய உணர்வு, சமூக அரசியல் புரிதலுடன் ஒரு சம்பவத்தைப் பார்ப்பதற்கும், இன்னுமொருவர் பார்ப்பதற்கும் இடையில் வேறுபாடு இருக்காதா?**

நல்ல படைப்பாளிக்கு அது போதாது. பல கோணங்கள் உருவாக்கலாம். ஒரு கலைப்படைப்பு என்பது சம்பவங்களை உள்வாங்கி படிமங்களை செரித்து கொள்ள வேண்டும். அதனை சரியாக படிமப் படுத்த வேண்டும். அங்கே தெரிவு, வரிசை இருக்கும்.

அதுதான் படைப்பாளியின் தனித்தன்மையை வெளிக்காட்டுகிறது.

**யதார்த்தவாத நேர்கோட்டு கதை சொல்லல் முறையிலிருந்து மாறுபட்டு எழுதுவதால் என்ன பிரயோசனம்? உத்திகள் மேலதிக வாசிப்புக்கு எந்த விதத்தில் உதவுகிறன?**

யதார்த்தவாத காலம் டோல்ஸ்டோய் காலத்தோடு முடிவடைந்துவிட்டது. அவர் அதில் ராஜா. அக்காலம் முடிந்துவிட்டது என்பதற்காக யாரும் எழுதாமல் இல்லை. பலர் எழுதுகிறார்கள்தான். என்னைப் பொறுத்தவரைவரையில் முடிந்துவிட்டது.

மனிதர்களுடையை புரிதல், இயக்கம், படைப்புலகம் எல்லாம் மாறிக்கொண்டுள்ளது. யதார்த்தவாத காலத்தில் படம்பிடித்துக் காட்டுதல் தேவையாக இருந்தது. இன்று அது தேவையில்லை. புகைப்படக் கலை வீடியோ பதிவுகள் வருவதால் மங்கிப்போகிறது. இப்படிக் காலம் மாறிக்கொண்டுள்ளது. யதார்த்தத்தை காட்ட வேறு எழுத்து முறைக்கு செல்லவேண்டியுள்ளது. இந்த நாவல் என்ற மீடியத்திற்கு என்ன தேவை என்ற கேள்வி வருகிறது. தொடர்ந்தும் யதார்த்தமாக இருந்தால் பேசாமல் படமாக எடுத்துவிடலாம். அதற்கும் மேலாக எழுத்தில் பல சிடுக்கான இடங்களையும் தொடவேண்டி உள்ளது.

ஒரு விடயத்தை சொல்லப் போனால், வரலாறு சார்ந்த பிரச்சினை இருக்கிறது, நடைமுறை சார்ந்த பிரச்சினை இருக்கிறது, கதாப்பாத்திரம் சார்ந்த பிரச்சினை இருக்கிறது. இப்படி பல்வேறு பரிமாணங்கள் இருக்கிறன. இவற்றை எல்லாம் சேர்த்து எழுத்தில் எப்படிக் கொண்டுவருவது என்ற கேள்வி வருகிறது. அதற்காக பல்வேறு வடிவ உத்திகளுக்கும், எழுத்து முறைகளுக்கும் செல்ல வேண்டியுள்ளது. மஜிக்கல் ரியலிசம், மிகுகற்பனை எல்லாம் அதனால்தான் உருவாகி வந்தன. இரண்டாயிரம் பக்கங்களில் எழுதப்படும் யதார்த்தவாத நாவல் பேசுவதை இருநூறு பக்கங்களில் மஜிக்கல் ரியலிச நாவல்கள் பேசிவிடும்.

3

**யுத்தம் சார்ந்த பல சித்தரிப்புகளை இந்த நாவலில் நிறைய எழுதி உள்ளீர்கள். இளம் வயதிலே நாட்டைவிட்டு புலம்பெயர்ந்துவிட்டீர்கள். அதற்கு முன்னர் ‘குழந்தைப் போராளியாக’ யுத்தத்தில் பங்குபற்றியிருந்தால் இன்னும் நன்றாக எழுதி இருக்கலாம் என்று நினைத்தது இல்லையா?**

நல்ல கேள்வி. குழந்தைப் போராளி என்பதில் இரு பகுதி உண்டு. ஒன்று குழந்தை, மற்றையது போராளி. சிலர் குழந்தைகளாக மட்டும் இருந்தார்கள், போராளியாக அல்ல. போராளி என்பதை சும்மா சேர்த்துவிடுவது.

நான் சிறுவனாக இருந்தபோது என்னைப்போல பலரும் இயக்கம் சார்ந்து பல்வேறு நடவடிக்கைகளில் ஈடுபட்டு இருந்தார்கள். அதைச் செய்து இருக்கிறோம் என்பதற்காக போராளி என்று சொல்ல முடியாது. பிற்பட்ட காலங்களில் நிஜமாகவே பல சிறார்கள் ஆயுதம் ஏந்தி களத்தில் மடிந்து இருக்கிறார்கள். இயக்கங்கள் உருவாகிய காலத்தில் அப்படி நிலைமை இருக்கவில்லை. விடலைகள் சுற்றிச்சுற்றி ஓடித் திரிந்தார்கள். ஆயுதங்கள் வைத்திருந்த அண்ணாமார்களின் பின்னே ஓடித்திரிந்தவர்கள் குழந்தைப் போராளிகள்

அல்ல. அவர்களைப் போய் படியுங்கள் என்று துரத்திவிடுவார்கள். அதிகம் அடம்பிடித்தால் சிறிய வேலைகள் தருவார்கள். பங்கர் வெட்டச் சொல்வார்கள். இதையெல்லாம் மெருகூட்டி இயக்கத்தில் இருந்தேன் என்று சொல்ல முடியாது. எனது அனுபவங்களை அப்படிச் சொல்ல மாட்டேன். அது மோசடி.

**குறைந்தபட்சம் வேலணையில் சுவரொட்டிகள் கூட ஒட்டவில்லையா?**

யார் அப்படியெல்லாம் சொல்கிறார்கள்? அப்படியெல்லாம் நடக்கவில்லை. ஆரம்ப காலத்தில் பல்வேறு இயக்கத்தினர் வருவார்கள். நான் புலிகளுடன் சேர்ந்து பங்கர் வெட்டி இருக்கிறேன். அப்போது வோக்கிடோக்கி முதலானவைகளை எடுத்துப் பார்ப்போம். அவர்களுடன் திரிவோம். பின்னர் சண்டை வரும். ஆமிக்காரர்கள் மக்களைத் துரத்துவார்கள். நாங்கள் ஓடித் தப்புவோம். இதனை குழந்தைப் போராளி என்று அடையாளப்படுத்தி என்னை சந்தைப்படுத்த மாட்டேன். அது நியாயம் அற்றது. அப்படிச் செய்து தமிழிலக்கியத்தில் புத்தகம் விற்பவர்கள் இருக்கிறார்கள். அதையெல்லாம் நான் செய்ய மாட்டேன்.

**நேரடியான யுத்த அனுபவங்கள் பெரிதாக உங்களுக்கு இல்லையா? பிற்பாடு எப்படி அதனை எழுதுவதற்கான முயற்சிகளை செய்தீர்கள்?**

யுத்த அனுபவம் எனக்கு உண்டு. இந்திய இராணுவத்துடனான யுத்தம், இலங்கை இராணுவத்துடனான யுத்தம் போன்றவற்றில் எல்லாம் பாதிக்கப்பட்டு இருக்கிறேன். எனக்கு யுத்தம் தெரியும். அதற்குள் இருந்திருக்கிறேன். துப்பாக்கி சூடு, காயங்கள், இரத்தம், படுகொலைகள் எல்லாம் எனக்குத் தெரியும். ஆனால் 2009-ல் நடந்த இறுதியுத்த அழிவு என்பது மிகக் கோரமானது. அதனுடன் தொண்ணூறில் நடந்த யுத்தத்தை ஒப்பிட முடியாது. இறுதி யுத்த அனுபவம் எனக்கு இல்லை. பாதிக்கப்பட்ட மக்களுடன் உரையாடியே அதனைப் புரிந்துகொண்டேன். அப்படியும் அதனை முழுமையாக புரிந்துகொள்வது சாத்தியம் அற்றது என்றே நினைக்கிறேன். அத்தனை கோரமானது அந்த அழிவு.

**புலிகளின் யுத்த மீறல்களும் நாவலில் உள்ளன – இராணுவத்தின் போர் குற்றங்களும் நாவலில் உள்ளன. புலி எதிர்ப்பு, புலி ஆதரவு என்ற இருமையில் சேனன் சிக்குவாரா?**

ஆரம்பத்தில் நீங்கள் கேட்ட கேள்விக்கும் இதற்கும் தொடர்பு உண்டு. புனைவில் அரசியல் நிலைப்பாட்டை தெளிவாக வைக்க முடியாது. என் நிலைப்பாட்டை அவ்வாறு வைக்கவில்லை. மேலோட்டமான மக்கள் சார்ந்த ஒரு நிலைப்பாட்டை நாவலில் பார்க்கலாமே தவிர புலிகளுக்கு சார்பானதோ, புலி எதிர்பாளர்களுக்கு சார்பானதோ அல்ல. இது புலி ஆதரவு நாவல், ஆகவே சிலதை சொல்லவேண்டும் என்பதற்காக புலிகளின் தவறுகளை மென்மையாகச் சொல்கிறார் என்று குற்றம்சாட்டுகிறார்கள். இங்கே இலக்கிய வட்டத்தில் புலி எதிர்பாளர்கள் என்று- அதை மட்டும் குறியாக கொண்டு இயங்கும் சிலர் இருக்கிறார்கள். அவர்கள் அனைவரும் வடிகட்டின முட்டாள்கள். வளர்ச்சியடையாதவர்கள். புலிகளை முற்றிலும் அடித்து எழுதினால் அவர்கள் திருப்திப்படுவார்கள். அதை நான் செய்ய மாட்டேன். செய்யவில்லை. அவர்களுக்கு இந்த நாவல் படுதோல்வியாக இருக்கும். வாசிக்க முடியாத

நாவலாக, தோற்றுப்போன நாவலாகத் தோன்றும். அது எனக்கு சந்தோஷமான விஷயம். அதை ஏற்றுக்கொள்கிறேன். அவர்களால் அந்த அளவுக்கு மட்டுமே சிந்திக்க முடியும்.

அதுபோல் புலிகளுக்கு முற்றிலும் ஆதரவானவர்கள் இருப்பார்கள். அவர்களும் கோபப்படுவார்கள். ஆனால் உண்மையை உள்ளபடிதானே எழுத முடியும். சாதனா புலம்பெயர்ந்து அனுபவித்த கொடுமைகள் இங்கு நடப்பது தானே. அதையும் மறைக்கவா முடியும்? வரலாற்றில் அவர்கள் வந்து சேர்ந்த இடம் அப்படியானது.

முடிவடைந்த ஈழ யுத்தம் சார்ந்து பத்து புத்தகங்கள் படித்து தெரிந்து கொள்வதைவிட, எனது நாவலை வாசித்து சில படிமங்கள் ஊடாக யுத்தம் பற்றி பலதைத் தெரிந்து கொள்ளலாம். அதுதான் எனது முழுமையான நோக்கம். அது வென்றதா என்பது போகப்போக தெரியும். பார்க்கலாம். அதனால்தான் பலதை படிமங்கள் ஆக்கியுள்ளேன்.

**நீங்கள் ஓர் அரசியல் செயற்பாட்டாளர். உங்களுக்கு என்று திட்டவட்டமான தெளிவான அரசியல் நிலைப்பாடு இருக்கிறது. அப்படியிருந்து கொண்டு நாவலுக்குள் ஒரு திடமான அரசியல் தரப்போடு நின்று எழுதாமல், தள்ளி நின்று எழுதுதல் சவாலாக இருக்கவில்லையா?**

முக்கியமான கேள்வி. டானியல் போன்றவர்கள் அமைப்பு சார்ந்து இயங்கும்போது இப்படியான சிக்கலை எதிர்கொண்டார்கள். தமிழ்நாட்டில் கம்னியூனிஸ்ட், திராவிட இயக்கத்தில் உள்ளவர்களும் எதிர்கொண்டு இருக்கிறார்கள்.

பராசத்தியிலிருந்து அன்று வெளிவந்த பல படங்கள் திராவிட கொள்கையை பரப்பும் படங்கள்தான். ஒரு காலத்தில் தமிழ் சினிமாவை நிமிர்த்திவிட்டது நேரடியான திராவிட பிரச்சாரங்கள். எந்தவொரு எம்ஜியார் படத்தை- பிரச்சாரம் இல்லாத படம் இல்லை என்று சொல்ல முடியும்? பராசத்தி படம் கூட பிரச்சாரப் படம்தான். அதபோல் தான் ஜெயகாந்தன். இப்படி நிறையச் சொல்லலாம். ஆனால் அமைப்பு சார்பு x கலை என்ற பிரச்சினை வரவில்லை. 'ஜோர்ஜ் ஓர்வல்' அமைப்பு சார்ந்து இயங்கியவர். அதேபோல மார்க்சிம் கார்க்கி. அவர்களது எழுத்தின் மீதெல்லாம் அமைப்புக்கும் அரசியலுக்கும் இடையிலான விவாதம் எல்லாம் நடந்துள்ளது. தமிழில் இப்படி நடக்கவில்லை. அது நடக்கவேண்டும் என்று எதிர்பார்க்கிறேன்.

நீயூற்றலாக எழுதுகிறேன் என்று யாரும் சொல்ல முடியாது. அப்படி சாத்தியம் இல்லை. எந்த ஒரு இலக்கியவாதியும் நீயூற்றலாக இல்லை. எவருக்கும் ஒரு சார்பு இருக்கும். எந்தப் பாத்திரத்தை எப்படி வடிவமைகிறோம் என்பதிலே சார்பு வரும். இலக்கியவாதியை அதன் அடிப்படையில் ஒரு விமர்சகர் கட்டுடைக்கலாம். அமைப்பு சார்ந்து இயங்குபவர்கள் பிரச்சாரமாக முன்வைக்காமல், தங்கள் அரசியல் நிலைப்பாட்டில் நின்று உலகத்தைப் பார்ப்பதுதான் முக்கியமானது. ஜார்க் லண்டனை உதாரணமாகச் சொல்லலாம். இது இன்னுமொரு வகையான அழகியல்.

அல்லியை, சாதனாவை இரண்டு வெவ்வேறு பின்புலத்தில் வைத்து எழுதியிருப்பதாக

கருதுகிறேன். அரசியல் தளத்தில் இயங்காவிடில் என்னால் அப்படி எழுதியிருக்க முடியாது. சாதரணமாக எழுதியிருப்பேன். திட்டமிட்டும் பலவிடயங்களை எழுதியிருக்கிறேன். அதையெல்லாம் வாசிப்பவர்கள் புரிந்துகொள்ள வேண்டும் என்ற அவா என்னிடம் உள்ளது. கதாபாத்திரங்களை நீண்ட ஆய்வோடு எழுதியுள்ளேன். பொதுக் கதையாக பெண்களின் கதையை நீங்கள் சொல்லலாம். ஆனால் அது அப்படியல்ல. நிறைய விடையங்களை சேர்த்து படிமப்படுத்தியுள்ளேன்.

என்னுடைய நாவலையும் இம்சையையும் ஒப்பிட்டுப் பேசும் ஒருவர், ஷோபா பாலியல் வல்லுறவை அழகியலாக எழுதியிருக்கிறார் நீங்கள் வக்கிரமாக எழுயிருக்கிறீர்கள் என்று சாடியிருந்தார். வல்லுறவை அழகியலாக எழுத முடியுமா? அது அப்படிப்பட்டதா? வல்லுறவில் இருக்கும் அருவருப்பு எழுத்தில் வரவேண்டும் என்று தெளிவாக நான் எழுதினேன். ஆனால், இதனை ஒப்பிட்டுப் பேசும்போது என்னிடம் அழகியல் இல்லை என்கிறார். பாலியலை நீங்கள் கட்டமைத்திருக்கும் அழகியலாகப் பார்ப்பது வக்கிரமான சிந்தனை.

4

**இச்சா நாவல் வாசிக்கும்போது என்ன தோன்றியது?**

கலாமோகன் படைப்புகள் சார்ந்த கூட்டத்திற்கு வரும்போது வாசன் தோழர் நேரடியாக இரண்டு நாவல்களுக்கும் தொடர்புகள் இருப்பதாகச் சொன்னார். நீங்களும் அங்கு இருந்தீர்கள். உங்களுக்கு நடந்தது தெரியும். பின்னர்தான் நாவலை உங்களிடம் இருந்து இரவல் வாங்கிப் படித்தேன். ஆரம்பப் பக்கங்கள் வாசிக்கும்போது என்ன தொடர்புகள் இருக்கும்? என்ன இவர்கள் சொல்கிறார்கள்? என்றே தோன்றியது. போகப்போகத்தான் தொடர்புகள் இருப்பது எனக்குத் தோன்றியது. வாசித்து முடித்த போது எனக்கு அதிர்ச்சியாக இருந்தது. இதைப்பற்றி வெளிப்படையாக பேசியே ஆகவேண்டும் என்று முடிவு செய்தேன்.

**இதை ஏன் நீங்கள் அப்போது பொதுவில் பேசவில்லை?**

இரண்டு நாவல்களும் முதலில் வாசகர்களுக்கு முன்னால் இருக்கவேண்டும். இரண்டையும் வாசிக்கும் ஒரு வாசகர்கள் இரண்டிலும் தொடர்புகள் இருப்பதை கண்டு பிடிப்பார்கள். இப்போது இதனை வாசித்து என்னை அடித்து நொறுக்கி எழுதியிருப்பவர்கள் கூட இரண்டு நாவல்களுக்கும் இடையில் ஒற்றுமை இருப்பதைச் சொல்லி இருக்கிறார்கள். ஏனென்றால் அதனை மறைக்க முடியாது. ஒரு ஒற்றுமையும் இல்லை என்று இரண்டையும் வாசித்தவர்கள் எவருமே எழுதவில்லை.

ஒரு நாவலாசிரியர் அவசரமாக நாவலை கொண்டு வருகிறார். அதன் நிழலில் இன்னுமொரு எழுத்தாளன் மறைகிறான் என்ற சூழ்நிலையை உருவாக்கினால் அதனை ஏற்றுக்கொள்ள நான் தயார் இல்லை. அதனை ஒருபோதும் விடுவதாக இல்லை.

இச்சாவை வாசித்துவிட்டு எனது நாவலை வெளியிடாமல் இதைப்பற்றி பேசியிருந்தால், முதலில் உன் நாவலை கொண்டுவா வாசித்துவிட்டு நாங்கள் முடிவு எடுக்கிறோம் என்று சொல்லியிருப்பார்கள். உண்மையில் இதனை வாசித்துவிட்டு பேசவேண்டியது இதனைப்

படிப்பவர்கள்தான். அதனால் நாவல் வெளியாகும் வரை பொறுமையாக இருந்தேன். நண்பர்கள் வட்டத்தில் மட்டுமே உரையாடி இருந்தேன். கொரோனா நோய்தொற்று அச்சாக்க பணியில் இன்னும் காலதாமதத்தை செய்துவிட்டது.

**இந்த நாவலில் சில இடங்களில் ஒற்றுமை இருப்பதை மறுக்கவில்லை. (மேலே அட்டவணை இட்டுள்ளேன்) நாவலில் சாதனா புலம்பெயரும் பகுதிகளும் அதை ஒட்டிய சம்பவங்களும். இவை ஏன் தற்செயலாக இருக்கக்கூடாது?**

வாய்ப்பேயில்லை. நீங்கள் சொல்லும் ஒற்றுமைகளை சாதாரணமாக வாசிக்கும் எவராலும் சொல்லிவிட முடியும். இதற்கு அப்பாலும் ஆரம்பத்தில் இயக்கத்தில் இணையும் கதாப்பாத்திரம் சார்ந்தெல்லாம் நிறைய ஒற்றுமைகள் இருக்கின்றன.

முதல் கேள்வியாகக் கேட்டீர்கள், உங்களுக்கும் இப்படியான பின்புலத்தில் வந்தவர் ஒருவரை வேலையிடத்தில் தெரியும் என்று. குற்றச்சாட்டுகளை பல்வேறு வகையில் வைக்கலாம்.

நான் Copy என்று ஒருபோதும் சொல்லவில்லை. Plagiarism என்று எங்கும் சொல்லவில்லை. இலக்கியம் என்பது தான்றோன்றித்தனமாக வருவதில்லை. சமூகத்தின் பல்வேறு பிரச்சினைகளை உள்வாங்கும் எழுத்தாளரிடமிருந்து வருகின்ற வெளிப்பாடுதான் இலக்கியச் செயல்பாடு. அது ஏதோவொரு விடயத்தில் ஒன்றைப் பின்பற்றுதல், இன்னொன்றைப் பார்த்து எழுதுதல், போலச் செய்தல், சேர்த்து எழுதுதல், கேட்டு எழுதுதல் என்றுதான் இயங்குகின்றது. இப்படிதான் இலக்கியம் இயங்க முடியும்.

நேரடியாக ஒன்றைப் பார்த்து அப்படியே எழுதிய சம்பவங்களும் உண்டு. அது தவறு. வேறு சிலர் சிலதை மட்டும் பார்த்து எழுதியும் இருக்கிறார்கள் அது மன்னிக்கக்கூடிய தவறு. இந்த எந்தக் குற்றச்சாட்டையும் இச்சா விடயத்தில் நான் வைக்கவில்லை. தெளிவாகச் சொல்கிறேன் ஐடியாஸ், (ideas) வடிவம் சார்ந்த ஐடியாஸ் கொள்ளையடிக்கப்பட்டுள்ளது. அதைத்தான் குற்றச்சாட்டாக வைக்கின்றேன்.

ஷோபாசக்தி யதார்த்தவாத எழுத்தாளர். ஆரம்பத்தில் எழுதிய கதைகளைப் பாருங்கள். நேர்கோட்டில் எழுதிய கதைகள். ஷோபாவுக்கு வடிவம் சார்ந்த கற்பனைகள் சுட்டுப் போட்டாலும் வராது. கலாமோகன் போன்று கவித்துவமாக அல்லது கற்பனாவாதமாக வேறுவிதமாக யாரும் எழுதினால் சோபாவுக்கு பிடிக்காது. இதனை நேரடியாகச் சொல்கிறேன்.

**ஷோபாசக்திக்கு பிடிக்காது, பிடிக்கும் என்பதை எதை வைத்துச் சொல்கிறீர்கள்?**

நான் அவருடன் இருந்திருக்கிறேன். நேரடியாக முரண்பட்டு இருக்கிறேன். கலாமோகன் கதைகள் ஆகட்டும், என்னுடையை one self சிறுகதை ஆகட்டும் இவைகள் வெளிவந்தபோது ஷோபாசக்தி வெளிப்படையாகவே பொறாமைப்பட்டார். இதெல்லாம் கதையா என்று பலருடன் அடிபட்டவர் ஷோபா. அந்தக் காலத்தில் இருந்தவர்களுக்கு இந்த விடயங்கள் தெரியும். அந்தவகையான எழுத்துகள் எழுந்தால் தன்னுடைய எழுத்துகள் அடிபட்டு

போய்விடும் என்ற பயம் அவருக்கு இருந்தது. அவர் நல்ல எழுத்தாளன்தான். ஆனால், அவரிடம் இருக்கும் சுயநலம்தான் அவரது அழிவுக்கான தொடக்கம்.

அவர் தமிழ்நாட்டுக்கு முதன் முதலில் சென்றபோது என்ன புத்தகங்கள் கொண்டு சென்றார்? அப்போது ஏதும் புத்தகங்கள் எழுதி வெளியிட்டு இருந்தாரா? அவரைச் சந்தித்த எழுத்தாளர்கள் நினைவுபடுத்தி இதனைச் சொல்ல வேண்டும். அவர் மோசடியான வியாபாரி என்பதெல்லாம் புதிய கதை அல்ல. இது பெரும்பாலானவர்களுக்கு தெரிந்த கதை. அகதியாக ஐரோப்பாவுக்கு நுழைந்து விசா இல்லாமல் விளிம்பு மனிதர்களாக பலர் கடினப்பட்டுக் கொண்டு இருக்கும்போது, இந்தியா சென்று வர ஷோபாவுக்கு மட்டும் தான் அப்போது வாய்ப்பாக இருந்தது. அந்தவாய்ப்பு அவருக்கு தன்னை சந்தைப்படுத்த உதவியது.

இதையெல்லாம் ஏன் சொல்கிறேன் என்றால் வரலாற்றுடன் இவற்றை புரிந்துகொள்ள வேண்டும் என்றுதான்.

**ஷோபாசக்தியின் படைப்புகள் நன்கு பேசப்படுகின்றன. என்ன தான் வியாபாரப்படுத்தினாலும் திறமை இல்லாமல் இலக்கியத்தில் எதுவும் நிலைக்காது. இன்றைக்கும் ஷோபாவின் படைப்புகள் நிலைத்து நிற்கின்றன தானே?**

ஷோபாசக்தி நல்ல சிறுகதைகளை எழுதி இருக்கிறார். மறுக்கவில்லை. ஆனால் அவர் இன்னும் நாவல் எழுதவில்லை. கொரில்லா கூட நாவல் அல்ல. கொரில்லா நல்லதொரு எழுத்து நடையில் எழுதப்பட்ட பிரதி. யதார்த்தவாத எழுத்தின்படி கொரில்லா நாவல் இல்லை. அதன் நடைக்காகவும் பகிடிக்காகவும் அது பேசப்பட்டது.

தனிப்பட்ட ரீதியில் கொரில்லா எனக்கு பிடிக்கும். அதுவேறு விடயம். வடிவம் அதற்கான காரணம். ஆனால், கதை என்று கொரில்லாவில் என்ன இருக்கிறது. உங்களால் கதை என்ன என்று சொல்ல முடிகிறதா?

**புதிய வடிவங்கள், சிந்தனைகளின் அடிப்படையில் படைப்பாக்க செயல்பாடு ஒவ்வொரு காலகட்டதிலும் முன்னகரும். ஷோபாவின் முயற்சிகளை அப்படிச் சொல்லலாம் தானே?**

ஷோபாவுக்கு நாவல் என்ற வடிவம் சார்ந்து பிரச்சினைகள் உண்டு. அவர் யதார்த்தவாதி. அதனை மட்டும் வைத்துக்கொண்டு உத்திகள் ஊடாக கதைகள் சொல்வதை அவரால் மாஸ்டர் செய்ய முடியவில்லை. கொரில்லா நாவலில் இலக்கம் இட்டு அகதி விண்ணப்ப முறையில் நாவல் எழுதப்பட்டு இருக்கும். ஏற்கனவே அந்த வடிவத்தில் 'அம்மா' இதழில் நான் ஒரு சிறுகதை எழுதி இருக்கிறேன். அந்த உத்தி சார்ந்த ஐடியா எப்படி வந்தது? ஸ்மிலகிரம் என்று ஒரு கொன்செப்ட் இருக்கு. ஜாக் தெரிதா அதை புதிய முறையில் விளக்கி இருப்பார். அந்த தாக்கத்தில்தான் அந்தச் சிறுகதை எழுதினேன். அந்த உத்தி ஏற்கனவே இருப்பது. இதே வடிவத்தில் அவர் நாவல் எழுதி இருக்கிறார். ஆனால் எந்த கிரடிட்டும் கொடுக்கவில்லை. நான் எழுதவேண்டாம் என்று சொல்லவில்லை. இத்தகைய மறைப்பு நடைமுறைகள் வேண்டாம் என்று சொல்கிறேன். இதைப்பற்றி நான் இதற்கு முன்னம் எவருடனும் பேசியதில்லை. இப்போது சொல்ல வேண்டியுள்ளது. இவரது மோசடித்தனத்தின்

வரலாறைச் சொல்ல வேண்டியுள்ளது. அந்தச் சிறுகதையை தான் படிக்கவில்லை என சொல்லி ஷோபா தப்பி விட முடியாது. அதைப் பாராட்டி சாரு நிவேதிதா பேச அதைக் கேட்டு ஷோபா பதறிப் பேசிய சம்பவம் ஒன்று உண்டு. மனுஷ்யபுத்திரன் வீட்டில் நடந்த சம்பவம். அவர்கள் ஞாபகம் வைத்திருக்கிறார்களோ தெரியாது. எனக்கு நல்ல ஞாபகம். ஏனெனில் ஷோபாவின் போக்கை எண்ணி அப்பவே வருந்தி உள்ளேன்.

இப்போது உள்ளவர்களுக்கு முன்னர் இருந்த ஷோபாவை தெரியாது. நான் ஏதோ முழுமையாக எனது நாவலை திருடி ஷோபா கொப்பி அடித்துவிட்டதாக குற்றம் சுமத்தியுள்ளேன் என்று நினைக்கிறார்கள். உணர்ச்சிவசப்பட்டு வாளைச் சுழற்றுகிறார்கள். இவர்களுக்கு வரலாறு தெரியாது. ஆழமாக விடயங்களை பார்க்கும் விரிவும் கிடையாது.

ஷோபாவின் கடந்தகால வரலாறுகள் கூட எனக்கு பெரிய பிரச்சினை கிடையாது. ஆனால், இன்னுமொரு எழுத்தாளன் இருக்கிறான், அதுவும் அவர்களுக்கு நன்றாகத் தெரிந்த எழுத்தாளன். அவன் நாவலைக் கொண்டுவரப்போகிறான் என்று தெரிந்து அதற்கு முன்னம் வெளியிட்ட ‘அரசியல் அப்ரோச்’ தான் எனக்குப் பிரச்சினை. இந்தமாதிரிதியான நடைமுறைகளை தமிழ் இலக்கியத்தில் அனுமதிக்கக்கூடாது நாங்கள். இதன் மூலம் இலக்கியத் திருட்டு செய்வது, வியாபாரம் செய்வது போன்ற விடயங்களை எதிர்க்க விரும்புகிறேன். எழுத்தாளனின் வேலை எழுதுவது. அதில் நில்லுங்கள் என்கிறேன். இப்படியான மோசமான கலாச்சாரத்தை உருவாக்கியதில் ஷோபாவுக்கு முக்கிய பங்கு உள்ளது. அதை முடிந்தால் மறுத்து எழுதட்டும் பார்க்கலாம்.

இலக்கியச் சந்திப்பு விடயத்தில் ஷோபா நடந்து கொண்ட விதம் எல்லோருக்கும் தெரிந்தது. அதனைக் குழப்பியதில் பெரும் பங்கு ஷோபாவுக்கு இருப்பது பலருக்குத் தெரியும். ஷோபாவின் நேர்மையற்றதனம் பலருக்குத் தெரியும். இல்லை என்று மறுத்து எழுதட்டும் பார்க்கலாம். மோசடி, இலக்கிய வியாபாரம் போன்ற ஒரு சில கடின சொற்களை அவர் நோக்கி வைத்து இருக்கிறேன். இது ஷோபாசக்தியை திருத்தும் நோக்கில் வைக்கவில்லை. மாறாக தமிழ் கலை உலகை பற்றிப் பிடித்திருக்கும் கேவல நடைமுறைகள் பலதுக்கும் எதிரான ஒட்டுமொத்த எதிர்ப்பாக வைக்கிறேன். தீவிர இலக்கிய உலகிலாவது சந்தை உறவுகளை மட்டுப்படுத்த நாம் முயல வேண்டும். இல்லை என்றால் நல்ல இலக்கியம் செய்யும் உந்தல் மழுங்கி விடும். அதற்கான குரலாக ஷோபா மாறட்டும். அத்தருணம் என் நிலைப்பாடு மாறும். ஆனால் சந்தை மோகத்தில் மூழ்கி விட்ட அவரிடம் இருந்து இனி நாம் அதை எதிர்பார்க்க முடியாது.

**சரி நாவல் விடயத்திற்கு வருவோம். கொரில்லா நாவல் பற்றிச் சொன்னீர்கள். நீங்கள் எழுதிய சிறுகதையின் வடிவ ஐடியா சார்ந்து எழுதப்பட்டது என்று. அந்த வடிவம் பைபிள் தொடக்கம் இருக்கிறதல்லவா? ஷோபா எதில் ஒன்றிலோ தாக்கம் அடைந்து எழுதி இருக்கலாம் அல்லவா?**

அவருடன் அந்தக் காலத்தில் அந்த வடிவம் பற்றி பேசியிருக்கிறேன். நாவல் எழுதுவதற்கோ கதை எழுதுவதற்கோ ஐடியா என்பது மிக முக்கியம். முன்பு யாராவது நான்

சொல்லும் ஐடியாவில் இருந்து நல்ல கதை எழுதினால் சந்தோஷப்படுவேன். கொஞ்சம் கவலையாக இருந்தாலும் கதை நன்றாக வந்திருந்தால் திருப்தியே. ஐடியாவுக்கு எனக்கு பஞ்சம் இருந்ததில்லை. இன்று அப்படியல்ல. ஷோபாவின் எழுத்து நன்றாக இல்லை. அத்துடன் ஐடியாவை பொறுக்குவதை லேஜிச்டிமேட் பண்ணுகிறார். இரண்டும் எனக்கு பிரச்சினை. இதையே மோசடிகள் என்கிறேன்.

**இச்சா நாவலே மோசடி என்கிறீர்களா ?**

மோசடியில்லாமல் வேறு என்ன? ஒரு ஐடியாவை எடுத்துக்கொள்ளுதல் மோசடிதானே. நான் எழுதிய நாவல் எப்படி அவருக்கு கிடைத்திருக்கும் என்ற சந்தேகம் இருக்கலாம். நியாயமான கேள்வி. இரண்டாவது தற்செயலாக (கோ இன்சிடென்ட்) இருக்கலாம். ஆனால் இங்கு தற்செயல் என்பது மிக அதீதம். அது எப்படி சாத்தியம் என்று வாசிப்பவர்கள் யோசிக்க வேண்டும். இரண்டாவது இரண்டு நாவல்களின் மெயின் ஸரக்சர்களே ஒன்றாக இருக்கின்றன. அவர் மிக நன்றாக அறியப்பட்ட எழுத்தாளர். ஷோபாவின் எழுத்தால் தாக்கம் அடைந்து சேனன் இப்படியொரு நாவலை போலச் செய்தார் என்று நீங்கள் ஒரு விமர்சனத்தை வைக்கலாம். இதனை முற்றாக மறுத்து கதைக்கவே இங்கே வெளிப்படையாக உரையாடுகிறேன். அவரிடம் இருக்கும் ஐடியாக்கள், கருத்துகள் போன்றவற்றில் என்னுடைய தாக்கமே அவரிடம் உண்டு. வரலாறை பின்சென்று தேடிப்பாருங்கள். அவரிடம் இருந்து கொப்பியடிக்க எனக்கு எந்தத் தேவையும் இல்லை. அவருக்கு ஐடியாக்கள் சார்ந்த கற்பனை குறைவு. பலதை பொறுக்கி திரித்து எழுதியிருக்கிறார். இதுவே எனது குற்றச்சாட்டுகள்.

என்னுடைய நாவல் எப்படி ஷோபாவுக்கு முன்னமே சென்றது என்பது தொடர்பாக பேஸ்புக்கில் நடந்த உரையாடலில் ஷோபாசக்தியின் சகோதரி கவிஞர் தர்மினி என் மீது பல்வேறு வகையான குற்றச் சாட்டுகளை வைத்திருக்கிறார். தன்னிடம் தனியான கணினியும், ஷோபாவிடம் தனியான கணினியும் இருப்பதாகச் சொல்கிறார். இதனை நான் நம்பவில்லை. முன்னர் அப்படி இருந்ததில்லை. அது எனக்குத் தெரியும். பின்பு கணனி வாங்கிய கதை வேறு. இதை பேச வேண்டிய அவசியம் இல்லை. அவர் பேசும் விதம் எனக்கு மிகுந்த கவலையைத் தருகிறது. சகோதரத்துடனும் தோழமையுடனும் பழகிவிட்டு இப்போது தரக்குறைவாக எழுதுவது கடும் வேதனையைத் தருகிறது. இருக்கட்டும். அதற்காக நான் ஒருபோதும் அவர்களை தரக்குறைவாக விமர்சிக்கப் போவதில்லை. நான் நினைக்கிறேன் -தர்மினிக்கு தெரியாமல் இது நிகழ்ந்து இருக்கும் என்று. அவர் தரவிறக்கி வைத்திருந்த பிரதியை அல்லது மின்னஞ்சலில் இருந்த பிரதியை ஷோபா நோட்டம் விட்டிருக்கலாம். தர்மினி என்னதான் மறுத்தாலும் நான் ஒருபோதும் ஷோபாசக்தி எனது நாவலை முன்னமே வாசிக்கவில்லை என்று சொல்வதை நம்பத் தயாரில்லை. ஷோபாசக்தி மீதுதான் முழு குற்றச்சாட்டையும் வைக்கின்றேனே தவிர தர்மினியின் மீதல்ல.

**சமகால எழுத்தாளர்கள், ஒருவரையொருவர் அறிந்தவர்கள். இருவரும் ஒரே அலைவரிசையில் சிந்தித்து இருக்கிறீர்கள் என்று கருதவும் இடமுண்டு அல்லவா?**

மோசடி நிகழாமல் எப்படி இரண்டு சமகால நாவல்கள் ஒத்ததாக வரும்? திரும்பவும்

சொல்கிறேன், இரண்டு நாவல்களும் இப்போது இருகின்றன. இரண்டையும் வாசித்துவிட்டு வாசகர்கள் யோசிக்கட்டும். இரண்டு எழுத்தாளர்கள் தற்செயலாக ஒரே அலைவரிசையில் சிந்தித்து இருக்கிறார்கள் என்று யாராவது நினைத்தால், இதிலிருக்கும் அதீதத்தை யோசிக்க வேண்டும். அல்லாவிடில் யாராவது ஒருவர் முன்னமே படித்திருக்கிறார் என்ற முடிவுக்கு வரவேண்டும்.

ஒரு உதாரணம் சொல்கிறேன். எனது நாவலில் இயக்கத்தில் இணையும் சம்பவம் வரும். அதனை முன்னமே படித்த தர்மினி, இவை மிகையாகவுள்ளன, தவிர்க்கும்படி ஆலோசனை கூறினார். நன்றாக எனக்கு நினைவுள்ளது. அதன் அடிப்படையில் பலதை நீக்கியிருந்தேன். இச்சாவில் இதேபோல் ஒரு சம்பவம் வருகின்றது. அப்படியென்றால் இது எப்படி நிகழந்து இருக்கும் என்ற யோசனை எனக்கு வருமா.. வராதா? அடுத்ததாக எழுதப்போகும் நாவலில் 'எஸ்பிராண்டோ' மொழியை பயன்படுத்த போகிறேன் என பேசி இருக்கிறேன். அதற்காக அந்த மொழியை படிக்கிறேன் என்று பேசி உள்ளேன். அந்த டெக்னிக் (உரோவன் மொழி) இச்சாவில் வந்துள்ளது. படிக்கும்போது எனக்கு அந்திரமாக இருக்குமா இருக்காதா? இப்படி நிறைய உள்ளன.

**இச்சாவில் ஆலாவின் புலம்பெயர் வாழ்வு கற்பனைக் கதையாகிவிடுகிறது, சித்தார்த்தனின் வினோதச் சம்பவங்களில் சாதனாவின் புலம்பெயர் வாழ்வு தன்னுடைய அடையாளத்தை அழிக்கிறது. இதைத் தவிர்த்து சில சம்பவங்கள் ஒற்றுமையைக் கொண்டுள்ளன என்பதில் மறுப்பதற்கில்லை. உங்கள் நாவலில் இருந்துதான் ஐடியாவுக்கான தாக்கம் பெற்று இருக்கிறார் என்றால், ஏன் முன்னைய பகுதியில் அவர் செய்யவில்லை?**

இச்சாவில் முன்பகுதியில் என்னுடைய நாவலின் தாக்கங்கள் இருக்கின்றன. அவர் அவற்றை மாற்றி எழுதியிருக்கிறார். நான் நினைக்கிறேன் ஷோபாசக்தி தான் எழுதிவைத்திருந்த கதையை, எனது நாவலை படித்துவிட்டு மேம்படுத்தியிருகிறார். எனது நாவலில் இருக்கக்கூடிய மஜிக்கல் ரியாலிசம், அப்ஸ்ரக் எழுத்துமுறை அவருக்கு தொந்தரவைக் கொடுத்திருக்கலாம். என்னுடைய நாவலிலுள்ள புதுமை அதிகம் கவனிக்கப்பட்டுவிடும் என்று நினைத்திருக்கலாம் என்றே நான் அறிந்த ஷோபாசக்தியை வைத்து மதிப்பிடுகிறேன்.

நான் எழுதிய தொன்மகக் கதைகளை அவரால் கொண்டுவர முடியவில்லை. காரணம் அதற்குரிய மொழி அவரிடம் இல்லை. அப்படியான விடயத்தை எழுதக்கூடிய சக்தி அவருடைய மொழிக்கு கிடையாது. அவரால் ஒரேமாதிரித்தான் எழுதமுடியும். கொரில்லாவையும் , ம் நாவலையும் புதிய வாசகனுக்கு வாசிக்கக் கொடுத்துப்பாருங்கள், இரண்டும் ஒரே சமயம் எழுதியது என சொல்லும் சாத்தியம் உள்ளது. அவருக்கு என்று ஒரு பாணியுள்ளது. அதில் மட்டும்தான் பயணிக்க முடியும். என்னுடைய நாவலில் ஒரு அத்தியாயம் புத்த மத கதைகளை சொல்வது போன்ற பாணியில் இருக்கும். அப்படியெல்லாம் சொல்லும் திறன் ஷோபாவுக்கு இல்லை. அவர் நிறைய எழுதி இருக்கிறார்.

நீங்களே இதை தீர்மானிக்க முடியும்.

ஷோபா என்னுடைய நாவலின் ஸ்டக்சரை வைத்தே தன்னுடயை நாவலை முடித்துள்ளார். சேனனது நாவல் இப்போதைக்கு வராது என்று அவர் எதிர்பார்த்துவிட்டார் போல. நான் அதிகம் அரசியல் செயற்பாட்டு வேலையில் இருப்பதால் இலக்கியம் எழுதுவது குறைந்துள்ளது. அதனால் இந்த இலக்கிய சோம்பேறி நாவலை கொண்டுவரப் போவதில்லை என்று நினைத்திருக்கலாம். இச்சா நாவலை அவசரமாக கொண்டு வந்ததாகச் சொல்கிறார்கள். அதற்கு என்னுடைய நாவல் வந்துவிடுமோ என்ற அச்சம் காரணமாக இருக்கலாம்.

இச்சா நாவல் வர முதலே – சில ஆண்டுகளுக்கு முன் அந்தக் கதையை தமக்கு ஷோபாசக்தி சொல்லி உள்ளார் என ஒரு சிலர் பதிவு செய்து உள்ளார்கள். இதை சொல்பவர்கள் என்ன சொல்ல வருகிறார்கள் என எனக்கு விளங்கவில்லை. ஒரு கதையை நேரடியாகவும் ஒட்டு மொத்தமாகவும் பிரதி செய்யும் அளவுக்கு முட்டாளா ஷோபா? அல்லது அப்படி ஒரு கேவலமான குற்றச் சாட்டை வைக்கும் அளவுக்கு எனக்கு அறிவில்லையா? ஆம் கதை சொல்லி இருக்கலாம். இதில் என்ன பிரச்சினை. எழுதும் 'வடிவ ஐடியா' என்பது சொல்லப்படும் கதை சார்ந்த விடயம் மட்டும் அல்ல. நாவல் கொப்பிதான் என்ற முன் முடிவோடு இவர்கள் பேசுகிறார்கள் போல. அதிலிருந்து அவதூறுகளுக்கு தாவ முதல் சற்று சிந்திக்க கூடாதா..?

மூன்று வருடங்களுக்கு முன் எனது முதல் வரைவை பார்த்தவர்கள் இருக்கிறார்கள். படித்து விட்டு அல்லைப்பிட்டியை ஆண்டது அல்லி ராணி என ஒரு கதை உண்டு என மூன்று வருடத்துக்கு முன் ஒருவர் எனக்கு மெயில் போட்டது ஞாபகம் உண்டு (தமிழ் பேசும் மக்கள் வாழும் ஈழப் பகுதி முழுவதும் அல்லி பற்றிய பல்வேறு கட்டுக் கதைகள் காலம் காலமாக வழக்கத்தில் இருந்து வந்திருக்கிறது). இந்த தகவல்களை வைத்து நான் என்ன செய்ய முடியும்? அத்தகைய சில்லறை விவாதத்தால் யாருக்கும் எந்தப் பயனும் இல்லை.

**ஷோபாசக்தி தன்னுடைய பேஸ்புக்கில் உங்களது நாவலை படிக்கவில்லை என்று குற்றச்சாட்டை முழுமையாக மறுத்துள்ளார். அதனை படித்தீர்களா?**

*சேனனின் விநோத சம்பவங்கள்:*

*தோழர் சேனன் சில வருடங்களிற்கு முன்பு வெளியிட்ட நூலைப் பற்றிய செய்தியொன்றை, அந்நூல் வெளிவந்தபோதே சேனன் என்னிடம் சொல்லியிருந்தார். அச் செய்தியை நானும் வேடிக்கையாக இரண்டொரு தடவைகள் என் கட்டுரைகளில் குறிப்பிட்டுமுள்ளேன். சேனன் தனது நூலுக்கு வைத்திருந்த தலைப்பு 'கொலை மறைக்கும் அரசியல்'. ஆனால் நூலை வெளியிட்ட பதிப்பாளர் 'ஷோபாசக்தியை முன்வைத்து கொலை மறைக்கும் அரசியல்' எனத் தலைப்பு வைத்தால்தான் நூல் தமிழகத்தில் கவனம் பெறும் எனச் சொல்லியிருந்ததால் 'ஷோபாசக்தியை முன்வைத்து கொலை மறைக்கும் அரசியல்' என்ற தலைப்போடு நூல் வெளியாகியது. (யப்பா எவ்வளவு பெரிய தலைப்பு!).*

*இப்போதும் அப்படியான ஒரு விநோத வேலையில் தோழர் சேனன் இறங்கியிருக்கிறார் என நினைக்கிறேன். எனது 'இச்சா' நாவல் வெளிவந்து சில மாதங்கள் கழித்து, அவரது ஒரு நாவல் வெளியாகியிருக்கிறது. பத்து மாதங்கள் கழித்துப் பொறுமையாக ஓர் அவதூறை சேனன் பொதுவெளியில் சொல்ல ஆரம்பித்திருக்கிறார். அவரது கதையின் பாதிப்பில் நான் 'இச்சா' எழுதியுள்ளேனாம். முறைப்படி நான்தான் இந்த குற்றச்சாட்டை சொல்லியிருக்க வேண்டும். ஏனெனில் இச்சா தான் முதலில் வெளியானது.*

*இச்சாவுக்கு முன்பே, தான் தன்னுடைய நாவலை எழுதி, அதைத் திருத்தம் செய்யவோ படித்துப் பார்க்கவோ கொடுத்த இடங்களிலிருந்து ஷோபாவுக்குத் தகவல் கசிந்து ஷோபா தன்னுடைய எழுத்தைப் பிரதி பண்ணிவிட்டதாக சேனன் தகவல் பரப்பிவருவதாகத் தெரிகிறது. முதலில் அவரது தன்னம்பிக்கையைப் பாராட்ட நான் கடமைப்பட்டிருக்கிறேன். எனினும் கண்ணதாசன் சொல்லிய ஓர் உவமையையும் சேர்ந்தே சொல்கிறேன்: வயிற்றில் பசியிருக்கிறது என்பதுக்காக எவனும் மலத்தை உண்பதில்லை.*

*இந்த இரண்டு நாவல்களுக்கும் முன்பே வெளியாகியது மு.பொ. அவர்களின் 'சங்கிலியன் தரை'. மு.பொ. 'சங்கிலியன் தரை'க்கும் 'இச்சா'வுக்கும் சில ஒற்றுமைகள் இருப்பதாகக் கருதியபோது, அதை உடனடியாகவே முகநூலில் நேர்மையுடன் பதிவு செய்தார். நானும் உடனேயே "அய்யா, நான் இதுவரை உங்களுடைய நாவலைப் படிக்கவில்லை. உங்களது பதிவு உங்களின் நாவலைப் படிக்கத் தூண்டுகிறது" எனப் பதிலளித்தேன். அத்தோடு அது நல்லபடியாகவே முடிந்து போயிற்று. கற்றோரைக் கற்றோரே காமுறுவர் என்பதும் உறுதியாகிற்று.*

*தோழர் சேனனும் 'இச்சா'வைப் படித்துவிட்டு, அப்படியொரு கருத்தைப் பொதுவெளியிலோ அல்லது என்னிடமோ தெரிவித்திருந்தால் " இல்லை நண்பனே, உங்களது நாவலை நான் படித்ததில்லை, இனியும் படிக்கப் போவதில்லை. ஏனெனில் உங்களின் முந்தைய நாவல் 'லண்டன்காரர்' கொடுத்த மரணப் பாதிப்பிலிருந்தே நான் இன்னும் முழுதாக மீளவில்லை" எனச் சொல்லி, குணமாகவே பிரச்சினையை முடித்துவைத்திருப்பேன்.*

*மாறாக, பத்து மாதங்கள் கழித்து வதந்தியைச் சேனன் கசிய விடுவது அவ்வளவு சரியாக எனக்குத் தோன்றவில்லை. அனுபவத்திலிருந்து அவர் ஏன் பாடம் கற்கத் தவறுகிறார் என்பதும் புரியவில்லை. எனது பெயரை விளம்பரத்துக்காக முன்வைத்து வெளியிட்டதால் அவருடைய முந்தைய நூலான 'கொலை மறைக்கும் அரசியல்' புத்தகம் வாசகப் பரப்பில் கவனம் பெற்றுவிட்டதா என்ன! அப்படியெல்லாம் ஒரு இழவும் நடக்கவில்லையே. இப்போது மட்டும் எனது பெயரை முன்வைத்து வதந்தியைக் கிளப்பினால் அவரது நாவல் கவனம் பெற்றுவிடப் போகிறதா என்ன! நாவலுக்கு உள்ளே காட்டவேண்டிய டெக்னிக்கையெல்லாம் வெளியில் காட்டுவதால் ஏதும் பயனில்லை. இலக்கிய வாசகர்கள் எப்போதுமே தெளிவாக இருப்பார்கள்!*

*நன்றி, வணக்கம்.*

*(எழுத்தாளர் ஷோபாசக்தி தன்னுடைய பேஸ்புக் பக்கத்தில் எழுதிய விளக்கம்)*

அவருக்கு அப்படிச் சொல்ல எல்லாவித உரிமையும் உள்ளது. அவர் சொல்வதை நான் நம்ப விரும்புகிறேன். அப்படி நம்புவதற்கு யாராவது உளவியல், இலக்கியம் ரீதியாக ஆராய்ந்து எப்படி இருவர் ஒன்றுபோல் எழுத முடியும் என்று சொல்லட்டும் ஏற்றுக்கொண்டு போகிறேன். மற்றதை நான் வாசகர்களின் பொறுப்பில் விடுகிறேன்.

இந்த நாவலைப் படித்த சிலர் சட்டரீதியாக எதிர்கொள்ளலாமே இதனை என்றனர். ஒரு வக்கீல் கூட இலவசமாக செய்கிறேன் என்றார். நான் அதனை மறுத்தது மட்டுமல்லாமல், நான் ஷோபா மீது அப்படியான Plagiarism குற்றச்சாட்டை வைக்கவில்லை. ஐடியா சார்ந்த பிரச்சினை என்று விளங்கப்படுத்தினேன்.

ஷோபாவுக்கு சேனனைத் தெரியாது என்றுதான் ஷோபாவின் புதிய வாசகர் பலர் நினைப்பார்கள். ஏனென்றால் சேனன் என்ற எழுத்தாளர் இருப்பது ஷோபா ஊடாக யாருக்கும் தெரியவரவில்லை. சிலர் மோசமாக எழுதுவதால் இதை பதிவது அவசியம். ஆனால் தொடர்ச்சியாக ‘கொலை மறைக்கும் அரசியல்’ புத்தகத்தை முன்வைத்து ஒற்றைக் கருத்து ஒன்றை மட்டும் பேசிவருகிறார் ஷோபா. அந்த புத்தகம் தற்போது இலவசமாக கிடைக்கும். அதை முழுக்க வாசித்துப் பார்க்கவும். அதில் ஷோபாவை வைத்து வியாபாரம் செய்யும் விதமாக ஏதும் இருக்கின்றதா என்று தெரியும். தன்னைப் பற்றிய அளவுக்கு மீறிய கற்பனையில் மிதக்கும் மன வியாதி கருத்தாக அதை நான் தட்டிக் கழிக்க விரும்புகிறேன்.

ஷோபாசக்தி இரண்டு நாவலுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை என்பதை அவரது குறிப்பில் மறுக்கவில்லை. தான் முன்னமே நாவலை எழுதிவிட்டேன் என்கிறார். இதன் மூலம் நாவலை மோசடி செய்தது நான் என்கிறேன் என்கிறாரா? நேரடியாக ஷோபா பேசவேண்டும்.

வயிற்றில் பசியிருக்கும் என்பதற்காக யாரும் மலத்தை தின்பதில்லை என்று எழுதுகிறார். இதனைப் பின்பற்றி பலரும் எழுதுகிறார்கள். இந்த மொழியே பிரச்சினை. ஒடுக்கப்பட்டவர்களை வசையாட பயன்படுத்தப்படும் சொற்கள் இவை. அதிகாரத்திலிருந்து வெளிப்படுபவை. இவ்வாறு சொல்வதன் அர்த்தம் என்ன? ஷோபா இதனை விளங்கப்படுத்த வேண்டும்.

“அவரது தன்னம்பிக்கையை பாராட்டுகிறேன்” என்கிறார். நான் பெரிய எழுத்தாளான் நன்கு அறியப்பட்டவன். ‘நான் கற்பனை வளம் கொண்டவன். சேனன் ஒன்றுமேயில்லை. இவரிடம் என்ன உள்ளது’ என்ற தெனாவெட்டுத்தான் இதிலிருப்பது. என்ன கதை இது? நான் நிறைய எழுதாமல் இருக்கலாம். ஆனால் எழுதியிருக்கிறேன். ஒருபோதும் ஒப்பீட்டுப் பிரச்சினைக்கு நான் சென்றதில்லை. ஷோபா மிகுந்த தெனாவெட்டுடன் சொல்கிறார். இதனை கேள்விக்குள்ளாக்கிறேன்.

இச்சாவை வாசித்து என்னுடைய நாவலை நான் எழுதியிருந்தால் இன்னும் நன்றாக எழுதியிருப்பேன். ஷோபா எனது நாவலை வாசித்து மோசமாக எழுதியிருக்கிறார். நன்றாக எழுதியிருந்தால் நான் இந்தப் பிரச்சினையை எடுத்தே இருக்கமாட்டேன். இச்சா

நாவலைவிட என்னுடைய நாவல் ஆழமானது. இப்படி நான் எங்கும் சொல்வதில்லை. ஆனால் இப்போது சொல்கிறேன். இச்சாவை விட ஆழமாக சென்று சரியான முறையில் அரசியலையும் அணுகியுள்ளது எனது நாவல். நேரடியாக யுத்தத்தில் பாதிக்கப்பட்ட நபர்களுடன் உரையாடியிருக்கிறது.

முதலில் இச்சாவை நானும் படிக்கவில்லை. அவரது எழுத்தின் மீதான ஈர்ப்பு எப்போதோ குறைந்துவிட்டது. அதற்காக அவரது எழுத்துகளை குப்பை என்றெல்லாம் சொல்ல மாட்டேன். அப்படி விமர்சிப்பவன் அல்ல நான். ஜெயமோகனின் படைப்புகள் எனக்கு உடன்பாடனவை அல்ல. அதற்காக அவற்றை குப்பை என்று எல்லாம் எழுதவில்லை. எழுத்தில் விமர்சனமாக நான் இன்னும் வைக்கவில்லை. காரணம் முழுமையாக அவற்றைப் படிக்கவேண்டும். அப்படி படிக்காமல் எழுதுவது தவறானது. அந்த நேர்மை எல்லா எழுத்தாளர்களுக்கும் இருக்க வேண்டும். அப்படி படிக்காமல் ஷோபா சொல்கிறாராம். அதை பின்பற்றி அதேபோல் வாசிக்க முதலே சிலர் வியாக்கியானம் தொடங்கி விட்டனர். அந்த நடைமுறை அவர்களை வெறும் 'வால்கள்' என மட்டுமே காட்டுகிறது.

"லண்டன்காரர் நாவலை படித்த மரண பீதியில் இருந்து தான் மீளவில்லை" என்கிறார். இதன் அர்த்தம் என்ன? அதனை வாசித்தவுடன் இவருக்கு மிக கேவலமாக இருந்தது என்கிறாரா? இன்றுவரை அவர் எந்த விமர்சனத்தையும் வைத்ததில்லை. உண்மையில் லண்டன்காரர் எழுதிய போது ஒட்டுமொத்த இலக்கிய உலகமும் வாரித் தூற்றும், காறித்துப்பும் என்றுதான் எதிர்பார்த்தேன். ஏனென்றால் இவர்களைப் பொருத்தவரை அது குப்பையானது. இப்ப நினைப்பார்கள் அப்பவே அடித்து நொறுக்கியிருக்க வேண்டும் என்று. ஏன் அப்பவே செய்யாமல் இப்போது சொல்கிறார்கள்? இதற்குப் பின்னே மோசமான அரசியல் உள்ளது. ஷோபாசக்தி நேரில் பேசும்போது இதில் அறுபது பக்கங்கள் தேறும் என்று முன்பு சொன்னார். அப்போது ஒரே மூச்சில் படித்தது – இப்பதான் மரண பீதி வருகிறது. இத்தகைய நடைமுறைகள் பின் இருக்கும் சுயல நல அரசியலைக் கட்டுடையுங்கள்.

"பத்து மாதங்கள் கழித்து சேனன் இதனை எழுதுகிறார்" என்று சொல்கிறார். முதலே ஷோபாவுக்கு இது தெரியும். பலருக்கு இந்த விடயம் பரவிவிட்டது. என்னுடைய நாவல் முதலில் வரட்டும் என்றே நான் அமைதியாக பொதுவில் பேசாமல் இருந்தேன்.

"நாவலுக்குள் இருக்கும் டெக்னிக்குகளை வெளியே காட்டக்கூடாது" என்கிறார். நான் நாவலுக்குள் இருக்கும் டெக்னிக்குகளைத்தான் கதைக்கிறேன்.

**நீங்கள் எழுதிக்கொண்டிருந்த நாவலை 'இச்சாவை' படித்துவிட்டு மேம்படுத்தித் திருத்தி எழுதவில்லை என்று எப்படி நம்புவது? அதற்கும் வாய்ப்பு இருக்கிறதல்லவா..**

இதற்கு பலவேறுபட்ட ஆதாரங்கள் என்னிடம் உள்ளன. யார் யாருக்கு அனுப்பினேன் என்ற மின்னஞ்சல் பதிவுகள் என்னிடம் உள்ளன. 2017 இல் முழுமையாக நாவலை படித்ததாக யமுனா ராஜேந்திரன் குறிப்பிட்டுள்ளார். கவிஞர் கிரிஷாந்த் இச்சா நாவல் வெளிவர முன்னரே என்னுடைய நாவலை முழுமையாக வாசித்துவிட்டு இந்த நாவல் நிச்சயம்

பதிப்பிக்கப்பட வேண்டும் என்று என்னிடம் பேசினார். வாசன் எழுத்தில் கட்டுரையாக எழுதியிருக்கிறார். நான் நிறைய விடயங்களை படிமப்படுத்தியிருந்ததால் எல்லோருக்கும் இந்த நாவல் புரியுமா என்ற சந்தேகம் இருந்தது. அதனால் காலதாமதமாகியது. பின்னர் சில அத்தியாயங்களை நீக்கி, மீள எழுதிச் சேர்த்தேன். இவர்கள் காலபோக்கில் தங்களது கருத்துகளை பதிவார்கள் என்று நம்புகிறேன். வரலாற்றில் உண்மை நிலைக்கும். வரலாறு நீண்டது.

இந்த நாவலில் காதல் பற்றி எழுதியிருக்கிறேன், ஆனால் இது காதல் நாவல் அல்ல. அதே போல பலவந்தமாக நிகழும் வல்லுறவையும் எழுதியிருக்கிறேன். கழிவறைகளை வர்ணம் பூசி காட்சிப்படுத்தியிருப்பார்கள் என்பதற்காக Slumdog millionaire திரைப்படம் வெளிவந்தபோது கடுமையாக விமர்சித்து எழுதியிருந்தேன். என்னுடைய நாவலையும் இம்சையையும் ஒப்பிட்டுப் பேசும் ஒருவர், ஷோபா பாலியல் வல்லுறவை அழகியலாக எழுதியிருக்கிறார் நீங்கள் வக்கிரமாக எழுயிருக்கிறீர்கள் என்று சாடியிருந்தார். வல்லுறவை அழகியலாக எழுத முடியுமா? அது அப்படிப்பட்டதா? வல்லுறவில் இருக்கும் அருவருப்பு எழுத்தில் வரவேண்டும் என்று தெளிவாக நான் எழுதினேன். ஆனால், இதனை ஒப்பிட்டுப் பேசும்போது என்னிடம் அழகியல் இல்லை என்கிறார். பாலியலை நீங்கள் கட்டமைத்திருக்கும் அழகியலாகப் பார்ப்பது வக்கிரமான சிந்தனை.

இச்சா நாவலில் பெரிதாக அரசியல் இல்லை. புலிகளை சில இடங்களில் படிக்க வேண்டும் என்று பலவந்தமாக புலி எதிர்ப்பாளர்களை திருத்திப்படுத்த எழுதுகிறார்.

**உங்கள் அமைப்பு சார்ந்த கொள்கை பிரச்சாரங்கள் நாவலில் வந்துவிடுகிறதா?**

லண்டன்காரனில் வரும் கறுப்பி என்ற பாத்திரத்தை நன்றாக வடிவமைத்துவிட்டு இறுதியில் சோஷலிச கட்சியில் ஏன் இணைத்தீர்கள் என்று பலர் கேட்டார்கள். இந்த இடத்தில் இந்த நிலைப்பாட்டில் வேறு எதனை எழுதலாம்? அதுவும் முற்போக்காக சிந்திக்கக்கூடிய எழுத்தாளன் வேறு எதனை எழுதி முடிக்க முடியும்? நான் இயங்குவதற்கு ஓர் அர்த்தம் உள்ளது. அதனை கறுப்பியின் கதாபாத்திரம் ஊடாகப் பார்த்தேன். நான் நாவலின் அடுத்த கட்டம் பற்றியும் சிந்தித்தேன். இந்த நாவலுக்கு அடுத்த பாகம் உள்ளதா என்று. அதனைத்தான் என்னுடைய பார்வைக் கோணத்தில் வைத்திருக்கிறேன். ‘சித்தார்த்தனின் வினோதச் சம்பவங்கள்’ நாவலில் ’தமிழ் சொலிடாரிட்டியின் பிரச்சாரம் என்று சொல்வது அவர்களது பிரச்சினை. அமைப்பின் பெயரை வேணும் என்று ஒரு இடத்தில மட்டும் பயன்படுத்தியிருக்கிறேன். அதற்குக்காரணம் உண்டு. நிஜமாகவே இங்கிலாந்தில் ஒட்டுக்கப்பட்ட மக்கள் சார்ந்து இயங்கக்கூடிய அமைப்பு தமிழர்கள் மத்தியில் அதுமட்டும்தான். அதற்கான தேவை நாவலில் இருந்தது. அதனையும் ஓர் இடத்தில மட்டுமே பயன்படுத்தியிருக்கிறேன். நாவல் சம காலத்துக்கு மட்டுமானது அல்ல. சம காலத்தின் பதிவாக எக்காலத்துக்கும் இருக்க வல்லது. இத்தகைய தொலைதூர வரலாற்று பார்வையுடன் இந்த பிரச்சினையை அணுகவும்.

**அடுத்ததாக என்ன எழுதப் போகிறீர்கள்?**

காதலை முன்வைத்து நாவல் எழுதப் போகிறேன். தமிழில் காதலை முன்வைத்து நாவல் எழுதுவது கடினமானது. இதுவரை நான் காதலை எழுதியதே கிடையாது. 'காதலாகிக் கசிந்து' என்று ஒரு சிறுகதை மட்டும் எழுதியிருக்கிறேன்.

**ஏன் உங்களுக்கு காதல் அனுபவம் இல்லையா?**

அது நிறைய இருக்கிறது. அதற்காக அதனை எழுதிவிட முடியாது. நான் அரசியலில் மூழ்கி இருப்பவன். அது சார்ந்தே நிறையப் பேசவேண்டி எனக்கு இருந்தது. இன்னும் நிறைய இருக்கிறதுதான். ஆனால், குறிப்பிட்ட காதல் நாவல் எழுதவேண்டும் என்று ஆசைப்படுகிறேன்.

**காதலை தமிழ் எழுதுவது ஏன் கடினம்?**

டைட்டானிக் என்று முன்னம் ஒரு படம் வந்தது அல்லா? எக்கசக்கமான விருதுகளை வென்றது. மேற்க்கத்தைய உலகில் அதிகம் பேசப்பட்டது. ஆனால் தமிழில் ஒவ்வொரு வருடமும் பல நூறு டைட்டானிக் வெளிவருகிறது. எல்லாமே ஒரே கதையை மாற்றி மாற்றி அலட்டுகிறது. சின்ன சின்ன மாறுதல்களோடு ஒரே கதை தான் திரும்பத்திரும்ப எழுதப்படுகிறது. தமிழ் இலக்கியத்திலும் இதே சூழல்தான். நான் இவற்றிலிருந்து மாறுபட்டு எழுத யோசித்து இருக்கிறேன். அது ஒரு பெரும் சவால்தான்.

# 11. கிராஞ்சி: இஸுரு சாமர சோமவீர

சிறுகதைகள்/செப்டம்பர் 2020

சிங்களத்திலிருந்து தமிழில்: எம்.ரிஷான் ஷெரீப்

BY இஸுரு சாமர சோமவீர AND எம்.ரிஷான் ஷெரீப்

எல்லாமும் வெள்ளை நிறத்தில் இருக்கின்றன. சுவர்கள், மேற்கூரை, தலையணை, படுக்கை விரிப்பு என அனைத்துமே வெண்ணிறம். கட்டிலின் அருகே சிறிய மேசையின் மீது வைக்கப்பட்டிருக்கும் தண்ணீர் நிரம்பிய கண்ணாடிக் குவளையும் வெண்ணிற சிறு தட்டால் மூடப்பட்டிருக்கிறது. இவை அனைத்தும் அபத்தமான விதத்தில் தூய்மையாகவும், நேர்த்தியாகவும் இருக்கின்றன. வெண்ணிற ஜன்னல் திரைகள் ஜன்னலுக்கு அப்பால் இருப்பவற்றை எனது விழிகளிடமிருந்து மறைத்து வைத்திருக்கின்றன. ஒரு காலத்தில் நான் வெண்ணிறத்துக்கு, தனித்த ஏகாந்தமான வெற்றிடத்துக்கு மிகவும் ஆசையுற்றவனாக இருந்தேன்.

எனது அறையில் ஒரு காலண்டரையாவது தொங்க விட நான் விரும்பவில்லை. எனினும் இப்போது இந்த வெண்ணிற வெற்றிடம் எனக்கு மிகுந்த களைப்பைத் தருகிறது. தலையினுள்ளே ஓரோர் ஓசைகளாக பலதும் எதிரொலிப்பது போல உணர்கிறேன். அது, வார்த்தையில் வடிக்க முடியாத ஒரு வேதனை. காலை வேளைக்கான மருந்தை நான் உட்கொண்டிருந்த போதிலும் காய்ச்சல் குறைந்திருக்கவில்லை. எனது வாயினுள்ளே மெலியம் படை படிந்து, வாய் கசப்போ கசப்பாக இருக்கிறது. உறக்கமும் விழிப்புமற்ற நிலையில் காணும் அபத்தங்கள், தலை பாரமாக உணரும் உணர்வை அதிகரிக்கச் செய்கின்றன. நான் அழ வேண்டும். அலற வேண்டும். இந்த மோசமான கோதாரிக் காய்ச்சலால் நான் செத்துப் போய் விடுவேன் என்ற பேரச்சம் மனதில் தோன்றுகிறது. அனைத்தையும் விட தலையினுள்ளே தோன்றும் வலியைத்தான் தாங்கிக் கொள்ள முடியாமல் இருக்கிறது.

அது ஒரு தீவு. கிராஞ்சியிலிருக்கும் சிவபுரம் கடற்கரையில் தென்படும் தீவு என நினைக்கிறேன். அந்தக் கனவில் வட்டக்காய், கத்தரிக்காய், புடலங்காய், பயற்றங்காய் போன்றவை செழிப்பாக விளைந்த பயிர் நிலமொன்று இருந்தமை எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. கடும் பச்சை நிறமான பெரிய வட்டக்காய் இலைகள் ஒரே வரிசையில் காற்றுக்கு அசைந்தன. அவற்றின் மீதிருந்த பனித் துளிகள் சூரிய ஒளியில் பிரகாசித்தன. ஊதா நிற பெரிய கத்தரிக்காய்களின் மீது பச்சை நிறத்தில் மெலிந்த புழுக்கள் நடமாடின. மஞ்சள் நிற வட்டக்காய்ப் பூக்களிடையே தேனீக்கள் பறந்தன. நானும், கோப்ரல் சமன் குமாரவும் புளொக் கற்களால் கட்டப்பட்ட, மேற்பூச்சு பூசப்படாத சிறிய வீடொன்றின் முன்னால் அமர்ந்திருந்து எமது பயிர் நிலத்தைப் பார்த்துக் கொண்டிருந்தோம்.

எமது விழிகள் பிரகாசித்தன. கோப்ரல் சமன் குமாரவின் முகத்தில் காணப்பட்டது காட்டுமிராண்டித்தனமான ஒரு வேட்டைப் புன்னகை. எனது முகத்திலும் பெரும் புன்னகையொன்று இருந்தது. கோப்ரல் சமன் குமார ஜின்னா, நான் உபாலி கினி வெல்ல. ஒருமையில் கதைத்துக் கொள்ளாவிட்டாலும்கூட அந்தக் கனவில் நாமிருவரும் உபாலியும், ஜின்னாவும்தான் என எனக்குத் தோன்றியது. சிறுவர்களாக அல்லாது, இதோ இப்போது இருப்பது போலவேதான் நாங்கள் அந்தக் கனவிலும் இருந்தோம். எம்மிருவரது முகங்களிலும் மெலிதாக அரும்பு மீசை வளர்ந்திருந்தது. எமது வீட்டிலிருந்த பெட்டை நாய் ப்ளாக்கி, ஓரிடத்தில் அசையும் வட்டக்காய் இலைகளைப் பார்த்துக் குரைத்துக் கொண்டிருந்தது. சமனின் கண்கள் சிறுத்தன.

“முள்ளம்பன்றியொண்ணு. இதுங்கதான் நம்ம பயிரையெல்லாம் நாசமாக்குது” என சமன் எனது காதருகே அவனது பெரிய உதடுகளை வைத்து முணுமுணுத்தான்.

தொடர்ந்து சமன் துப்பாக்கியை எடுத்து கண்ணின் அருகே வைத்து, விழிகளைக் குறுக்கிக் குறி பார்த்தான். அது முள்ளம்பன்றியல்ல, ஒரு முயல். பெரிய வட்டக்காய் இலைகளின் மீது குருதித் துளிகள் தெறித்திருந்தன. சமன் வேட்டைப் பற்கள் தென்படுமளவுக்கு பெரிதாகச் சிரித்தான். நானும் சிரித்துக் கொண்டுதான் இருந்தேன் என்பதைச் சொல்ல எனக்கு நினைவிருக்கிறது. அது மிகவும் பெரிய, இருண்ட நிறத்தைக் கொண்ட ஒரு முயல். அதன் பிறகான கனவின் பகுதி தெளிவற்றது.

பிறகு, நாங்கள் கடற்கரையொன்றில் இருந்தோம். தொலைவில் நிலவொளியில் கடல் அமைதியாக அசைந்து கொண்டிருந்தது. நாமிருவரும் அருகருகே படுத்திருந்தோம். ஓரளவான தீச் சுவாலை எமக்கு முன்னால் சடசடத்து எரிந்து கொண்டிருந்தது. நான் ரொபின்சன் குரூசோவின் கதையை சமனிடம் சொல்லிக் கொண்டிருந்தேன். ரொபின்சன் குரூசோவின் கதையில் வரும் ஃப்ரைடே மிகவும் கட்டுமஸ்தானவர். ரொபின்சன் குரூசோவும், ஃப்ரைடேயும் வாழ்நாள் முழுவதும் அந்தத் தீவிலேயே வாழத் தீர்மானிக்கிறார்கள். காரணம் அந்த இருவரும் விரும்பும் விதத்தில் வாழ உலகில் எவ்விடத்திலும் இடமில்லை. அவர்கள் இருவரும் கொடியவர்களோடு சண்டை பிடிக்கிறார்கள். சுருக்கமாக, ஃப்ரைடே தனது உறவினர்களைக் கூட ரொபின்சன் குரூசோவுக்காகக் கொல்கிறான். குரூசோ தனது நாட்டுக்குச் சொந்தமான கப்பல்களைக் காணும்போது ஒளிந்து கொள்கிறான். அவர்கள் பயிர்களை விதைக்கிறார்கள், ஒன்றாக நீந்துகிறார்கள், வேட்டையாடுகிறார்கள், ஓசையெழ கர்ஜித்துச் சிரிக்கிறார்கள்.

சமன் எனது விழிகளை எட்டிக் கூர்ந்து பார்க்கிறான். அந்த விழிகள் ஈரமானவை, பிரகாசிக்கின்றவை. அவனது உடல் மிகவும் சூடாக இருக்கிறது. மெலிதான வெப்பத்துடனிருந்த கடற்கரையின் மணல் படுக்கையின் மீது நாங்கள் புரள்கிறோம். சமனின் தலைமயிரில் படிந்த மணலை நான் தட்டி விடும்போது சமனின் விழிகளுக்குள் ஆழம் வந்து நிறைகிறது. எமக்கு இன்னும் எத்தனை நாளைக்கு இவ்வாறு இந்தத் தீவில் இருக்கக் கிடைக்குமோ? எம்மவர்கள் எவ்வேளையில் இங்கு வந்து குதிப்பார்களோ தெரியாது. நான்

குனிந்து சமனின் நெற்றியில் முத்தமிடுகிறேன். அப்போது அவனது விழிகள் குறுகுகின்றன. சமன், அவன் புகைத்துக் கொண்டிருந்த சிகரெட்டை என்னிடம் தருகிறான். நாங்கள் மேலே பார்த்தவாறு மாறி மாறி சிகரட்டைப் புகைக்கிறோம்.

“அது ஓரியன், அதோ வரிசையா இருக்குற அந்த நட்சத்திரங்கள் மூணும், ஓரியனோட பெல்ட்”

சமன் எனது கையைத் தொடர்ந்து, நட்சத்திரங்களைப் பார்த்துக் கொண்டே ஒரு கையால் என்னைத் தடவுகிறான். நான் தீப்பற்றிக் கொள்கிறேன்.

“அடடா உனக்குத் தெரிஞ்ச விஷயங்கள் எல்லாம்... நட்சத்திரங்கள், மீன்கள், இங்க்லிஷ், தமிழ், எல்லாத்தையும் தெரிஞ்சு வச்சிருக்கிறாய்.”

இருவருக்குமே ஒன்றாக சிரிப்பு வருகிறது.

“ஆனா எனக்கு வேட்டு வைக்கத் தெரியாது. பயிர் விதைக்கத் தெரியாது” என்று நான் கூறுகிறேன்.

“ஏன் நான் உபாலி கினி வெல்ல ஆகாமல் ஜின்னாவானேன்?” என சமன் திடீரென்று கேட்டதும், நான் சமன் பக்கமாகத் திரும்பி, அவனை இறுக்கமாகக் கட்டியணைத்துக் கொண்ட போதிலும், என்னைத் தள்ளி விடுகிறான்.

“நீங்க எல்லாருமே ஒண்ணுதான், நீயும் என்னை ஏமாத்துறாய். சொல்லுடா நீயும் என்னை ஏமாத்துறாய்தானே?”

சமனின் வேட்டைப்பல் பளிச்சிடுகிறது. நான் சமனைத் தள்ளி விடுகிறேன்.

“நீங்க எல்லாரும்தான் ஏமாத்துறீங்க, எந்நாளும் ஏமாந்து போறதுதான் எனக்கு நேர்ந்திருக்கு” என்கிறேன்.

அம்மா வினாகிரியில் நனைத்த துணித் துண்டொன்றை எனது நெற்றியின் மீது வைக்கிறாள். அந்தத் துணித் துண்டு குளிர்ச்சியாக இருக்கிறது.

“கஞ்சி கொஞ்சம் எடுத்துட்டு வரட்டுமா?”

“வேணாம், குடிக்கேலாது, வாய் கசக்குது.”

“உறைப்பா மிளகாய் போட்ட வெங்காயச் சம்பலோட பாண் துண்டொன்று சாப்பிடலாம். இப்போ இருக்குறது அசதிதான். நாலு நாளா உடம்புக்கு ஒழுங்கா சாப்பாடு விழவேயில்லையே.”

“சாப்பிட ஏலாது, வாய் கசக்குது, குமட்டுது.”

“அப்படிச் சொல்லி சரி வராதுதானே... அப்படீன்னா திரும்ப அந்தி நேரம் வைத்தியரிட்டப் போவோம்.”

நான் எதுவும் சொல்லாமல் போர்வையால் முகத்தை மூடிக் கொள்கிறேன். இப்போது இருட்டு. வெளிச்சத்தால் தர முடியாத சுகத்தை, சௌகரியத்தை இருள் எனக்குத் தருகிறது. அந்தகாரத்தினுள் எதுவுமே விஷேசமானதாக இல்லை. எதுவுமே தனித்துத் தென்படாது. எதையும் பார்க்கச் சொல்லி எமது விழிகள் எம்மை வற்புறுத்தாது. வெளிச்சம் எடுத்து வராத குளிர்மையையும், இதத்தையும் அந்தகாரம் கொண்டு வருகிறது. போர்வையால் தலையை மூடிக் கொண்டதும் எனக்கு அம்மா தென்படுவதில்லை. என்றாலும் அவள் அங்கேதான் இருக்கிறாள் என்பது விளங்குகிறது. சற்று நேரத்தில் அவள் செல்வதுவும் கேட்கிறது. திரும்பவும் வெளிச்சத்தை எதிர்நோக்கத் தேவையில்லை. நான் போர்வைக்குள்ளேயே சுருண்டு கொள்கிறேன். தலையை ஒரே மாதிரியாக வைத்துக் கொண்டதும், சௌகரியமாக இருக்கிறது. தலை அங்குமிங்குமாகத் திரும்பும்போது எனது சமநிலை தடுமாறி அதல பாதாளத்தில் விழுவது போன்ற பயமும், வேதனையும் மனதில் தோன்றுகிறது. அசையாது நான் இருளை செவிமடுக்கிறேன்.

நான் திலீயுடன்தான் யசோதரனின் வீட்டுக்குச் சென்றேன். திலீபன் எனும் பெயரைச் சுருக்கி நாம் அனைவருமே அவனை திலீ என்று அழைத்தோம். நான் கிராஞ்சிக்குப் போனது அதுதான் முதல் தடவை. அந்தத் தடவை நாங்கள் மன்னார் வழியாக விடத்தல்தீவைக் கடந்து, வெள்ளங்குளத்தால் திரும்பி, முழங்காவில் ஊடாகத்தான் கிராஞ்சிக்குச் சென்றோம்.



...

கிராஞ்சியில் அந்த விசாலமான சதுப்பு நிலத்தினூடாகச் சென்ற போது என்னவோ புது விதமான உணர்வை நான் உணர்ந்தேன். அது வானம் பார்த்த, மிகப் பரந்த

வெற்றுவெளி. அம் மாபெரும் சதுப்பு நிலம் வரண்டு போயிருந்தது. ஆங்காங்கே தண்ணீர் எஞ்சித் தேங்கியிருந்த குட்டைகளில் ஒவ்வொரு வகையான கொக்குகள் மீன் பிடித்துக் கொண்டிருந்தன. எனக்கு அந்த சதுப்பு நிலத்தில் சில புகைப்படங்களை எடுக்க வேண்டியிருந்த போதிலும், எம்முடன் இருந்தவர்கள் முணுமுணுக்கத் தொடங்கியிருந்தார்கள். அனைவருக்கும் தமது பணிகளை அவசரம் அவசரமாக முடித்துக் கொண்டு, இருள் சூழ முன்பு மன்னாரில் நாம் தங்கியிருந்த ஹோட்டலுக்குத் திரும்புவதே தேவையாக இருந்தது. யுத்தம் முடிவுற்றது எனக் கூறப்பட்ட போதிலும், கடந்த சில நாட்களாக அங்குமிங்குமாக அலைந்ததில், நாம் இப்போது நடமாடிக் கொண்டிருப்பது வேறொரு உலகத்தில் என்பதை உணரத் தொடங்கியிருந்தோம்.

கிராஞ்சி சிவபுரத்தில் நாங்கள் முதலாவதாகப் போன வீடு ரோசா நிறத்தில் சிதிலமடைந்திருந்த ஒற்றைச் சுவருக்கு தென்னோலையை அடைத்துக் கட்டிய சிறியதொரு குடிசை. முற்றத்தில் துளசிச் செடி வளர்க்கப்பட்டிருந்தது. ஒரு ஓரமாக இருந்த மர மல்லிகைச் செடி பூத்திருப்பதை, நன்றாகக் கூட்டிப் பெருக்கிய முற்றத்தில் நுழையும்போது வந்த சுகந்தத்திலிருந்தே உணர முடிந்தது. திலீ முன்னால் நடந்தான். “வீட்டுக்காரெங்க?” என உச்சரிப்பு பிழையாக இருந்த போதிலும், திலீயை அருகில் வைத்துக் கொண்டே நான் அதுவும் இதுவுமாக கொச்சைத் தமிழைப் பேசினேன். அந்த வீட்டில் மஞ்சள் நிறத்துக்கு நெருக்கமான செம்மஞ்சள் நிறத்தில் அழுக்கடைந்த சேலையொன்றை அணிந்திருந்த தாயொருத்தியும், மெலிந்து உயரமான இளம்பெண்ணொருத்தியும் இருந்தார்கள்.

”நாங்க பல்கலைக்கழகத்துல இருந்து வாறோம். கிராஞ்சிக் களப்பிலும், சதுப்பு நிலத்திலும் இருக்குற மீன் இனங்களைப் பற்றி ஆய்வொன்று செய்யப் போறோம். அந்த வேலைக்கு எங்களுக்கு உங்களோட உதவி தேவை. பல வருஷமா இந்தப் பகுதியில இருக்குற மீன்களைப் பற்றி யாருமே ஆய்வுகள் எதுவும் செஞ்சதில்ல. நாங்க குறிப்பாத் தேடிப் பார்க்க நினைச்சிருக்குற விஷயங்கள் ரெண்டு இருக்கு. ஒண்ணு, களப்பு நீரில் இந்தப் பகுதிக்கே உரித்தான கணவாய் இனங்கள் என்னென்ன இருக்கு என்பது, மற்றது, கிராஞ்சிக் களப்பிலிருக்கும் மீன்களோட உடலில் காணப்படுற பாதரசத்தோட

அளவை அளக்குறது. இது ஒரு வருஷம் போல எடுக்கக் கூடிய விஷேட செயற்திட்டம் ஒண்ணு.”

திலீ பெரிய அழகானதொரு புன்னகையோடு இதைத் தமிழில் சொல்லிக் கொண்டிருந்த போது அந்தத் தாயும், மெலிந்த இளம்பெண்ணும் வெறித்த பார்வையால் எம்மைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

அந்த முகங்கள் வெறுமையானவை. அவற்றில் சந்தோஷமோ, கவலையோ குறைந்த பட்சம் எந்த உணர்வுமே வெளிப்படவில்லை. முற்றத்தில் மலர்ச் செடிகளை நட்டு வளர்ப்பது இவர்கள் இருவருமாக இருக்காது என எனதுள்ளம் என்னிடம் உரைத்தது. யாழ்ப்பாணத்திலிருந்து வந்திருந்த திலீயின் முகத்தில் வெள்ளந்தியான புன்னகையொன்று வெளிப்பட்டிருந்தது. அடுத்ததாக என்ன செய்யப் போகிறோம்

என்பதைக் குறித்துச் சிந்தித்துப் பார்க்க முடியாமல் நாங்கள் முட்டாள்கள் போல அங்கு நின்று கொண்டிருந்தோம்.

“போகலாம் ஐயா” என திலீ எனது காதில் முணுமுணுத்தான்.

தாயின் வதனத்தில் திடீரென ஏதோவோர் கனிவு, பிரகாசம் படியத் தொடங்கியது. அனைத்துமே மிக விரைவாக நடந்து முடிந்தது. அவளுடைய முகத்திலிருந்து மிகப் பெரிய சிரிப்பு வெளிப்பட்டது.

“யசோ... யசோ.... என்ர மகன்.”

இளம்பெண்ணின் விழிகள் விரிந்தன. அவள் அம்மாவின் கையை இறுக்கமாகப் பற்றிக் கொண்டாள்.

“அம்மா, இவன் யசோ இல்ல” என்று அவள் முணுமுணுத்தாள்.

தாய் திடீரென ஓடி வந்து எனது கையை அவளது இரண்டு கைகளாலும் இறுக்கமாகப் பற்றிக் கொண்டாள். எனக்கு என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பது புரியாவிட்டாலும் கூட, ஏதோவோர் முட்டாள்தனமான திரைப்படமொன்றில் நடித்துக் கொண்டிருப்பது போல உணர்ந்தேன். திலீ பாய்ந்து வந்து அந்தத் தாயின் பிடியை அகற்ற முயன்ற போதிலும், செம்மஞ்சள் நிறத்தில் சேலை அணிந்திருந்த அந்தத் தாய் என்னைப் பலமாகப் பற்றிப் பிடித்துக் கொண்டிருந்தாள். மெலிந்த பெண் மூச்சு வாங்கி வாங்கி ஏதோ வேகமாகச் சொல்லிக் கொண்டிருந்தாள். இடைக்கிடையே ஓரிரு சொற்கள் புரிந்த போதிலும், ஒரு மந்திரம் போல, அவள் வேகமாக சொல்லிக் கொண்டே போனதால் எனது எதுவுமே சரியாக விளங்கவில்லை. திலீ எனக்காக அவளது பேச்சை மொழிபெயர்த்தான். யசோ அவளது அண்ணனாம். அவன் காணாமல் போய் விட்டானாம். அப்பாவும் இறந்து விட்டாராம்.

“செத்துப் போனாரா, கொல்லப்பட்டாரா?” என நான் கேட்டேன்.

திலீ என்னைப் பார்த்த பார்வையில்தான் அது கேட்கத் தேவையற்ற மூடக் கேள்வி என்பது எனக்குப் புரிந்தது. யசோ எப்போதாவது திரும்பி வருவான் என இந்தத் தாயும், மகளும் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். அம்மாவின் தலைக்குச் சுகமில்லையாம். அவள் காண்பவர்களையெல்லாம் யசோ என்று அழைக்கிறாளாம். யசோ உயிருடன் இல்லையென்றே இந்த இளம்பெண் நினைக்கிறாளாம். காரணம் அப்படி உயிருடனிருந்தால் ஏன் இன்னும் எங்களைப் பார்க்க வரவில்லை என அவள் கேட்கிறாள்.

“வேறொரு நாட்டிலயோ, முகாமிலயோ இருந்தால்?” என நான் கேட்டேன். அந்தப் பெண் அவளது கபில நிறம் படிந்த பற்களைக் காட்டி தலை சாய்த்துச் சிரித்தாள். ‘உனக்கு என்ன தெரியும் எங்களைப் பற்றி?!’ என்பது போன்ற ஒன்று அந்தச் சிரிப்பினுள்ளே மறைந்திருக்கக் கூடும். அப்போதுதான் நான் அவளது கால்களைக் கவனித்தேன்.

கணுக்காலின் மேற்பகுதி எரிந்து போயிருந்தது. தோல் சுருங்கிப் போயிருந்தது. எவ்வாறு இப்படி ஆனதென்ற கேள்வி என்னுள் எழுந்தும், நான் அதைக் கேட்காது விழுங்கிக்

கொண்டேன். யசோவின் அம்மாவுடைய கண்களில் வெள்ளை படரத் தொடங்கியிருந்தது. எனினும் அந்த வெள்ளையைத் தாண்டி ஏதோவோர் ஈர ஒளிக்கற்றையால் அந்த விழிகள் பிரகாசித்தன. இளம்பெண் எம்மை வீட்டுக்குள்ளே அழைத்தாள். அந்த வீட்டுக்கென இருந்த இரண்டேயிரண்டு பிளாஸ்டிக் நாற்காலிகளில் நானும், திலீயும் அமர்ந்தோம். மற்றவர்கள் மிகுந்த விருப்பத்தோடு வெளியேயே நின்று விட்டிருந்தார்கள். பெரிய அலுமினியப் பானைகள் இரண்டும், நுளம்பு வலையும் வீட்டின் ஒரு மூலையில் இருந்தன. இன்னும் உறை பிரிக்கப்படாத எதுவோ உயரமான பொருளொன்று ஒரு சுவரின் மீது சாய்த்து வைக்கப்பட்டிருந்தது. ‘இந்திய அரசாங்கத்தின் நன்கொடை’ என மூன்று மொழிகளிலும் அந்தப் பொதியின் மீது அச்சிடப்பட்டிருந்தது. பிள்ளையாரின் உருவப் படமொன்று ரோசா நிறப் பூச்சு மங்கிச் சிதைந்து போன சுவரில் தொங்கிக் கொண்டிருந்தது. வெண்ணிற பிளாஸ்டிக் பூமாலையொன்று போடப்பட்டிருந்த புகைப்படத்தில் இருந்த நபர் இங்கு கூறப்பட்ட யசோதரனின் அப்பாவாக இருக்கக் கூடும் என நான் அனுமானித்தேன்.

ரோசா நிறத்தில் சிதிலமடைந்திருந்த சுவரில் பெஸ்டலால் ஓவியம் வரையப்பட்டிருந்ததுதான் அங்கு சிறப்பான விடயமாக இருந்தது. அது சுவர் முழுவதையும் நிறைத்து வரையப்பட்டிருந்த விசாலமான ஓவியம். அதில் முகத்தை முகம் நோக்கியவாறு இரண்டு பெரிய கிளிகள் இருந்தன. அவை பூக்களால் கனத்திருந்த கிளையொன்றில் நின்றிருந்தன. அந்தக் கிளிகள் பஞ்சவர்ணக் கிளிகள் போன்றவை. அவற்றின் சிறகுகள் அனைத்து நிறங்களினாலும் வர்ணம் பூசப்பட்டிருந்தன. அம்மா அப்போதும் கூட எனது கையை விட்டிருக்கவில்லை. ஏதோ நான் அவளது கையை விட்டுவிட்டு ஓடி விடுவேன் என்பதைப் போல.

“இதை வரைஞ்சது எங்கட நிலாமதி” என அம்மா தமிழில் கூறினாள். அந்த இளம்பெண்ணின் பெயர் நிலாமதி.

நிலாமதி எங்களுக்கு கோப்பி ஊற்றி எடுத்துக் கொண்டு வந்து தந்தாள். அந்தக் கோப்பியில் கொத்தமல்லியின் சுவையும் வந்தது. ஆகவே, கோப்பியை அருந்தியபோது ஏதோ புதியதொரு தன்னிறைவை உணர்ந்தேன். கோப்பியை இடிக்கும்போதே கொத்தமல்லியையும் போட்டு இடிப்பார்களாக்கும் என நான் எண்ணிய போதிலும் அதை வெளிப்படையாகக் கேட்க முன்வரவில்லை. அங்கு அடர்த்தியான அமைதி உருவாகியிருந்தது. வெளியே இருந்தவர்களுக்கு கோப்பி வழங்க குவளைகள் போதாது என்பதால் நானும், திலீபனும் குடித்து முடிக்கும்வரை நிலாமதி காத்துக் கொண்டிருந்தாள். எனினும், வெளியே இருந்த நால்வரில் மூவர் இந்த வீடுகளில் தண்ணீர் கூட குடிக்க மாட்டார்கள் என்பதை நான் அறிந்திருந்தேன்.

“நீங்களா இந்த சித்திரத்தை வரைஞ்சீங்க? ரொம்ப அழகாயிருக்கே” என நான் தமிழில் கேட்டதும் அவளின் விழிகள் பிரகாசித்தன.

“வரைஞ்சது நான்தான். இது யசோ, இது வாகீ” என்றவள் கிளிகளிரண்டையும் கையை நீட்டி சுட்டிக் காட்டினாள். திலீயும், நானும் ஒருவரையொருவர் பார்த்துக்

கொண்டோம். அம்மாவைப் போலவே இந்தப் பெண்ணுக்கும் தலையில் ஏதாவது பிரச்சினை இருக்கக் கூடும். அவள் திரும்பவும் ஆவேசம் வந்தவள் போல எதையோ கூறிக் கொண்டேயிருந்தாள். திக்கித் திக்கி எதையோ முறைப்பாடு செய்வது போலத்தான் சொன்னாள். எனினும் அந்த வேகத்தைப் பின் தொடர முடியாத காரணத்தால் நான் அவ் வசனங்களைப் புரிந்து கொள்வதை நிறுத்தி விட்டேன். நிலாமதி தலையைச் சொறிந்தவாறே கூறிக் கொண்டிருந்தாள். அவளது விழிகள் விரிவதையும், சுருங்குவதையும், முகம் அங்குமிங்குமாத் திரும்புவதையும் நான் பார்த்துக் கொண்டிருந்தேன். அவளது கூந்தல் செம்பட்டை நிறத்தில் இருந்தது. அப்போது அம்மா என்னைக் கை விட்டுப் போய் சூட்கேஸ் ஒன்றைக் குடைந்து குடைந்து எதையோ தேடிக் கொண்டிருந்தாள். வெளியே இருந்த எம்மவர்கள் இடைக்கிடையே வீட்டுக்குள் எட்டிப் பார்த்து ‘கிளம்பலாம்’ என்பதை சொல்லாமல் சொன்னார்கள். நிலாமதி ஹோவென்று கூறிக் கொண்டேயிருந்தாள்.

அம்மா சூட்கேஸிலிருந்து கறுப்பு வெள்ளை புகைப்படமொன்றைத் தேடி எடுத்து வந்தாள். அந்தப் புகைப்படத்தில் என் வயதையொத்த இரண்டு பையன்கள் இருந்தார்கள். இருவரும் தோள்களில் கைகளைப் போட்டிருந்தார்கள். நிலாமதி அருகில் வந்து எனக்கும், திலீக்கும் புகைப்படத்தில் இருப்பவர்களைக் குறித்து விவரித்தாள். முள்ளம்பன்றித் தலைமயிரோடு பெரிய கண்களைக் கொண்டிருந்த கட்டுமஸ்தானவன் யசோதரன். சிறு பிள்ளையொன்றின் புன்னகையைக் கொண்டிருந்த மற்றவன் வாகீசன். இருவருமே பெரிதாக புன்னகைத்துக் கொண்டிருந்தார்கள். எனக்கும், யசோதரனுக்கும் இருந்த உருவ ஒற்றுமை பெரிய கண்களும், பெரிய உதடுகளும் மாத்திரம்தான். அது தாயொருத்தியை ஏமாறச் செய்யும் அளவிற்கான உருவ ஒற்றுமை அல்ல. நாங்கள் புறப்படத் தயாரான வேளையில் அந்தத் தாய் சற்று அமைதியடைந்திருந்தாள். அவள் எட்ட இருந்து எம்மைப் பார்த்துக் கொண்டிருந்தாள். அந்த விழிகள் கூறும் விடயங்களைப் புரிந்து கொள்ள முயற்சித்த போதிலும், வெள்ளை படிந்த அந்த விழிகள் எதையுமே உரைக்கவில்லை.

“வெளிப்படையாச் சொல்லா விட்டாலும் கூட இதுங்க எல்லாரும் புலிகளாகத்தான் இருக்கணும். அவளோட கூந்தலைக் குட்டையா வெட்டியிருக்குற விதத்தைக் கண்டீங்களா?” என ஐயா கூறியபோது திலீ என்னைப் பார்த்து புன்னகைத்தான். அந்தப் புன்னகையை நான் புரிந்து கொண்டேன்.

திலீ அச் சமயம் கனடாவுக்குப் போக மிகவும் பாடுபட்டுக் கொண்டிருந்தான். அதற்கிடையில் சிறு சிறு மொழிபெயர்ப்பு வேலைகளைச் செய்து சம்பாதிக்கும் காசை பத்திரமாக சேமித்து வந்தான். முகத்துக்கு நேராகக் கூறாவிட்டாலும் திலீ மிகவும் கஞ்சத்தனமானவன் என எமது குழுவினர் கதைத்துக் கொள்வது பல தடவைகள் எனது காதில் விழுந்திருந்தது.

“அவள் அவ்வளவு ஆவேசமாக என்ன புலம்பினாள்?” என்று நான் கேட்டதும், திலீ ஒரு கணம் தயங்கியவனாக பின்னால் திரும்பி ஐயாவைப் பார்த்துவிட்டு கூறத் தொடங்கினான்.

நிலாமதி அவளது அண்ணனின் கதையைத்தான் கூறியிருந்தாள். அண்ணனுக்கு

சங்கீதம் படிக்க ஆசையிருந்ததாம். கிட்டார் வாசித்தானாம். நண்பர்களோடு சேர்ந்து ஒரு இசைக் குழுவையும் தொடங்கினானாம். அண்ணனுக்கு ஆங்கிலப் பாடல்களை வாசிப்பதுதானாம் மிகவும் பிடிக்கும். அண்ணனின் நெருங்கிய சிநேகிதனான வாகீயும் பாடல்களைப் பாடுவானாம். அவர்கள் இருவரும் சிறு பராயத்திலிருந்தே நல்ல சிநேகிதர்களாம். போகப் போக அவர்கள் பாடல் இசைப்பதை நிறுத்தி விட்டார்களாம். காரணம் வாகீ அடிக்கடி யசோவுடன் வாக்குவாதப்பட்டிருக்கிறான். வாகீயுடன் கதைக்க வேண்டாம், அவன் சொல்வதை நம்ப வேண்டாம் என்றெல்லாம் யசோ நிலாமதிக்கும், அம்மாவுக்கும் உத்தரவு போட்டிருக்கிறான். குழுவிலிருந்த ஏனையவர்களும் வாகீக்கு சார்பாகத்தான் இருந்திருக்கிறார்கள். இயக்கத்திலிருந்த கமலா என்ற பெண்ணும் அந் நாட்களில் வாகீயை சந்தித்து வருவதாக தகவல் வந்ததாம். யசோவும், வாகீயும் கோபித்துக் கொண்டிருக்கிறார்கள். வாகீ இடைக்கிடையே யசோவைப் பார்க்க வந்த போதெல்லாம் யசோ, வாகீயைத் திட்டித் துரத்தி விட்டிருக்கிறான். இரண்டு பேரும் பயங்கரமாக மோதிக் கொண்டார்களாம். அதற்கு சில தினங்களுக்குப் பிறகு வாகீ காணாமல் போயிருக்கிறான். யசோ பல தினங்களாக உண்ணக் குடிக்காமல், பார்த்த இடத்தையே வெறித்துப் பார்த்தவாறு பட்டினி கிடந்திருக்கிறான். பிறகு ஒரு நாளிரவு தன்னைத் தேட வேண்டாம் என வீட்டாருக்கு ஒரு சிறு கடிதத்தை எழுதி வைத்து விட்டு காணாமல் போயிருக்கிறான். பிறகொரு காலத்தில் நிலாமதி இயக்கத்தில் இணைந்து கொண்ட போதிலும் யசோவைக் குறித்தோ, வாகீயைக் குறித்தோ எவ்விதத் தகவலும் கிடைத்திருக்கவில்லை. நிலாமதியின் கிணற்றருகில் ஒவ்வொரு நாளும் அந்தி நேரம் இரண்டு கிளிகள் வருகின்றனவாம். அவை கழுத்தில் மாலை இருக்கின்ற பெரிய கிளிகள். நிலாமதி அவற்றுக்கு சோறு வைப்பாளாம். அவை நிலாமதியைப் பார்க்கும் பார்வையில், அவை எங்கேயோ இறந்து போன யசோவும், வாகீயும் தானென நிலாமதிக்குத் தோன்றுமாம்.

எனது தலைக்குள் யசோவையும், வாகீயையும் குறித்து வேறொரு கதை துளிர் விடத் தொடங்கிய போதும், நான் அந்தத் தளிரைப் பிடுங்கியெறிந்தேன். திடீரென்று என்னைக் குறித்தே ஒரு பெரும் அறுவெறுப்பை நான் உணர்ந்தேன்.

வாந்தியெடுப்பதற்காக அம்மா எனது கட்டிலருகே வைத்திருந்த தகரப் பேணி எனக்கு இரண்டாகத் தென்படுகிறது. கடலில் அலையடிப்பது போல வாந்தி வருகிறது. கடைசியாக, உடலை அசைத்தசைத்து ஒக்காளமிட்ட போதும் வெளியே கொட்ட எதுவும் மீதமிருக்கவில்லை. வாந்தி தரை முழுவதும் சிதறியிருக்கிறது. தலையினுள்ளிருந்து வரும் வலியைத் தாங்கிக் கொள்ளவே முடியவில்லை.

“கிளிநொச்சியோட அர்த்தம் தெரியுமா? நொச்சி மரத்திலிருக்கும் கிளிகள். அதோ அங்க ஊதா நிறத்துல சிறிய பூக்கள் பூத்து, நீண்ட இலைகளைக் கொண்ட மரம்” என திலீ நொச்சி மரமொன்றைக் கண்ட போது என்னிடம் கூறியிருந்தான். சட சடவென்று கிளிகள் பறக்கின்றன. அவை எல்லா இடங்களையும் மூடியிருக்கின்றன. தாழ்வாரப் பலகையில் ஒரே வரிசையாக. ஜன்னல் படியின் மீது மூட இடமற்றவை கீ… கீயென்று

கத்தியவாறு பறக்கின்றன. ஆச்சியின் தோட்டத்தில் தேங்காய் பறித்த, பல வருடங்களுக்கு முன்னர் மரத்திலிருந்து வீழ்ந்து மரித்துப் போன ஜேம்ஸ், சாரத்தை கொடுக்காகக் கட்டிக் கொண்டு, மயிரடர்ந்த கால்களை ஆட்டி ஆட்டி கிளிகள் மூடியிருக்கும் தாழ்வாரப் பலகையில் அமர்ந்திருந்து சிவந்த கண்களால் என்னைக் கூர்ந்து பார்த்துக் கொண்டிருக்கிறான். நான் இறுக்கமாகக் கண்களை மூடிக் கொள்கிறேன். கனத்த கறுப்பு நிற அந்தகாரத்துக்குள் கிளிகள் ஆங்கிலத்தில் பாடல்களைப் பாடியவாறு வட்டமாகச் சுற்றிச் சுற்றிப் பறக்கின்றன.

கிராஞ்சி கடற்கரையில் வைத்து சமன் குமாரவைக் கண்டவுடனே எனது தலைக்குள் மின்னல் வெட்டியது. அவனுக்கு அடர்த்தியான இமைகளின் கீழ் வேட்டு வைக்கும் விழிகள். நான் அவனை நேராகப் பார்க்காத போதிலும், மீன் பிடிப்பவர்கள் கொண்டு வந்திருந்த கணவாய்களை நாங்கள் அளந்து பார்ப்பதை அவன் ஆர்வத்தோடு பார்த்துக் கொண்டிருப்பதை விழியோரத்தால் கண்டேன்.

“எங்க படையினரோட அனுமதி வாங்கிட்டா ஐயாமார் இங்க இந்த வேலை செய்றீங்க?” என அவன் வெகுநேரம் கழித்துக் கேட்டான். நான் ஆமாம் என்றதும் அவன் எனது வார்த்தைகளை நம்பி விட்டான்.

“எல்லாருமே சிங்களவங்க தானே, அப்ப பிரச்சினையில்ல” என்றான்.

சற்றுத் தொலைவில் ஜயா கணவாய்களின் மாதிரிகளை போத்தல்களில் இடுவதை, படையினர் இருவர் பார்த்துக் கொண்டிருந்தார்கள். நான் சிகரெட் ஒன்றைப் பற்ற வைத்துக் கொண்டு நிழலுக்குச் சென்றேன். மீன் திரும்பியதும் நான் தலையை அசைத்து சிகரெட்டை நீட்டினேன். மீன் இரையை விழுங்கியது. வேட்டு வைக்கும் விழிகள் என்னருகே வந்தன. திலீ விந்தையானதோர் புன்னகையோடு எனக்குக் கண்ணடித்து விட்டு எங்கேயோ பார்த்திருந்தான்.

“தம்பிக்கு எந்த ஊர்?”

“நான் எப்பாவல, எளியதிவுல்வெவ அண்ணா” என மீன் பெரிய புன்னகையோடு கூறியது. தன்னுடைய விழிகள் வேட்டு வைப்பதை அவன் அறியவில்லை என்பது அவன் வாயைத் திறக்கும்போதே எவருக்கும் புரியும். வேட்டு வைக்கும் விழிகளைக் கொண்ட மீன் இரு தடவைகள் சிகரட்டை இழுத்துப் புகைத்து விட்டு மீண்டும் என்னிடம் தந்தது.

“தம்பி செயலணிலயும் இருந்தீங்களா?”

“இல்லாம... நாங்க நந்திக்கடல்லயும் இருந்தோம் அண்ணா. அந்த நாட்கள்ல எனக்கு மஞ்சள் காய்ச்சல் வந்தது. நான் செத்துட்டேன்னுதான் எல்லாரும் நினைச்சாங்க. நாலு நாட்களா மயக்கத்திலேயே கிடந்திருக்கேன். திரும்பவும் சோறு சாப்பிடுவேன்னு நானே நினைச்சிருக்கல. போன ஜென்மத்துல செஞ்ச ஏதோ ஒரு புண்ணியம் மிச்சமிருந்ததால உயிர் பிழைச்சேன். அண்ணாவுக்கு எந்த ஊர்?”

“நான் பிலியந்தலை. இங்க நல்லமா?”

பையன் மெலிதாகப் புன்னகைத்தான். வேட்டு வைக்கும் விழிகளிரண்டும், பெரிய உதடுகளும் இருந்த போதிலும் சிறு குழந்தையின் வெள்ளந்தியான புன்னகையே அவனிடம் இருந்தது. அவனது கூர்மையான வேட்டைப் பற்களின் காரணமாக, அந்தப் புன்னகைக்கு தனியானதோர் அழகும் இருந்தது.

“இப்பன்னா முன்பு போல விடுமுறை எடுக்க கஷ்டம் எல்லாம் ஒண்ணுமில்ல. என்றாலும் ஊரில இருக்குற மாதிரி வருமா?”

“ஏனது? அங்க விட்டுட்டு வர முடியாத அளவுக்கு விஷேசமா யாராவது இருக்காங்களா?”

பையனுக்கு மீண்டும் சிரிப்பு வந்தது.

“இன்னும் நாங்க கல்யாணம் முடிக்கல. வாற வருஷம் முடிக்கப் போறோம்.”

“பேரென்ன?”

“பட்டி.”

“பட்டி..?”

“நிஜப் பெயர் தமயந்தி. வீட்டுல பட்டின்னு கூப்பிடுவாங்க.”

“யார் பட்டின்னு பெயர் வச்சது? நீங்களா?”

“இல்ல… சின்ன வயசுல அவளோட அம்மா வச்சிருப்பா.”

“தமயந்தின்னா தம்மின்னுதானே கூப்பிடணும்? ஏன் பட்டின்னு?”

கோப்ரல் சமன் குமாரவுக்கு சிரிப்பாக இருந்தது.

“அதை என்கிட்டயில்ல, அவளோட அம்மாக்கிட்டத்தான் கேட்கணும்.”

“சரி… இனிமே நீங்களாவது தம்மின்னு கூப்பிடுங்க.”

“பேருக்கு என்ன சொல்லிக் கூப்பிட்டா என்ன?!”

நான் புற்தரையில் அமர்ந்திருந்து மேலுமொரு சிகரட்டைப் பற்ற வைத்துக் கொண்டேன். சமனுக்கும் ஒன்றைக் கொடுத்தேன்.

“எத்தனை பேருக்கு வேட்டு வச்சிருக்கீங்க?”

சமன் திடுக்கிட்டுப் போனான். நான் புகை வளையமொன்றை காற்றில் விட்டேன்.

“போன ஜென்மத்துல செஞ்ச பாவத்தின் காரணமா மலர்ப் பூஜை செய்த கைகளாலேயே துப்பாக்கி ஏந்த வந்தாலும் கூட, நாங்க பௌத்த விகாரைகளைத் தரிசித்த, அன்னதானம் கொடுத்த பசங்க அண்ணா.”

“அக்கராயன்ல சந்திச்ச ஆமிப் பையன் ஒருத்தர், இயக்கத்தோட கேம்புக்கு அடிச்ச விதத்தைச் சொன்னார். அவங்கள்ல ஒருத்தரைக் கூட தப்பிச்சுப் போக விடலயாம்” என நான் கூறியதும், சமன் தலையையுயர்த்தி என்னைப் பார்த்தான்.

“என்னோட அப்பா சாகும்போது எனக்கு எட்டு வயசு. அம்மா தம்பியையும், என்னையும் பிக்குவாக்க, மடத்தில் விடப் பார்த்தா. தம்பி பிக்குவாகிட்டான். நான் அழுது குழறி வீட்டுலயே தங்கிட்டேன். எனக்கு ஒரு அக்காவும், இன்னும் ரெண்டு தங்கச்சிகளும் இருக்காங்க. அம்மா பொஸ்பேட்டுக்கு வேலைக்குப் போனா. இப்ப கிட்னி வருத்தம். ஒரு தங்கச்சி ஓடிப் போயிட்டாள். மற்றத் தங்கச்சியும், அக்காவும் வீட்டுல இருக்காங்க.”

அவன் வேட்டு வைக்கும் விழிகளால் என்னைப் பார்த்தவாறு சொல்லிக் கொண்டிருந்தான். இனிமேலும் அந்தக் கண்கள் வேட்டு வைக்காது.

நான் திலீயை அழைத்து எம்மிருவரையும் ஒரு புகைப்படம் எடுக்கச் சொன்னேன். சமன் தனது சீருடையின் சுருக்கங்களை ஒரு கையால் அகற்றி விட்டு உலக்கை போல நேராக நிமிர்ந்து நின்று கேமராவைப் பார்த்தான். நான் சமனின் தோளில் கையை இட்ட போதும், சமன் எனது தோளில் கையை இடவில்லை.

“முறைச்சுப் பார்க்காம கொஞ்சம் சிரிங்களேன்” என நான் கூறியதும் அவன் முரட்டுத் தோற்றம் குறையாமலே மெலிதாகப் புன்னகைத்தான்.

மதிய நேரம், நிலாமதி எம்மிடம் ஏதாவது வேலைவாய்ப்பு இருக்கிறதா என்று விசாரித்துப் பார்க்க கடற்கரைக்கு வந்தாள். எம்மிடம் வேலை வாய்ப்புகள் எவையும் இருக்கவில்லை.

மாலை வேளையில் இடி மின்னலோடு மழை பெய்தது. சமன் தனது அலுவலகத்தில் தேநீர் ஊற்றி எமக்கும் தந்தான். சமனிடம் மாத்திரம் கேட்டு வாங்க முடியாததால் நான் அங்கிருந்த படையினர் மூவரினதும் தொலைபேசி இலக்கத்தைக் கேட்டு வாங்கிக் கொண்டேன்.

திரும்பவும் மன்னாருக்கு வரும்போது, வழியில் வெள்ளங்குளம் பகுதியில் வைத்து எமது வாகனம் சகதியில் சிக்கிக் கொண்டது. அதைத் தள்ளப் போய் நாங்கள் அனைவரும் நனைந்து விட்டோம். அருகிலொரு வீட்டிலிருந்த இளைஞர்களை அழைத்துத்தான் ஒருவாறு வாகனத்தைத் தள்ளினோம். மன்னாருக்கு வந்து சேரும்போது நள்ளிரவு தாண்டி விடிகாலை ஒரு மணியை நெருங்கியிருந்தது.

சுபானிஸ் மாமா ஒரு ராகத்தோடு மந்திரித்து மந்திரித்து எனது தலையைச் சுற்றிச் சுற்றி பாக்குவெட்டியால் வெட்டும் எலுமிச்சம்பழங்களின் சாறு ஒரு தட்டில் விழுகிறது. எனது தலைக்குள்ளே அந்த மந்திரங்கள் எதிரொலிக்கின்றன. கண்களைத் திறக்க முடியாமல் இமைகள் கனத்துக் கிடக்கின்றன.

நான் கிராஞ்சி கடற்கரையில் நின்று கொண்டிருக்கிறேன். தொலைவில் தென்படும் தீவிலிருந்து யாரோ கையை அசைக்கிறார். அவரைக் காப்பாற்றுமாறு கூறி அலறுகிறார். அதுவொரு உடைந்த குரல். அது நானா? வாகீயா? யசோவா? சமன் குமாரவா? இல்லாவிட்டால் திலீயா?

# 12. `மரணம் என்பது வாழ்ந்த வாழ்வு'-- போர்ஹெஸின் மனதின் வழி ஒரு பயணம்: பிரசாந்தி சேகரம்

அயல்/செப்டம்பர் 2020

BY பிரசாந்தி சேகரம்

1997ஆம் ஆண்டு. 11ஆம் வகுப்பு மாணவி நான். அதி தீவிரங்களின் காலம் அது. எனக்குப் பிடித்த ஜேர்மன் நாளிதழ் கொண்டு உறைபோடப்பட்ட 'Strictly Personal' என்று முகப்பிலேயே என் கைப்பட எழுதிய நாட்குறிப்பு. இன்று, 23 வருடங்கள் கழித்து, அதனைத் தொட்டுக் கையில் எடுக்கும் இந்த நொடி, எனது விரல்கள் விரல்களாகவே இல்லை. மேலெங்கும் சிறகுகள். விழி தொடும் நிலமெல்லாம் விரிந்த வானம். மழையென்றால் ஒதுங்க, இலைகள் போர்த்திக் கிளைகள் நிறைந்த மரங்கள். விதைகள் பொதிந்த காடு. நீர் தளும்பும் குளங்கள். பறப்பதன்றி வேறேதும் அறியாப் பொழுதுகள்.

புரட்டுகிறேன். இலைச்சருகுகளும், தனியிறகுகளும் செருகப்பட்ட பக்கங்கள். வாரத்தின் இரண்டு நாட்கள் மட்டும் எப்போதும் எழுதி நிறைந்து, எழுதப் போதாமல் போயின. இன்னும் நன்றாக நினைவிருக்கின்றது அந்த நாள், அதன் கால நிலை, என் மனதின் நிலை. எல்லாமே நேற்றின் நொடிபோல. இன்றின் இமைப்பொழுது போல. புதன்கிழமைகளுக்கும், வெள்ளிக்கிழமைகளுக்கும் நடுவே உயிர் அசைந்தது. வாரத்தின் அனைத்து நாட்களும் புதனாக, வெள்ளியாக மாறாதா? பாடங்கள் எல்லாம் 'அந்த ஒரு' மொழியிலேயே இருக்கக் கூடாதா?

JORGE LUIS BORGES

இது பிதற்றல் அல்ல. இவையெல்லாம் ஒரு மொழி செய்த மாயம். மொழிகளில் எனக்குப் பாகுபாடு கிடையாது. ஒவ்வொரு மொழியும் ஒவ்வொரு வாழ்வுக்குள் எமைக் கொண்டுசென்று வாழ்ந்திட வைக்கின்றன. ஆனால், ஸ்பானிஷ் மொழி ஒரு விதிவிலக்கு. எனக்கது என் மனதின் வீடு. வேறு மொழிகளில் தீராக் காதல் கொண்டோர் என்னை சற்று மன்னிக்க. வெறும் வார்த்தைகள் பின்னிக்கொண்ட மொழியல்ல அது. விறுக்கென்று தெறிக்கும் வீரம், தேன் தடவிப் பின் காயும் காதல், சர்க்கரைத் துணுக்கையெனத் தித்திக்கும் தவிப்பு, நள்ளிரவில் நெருக்கும் பெருந்துயர், நூற்றாண்டுத் தனிமை, கசக்காத காத்திருப்பு எல்லாம் அந்த மொழிக்குச் சொந்தம். மந்திரித்து விட்டது போல அலைந்து திரிந்தேன். மனமெல்லாம் அட்லாண்டிக் மாகடல் தாண்டி மெக்சிகோவிலும், கொலம்பியாவிலும், சிலேயிலும் மயங்கிக் கிடந்தது.

ஸ்பானிஷ் மொழி மாயம் செய்தது என்று நான் சொன்னால், Don Quixote, La Casa de Bernada Alba, El habitante y su esperanza, Cien a□os de soledad, El amor en los tiempos de colera,



...

Las cuidad y los perros, La casa verde, De amor y de sombra போன்ற செவ்விலக்கியங்களுக்குள் வாழ்ந்தவர்களுக்கு இது பேரதிர்ச்சி இல்லை. Cervantes, Manuel Jos Quintana, Federico Garcia Llorca, Sim n Bol var, Jorge Luis Borges, Pablo Neruda, Octavio Paz, Frida Kahlo, Gabriel Garcia Marquez, Mario Vargas Llosa, Isabel Allende, போன்ற மகத்தான ஆளுமைகளில் மையல் கொண்டவர்களும் என்னைப் பார்த்து புருவம் உயர்த்த அவசியம் இல்லை. சரி, அவற்றையெல்லாம் விடுவோமே. Bolero இசையில் கசியும் துயரை உணர்ந்திருந்தால், Tango நடனத்தில் மிக உள்ளே தீயாய் எரிந்திருந்தால் நான் சொல்வது புரியும். அல்லது, ஹலபேனோஸ் (Jalape os) என்ற பெயர் கொண்ட ஒரு மிளகாய், அதனை மட்டும் ருசித்திருந்தால் போதும். இன்னும் இன்னும் இந்த மொழியின் தீவிரம் தெரியும். எதுவுமே இல்லையா? ஒரு புதன் அல்லது வெள்ளியை என்னோடு வாழ்ந்து பார்த்திருக்கவேண்டும். எனது ஸ்பானிஷ் ஆசிரியையிடம், அவர் கற்பிக்கும் ஒரு நொடி போதும். அல்லது, வெறுமனே அவர் பேசுவதை, பார்ப்பதை, அசைவதைப் பார்த்திருக்க வேண்டும்! அட, அழகல்ல அது, பேராளுமை, எங்கும் காணா தனித்துவம், கறுத்த கண்ணாடிக்குள் கம்பீரமான காந்தம் போன்ற பார்வையில் அடுத்த வார்த்தை வராது நின்றிருக்கிறேன். பிறகு இறுக்கமான, பிடிவாதமான உதடுகள் மெல்ல விரிந்த போது, நிலம் நழுவி, உலகமே மறந்து போகக் கண்டேன். பொழுதுகளை Instituto Ibero-Americano எனும் பல்கலைக்கழக மாணவர்களுக்கான நூலகத்தில் வாசித்துத் தீர்த்தேன்.

இவ்வாறான ஒரு ஆசிரியை, ஸ்பானிஷ் மொழியில், Jorge Luis Borges பற்றி முதல் முதலில் அறிமுகம் செய்த அந்த நாள் – வெள்ளிக்கிழமை. அது ஒரு மழை நாள். இலையுதிர்காலம். செந்தவிட்டு நிறப் பூக்கள் சொரிந்த படி இருந்தன. சற்று இருண்டிருந்த வகுப்பறைக்குள் போர்ஹெஸின் வாழ்வும் கவிதைகளும் நிறைந்தன.

“மரணம் என்பது வாழ்ந்த வாழ்வு. வாழ்வு என்பது வரவிருக்கும் மரணம்”. இந்த வரிகளில்

இருந்து இன்னும் நான் மீண்டு வரவில்லை. ஒவ்வொரு வார்த்தையும் ஒவ்வொரு உலகின் கதவுகளைத் திறந்து விட்டன. இல்லை, அவ்வாறு சொல்லி நிறுத்திடலாகாது. ஒவ்வொரு வார்த்தையும் பிரபஞ்சத்தையே தனக்குள் அடக்கிய ஒரு மாயக்குளிசை போல. இனி என்ன வேண்டும், கன்னமிரண்டையும் கைகளால் அணைத்தபடி, குழந்தையொன்று கதை கேட்பது போல, போர்ஹெஸ் எனும் பெரும் உலகினுள் நான் விரும்பித் தொலைந்தேன்.

24 ஆகஸ்ட் 1899 ஆம் ஆண்டு, ஆர்ஜென்டினாவின் புஏனோஸ் ஐரஸ் (Buenos Aires) நகரில், கல்வியறிவு மிகுந்த, மத்திய வர்க்க குடும்பத்தினுள் பிறந்தவர் போர்ஹெஸ். ஆயிரத்துக்கும் மேற்பட்ட நூல்கள் கொண்ட வீட்டில், ஆங்கிலமும் ஸ்பானிஷ் மொழியுமென இரண்டு மொழிகளிலும் வளர்க்கப்பட்டார். ஒன்பதாவது வயதில் Oscar Wilde இன் The Happy Prince ஐ ஆங்கிலத்தில் இருந்து ஸ்பானிஷ் மொழிக்கு மொழிபெயர்த்தது, பன்னிரண்டாவது வயதில் ஷேக்ஸ்பியரின் நூல்களை வாசித்தது, ஐரோப்பாவிற்கு புலம் பெயர்ந்து, Grecia எனும் இதழில் முதல் கவிதை “Hymn to the Sea” Walt Whitman இன் சாயல் கொண்டு வெளியானது, மீண்டும் ஆர்ஜென்டினாவுக்கு திரும்பி, 1930களில் Sur எனும் இலக்கிய இதழை நண்பர்களுடன் இணைந்து உருவாக்கிய அனைத்துமே போர்ஹெஸின் வார்த்தைகளில் சொன்னால்: “என்னைச் சுற்றி உள்ளவர்கள் எல்லாம் படைவீரராகச் செயல்படும் போது, நானோ எழுத்துக்களின் மனிதனானேன்”.

அந்த எழுத்துக்களின் மனிதனின், எனக்குப் பிடித்த வரிகளென சிலவற்றை அன்று எனது நாட்குறிப்பில் குறித்துக்கொண்டேன்:

”சில வீழ்ச்சிகள் உண்டு. அவை வெற்றியை விட அதி மேன்மையானவை ”

”உனது எதிரிகளை நீ மிகக் கவனமாகத் தேர்ந்தெடுக்கவேண்டும். இல்லையெனில், இறுதியில் நீ அவர்களின் தோற்றம் பெற்றிடுவாய். ”

”உலகத்தில் உள்ள அனைத்துக் கண்ணாடிகளிலும் என்னைப் பார்த்தேன். எதுவும் என்னைக் காட்டவில்லை”

”நான் என்பது – நான் வாசித்த அனைத்து எழுத்தாளர்களும், சந்தித்த மனிதர்களும், நேசித்த பெண்களும், நடந்த நகரங்களும் ஆகும் ”

”நேசம் கொள்வதென்பது, நேசம்கொண்டவரைத் தனித்துவமென

உணர்த்துவது”

”உன்னோடிருப்பதும், உன்னோடில்லாமல் இருப்பதும் தான் எனக்கு ஒரே வழி, காலத்தை அளந்துகொள்ள”

”’வாசித்தல்’, ’அன்பு செய்தல்’, ’கனவு காணுதல்’ போன்ற வினைச்சொற்கள் என்றுமே ஏவல்வினையாகி விடக்கூடாது”

”கவிஞர்களும் கண்பார்வையற்றவர்கள் போலத் தான். இருளில் பார்க்கும் வரம் பெற்றவர்கள் ”

”சொர்க்கம் என்பது எனது கற்பனையில் ஒரு நூலகம் ”

”இலக்கியம் என்பது கைபட்டு இயக்கிய ஒரு கனவு ”

ஒவ்வொரு வரியிலும் அது சொல்லாத நெடுங்கதையுண்டு. போர்ஹெஸ் எளிதில் கடந்துவிடக் கூடிய கதை சொல்லி அல்ல. அவரின் கதைகள் தொலைவின் பழமையான கோவில்களிலும், அயலின் சாராயக் கொட்டில்களிலும் அமைந்திருந்த போதும், காணும் கனவுகளில் இருந்து எழுகின்றன. புலியும் வாளும் நிலவொளியில் தகதகத்தாலும், புராண நூலொன்றில் புலவரின் விரல்கள் பதிந்தாலும், வாழ்வின் விசித்திரங்கள் மீதும், அனுபவங்களின் நெகிழ்ச்சி மீதும், மனித மனதின் மெல்லிழைகள் மீதும் படிந்துகொள்கின்றது அந்த எழுத்து. படிந்ததை மெல்ல ஊதிவிட, நிஜத்துக்குள் நிஜமல்லாத மாயம் நிகழ்ந்துவிடும் அந்த நொடி மிக அற்புதமானது. ‘magical realism’ – போர்ஹெஸ் அறியாமலேயே அதனைத் தொடக்கிவைத்தார். “மனித வாழ்வென்பது வலிமை மிக்கது. மடிந்து, புதையுண்டு போகமுன், ஒரு கணநேரத்தோற்றத்தில் ஏதுமற்றதாகி விடுகின்றது. அவ்வளவும் தான்”

மொழியியல், புராண இலக்கியம், மற்றும் சமூகவியல் வரம்புகள் அனைத்தையும் மீறி உருவாகிய படைப்புகள் தான் போர்ஹெஸினுடையவை. இன்று, போர்ஹெஸ் இல்லாமல் ஆர்ஜென்டீன் (Argentine) இலக்கியம் என்பது இல்லை. இன்னும் ஒரு படி மேலாக, Mario Vargas Llosa கூறியது போல “Cervantes க்கு பின்னர் ஸ்பானிஷ் எழுத்தாளர்களில் மிக முக்கியமான எழுத்தாளராக போர்ஹெஸ் கருதப்படுகின்றார். நோபல் பரிசை அவருக்கு வழங்காது

போனது Joyce, Proust மற்றும் Kafka போன்றோருக்கு இழைத்த பெரும் தவறைப் போன்றது.”

அவரின் மிக முக்கிய சிறுகதைத் தொகுப்பான Ficciones, 1944 ஆம் ஆண்டில் வெளிவந்த போதும், Labyrinths எனும் கவிதை மற்றும் கட்டுரைத்தொகுப்பு 1961 ஆம் ஆண்டு வெளியான பின்னரே ஆங்கில இலக்கிய உலகம் அவரைக் கண்டு கொள்ளத் தொடங்கியது. அதே ஆண்டில், Samuel Beckett உடன் இணைந்து The Formentor Prize வரை அவரைக் கொண்டு சென்றது. பின்னர் தொடர் மொழிபெயர்ப்புகள் நிகழ, Norman Thomas di Giovanni இன் மொழிபெயர்ப்பில் A Personal Anthology (1967), The Aleph and Other Stories (1972) மற்றும் In Praise of Darkness (1974) உருவாகின. இவையெல்லாம் நிகழ்ந்த போது, “நான் தனித்திருந்தேன். கண்ணாடி ஏனோ எவரையும் காட்டவில்லை” என போர்ஹெஸ் பதிகின்றார்.

”யாரும் கழிவிரக்கம் அல்லது வசைகள் கொண்டு

இறைவன் எழுதிய உயரிய வாக்குமூலம் தனை வாசித்தல்

வேண்டாம்; அவர் அதி சிறந்த முரணுடன்

புத்தகங்களையும் இரவையும் எனக்குத் தந்துள்ளார்

ஒரே கணப்பொழுதில்.”

55 வயதில், ஆர்ஜென்டினாவின் தேசிய நூலகத்தின் தலைமைப் பொறுப்பினை போர்ஹெஸ் ஏற்றபோது, கண்பார்வையை முற்றிலும் இழந்திருந்தார். கனவுகளை வண்ணங்களில் கண்டவர், பின்னர் வண்ணங்களும் மெல்ல மறைய, ஒளியும் அசைவும் மட்டுமே எஞ்ச, 87 வயதில், அந்த அசைவும் ஒரு நாள் நின்றுபோனது. அவ்வளவும் தான் அந்த வாழ்வு. இல்லை, போர்ஹெஸின் எழுத்தில், இந்த நேர்காணலில் அது தொடர்கின்றது. வாழ்கின்றது.

இது, போர்ஹெஸ் இறப்பதற்கு ஒரு வருடம் முன்பு 1985 ஆம் ஆண்டில், அவருக்கு மிக நெருங்கிய தோழமையான Gloria L□pez Lecube என்பவருக்கு வழங்கிய கடைசி வானொலி நேர்காணல். அதன் தலைப்பு ‘கடைசி நேர்காணல்’ (‘The Last Interview’). அதன் ‘கடைசி’ எனும் காவியத் தன்மையாலும், கேள்வி பதில்களின் நீரோட்டத்தாலும் முக்கியம் பெற்று, இன்று, இங்கு என்னைப் பகிரச்சொல்கின்றது. அவரின் படைப்புகள் சார்ந்த கேள்விகள் இல்லாத ஒரு நேர்காணல் இது. இருந்தும், வியக்கத்தக்க ஒரு மனிதனை, அத்தனை நேர்மையுடன் வெளிப்படும் ஓர் கலைஞனை இறுகக் கட்டியணைத்துக் கொள்ளச் செய்கின்றது இந்த நேர்காணல்.

கடலலைகளுடன் அதனைக் கேட்கக் கிடைக்கும் இந்தப் மாயப் பொழுது, செந்தவிட்டு நிறப் பூக்கள் சொரியும் இலையுதிர்காலம் அல்ல, கோடையின் அனல் காற்றின் கடைசி நாள் இது. என் மென்சிரிப்பை நீ உணர்கிறாயா? இந்த வரியை எழுதும் நொடி – இது ஒரு வெள்ளி என்றால் நீ நம்பித்தான் ஆகவேண்டும்!

எனது பிறப்பிடமான புஏனோஸ் ஐரஸ் இல் நான் கண்டுகொள்ளப் படாதவராகவே இருந்தேன். புஏனோஸ் ஐரஸ் மக்கள் பெரும் பகட்டு இறுமாப்புடையவர்கள். ஐரோப்பிய பதிப்பாசிரியர்களால் FORMENTOR PRIZE எனக்கு வழங்கப்பட்ட போது தான் என் பக்கம் திரும்பினார்கள். திடீரென நான் இருப்பதைக் கண்டுகொண்டார்கள்

The Last Interview | La Isla FM Radio, Argentina | 1985

Gloria L�pez Lecube: எழுத்து, வாசிப்பு. இவை தாண்டி வேறென்ன செய்வதில் உங்களுக்கு அதிக ஆர்வம்?

Borges: பயணம் செய்வது எனக்கு மிகவும் பிடிக்கும், ஒவ்வொரு நாட்டிற்கும் ஒவ்வொரு உணர்வுண்டு. அதனை உணர்ந்து, கற்பனை செய்து பார்ப்பது எனக்கு மிகவும் பிடிக்கும். ஆனால், அநேகமான நேரங்களில் அவை தெளிவற்று அமைந்துவிடுகின்றன. ஏனென்றால்..

Gloria L�pez Lecube: உங்கள் பயணங்களில் உடனிருப்பவர் உங்களுக்கு அவற்றை விபரித்துக் காட்டுவாரா?

Borges: ஓம், Mar�a Kodama எனது பயணங்களில் என்னோடு உடனிருப்பவர். அவர் அனைத்தையும் எனக்கு விபரித்துக் காட்டுவார், நான் அவற்றை எனது கற்பனையில் விரிப்பேன். அது எப்போதும் ஒரு வித முழுமையற்ற தன்மையுடன் தான் இருக்கும்.

Gloria L�pez Lecube: உங்கள் கற்பனை – அது வண்ணங்கள் கொண்டதா?

Borges: ஓம், எனது கனவுகளும் வழக்கமாக வண்ணங்களில்தான் அமைந்துவிடுகின்றன. ஆனால், வண்ணங்களில் கனவு காணும் போது, அந்த வண்ணங்கள் மலைப்பூட்டும் மினுமினுப்புடன் இருக்கின்றன. விழிக்கும் போது, ஏனோ, இந்த நொடியில் போல, ஒரு பனிப்புகார் சூழ உள்ளேன். சமயங்களில் அது பிரகாசமாகவும், நீலமாகவும், சாம்பலாகவும், வடிவங்கள் கரைந்தும் உள்ளன. இறுதியாக என்னுள் எஞ்சியது மஞ்சள் வண்ணம். The Gold of the Tigers எனும் ஒரு கவிதைத் தொகுப்பு. அதில் ஒரு கவிதையில், 'நான் கண்ட முதல் வண்ணம் புலியின் மென்மயிரின் மஞ்சள்' என அத்தனை தெளிவுடன் கூறி இருக்கிறேன். பல மணி நேரங்கள், மிருகக் காட்சிசாலையில் புலிகளை நோக்கியபடி இருந்திருக்கிறேன். அப்போது, பார்வை மெல்ல மங்கத்தொடங்க, என்னுள் எஞ்சிய ஒரேயொரு வண்ணம் மஞ்சள் தான். ஆனால், அதனையும் இழந்து நிற்கின்றேன் இப்போது. நான் இழந்த முதல் வண்ணங்கள் கருப்பும் சிகப்பும் தான். அதனால் என்றுமே நான் இருளில் வாழ நேரவில்லை. ஆரம்பத்தில் சற்றுக் கடினமாகத் தான் இருந்தது. பிறகு பச்சை, நீலம், மஞ்சள் வண்ணங்கள் எஞ்சின. பச்சையும், நீலமும் ஏனோ செந்தவிட்டு நிறத்தில் தேய்ந்து போயின. மஞ்சள் காணாமல் போனது. இப்போது எந்த வண்ணமும் இல்லை. ஒளியும் அசைவும் மட்டும் தான்.

Gloria L�pez Lecube: கண்பார்வை இழந்தமை உங்களுக்கு வழங்கப்பெற்ற ஒரு கொடையெனவும், மனிதர்கள் உங்கள் மேல் அன்பு செலுத்த அது ஒரு காரணம் என்றும் ஒரு முறை கூறினீர்கள்.

Borges: ம்ம்ம். அவ்வாறு தான் நான் நினைக்கின்றேன், ஆனால்...

Gloria L�pez Lecube: கண்பார்வையற்றது உங்களை எவ்வைகையிலும் கோபப்படுத்தவில்லையா போர்ஹெஸ்?

Borges: என்னை நம்புங்கள், கண்பார்வையற்றதன் நன்மைகள் மிகைப்படுத்தப்பட்டுள்ளன. என்னால் பார்க்க முடியுமெனில், வீட்டை விட்டு நான் என்றுமே போகாது, என்னைச் சூழ உள்ள நூல்கள் பலவற்றை வாசித்துத் தீர்ப்பேன். இப்போது அவை வெகு தூரத்தில் உள்ளன. ஐஸ்லாந்து போல. ஐஸ்லாந்துக்கு இரண்டு தடவைகள் சென்றிருக்கிறேன், ஆனால் என் புத்தகங்களை என்றுமே என்னால் அடைந்துவிட முடியாது. இருந்தும், அதே நேரம் வாசிக்க இயலவில்லை எனும் விடயம் என்னை மிகவும் கடமையுணர்வில் ஆழ்த்துகின்றது...

Gloria L�pez Lecube: உலகத்துடன் இணைந்துகொள்வதற்கா?

Borges: இல்லை, உலகத்துடன் இணைந்து கொள்வதற்கல்ல. கனவு காண்பதற்கும், கற்பனை செய்வதற்கும். உலகத்தை நான் அறிந்துகொள்வது பெரும்பாலும் மனிதர்களூடாகத் தான்.

Gloria L�pez Lecube: உங்களின் முகத்தோற்றம், உடல் அல்லது கைகள் எவ்வாறு இருக்கும் என்று நினைவிருக்கின்றதா?

Borges: இல்லை.

Gloria L�pez Lecube: உங்களின் முகத்தை தொட்டுணர்ந்திருக்கிறீர்களா? உங்களின் விரல்களினூடாக?

Borges: நிச்சயமாக, சவரம் செய்ய முன்னரும் பின்னரும், ஆனால் அதிகமாகத் தொட்டதில்லை. யார் கண்டார், கண்ணாடிக்குள் இருந்து எவ்வகையான ஒரு வயதான மனிதன் என்னை உற்றுநோக்கிக் கொண்டிருக்கிறாரோ? நிச்சயமாக அவரை என்னால் பார்க்க இயலாது. அவரை என்னால் கண்ணாடியில் கண்டுகொள்ளவும் முடியாது. என்னிடம் கண்ணாடி இல்லையென்பது வேறு விடயம். கடைசியாக நான் என்னைப் பார்த்தது ஏறத்தாழ 1957 ஆம் ஆண்டு இருக்கும். நிறைய மாறி இருக்கிறேன் என அஞ்சுகிறேன். சுருக்கங்கள் நிறைந்த வெளி அது. அதில் எனக்கு எந்த வித சந்தேகமும் இல்லை.

Gloria L�pez Lecube: ஆனால் சுருக்கங்கள், முதிர்ச்சியின் அறிகுறி, இல்லையா?

Borges: ஆம். உதாரணத்திற்கு, தவிட்டு நிற முடி கொண்டிருந்தேன் ஒரு காலம். இப்போது வழுக்கைத் தன்மை என்பதற்கு அப்பால் சென்றிருப்பேன் என்று நம்புகிறேன் [சிரித்தபடி].

Gloria L?pez Lecube: இந்த சாலை வழியே நடந்து செல்கையில் எவ்வாறு உணர்கிறீர்கள்? நீங்கள் வெப்பத்தை அளக்கும் ஒரு கருவி போல. ஒரு வகையில் செவி வழி வெப்பத்தை அளப்பது போல இது, இல்லையா?

Borges: தோழமையால் சூழ்ந்திருக்கிறேன் நான், பரந்தமனம் கொண்ட, வார்த்தைகளுக்குள் அடங்காத தோழமைகள். மனிதர்களுக்கு என்னைப் பிடித்திருக்கின்றது. அது ஏன் என்று தெரியவில்லை. அதனை விளக்கிக் கூறவும் முடியாது. எனது நூல்களைப் பலர் வாசிக்கவில்லை. நான் ஒரு நினைவுச்சின்னமாக இருந்தபோதும், இந்தத் தோழமைகள் வியக்கத்தக்கவகையில் விசித்திரமானவை. 1961 ஆம் ஆண்டு அம்மாவுடன் Texas சென்றேன். அங்கு நான் சந்தித்த அனைவரும் என்மேல் உள்ளார்ந்த அக்கறை காட்டினார்கள். நான் மிகத் தடுமாறி அது ஏன் அவ்வாறு இருக்கின்றது என என்னையே கேட்டுக்கொண்டேன். அதற்கான பதில் எனக்கு ஆச்சரியமளிக்கவில்லை. அப்போது எனக்கு 62 வயது, நான் மிகவும் வயதாகி விட்டேன் என்று சொன்னார்கள். ஆனால் நான் என்னை அவ்வாறு உணரவில்லை. சரி அவ்வாறே வைத்துக்கொள்வோம், நான் ஒரு வயதானவர், 61 வயது கவிஞர், கண்பார்வையற்றவர் – இவையெல்லாம் என்னை ஒரு Milton போல அல்லது ஒரு Homer போல காட்டியது. ஆனால் நான் ஒரு தென் அமெரிக்கன், Texas போன்ற நகரங்களில் தென் அமெரிக்கனாக இருப்பது ஒரு வித கவர்ச்சியான விடயம். அவர்களுக்கு நான் ஒரு மெக்ஸிகன் போலவும்… இவையெல்லாம் என் கையில் எனக்கு சாதகமாக இருந்த பலமான நுழைவுச்சீட்டுகள். என் எழுத்து அதனுள் அடங்காது. ஏன் என்றால் எனது நூல்கள் இன்னும் மொழிபெயர்க்கப் படவில்லையே! எனவே, ஒரு வயதானவராக, கண்பார்வையற்றவராக, தென் அமெரிக்க கவிஞராக நான் மிகுந்த தன்னம்பிக்கையுடன் வெளிப்பட்டேன். ஆனால் எனது பிறப்பிடமான புஏனோஸ் ஐரஸ் இல் நான் கண்டுகொள்ளப் படாதவராகவே இருந்தேன். புஏனோஸ் ஐரஸ் மக்கள் பெரும் பகட்டிறுமாப்புடையவர்கள். ஐரோப்பிய பதிப்பாசிரியர்களால் Formentor Prize எனக்கு வழங்கப்பட்ட போது தான் என் பக்கம் திரும்பினார்கள். திடீரென நான் இருப்பதைக் கண்டுகொண்டார்கள். அதுவரை H. G. Wells இன் 'கண்ணுக்குத் தெரியாத மனிதனாக' (The Invisible Man) இருந்தேன். அது மிக வசதியாகவும் இருந்தது. ஆனால் ஒரு மின்வெட்டில் என்னைக் கண்டுகொள்ளத் தொடங்கினர்.

Gloria L?pez Lecube: சரி, கண்டுகொள்ளத் தொடங்கிய போது எவ்வாறு இருந்தது? நீங்கள் கூச்ச சுபாவம் கொண்டவர் என்பதை இங்கு நான் கூறித்தான் ஆகவேண்டும், போர்ஹெஸ்!

Borges: காலப்போக்கில் எனது கூச்ச சுபாவம் இன்னும் முனைப்புடன் அதிகரித்தது. பொதுவில் பலர் முன் பேசும் போது எனக்குள் ஏற்படும் நடுக்கத்தைப் போல. முதல் முறை பேசிய போது இத்தனை நடுக்கம் இருக்கவில்லை. இப்போது நான் அனுபவசாலியே, நான் சொல்வது நடுக்கத்தில்.

Gloria L?pez Lecube: உங்களுக்கு நடுக்கமா? ஒரு பெரும் கூட்டத்தின் முன் பேசும் போது எவ்வாறு உணர்கிறீர்கள்?

Borges: பதட்டமடைகின்றேன். ஆனால், எனது கண்பார்வையற்ற தன்மை ஒரு வகையில் எனக்குத் தற்பாதுகாப்புப் போலத் தான்: “யாருமே வரவில்லை, மண்டபம் வெறுமையாக உள்ளது” என்று எனது நண்பர்கள் கூறுவதுண்டு. இருந்தும், எனது நரம்பின் நடுக்கத்தைத் தணிக்கவே அதனைக் கூறுகின்றார்கள் என்பது எனக்குத் தெரியும். பின்னர் எழுந்து மண்டபத்தினுள் நுழையும் போது எழும் கைதட்டல் இருக்கின்றதே! எனது நண்பர்கள் மிகவும் தாராள மனசுக்காரர்கள், பொய் சொல்வதில். ஆனால், அந்தக் கைத்தட்டலில் மீண்டும் எனக்குள் அந்த நடுக்கம் தொடங்கும்.

Gloria L�pez Lecube: ஆனால் நீங்கள் அத்தனை எளிதாக பேசுகிறீர்களே, போர்ஹெஸ்?

Borges: இல்லவே இல்லை. நம்புங்கள், அது அத்தனை கடினம். எழுதுவதே எனக்கு மிகக் கடினமான விடயமே!

Gloria L�pez Lecube: சரி, மரணத்தை நீங்கள் எவ்வாறு உணர்கிறீர்கள்?

Borges: அட, மரணத்திற்காக நான் பொறுமையற்றுக் காத்திருக்கிறேன். அது நிகழும் என்றெனக்குச் சொல்லப்பட்டிருக்கின்றது. இருந்தும், மரணம் வராது போனாலும், நான் இறக்க மாட்டேன். Spinoza சொல்கின்றார் நாம் அனைவரும் இறவாத்தன்மை கொண்டுள்ளோம் என்று. சரிதான், ஆனால் தனி மனிதர்களாக அல்ல. அது தெய்வீகமான ஓர் இறவாத்தன்மை என்று தான் நான் நினைக்கின்றேன். எதனாலும் சற்று அச்சம் கொண்டாலும், நினைப்பது நிகழாவிடிலும், எனக்குள் நான் எண்ணுவதுண்டு: ஆர்ஜென்டின குடியரசு போன்ற ஒரு தொலைந்த நாட்டினைச் சேர்ந்த, ஒரு தென் அமெரிக்க எழுத்தாளனுக்கு 20 ஆம் நூற்றாண்டின் இறுதியில் என்னதான் நடந்துவிடப்போகின்றது என்று நான் ஏன் கவலைகொள்ளவேண்டும்? மரணம் எவ்வாறு இருக்கும் எனும் திகைப்பில் உள்ள ஒருவருக்கு, இது போன்ற கவலைகளுக்கு இடமே கிடையாது. மரணம் என்பது உடலோடு ஆன்மாவும் அழிவுறுதல். அதுவே சிறந்தது. அல்லது முற்றிலுமாக மறக்கப்படுவது.

Gloria L�pez Lecube: Jorge Luis Borges அல்லாது வேறொருவராக இருந்திருக்கலாம் என்று ஒரு முறை நீங்கள் சொன்னீர்கள்....

Borges: ஓம், சிறு வயதில் நான் வாசித்த, Papini எழுதிய நூலில் இருந்து எடுத்தாளப்பட்ட வரி அது. El piloto ciego (கண்பார்வையிழந்த விமானி) எனும் நூலில் தனக்கு வேறெவருவராக ஆக வேண்டுமெனவும் ஆனால் தான் மட்டுமே அவ்வாறு நினைத்ததாகவும் அவர் கூறுகின்றார். எம் எல்லோருக்கும் அந்த ஆசை உண்டல்லவா?

Gloria L�pez Lecube: சரி உங்களுக்கு? உங்களுக்கு யாராக ஆகவேண்டும் போர்ஹெஸ்?

Borges: [சற்றுத் தாமதமாக] இல்லை. ‘போர்ஹெஸ்’ ஆக இருப்பதில் இருந்து நான் இராஜினாமா பெறவேண்டும். வேறெந்த விதியையும் என்னால் நினைத்துப் பார்க்க முடியவில்லை. எனக்கான ஒரே விதி, இலக்கியம் தான். Milton மற்றும் Coleridge இன் தன்வரலாற்றுக் குறிப்புகளைப் படிக்க நேர்ந்த போது, தாம் எழுத்தாளர்களாக வரப்போவதை

முன்கூட்டியே அவர்கள் அறிந்திருந்திருந்தார்கள் என இருவரும் குறிப்பிடுகின்றனர்.

Gloria L□pez Lecube: நீங்கள் எப்போது அவ்வாறு உணர்ந்தீர்கள்?

Borges: எப்போதும் நான் அதனை உணர்ந்ததுண்டு. ஒரு வேளை அது அப்பாவின் தாக்கமாக இருந்திருக்கலாம். அப்பாவின் நூலகத்தில் தான் நான் வளர்ந்தேன். என்றோ எனக்குத் தெரிந்திருந்தது, அது தான் எனது விதியென. புத்தகங்கள் சூழ, வாசித்தபடி. ஆனால் எனது எழுத்துக்கும் கூட அந்த சூழலே காரணம்.

Gloria L□pez Lecube: உங்களின் கவிதைகளில் உங்களுக்கு மிகவும் பிடித்த கவிதை எது? நீங்கள் நீங்களாகவே வெளிப்பட்ட கவிதை எது?

Borges: நான் நானாக வெளிப்பட்ட கவிதைகள் என் விருப்பத்திற்குரியவை அல்ல. எனக்குப் பிடித்த, Spinoza1 பற்றி நான் எழுதிய ஈரேழ்வரிப்பா (Sonnet) ஒன்று உண்டு. "யாரோ ..."என்று ஆரம்பிக்கும் ஒரு வரி. இல்லை அது அல்ல. இன்னொரு வரி "மனிதன் தெய்வத்தை இருளில் உருவாக்குகிறான்" எனும் வரி. அந்த மனிதன் தான் Spinoza, அவன் தெய்வத்தை தோற்றுவிக்கிறான். அள்ள அள்ளக் குறையாத கருப்பொருட்கள் கொண்டு தனக்கேயான தெய்வத்தை. அதன் செயல்களும் முடிவற்று இருக்கின்றன. என்னைப் பற்றிய இரண்டு கவிதைகள் நினைவில் இருக்கின்றன. ஒன்று, Bartolom□ Mitre எனும் படைப்பெருந்தலைவர் 1874 ஆம் ஆண்டு சரணடைந்த போது நிகழ்ந்த தாத்தாவின் மரணம் பற்றியது. தாத்தா தன்னைத் தானே சுட்டுக்கொன்றார். எனது அப்பா பிறந்தது 1874 ஆம் ஆண்டில். அதே ஆண்டில் தான் மிகப் பெரும் கவிஞர் Leopoldo Lugones என்பவரும் பிறந்தார்.

Gloria L□pez Lecube: தனது இலக்கியத் தகைமையை ஏற்றுக்கொள்ளாத ஒரு புனிதர் அல்லது தொண்டர் போலத்தான் உங்களைப் பார்க்கிறேன். அற்பமான படைப்புகளுக்கு உங்களுக்கு விருதுகள் கிடைத்ததாகக் கூறினீர்கள்.

Borges: அது உண்மை தான்...

Gloria L□pez Lecube: ஆனால் நீங்கள் அதனை விட மேல், போர்ஹெஸ். ஆர்ஜென்டின் இலக்கியத்திற்கு நீங்கள் செய்த அனைத்துமே...

Borges: அது மிகச் சிறிய பங்களிப்பு. நான் யாரிலும் பெரும் பாதிப்பு செலுத்தவில்லை. மாறாக, நான்தான் பல கடந்தகால படைப்பாளிகளுக்கு கடன் பட்டிருக்கிறேன்.

Gloria L□pez Lecube: ஆனால், பெரும் பாதிப்பு செலுத்தவில்லை என்று உங்களால் எவ்வாறு கூறமுடியும்?

Borges: பாதிப்பு செலுத்தவில்லை தான். Groussac, Lugones, Capdevila, Fern□ndez Moreno அனைவருக்கும் எந்த வித சந்தேகமும் இல்லாமல் பெரும் கடன்பட்டிருக்கிறேன். இவை எல்லாவற்றிற்கும் அப்பால், Almafuerte. ஆர்ஜென்டினா உருவாக்கிய மிகப் பெரும் மேதை அவர். "El misionero" எனும் படைப்பினை எழுதியவர். பத்திரிகை ஆசிரியரான Evaristo Carriego அதனை மனதில் இருந்து ஒப்புவிப்பார். கலப்படமற்ற, தூய இலக்கியத்துடனான

எனது முதல் சந்திப்பு Carriego மூலம் ஒரு ஞாயிறு இரவு நிகழ்ந்தது. Carriego தனது வீட்டில் நின்றுகொண்டிருந்தபடி “El misionero” கவிதையை தனது குரலில் ஆரவாரமாக ஒப்புவித்தார். ஒரு வார்த்தை கூட புரியாது நின்றேன் நான். ஆனால் ஏதோ ஒரு புதுமையான விடயத்தை அறிந்துகொண்டதாக உணர்ந்தேன். அந்த புதுமை தான் கவிதை.

Gloria L□pez Lecube: இப்போது நான் உங்களின் வீட்டில் அமைந்த நூலகத்தில் இருக்கிறேன் என்றால், எந்தக் கவிதையை என்னை வாசிக்கச் சொல்லி நீங்கள் கேட்பீர்கள்?

Borges: Robert Frost இன் “Acquainted with the Night” எனும் கவிதையை. அல்லது Arturo Capdevila வின் “La fiesta del mundo”. என்னை வியப்பில் ஆழ்த்த வேண்டும் என்றால், அந்தப் புத்தகத்தின் ஏதும் ஒரு பக்கத்தை விரித்து வாசிக்கத் தொடங்குங்கள். பிரத்தியேகமாக “Aulo Gelio” எனும் கவிதை. வியந்துபோகும் படியான சில வரிகள் அதனில் உண்டு. இன்று, அவை யாராலும் நினைவுகூறப் படுவதில்லை. அதனை எழுதிய Capdevila வையும் மறந்திருப்பார்கள். உங்களுக்குத் தெரியுமா, மக்கள் எளிதில் மறந்துவிடுவதுண்டு. அல்லது அவர்கள் அர்த்தமற்ற விடயங்களைத் தான் நினைவுகொள்வார்கள். ஒரு காற்பந்தாட்டப் போட்டி அல்லது ஏதேனும் ஒன்றை நிறுவியவர்களை. நிறுவியவர்கள் வழித்தோன்றலில் வந்தவன் நான், இருந்தாலும் அவர்களுக்கு அத்தனை முக்கியத்துவம் கொடுப்பது சரியா என்று எனக்குத் தெரியவில்லை. எமக்கு ஒரு வரலாறு உண்டு, ஆனால் அது திடீர் எண்ணங்கள் கொண்ட மனிதர்களாலும், குதிரைப்பந்தயத்தின் சமூக அடுக்குகள் தொடர்பாகவும் நிரம்பியுள்ளது.

Gloria L□pez Lecube: போர்ஹெஸ், கடந்த காலங்களில் நீங்கள் அடைந்த நிலை, மக்களின் மதிப்பு எல்லாம்....

Borges: அது விசித்திரம், இல்லையா? ஆனால் அதுவும் கடந்துபோகும்.

Gloria L□pez Lecube: வளர்ந்துகொண்டு போகின்ற ஒன்று ஏன் கடந்து போகவேண்டும்? உங்களுடன் இந்த சாலையில் நடந்துபோனால் அது Miguel Ang□l Sol□ வுடன் நடந்து போவதை விட மிகப் பெரிய பரபரப்பை உருவாக்கும்.

Borges: யார் அந்த Miguel Ang□l Sol□? Emile Zola என்ற பெயர் தான் நான் அறிந்தது.

Gloria L□pez Lecube: Miguel Ang□l Sol□ ஒரு நடிகர். ஆனால், நான் உங்களுடன் நடந்து போனால், எல்லோரும் சற்றுப் பின்நகர்வார்கள், வியந்துபோவார்கள், அது ஒரு வித வெளிப்பாடு...

Borges: அப்படி நான் □mile Zolaவுடன் நடந்தேனென்றால், அது அற்புதமானதொரு காட்சி தான். Zola இறந்து விட்டாரே!

Gloria L□pez Lecube: நீங்கள் இன்னும் இன்னும் விரும்பப்படுகிறீர்கள் போர்ஹெஸ், உங்களின் நகைச்சுவை, தனிச் சிறப்புத்தன்மை, யாவும்...

Borges: நான் என்ன செய்ய? பதிப்பகங்கள் இன்னும் என் எழுத்துகளை பதிப்பித்தபடி

தான் இருக்கின்றன. அதனை சற்று நிறுத்தலாம், இல்லையா? இந்த வருடம், 100 நூல்களுக்குத் தலைமை தாங்குகிறேன். அதற்கு 'Marco Polo Library' என்று பெயர்சூட்டத் தான் எனக்கு விருப்பம். ஆனால் பதிப்பாளர் வேறொரு துல்லியமான தலைப்பை தேர்ந்தெடுத்துள்ளார். இப்போது அது 'Personal Library' என்றழைக்கப்படுகின்றது. Mar�a Kodama வுடன் இணைந்து அந்த நூறு நூல்களைத் தேர்ந்தெடுத்து அவற்றிற்கு முகவுரை எழுதுகின்றேன்.

Gloria L�pez Lecube: போர்ஹெஸ், பத்திரிகை படிப்பதில்லை என்று நீங்கள் கூறி இருக்கிறீர்கள். ஆனால், உங்களுக்கு அரசியலில் நிகழும் அனைத்தும் தெரியும். அது சார்ந்த உங்கள் கருத்தையும் வெளிப்படுத்துகிறீர்கள்.

Borges: எனது நண்பர்கள் தான் செய்திகளை எனக்கு அறியத்தருவதுண்டு. ஆனால் என் வாழ்வில், நான் பத்திரிகை படித்ததே இல்லை. ஒரு நாள் பொழுதில் மட்டும் நீடிக்கும் ஒன்று எவ்வாறு முக்கியத்துவம் பெறும்? 'நாளிதழ்கள்' என்று வேறு அழைக்கப்படுகின்றன. அது நம்பிக்கை தரும்படியாக எனக்கு இல்லை.

Gloria L�pez Lecube: சரி, இன்னும் நீங்கள் ஒரு தீர்க்கமான 'பெரோன்2 எதிர்ப்பு வாதியா'? வேறு சில இடங்களில் நீங்கள் வெளிப்படுத்திய கருத்துக்களின் அடிப்படையில், சற்று மன்னிக்கப் பழகி இருக்கிறீர்கள் என்று நினைக்கின்றேன். அப்படியா?

Borges: மறந்திருக்கிறேன், ஆனால் மன்னிக்கவில்லை. மறப்பது மட்டுமே மன்னிப்பின் ஒரே வழி. மறப்பதே பழி தீர்ப்பதும், தண்டனையும் ஆகும். எனது எதிராளி நான் அவர்களைப் பற்றி சிந்தித்தபடி இருக்கிறேன் என்று ஏதேனும் ஒரு வகையில் அறியநேர்ந்தால், நான் அவர்களின் அடிமையாகுகிறேன். அவர்களை மறந்தேன் என்றால், அந்த அடிமைத்தனத்தில் இருந்து வெளியேறிவிடுவேன். நான் நினைக்கிறேன் மன்னிப்பும் பழி தீர்ப்பதும் ஒரே பொருளின் இரண்டு சொற்பதங்கள் என்று. இன்னொரு வகையில் சொன்னால், அது புறக்கணிப்பது. ஆனால், தீய ஒன்றினை மறப்பது எளிதேயல்ல.

JORGE LUIS BORGES

Gloria L�pez Lecube: போர்ஹெஸ், உங்களுக்கு தெரியுமா? சில எழுத்தாளர்கள் உண்டு. அவர்கள் நேர்காணல்களுக்கு ஒரு கட்டணம் பெறுகின்றார்கள்! நீங்களோ....

Borges: எனக்கு தெரியவில்லை, நீங்கள் எனக்கு எவ்வளவு கட்டணம் செலுத்தப் போகிறீர்கள்?

Gloria L�pez Lecube: [சிரித்தபடி] அது பற்றி பிறகு பேசலாமே.

Borges: நான் நினைக்கிறேன் எதுவுமில்லையென்று, இல்லையா? சரி, அப்போ அதை சீரோவில் வைத்துக்கொள்வோமா? சீரோ என்பது உங்களுக்கு சரிப்பட்டு வருமா?

Gloria L�pez Lecube: நிச்சயமாக, சீரோ தான். Silvia Bullrich எனும் ஆர்ஜென்டின் எழுத்தாளர் டாலர்ஸ் இல் (Dollars) கட்டணம் பெற்றுக்கொள்கின்றார்.



…

Borges: Silvia Bullrich பெருஞ் செல்வந்தர். நான் ஓர் ஏழை மனிதன். செல்வந்தர்தான் கஞ்சனையும், பேராசையும் கொண்டுள்ளனர். அது எத்தனை விசித்திரம், இல்லையா? ஏழை மக்கள் அவ்வாறல்ல. அவர்களின் மனம் பெரிது, எனவே தாராளமாக வழங்குவார்கள். அப்பா எனக்கு சொல்வதுண்டு, ஒருவர் பெருஞ் சொத்தைப் பெறும்போது, அந்த சொத்தை அடைவதற்கான அனைத்துப் பண்புகளையும் சேர்த்துப் பெற்றுக்கொள்கின்றார். எனவே, செல்வந்தரின் பண்புகளான கஞ்சனையும், பேராசையும் சேர்ந்துகொள்கின்றது ஒரு சொத்தை அடைய.

Gloria L□pez Lecube: அது அற்புதம், அப்படியென்றால், நீங்கள் சொல்வது போல, ஒருவரிடமிருந்து திருடாமல் இன்னொருவர் செல்வந்தர் ஆகிவிட முடியாது, இல்லையா?

Borges: நான் அப்படித் தான் நினைக்கின்றேன். சொத்து என்பது நடைமுறையில் ஒரு திருட்டு.

Gloria L□pez Lecube: சொத்து ஒரு திருட்டா?

Borges: இங்கு பிரச்னை என்னவென்றால், நீங்களும் நானும் Guaran□3 அல்லது Charrua3 செவ்விந்தியர்கள் அல்லவே! எமக்கு எந்த உரிமையும் கிடையாது இங்கு வாழ்வதற்கு.

Gloria L□pez Lecube: அயராமல் உழைப்போம்…

Borges: அயராமல் உழைப்போம்…

Gloria L□pez Lecube: சீரோவில் இருந்து, நீங்கள் சொன்னது போல.

Borges: மிக்க நன்றி.

0

நான்

இந்தக் கபாலம், இரகசியம் பொதிந்த இதயம்,

என் பார்வைக்குப் புலப்படாத குருதியின் பாதைகள்,

நில-நீர் உயிரினம் போன்ற கனவின் சுரங்கம்,

இந்தக் குடற்கொடி, கழுத்து, எலும்புக்கூடு,

எல்லாம் நான். வியக்கத்தக்கவகையில்,

வாள் ஒன்றினதும்,

தனித்து அஸ்தமிக்கும் சூரியினனினதும் நினைவும் நானே,

அது தங்கத்தில், நிழலில், ஏதுமற்றதில் சிதறிக்கிடக்கின்றது.

துறைமுகத்தில் இருந்து கப்பல்களைக் காண்பதும் நானே,

கணக்கிடப்பட்ட நூல்களும் நான், காலத்தினால் களைத்த,

கணக்கிடப்பட்ட செதுக்குருவங்களும் நான்,

என்றோ இறந்தவர்களை நினைத்துப் பொறாமைப்படுவதும் நானே.

இன்னும் விசித்திரம் என்னவென்றால், வீட்டின் ஓர் அறையில்,

வார்த்தைகளை நெய்யும் மனிதனாகவும் நான் இருப்பது.

0

1 17 ஆம் நூற்றாண்டு ஒல்லாந்துத் தத்துவஞானி

2 Juan Per□n (1895-1974) – இரண்டு தடவை ஆர்ஜென்டினாவின் ஜனாதிபதியாக தேர்ந்தெடுக்கப்பட்டவர்.

3 Guaran□ மற்றும் Charrua தென் அமெரிக்காவின் ஆதிக் குடியினர்.

# 13. இரண்டாவது மனைவி: நிசங்க விஜேமான்ன

சிறுகதைகள்/செப்டம்பர் 2020

சிங்களத்திலிருந்து தமிழில்: இரா

BY நிசங்க விஜேமான்ன

“பற நாயி....”

மாலையானதும் குடிபோதையில் வீடு திரும்பும் யானை வில்சன், வீட்டுத் திண்ணையில் குந்தியபடி கத்தினான். அந்த கர்ஜனை தன்னை நோக்கித்தான் என்பதை ரங்சினா அறிவாள். அதை அறிந்தும் குசினியில் வேலை செய்வதாக பாசாங்கு செய்து கொண்டிருந்தாள்.

“அடியேய் நீ இன்னக்கி குளிச்சியாடி”

கழுத்தை திருப்பி தன் ஒற்றைக் கண்ணை உருட்டி வீட்டுக்குள் ஊடுருவினான். யானை தாக்கியதில் ஒரு கண்ணை பறிகொடுத்து உயிர்தப்பியவன் அவன்.

“கடப்புலி திருட்டு நாயி… நாலாம் சாதி வேச… இன்னக்கி ஒன்னய யானைக்கி பிடிச்சி போடுறே”

தென்னம் மரத்தில் கட்டியிருக்கும் யானை போன்ற அவனது பிளிறல், ரங்சினாவை பயத்தில் உலுக்கியது. இந்த பயம் அவளுக்குள் நீண்ட நாட்களாகவே இருந்து வருகின்றது. தட்டுத் தடுமாறி, தயங்கியபடி அவன் முன் நிற்பாள். இதையெல்லாம் பார்த்தும் பார்க்காதது போல், வில்சனின் சட்டரீதியான மனைவி, ரங்சினாவின் தங்கையான ஹீன்நோனா தன் வேலைகளில் மும்முரமாக கிடப்பாள்.

ஒவ்வொரு மாலை பொழுதுகளிலும் குடிபோதையில் வரும் வில்சனின் அடுத்ததாய் அரங்கேறப்போகும் காட்சியை அவர்கள் இருவருமே அறிவார்கள்.

வில்சனின் பனியனுக்குள் கிடக்கும் ரஸ்க் பக்கட்டிற்காக, அக்கா, தங்கை இருவரினது பிள்ளைகள் ஏக்கத்தோடும் ஆவலோடும் தன் தகப்பனை நெருங்குவார்கள்.

கசிப்பிற்காக, கடித்துக் கொள்வதற்கு வாங்கும் ரஸ்க் பக்கட்டில் ஒன்றை மட்டுமே அவன் உண்பான். மிகுதியை தன் பனியனுக்குள் திணித்துக்கொள்வான்.

“ஓடுங்கடா… திருட்டு பயலுகளா”

தன்னை நெருங்கும் பிள்ளைகளை விரட்டியடிப்பான். பின் ஏதோ நினைவு வந்தவனாய் தலையை சொறிந்தபடி, ஒற்றை கண்ணை முழித்து பிள்ளைகளை பார்த்து, வாயோரம் எச்சில் வழிய சிரிப்பான். அவனது விகாரமான சிரிப்புக்கு பயந்து பின்வாங்கும் பிள்ளைகள், பொறுமையிழந்து காத்துக் கிடப்பார்கள்.



...

பின் பனியனுக்குள் கைவிட்டு ரஸ்க் பக்கெட்டை வெளியிலெடுத்து, அவர்களுக்கு தெரியும் வண்ணம் விளையாட்டுக் காட்டுவான்.

தன் கணவனின் அடுத்த செயல்பாட்டை ரங்சினா அறிவாள். அதை கண்டும் காணாததை போல், துக்கத்துடனும், குரோதத்துடனும் பார்த்தப்படி நிற்பாள்.

உக்குங், மஹாதுங், சூடிங், புஷ்பேயும் தங்கையின் பிள்ளைகளான ஜஸ்டின், ஹன்னி, பிரமோதி, கிரிநோனா அனைவரும் வில்சனை சுற்றி விடுவார்கள். தவழும் பிள்ளைகள் தவிர ஏனைய அனைவரும் அந்த விளையாட்டிற்கு தயாராவார்கள்.

“இந்தா பிடி”

வில்சன் பிஸ்கட் ஒன்றை உயர வீசுவான். கீழே விழும் பிஸ்கட்டை பொறுக்குவதற்காக சாணி மெழுகிய நிலத்தில் பிள்ளைகள் கட்டிப் புரள்வார்கள். அந்த காட்சி கொடுக்கும் பரவசம், வாய்க்கோணி, எச்சில் தெறிக்க, திண்ணையில் சரிந்து, வயிற்றைப் பிடித்தபடி சிரிப்பான். ரஸ்குக்கான போராட்டத்தில், உடல் சீரலும், அதன் வலியும் முனங்கலாய் வெளிப்படும் போது

“நாசமா போனவனே… யானை அடிச்சி சாக… கல்யாண கட்டுன நாள்ல இருந்து இதே கதி தான்…”

ரங்சினா மனதுக்குள் பொறுமுவாள்.

பன்னிரெண்டு வருடங்களுக்கு முன்,… கட்டைகள் இழுப்பதற்காக வில்சன், யானையுடன் இந்த ஊருக்கு வந்தான். யானையை ரங்சினாவின் தோட்டத்தில் கட்டினான். யானை ரங்சினாவின் தோட்டத்து கிதுள் கிளைகளுக்கு பழக்கப்பட்டபோது, யானைப் பாகனான வில்சன் அந்த வீட்டுக்கு பழக்கமானான். இரவுகளில் அந்த வீட்டுத் திண்ணையில் படுத்துக்

கொண்டான். ஆண் துணையற்ற தன் வீட்டுக்கு ஒரு பாதுகாப்பு கிடைத்ததென ரங்சினாவின் விதவைத் தாய் நினைத்தாள்.

வில்சன் யானை மீது அமர்ந்து கம்பீரமாய் செல்லும் போதெல்லாம்

“இப்படி ஒரு ஆம்பள புருஷனா கிடைச்சா”

ரங்சினா பெருமூச்சு விட்டாள். ஆனால் அதிஷ்டம் வாய்த்தோ தங்கை ஹீன் நோனாவுக்குதான். ரங்சினா இதைப்பற்றி அறியும்போது, ஹீன் நோனா மூன்று மாத கர்பமாய் இருந்தாள்.

இளம் தம்பதியர்க்கு வீட்டிலிருந்த ஒரே அறை ஒதுக்கிக் கொடுக்கப்பட்டது. எப்படியோ இரண்டு வருடங்களுக்குப் பின் ரங்சினாவின் கனவு பழித்தது.

வயிற்றில் பிள்ளையை தரித்து, சொல்வதறியாது நின்ற போது,

“உண்மைய சொல்லுடி… யாருகிட்ட போய் வயித்த நெறச்சிகிட்டு வந்த”

ரங்சியின் தாய் ஒப்பாரி வைத்தாள்.

“ஒன்ன வெட்டி ஆத்துல போடுவே”

திட்டியபடியே மகளின் கருவை கலைக்க மருந்து செய்தாள்.

“என்னத்துக்கு மருந்து செய்ற, எனக்கு ரெண்டு பேர் பாரமில்ல… நீயும் எனக்கு பாரமில்ல…”

வில்சன் குடிபோதையில் கத்தியபோது, ரங்சினாவின் தாய் வாயடைத்து, அதிர்ந்து போனாள். அன்று அந்த வீட்டை விட்டு ஓடியவள், பக்கத்து ஊரில் தன் தங்கையின் வீட்டிலேயே தங்கிக் கொண்டாள்.

அக்காவின் இணைவை, அவள் தங்கை மௌனமாக ஆமோதித்தாள். இருவருமே சேர்ந்து வில்சனுக்கு பத்து பிள்ளைகளை பெத்துக் கொடுத்தார்கள்.

கடந்த பத்து வருடங்களாக, மனதுக்கு மகிழ்ச்சியையும், நிம்மதியையும் தரக்கூடிய எந்தவொரு நிகழ்வும் நடவாததாக ரங்சினா உணர்ந்தாள். தான் தனிமைப் பட்டுவிட்டதாக பரிதவித்தாள். வருடாவருடம் கர்ப்பமடைவதும், பிள்ளைகளின் இடைவிடாத கரைச்சலும், எதற்கெடுத்தாலும் வில்சனின் அடி உதையும் அவளை வயதுக்கு மீறிய முதுமைக்குள்ளாக்கியது.

“தங்கச்சிக்கு என்னா, அவ தாலிகட்டுன பொம்புள”

சிலநேரங்களில் ஹீன்நோனாவை நினைக்கையில் பொறாமை எட்டிப்பார்க்கும். ஆனாலும் தன் தங்கையின் பிள்ளைகளுக்கும் சேர்த்தே உழைத்தாள். எங்கயாவது ஒரு வீட்டில் வேலை செய்தோ, கூலி வேலை செய்தோ வீட்டுக்கு தேவையான உணவுப் பொருட்களை வாங்கிப் போட்டாள்.

இந்த பாடுகள் எல்லாம், எப்பயாவது வில்சன் கொண்டுவரும் ஒரு கிலோ அரிசிக்கும், கருவாடு துண்டுக்கும் அடங்கிவிடும்.

அடுக்கடுக்கான வில்சனின் அடக்குதலும், அதனாலான வாதைகளும் நினைவுறும்போது அவளுக்கு அவன் மீதான வெறுப்பு கூடிக்கொண்டே போனது.

“இவன்கிட்ட அன்போ, பிள்ளை பாசமோ எதுவுமேயில்ல.”

நினைவுகளையும், வார்த்தைகளையும் குழப்பியபடி, தனக்குத்தானே பேசிக் கொள்வாள்.

“ஐயோ… தங்கச்சி… நா ஒனக்கு துரோகம் பண்ணிட்டே… நா நாசமாத்தா போவே”

தன் தங்கையை நினைத்து புலம்புவாள். ரங்சினாவை விட பயந்த சுபாவமுள்ள ஹீன் நோனாவோ, எப்போதும் அக்காவை எதிர்த்து பேசியதில்லை. தன் கணவனை பங்கு போட்டுக்கொண்ட நாளிலிருந்து ரங்சினாவுடனான பேச்சை நிறுத்திக் கொண்டாள். நெஞ்சைக் கிழிக்கும் அவளது மௌனம், ரங்சினாவை வதைத்துக்கொண்டே இருந்தது.

“காலத்துக்கு இப்படி இருக்க முடியாது… பிள்ளைகளா பெத்தா மட்டும் போதுமா… யாரு திங்க கொடுக்கிறது”

காலம் கடந்த அவளது இந்த கோபம், வெறுப்பாய் மாறி, நெஞ்சம் கொதிக்க, வானத்தைப் பார்த்து, பெருமூச்சு விட்டபடி திடமானதொரு தீர்மானத்திற்கு வந்தாள்.

அது யானைகளுக்கு மதம் பிடிக்கும் காலம்.

இரவின் உச்சிப் பொழுது நிசப்தமாய் கடந்துக் கொண்டிருந்தது. தென்னை மரத்தில் கட்டியிருந்த யானையின் முனங்கல், சிறுக சிறுக பெரும் பிளிறலாக மாற, அதன் காதுகளை நனைத்தபடி மதம் வடியத்தொடங்கியது.

பௌர்ணமியை நெருங்கும் நிலவின் ஒளி, இரவை கறுப்பு நிறத்தில் மஞ்சள் நிறமாய் உருமாற்றியிருந்தது. யானை கண்களை திறந்து அந்த அமானுஷிய இரவை விழித்தது. அது எப்போதும் இப்படியான வேதனையை அனுபவித்ததில்லை.

இருட்டை களைக்கும் நிலவொளியின் கட்டுக்குள் அடங்கியிருந்த காட்டுக்குள்ளிருந்து வீசிய முன்ஜாமத்து காற்றின் தொடுகை, நடுக்கத்தையும் கூச்சத்தையும் ஒருசேர கொடுத்துக்கொண்டிருக்க, யானையின் பெரும் பிளிறலுடன், அங்குமிங்கும் நகரத் தொடங்கியது.

நள்ளிரவை கடக்கும் இரவில், யானை வில்சன் வீடும் எதுவும் அறியாத நிலையில் உறங்கிக்கிடந்தது. ஹீன் நோனா அடுத்த பிரசவத்திற்காக அம்மாவிடம் சென்றிருந்தாள். பிள்ளைகள் விராந்தையில் உறங்கிக்கிடந்தன. அந்த இரவு தம் வாழ்க்கையில் இரண்டு மாற்றங்களை நிகழ்த்தப்போவதாக அவர்கள் அறிந்திருக்கவில்லை.

“திரும்படி”

இருட்டுக்குள் வில்சன் குடிபோதையில் மிரட்டினான். ஆனாலும் ரங்சினா அசையாதிருந்தாள்.

“அடியேய் திரும்படி”

அவள் தோள்களை உலுக்கினான். அவன் கைகளின் பலத்தை, அவளது மனபலம் உடைத்தது.

“இந்த பக்கோ திரும்படி நாயே”

புணர்தலுக்கு அழைக்கும் புலியாய் உறுமிய வில்சன், ரங்சினாவின் மார்புக் கச்சையின் பட்டியை பிடித்து இழுத்தான். திடீரென்று திரும்பியவள், அவன் எதிர்ப்பாராத விதமாய் ஒரு செயலை செய்தாள்.

யானை அடித்தால்கூட பொறுத்துக் கொள்ளலாம். ஆனால் ஒரு பொம்பளை கன்னத்தில் அறைந்ததை அவனால் தாங்கிக்கொள்ள முடியாமற் போயிற்று. காமம் மரித்து, பெருங்கோபம் பற்றி எரிந்தது..

“பட்ட வேச… இன்னக்கி ஒன்னய யானைக்கி பிடிச்சி கொடுக்கிறே”

அவள் தலை முடியை கத்தையாய் இறுகப் பிடித்து, இருட்டின் வழியே இழுத்து எடுத்தான்.

யானையின் உடலும், மனமும் தாங்காத வேதனையில் நிறைந்தது. தும்பிக்கையை அசைத்து, தூக்கி பக்கத்திலிருந்த மரத்தை தாக்கியது. நிலத்தை உதைத்து மண்ணை கிளறியது. இறுதியில் கால் விலங்குகளை இழுத்து உடைத்தெறிந்தது.

அப்போது கதவை திறந்துக் கொண்டு யாரையோ இழுத்துக்கொண்டு தன்வசம் வரும் தன் எஜமானைக் கண்டது. எஜமானிய பக்தி காற்றில் பறக்க, மதம் தீயாய் பற்றி, நிலவொளியில் ரௌத்திர தாண்டவமாடியது.

வில்சனை தும்பிக்கையால் பற்றி தூக்கிய யானை, அவனை ஓங்கி நிலத்தில் அடித்தது. மீண்டும் அள்ளி எடுத்து, வீசி எறிந்தது. பின் அதன் பக்கமாய் ஓடியது. அனைத்தும் எதிர்ப்பாராத விதத்தில், நேரத்தில் நடந்து முடிந்தது.

ரங்சினா அடி தொண்டையில் கத்தினாள். தன்நிலை மறந்தாள். இறுதித் தருவாயிலும் யானைக்கு அதன் பாஷையில் ஏதோ முனங்கியபடி வில்சன் மூச்சை விட்டான்.

அவன் செத்துவிட்டான் என்று அறிந்த மறுகணம், யானை தன் பக்கம் திரும்பியதை ரங்சினா உணர்ந்தாள்.

“என்னையும் கொன்று தின்னு”

கத்தினாள்.

ஒரு தும்பிக்கையின் இறுக்குப்பிடியில் மரணத்தின் வடிவத்தை எதிர்ப்பார்த்து, கண்களை மூடியபடி நின்றாள். பிள்ளைகளின் ஞாபகம், கடவுளை பிரார்த்திக்க வைத்தது.

காற்றின் வேகம் குறைந்திருந்தது. நள்ளிரவின் இடைவெளியில், ஏதோ நடந்துவிட்டதாக யானைக்கு பொறி தட்டியது. இரண்டு மனித உருவங்களை தெளிவாக இனங்கண்டது.

தும்பிக்கையின் வழியே தன் எஜமானின் வாசத்தை மணந்து, அதனூடாக வில்சனின் முகத்தை முகர்ந்து ஏதோவொன்றை அறிந்து நிச்சயித்துக்கொண்டது. காலம் தாழ்த்திய அதன் தெளிவு, அமைதியாக திரும்பி நடக்கத் தொடங்கியது.

திரும்பிச் செல்லும் யானையை ஆச்சரியமாக பார்த்துக்கொண்டிருந்த ரங்சினா.. ஏதோ ஞாபகம் வந்தவளாய்

“ஐயோ..... ஏ..... புருஷே”

ஊரே அதிர கத்தினாள்.

# 14. படைப்பே முதல். படைப்பாளியே முதல்வன் என்று பேச நமது விமர்சகர்கள் முன்வரவில்லை: தெளிவத்தை ஜோசப்

செப்டம்பர் 2020/நேர்காணல்

நேர்கண்டவர்: அனோஜன் பாலகிருஷ்ணன்

BY அனோஜன் பாலகிருஷ்ணன்

ஈழத்துத் தமிழ் இலக்கிய வரலாறுகளில் நிறையச் சந்தர்ப்பங்களில் மற்ற மற்றப் பிரதேச இலக்கியங்கள் விடுபட்டுப் போவதுபற்றி நான் சில சமயங்களில் கோபமாகச் சொல்வதுண்டு. சிவத்தம்பி அவர்கள் ஓரிடத்தில் சொல்லியிருக்கின்றார். 'தெளிவத்தையின் கோபம் நியாயமானதுதான். ஏனென்றால் நாங்கள் ஈழத்து இலக்கியம் என்று தலைப்பிட்டுவிட்டு யாழ்ப்பாணத்து இலக்கியத்தை மட்டும்தான் பேசியிருக்கின்றோம்' என்று.

இலங்கையின் மலையக இலக்கிய முன்னோடி என்று 'தெளிவத்தை ஜோசப்பை' தயக்கமின்றிச் சொல்லலாம். மலையக மக்களின் வாழ்வியலை பிரச்சாரம் இன்றி முற்போக்கு அம்சத்துடன் எழுதியவர் அவர். மலையக சமூகத்தில் ஊடுருவியிருந்த சுரண்டலும், ஒடுக்குமுறையும் அவரது புனைவுலகத்தின் அடிநாதமாக ஒலித்தன. அவரது காதாமந்தர்கள் பெரும் தத்தளிப்பு சிக்கல் கொண்டவர்கள் அல்ல. மாறாக எளிய அன்றாட பிரச்சினைகளில் சிக்கி அழுத்தப்படுபவர்கள். தெளிவத்தை ஜோசப்பின் படைப்புலகம் என்பது எளிய மனிதர்களின் அன்றாடச் சுமையின் துயரம்தான். சிலசமயம் அந்தத் துயரில் ஒளி ஒரு கீற்றாக வெளிப்படுகிறது. எந்தவித கட்சி சார்போ, கோட்பாடு சார்ந்தோ இயங்காத படைப்புலகம் அவருடயது. அதனாலேயே மனிதர்களின் வாழ்வியல் சிக்கல்களை பல கோணங்களில் தயக்கமில்லாமல் அவரால் நோக்க முடிந்தது.

தெளிவத்தை ஜோசப் அவர்களுடனான இந்த நீண்ட நேர்காணல் தொலைபேசி உரையாடல் ஊடாக மேற்கொள்ளப்பட்டது.

தெளிவத்தை ஜோசப்

**மலையக மண்ணின் நினைவுகளோடும் அங்கே உங்களுடைய தாய் தந்தையரின் அனுபவங்களோடும் இந்த நேர்காணலைத் தொடங்குவோம். அவற்றைப் பகிர்ந்துகொள்ள முடியுமா..**

மலையகம் நான் பிறந்த மண். பிறந்த மண் என்ற உணர்வு எல்லோருக்கும் இருக்கும்.



...

எனது அப்பாவை கத்தோலிக்க முறைப்படி ‘ஆஞா’ என்றே அழைப்போம். ஆஞா என்றால் தமிழ் அகராதி ‘அப்பா’ என்று அர்த்தம் கூறுகிறது. அப்பா திருச்சியிலிருந்து உத்தியோகத்துக்காக மலையகத்துக்கு வந்து சேர்ந்தவர். அங்கே தோட்டத்து ஆசிரியர் வேலையை பொறுப்பேற்று இரண்டு மூன்று மாதங்களின் பின் மீண்டும் இந்தியா சென்று அம்மாவைத் திருமணம் செய்து திரும்பி வந்திருக்கிறார். எமது குடும்பத்தின் மூத்த பிள்ளை எனது அண்ணா ஞானப்பிரகாசம். இரண்டாவது பிள்ளை ஜோசப் என்கிற நான். பிறகு எங்கள் குடும்பத்தில் ஐந்து ஆண் பிள்ளைகளும் ஒரு பெண் பிள்ளையும். ஊவாக் கட்டவளை என்ற தேயிலைத்தோட்டம் பதுளையிலிருந்து ஒன்பது மைல் தொலைவில் இருக்கின்றது. அந்த தோட்டத்திலே தான் அப்பா ஆசிரியர் வேலைக்காக வந்திருந்தார்.

திருச்சி ரயில் நிலையத்தில் ஆசிரியர் வேலைக்கு விளம்பரப்படுத்தப் பட்டிருந்த நேரம் தோட்டத்தில் ஆசிரியருக்கென்று ஒரு வீடு கிடைக்கும் என்று சொல்லப்பட்டதாம். ஆனாலும் எனது தந்தை வேலைக்கு வந்தபோது அவருக்கு வீடு இருக்கவில்லை. ஆகவே அவர் ஆங்கிலேய தோட்ட உரிமையாளரிடம் தான் எங்கே தங்குவதென்று கேட்டிருக்கின்றார். அப்போது அந்த தோட்ட உரிமையாளர் பாடசாலைக்கு அருகில் ஒரு வெற்று நிலத்தைக் காட்டி இந்த இடத்தில் ஒரு அழகான வீடு கட்டித்தருகின்றேன். தற்சமயம் நான் காட்டும் இடத்தில் இருங்கள் என்று பாடசாலைக்கு பக்கத்தில் இருக்கும் தொழிலாளர்களுக்கான அந்த குடியிருப்பு லயத்தில் முதல் இரண்டு அறைகளையும் எங்கள் தந்தைக்கு கொடுத்தார். தற்சமயம் இதிலே இருங்கள். நாங்கள் இன்னும் ஒரு வருடத்தில் நீங்கள் திருமணம் செய்து வரும் சமயம் உங்களுக்கு வீடு கட்டித்தருவோம் என்றும் கூறியுள்ளார்.

அந்தக் காலத்தில் தோட்டத்து ஆசிரியர் என்பவர் பிள்ளைகளுக்கு பாடம் சொல்லிக்கொடுக்க வருவதில்லை. அந்தப் பிள்ளைகளை ஒரு சிறிய மண்டபத்தில் அடைத்து வைத்திருப்பார். அதற்காகத்தான் ஆங்கிலேயர்கள் ஆசிரியர்களை நியமித்திருந்தார்கள். ஆனால் எங்களுடைய தந்தையைப் பொறுத்தவரையில் அவர் அதற்கு

நேர்மாறாக இருந்தார். அதாவது படிக்க வரும் பிள்ளைகளுக்கு படிப்பிக்க வேண்டும் என்று அவர் செயற்பட்டார். நானும் எனது அண்ணாவும் அவரிடம் தான் ஐந்தாம் வகுப்பு வரை படித்தோம்.

எனது தந்தை தனியாக ஒரு வீட்டில் இல்லாமல் தொழிலாளர்கள் வசிக்கும் அந்த லயத்தின் முதல் இரண்டு அறைகளில் இருந்ததால் அந்த லயத்துத் தொழிலாளர்களுடைய பிள்ளைகளுடன் பழகவும், விளையாடவும் எனக்குச் சந்தர்ப்பம் கிடைத்து. அதனால் அவர்களுடன் நெருக்கம் ஏற்பட்டது. இவர்களுக்குத்தான் தோட்ட லயத்தில் இடம் கொடுத்துவிட்டோமே. இனி எதற்கு அவர்களுக்கு தனியாக வீடு கட்டிக்கொடுக்க வேண்டும் என்று ஆங்கிலேய தோட்ட முதலாளி தனது செலவைக் குறைத்துக்கொண்டுவிட்டார்.

தந்தையிடம் ஐந்தாம் வகுப்பு வரை படித்துவிட்டு பிறகு ஆறாம் வகுப்பு படிப்பதற்கு அங்கே வகுப்பு இல்லை. இடைநிலை கல்வி கற்பதற்கு மலையக நகரங்களுக்குச் செல்லவேண்டும். ஆனால் நகரப்பகுதிக்கு போவதற்கு பஸ் வசதிகள் இல்லை. ஆகவே என்னையும் அண்ணாவையும் கும்பகோணத்தில் அம்மாவின் உறவினர்களிடம் படிப்பதற்காக விட்டுவிட்டு வந்துவிட்டார்கள்.

ஸ்ரீமாவோ- சாஸ்திரி ஒப்பந்தம் எப்படி சம்பந்தப்பட்ட மக்களை கலந்து கொள்ளாமல் தலைவர்களாக முடிவெடுத்து இந்தியாவிற்கு அனுப்பினார்களோ அதே போல எங்கள் அம்மாவும் ஆஞாவும் எங்களைக் கேட்காமலேயே இந்தியாவில் கொண்டு போய் விட்டுட்டு வந்தார்கள்.

நாங்கள் இந்தியாவில் கும்பகோணம் லிட்டில் ப்ளவர் ஹை ஸ்கூல் என்றும் பாடசாலையில் படித்தோம். கும்பகோணத்தைப் பற்றி பின்னர் நான் விரிவாக எழுதியிருக்கின்றேன். மௌனி, குபாரா போன்ற இலக்கியவாதிகள் உலவிய வீதிகள் நிறைந்த ஊர் அது. அந்த சின்ன வயதில் எனக்கு அதெல்லாம் தெரிந்திருக்கவில்லை.

இலங்கை அரசாங்கம் தன்னுடைய போக்குவரத்து சேவைகளை விஸ்தரித்தது. கட்டவளை வரை பஸ் ஓடியது. இப்போது பஸ்ஸில் பிள்ளைகளை பாடசாலைக்கு அனுப்பலாம் என்ற நிலைமை வந்ததும் எங்களை இந்தியாவிலிருந்து கூட்டிக்கொண்டு வந்தார்கள். இங்கு நான் சென்.பீட்டர்ஸ் கல்லூரி, பதுளையில் கல்வி கற்றேன். அந்தப்பாடசாலை கத்தோலிக்க பாதிரிமார்கள் நடத்தும் ஒரு பாடசாலை. அந்த பாடசாலையில்தான் நான் மறுபடியும் 4ம் வகுப்பில் சேர்ந்தேன். 4ம் வகுப்பை மூன்று தடவைகள் படித்திருக்கிறேன். அப்பாவிடம் 5 ம் வகுப்பு வரை படித்துவிட்டு இந்தியாவுக்கு போனால் அங்கே 4ம் வகுப்பில் சேர்த்தார்கள். பிறகு அங்கு 6ம் வகுப்பு படித்துவிட்டு இங்கு திரும்பி வந்ததும் இங்கேயும் 4ம் வகுப்பில் தான் சேர்த்தார்கள். இரண்டு வருடங்கள் 4ம் வகுப்பு படித்து இரட்டை வகுப்பேற்றம் எல்லாம் எடுத்து பின்னர் அதே பாடசாலையில் தான் நான் SSC எழுதினேன். SSC என்பது Senior school certificate. அந்த நாளைய உயர்கல்வி சான்றிதழ் அது. 8ம் வகுப்பு படித்து முடித்த பின்னர் JSC என்ற சான்றிதழ் கொடுப்பார்கள். அதாவது Junior school ceritificate. அந்த Junior school ceritificate இருந்தால்

தோட்டங்களில் உத்தியோகங்களில் சேரலாம். எனது அண்ணா அந்த JSC உடன் படிப்பை இடை நிறுத்திவிட்டார். அண்ணாவை தோட்டத்து ஆபிஸில் வேலை பழக இடம் கொடுத்தார் தோட்டத்துரை. அவர் கிளார்க் வேலை பழகிக்கொண்டிருந்தார்.

நான் இரண்டு வருடம் SSC படித்துக்கொண்டிருந்தேன். அதற்கான அரச பரீட்சை எழுதிவிட்டு வீட்டில் இருந்த நேரத்தில், எங்களுடைய பாடசாலை அதிபர், Brother Casion சொன்னார் “ஜோசப் நீ Result வரும்வரை வீட்டில் இருக்காதே. தினமும் பாடசாலை வா” என்றார். அதற்கு நான் ஏன் என்று கேட்டேன். அப்போது “பாடசாலை ஆபிஸில் கொஞ்சம் வேலைகள் இருக்கின்றன, அதனால் நீ வந்து அந்த வேலைகளை செய்து தா. உனக்கு சம்பளம் தர என்னால் முடியாது. வேண்டுமானால் Pocket Money தருவேன்” என்று சொன்னார். அதை நான் ஒரு கௌரவமாக கருதினேன்.

**இந்தியாவில் தமிழ் இலக்கியம் என்றதும் மனதில் எழும் பெயர்கள் புதுமைப்பித்தன், கு.பே.ரா, மௌனி என்று தொடங்கும். ஆனால் இலங்கையில் கைலாசபதி, சிவத்தம்பி தான். இலங்கையர்கோன், வைத்திலிங்கம், சம்மந்தன் என்றோ டானியல், கணேசலிங்கன், அரசரத்தினம் என்றோ வருவதில்லை.**

அண்ணா வேலை பழகி முடிந்ததும் தெளிவத்தை தோட்டத்தில் வேலை கிடைக்க அங்கே சென்றுவிட்டார். புதிய இடத்தில அவருக்கு தனி பங்களா, அலுவலகத்தில் உத்தியோகம், கிளார்க் வேலை. தெளிவத்தை என்பது ஒரு பெரிய எஸ்டேட். எங்களுடைய கட்டவளைத் தோட்டத்தைவிட நான்கு மடங்கு பெரியது. தெளிவத்தையில் வேலை செய்வது பெரிய கௌரவமாக கருதப்பட்டது. அங்கு எங்கள் அண்ணா போன பிறகு “அண்ணா தனியாகத் தானே இருக்கின்றார். நீ அவருடன் போய் இரு” என்று அம்மா கூற நான் அண்ணாவுக்கு துணையாகவும் அவருக்கு சமையல் செய்வதற்குமாக தெளிவத்தைக்கு வந்து சேர்ந்தேன். தெளிவத்தை என்னுடைய பெயரில் இடம்பிடித்தது இப்படித்தான்.

**எழுதவேண்டும் என்ற தூண்டுதல் எப்படி ஏற்பட்டது?**

எழுத்து என்பது எங்களுடைய வாழ்விலிருந்தே வருகின்றது. எங்களுடைய வாழ்வு, எங்களுடைய மண், இன்னொன்று எழுத்தாளனுடைய கவனம்.. இவைதானே தீர்மானிக்கின்றன. என்னைச் சுற்றியிருக்கும் நான்கு அல்லது ஐந்து பேர் கதைத்துக்கொண்டிருந்தாலும் யார் யார் என்னென்ன கதைக்கின்றார்கள் என்பதை எனது காதுகள் உள்வாங்கிக்கொண்டிருக்கும். அந்த அவதானிப்பு எனது சிறுவயதிலிருந்தே இருந்திருக்கின்றது என்று இப்பொழுது யோசிக்கின்றேன்.

நான் ஊவாகட்டவளையில் இருந்தபோது எமது தந்தை வெறும் தோட்டத்து ஆசிரியர். தோட்டத்து ஆசிரியர் என்றால் தோட்டத்தில் ஒன்றுமே இல்லாதவர் என்று அர்த்தம். மேல்நிலைத் தோட்டத்து உத்தியோகத்தர்களுடனும் இணைக்கப்படாமல் அடிநிலை தொழிலாளர்களுடனும் சேர்க்கப்படாது ஒரு ரெண்டும் கெட்டான் நிலை அவர்களுடையது. எங்கள் ஆஞாவிடம் ஒரு சைக்கிள் இருந்தது. அந்த சைக்கிளை எடுத்துக்கொண்டு

பதுளையில் ஆசிரியர் சங்க கூட்டம் இருக்கின்றது நான் வெளியே போய் வருகின்றேன் என்று கிளம்பிவிடுவார். போய் திரும்பி வரும்போது வீரகேசரி, பேசும்படம் என்று ஏதாவது புத்தகங்கள் வாங்கிக்கொண்டு வருவார். அந்தப் புத்தகங்களை எல்லாம் நான் விடாமல் வாசித்திருக்கிறேன். முதல் பக்கம் தொடங்கி கடைசி பக்கம் வரை வாசிப்பேன். என்னுடைய அம்மா பொறுமையிழந்து "அடேய் சாப்பிடவா என்ன புத்தகத்துடனேயே அமர்ந்திருக்கின்றாய்" என்று ஏசுவார். இப்போதும் நான் என்னுடைய எழுத்தை எனது வாசிப்பின் பலமாகத் தான் கருதுகின்றேன். அக்காலத்தில்தான் 'பால்கார பையன்' என்கிற முதல் கதையையும் எழுதி கல்கண்டுவுக்கும் அனுப்பினேன். அது வெளிவரவில்லை.

தெளிவத்தைக்கு வந்தபின்னர் என்னுடைய அண்ணாவுக்கு காலையில் தேநீர் கொடுத்து அனுப்பிவிட்டு மதிய சாப்பாட்டை அவருடைய அலுவலகத்துக்கு அனுப்பி வைக்கவேண்டும். அதற்குப்பிறகு என்ன செய்வதென்று தெரியாமல் பொழுதுகள் இருண்டு கிடக்கும். "சோம்பல் உற்றிருக்கும் ஒரு மனிதனின் மனம் என்பது சாத்தானின் வசிப்பிடம்" என்று ஆங்கிலத்தில் ஒரு பழமொழி இருக்கின்றது. என்னுடைய இந்த வாசிப்பும் எழுத வேண்டும் என்ற ஆர்வமும் என்னுடைய மனதை சோம்பல் நிலையிலிருந்து மீட்டு எடுத்திருக்கிறது. வாசிப்பு என்பது எனக்கு கிடைத்த வரம். சோம்பேறியாக இருக்காமல் வாசிப்பிலும் எழுதுவதிலும் எனது பொழுதுகளைப் பயனுள்ளதாக்கிக் கொண்டேன்.

**நீங்கள் சொன்ன உங்களுடைய வாழ்வனுபவங்கள் எழுத்தில் எவ்வாறு எதிரொலித்தது..**

மலையத்திலே அந்த மக்களுடன் மக்களாக நான் வாழ்ந்திருக்கின்றேன் அவற்றையெல்லாம்தான் எழுதியுமிருக்கிறேன். எங்களுடைய ஆஞா ரொம்ப கண்டிப்பானவர். என்னையெல்லாம் பிரம்பெடுத்து அடிக்க தொடங்கினார் என்றால் அப்படி அடி விழும். தடுக்க வரும் அம்மாவும் அடி வாக்கியிருக்கின்றார். அவர் தண்டனை எப்படி கொடுப்பார் என்றால் லயத்துக்கு வெளியில் எங்களை முழங்காலில் அமர்ந்திருக்க வைத்துவிட்டு கையில் அம்மி குளவியை கொடுத்துவிட்டு பள்ளிக்கூடம் போய் விடுவார். குத்தும் மண்ணில் வெறும் முழங்காலுடன் கையில் குளவியை வைத்திக்கொண்டு அமர்ந்திருப்போம்.

அதே நேரத்தில் அவர் மிகவும் அன்பானவர். அப்படி கண்டித்து வளர்த்ததால்தான், இன்றைய எனது 86 வயதிலும் நான் ஒரு சாய்வு நாற்காலியில் படுத்திருக்காமல் அமர்ந்திருந்து உங்களுடன் பேசிக்கொண்டிருக்கின்றேன் அதற்கான தைரியத்தை அப்பாவின் வளர்ப்பு எனக்கு கொடுத்திருக்கின்றது. என்னை ஒரு எழுத்தாளனாக இயக்கியதும் என்னுடைய ஆஞா தான் என்று நான் நிறைய இடங்களில் சொல்லியிருக்கின்றேன். 'சுந்தர ராமசாமியின்' புளியமரத்தின் கதை நாவல் வாசித்தபோதும், 'ஜெயமோகனின்' டார்த்தீனியம் குறுநாவல் வாசித்தபோதும் என்னுடைய ஆஞாவை அப்படைப்புகளில் கண்டிருக்கின்றேன்.

**உங்கள் படைப்புகளில் வரும் தாய் தந்தையர் எல்லோரும் மிகக் கனிவானவர்கள், நிஜ வாழ்கையின் பாதிப்பா அது?**

ஒரு கலைஞனை அல்லது ஒரு இலக்கியவாதியை உருவாக்குவதற்கான வித்தையை அறிந்திருக்கின்றார் என்னுடைய ஆஞா அறிந்திருந்தார் என்றுதான் சொல்லவேண்டும். அவர் உபதேசம் செய்வதில்லை. ஒரு மனிதன் இப்படித் தான் வாழ வேண்டும் என அவருடைய வாழ்க்கையினூடாக எனக்கு வாழ்ந்து காட்டியவர். இப்போது நீங்கள் என் கதையில் வரும் அப்பா அம்மா கனிவாக இருப்பதாக சொன்னீர்களே, அது தான் யதார்த்த நிலைமை. அப்படித்தான் அவர்கள் என்னை வளர்த்தார்கள். அது என் படைப்புகளில் வெளிப்பட்டுள்ளது என்பதும் உண்மைதான்.

**எழுத ஆரம்பித்தபோது உங்கள் தனிப்பட்ட வாழ்க்கை சூழலும், பிரசுர சூழலும் எவ்வாறு இருந்தன?**

தெளிவத்தையில் ஒரு ஆசிரியர் வேலை நிரப்பபட வேண்டி இருந்தது. 1956இல் பண்டாரநாயக்கா ஆட்சிக்குப் பிறகு இலங்கையில் இருக்கும் Temporary Permit ஆட்களை அனுப்பி விட வேண்டும் என்று ஒரு சட்டம் கொண்டு வந்தார்கள் அல்லவா.. இலங்கையில் இருப்பவர்களுக்கே உத்தியோகம் இல்லாதபோது ஏன் அவர்களை இங்கு கொண்டு வந்து தற்காலிக பிரஜைகளாக வைத்துக் கொண்டிருக்கின்றீர்கள் என்று அவர்களை இந்தியாவிற்கு அனுப்பினார்கள். தெளிவத்தையில் இருந்த ஒரு பாடசாலை ஆசிரியருக்கும் அரசாங்கத்திடமிருந்து நோட்டிஸ் அனுப்பப்பட்டுவிட்டது. Send him immediately என்று. அவரை அனுப்பியாச்சு. திடீரென ஒரு ஆசிரியரை அனுப்பிவிட்டதால் அந்த பாடசாலைக்கு ஆசிரியர் வேலைக்கு என்ன செய்வதென்று தெரியாமல் துரை இப்போது தடுமாறுகின்றார்.

அதற்கிடையில் என்னுடைய அண்ணனுடைய நண்பர்கள் எல்லோரும் எனக்கும் நண்பர்கள் ஆகிவிட்டார்கள். இப்படி ஒரு வேலை நிரப்பப்படாமல் இருப்பதால் அவர்கள் “ஜோ உங்களிடம் SSC சான்றிதழ் இருக்கின்றதா” என்று கேட்டார்கள். அதைக் கொண்டு வரச்சொல்லி அந்தத் தோட்டத்திலே அந்த ஆசிரியர் வேலைக்கு என்னை சேர்த்துவிட்டார்கள். எங்கள் ஆஞா பார்த்த அதே வேலை.

தெளிவத்தையிலிருந்துதான் நான் கதை எழுதத் தொடங்கினேன். தெளிவத்தையில் ஆசிரியர் வேலை கிடைத்த பிறகு எனக்கு மாதத்துக்கு நிரந்தரமான சம்பளம் வருமல்லவா.. ஏதோ ஒரு சம்பளம் வரும். நான் உடனடியாக பதுளைக்குப் போய் மீனாம்பிகா, கே அன்ட் கே போன்ற புத்தகக் கடைகளில் பத்திரிகைகளுக்கு ஓடர் கொடுத்தேன். ஆனந்தவிகடன் அனுப்புங்கள், குமுதம் அனுப்புங்கள், கலைமகள் அனுப்புங்கள் என்று புதிதாக வந்த இதழ்கள் எல்லாம் எனக்கு வந்து சேர்ந்தன. இப்படி இந்த இதழ்களை வாசித்து வாசித்து எனக்கு எழுதுவதற்கான உந்துதல் வந்தது. ஆனாலும் ஈழத்தின் முன்னோடி எழுத்தாளர்கள் கதை படித்துக் கதை எழுத வந்தவர்கள் என்னும் கைலாசபதியின் குற்றச்சாட்டுகளுக்கு எதிர்வினையானவை எனது படைப்புக்கள்.

அப்போது தான் வீரகேசரி மலையகப்பகுதி எழுத்தாளர்களுக்காக தோட்ட மஞ்சரி எனும் ஒரு பகுதியைத் தொடங்கியிருந்தது. அதில் மலையகம் சம்பந்தமான எது வேண்டுமானால் எழுதலாம். ஆனால் சிறுகதைகள் எழுத முடியாது. ஏனென்றால் ஒரு பக்கமோ ஒன்றரை

பக்கமோ தான் வீரகேசரி அந்த தோட்ட மஞ்சரிக்கு கொடுத்திருந்தது. அப்படி இருந்தும் நான் சின்னதாக ஒரு கதை எழுதியிருந்தேன். 'படிப்பு' என்ற பெயரில். அது தான் என்னுடைய முதல் படைப்பு என்று சொல்வேன். தோட்டத்திலுள்ள மக்களின் கல்வியறிவு எந்தளவில் இருக்கின்றது என்பதைப்பற்றிய கதை. 'படிப்பு' என்று போடாமல் 'படிப்பூ' என்றுதான் தலைப்பிட்டிருந்தேன்.

நான் எழுதிய முதல் கதையே மலையகத்தின் கல்வி சம்பந்தமான கதையாக அமைந்துவிட்டதில் எனக்கு மகிழ்ச்சிதான்.

**இந்தச் சூழலில்தான் பிரபல்யமாக பேசப்பட்ட "பாட்டி சொன்ன கதை" சிறுகதையை எழுதினீர்களா?**

அறுபதுகளின் ஆரம்பத்தில், வீரகேசரி மலையக எழுத்தாளர்களுக்கான சிறுகதைப் போட்டி நடாத்தியது. அந்தப் போட்டிக்கு நான் ஆறு கதைகளை அனுப்பியிருந்தேன். அவற்றில் ஒன்றுதான் முதல் பரிசு பெற்ற எனது "பாட்டி சொன்ன கதை" வீரகேசரி போன்றதொரு முக்கியமான பத்திரிகையில் முதல் பரிசு பெற்றிருந்தால் எனக்கு ஒரு கவனம் கிடைத்தது.

"பாட்டி சொன்ன கதை" 1963இல் பிரசுரமாகியிருந்தது. என்றாலும் இன்று வரையும் பேசப்படும் கதையாக அமைந்துவிட்டது. இந்தியா, இலங்கை மற்றும் புலம்பெயர் இதழ்களில் பலமுறை மீள் பிரசுரம் பெற்ற கதை அது.

**பாட்டி சொன்ன கதை பாராட்டப்பட்ட அளவு பரவலாக எதிர்மறையாகவும் விமர்சிக்கப்பட்டது அல்லவா?**

இளம் வயதில் கெட்டுப்போன தனது மகளின் கதையை அவளுடைய மகளான பேத்திக்கு பாட்டி சொல்கின்றாள். தன்னுடைய கதையைத்தான் பாட்டி சொல்கின்றாள் என்பது அவளுக்கு தெரியவரும் போதுதான் அவளுக்கு விழிப்புணர்வு வருகின்றது. பாட்டி சொன்ன மாதிரி, என்னுடைய அம்மா கெட்ட மாதிரி நானும் கெட்டிருப்பேனா என்று விழிப்புணர்வு பெறுகின்றாள். இதுவே பாட்டி சொன்ன கதையின் கரு.

இதை "சின்னப் பிள்ளைகளுக்கு சொல்லும் கதையா இது" என்றெல்லாம் கேட்டார்கள். 'வேண்டாத பொண்டாட்டி கை பட்டால் குற்றம் என்பது' போல் ஏதாவது குற்றம் சொல்ல வேண்டும் என்பதற்காக, சின்னப்பிள்ளைகளுக்கு சொல்லும் கதையா இது என்று கேட்டார்கள். அதற்கு நான் பதிலும் சொல்லியிருக்கின்றேன். கதையைப் பற்றி பேசுபவர்களுக்கே இவ்வளவு தெரியும் என்றால் கதையை எழுதவந்த எனக்கு எவ்வளவு தெரியும். பேத்தியைப்பற்றிய கதை வரும் போது சிறுசுகள் எல்லாம் நித்திரையாகிவிட்டன என்றும் பேத்தி மாத்திரமே விழித்திருந்தாள் என்றும் எழுதியுள்ளேன். அதையும் வாசித்துப் பாருங்கள் என்று அவர்களுக்குச் சொல்லியிருக்கின்றேன். இப்போது 50 அல்லது 60 வருடங்களுக்கு பிறகு கூட அந்தக் கதையைப் பற்றி பேசுகின்றார்கள், எழுதுகிறார்கள் என்றால் அது என்னுடைய எழுத்தின் வலிமை.

**இந்த நிலம்தான் எங்களுடைய நாடு என்பதை உணரத்தொடங்கிய பருவம் நினைவில் இருக்கிறதா? ஏனெனில் இது என்னுடைய நாடு இல்லை, இந்தியாவிற்குத் திரும்ப வேண்டும் என்று உங்களுக்கோ உங்கள் தலைமுறையினருக்கோ என்றைக்காவது தோன்றியிருக்கிறதா என்பதை அறிவதற்காக கேட்கிறேன்.**

மலையகத்தை, குறிப்பாக தொழிலாளர்களை வழி நடத்துபவர்களாக தலைவர்கள் சிலர் இருக்கின்றார்கள்தானே. தொழிற்சங்க தலைவர்களையும் சேர்த்துத்தான் சொல்கிறேன். நான் போகத் தேவையில்லை. என்னுடைய செருப்பை அங்கே வைத்தால் அதற்கும் ஓட்டுப் போட்டுவிட்டு போவர்கள் என்று பேசுகின்ற தலைமைகள் எங்களுக்கு தேவையில்லை என்பது என்னுடைய அபிப்பிராயம். இவர்கள் என்றைக்குமே இந்த மக்களுக்கு இது உங்கள் நாடு என்று உணரச்செய்யவில்லை. நீங்கள் இங்கே வந்து உழைத்து காடாக இருந்த இந்த நாட்டை உயிர்ப்பலி கொடுத்து பல தியாகங்கள் செய்து செழிப்பாக உருவாக்கியிருக்கின்றீர்கள், இது தான் உங்கள் நாடு என்று சொல்லிவைக்கவில்லை.

நான் கதைகளில் அதை உணர்த்தியிருக்கிறேன். என்னுடைய கதையில் வரும் பாத்திரங்கள் அந்த மண்ணின் ஜீவன்களாக இருப்பார்களே தவிர இந்த மண் உங்கள் மண் என்று சொல்லும் உபதேசிகளாக இருக்க மாட்டார்கள். அந்த மையக்கருவைக் கண்டுபிடிக்க வேண்டும். தெளிவத்தை என்ன சொல்லியிருக்கின்றார் என்பதை கண்டுபிடிக்க வேண்டும்.

1963ல் மலைமுரசு என்ற கண்டியிலிருந்து வெளிவந்த பத்திரிகையில் நான் ஒரு கதை எழுதியிருக்கின்றேன். அந்த கதையின் தலைப்பு ‘நாம் இருக்கும் நாடு’ நாம் இருக்கும் நாடு நமது என்பது அறிவோம். இது நமக்கே உரிமையாம் என்பது அறிவோம். அக்கதையில் ஒரு வயதானவர் தள்ளாத வயதில் மரக்கறி சந்தைக்குப் போய் கோவா இலை மற்றும் ஏனைய இலைகளை பொறுக்கி சுமக்க முடியாமல் சுமந்து பன்றி வளர்க்கும் ஒரு முதலாளியிடம் கொடுத்து விட்டு அவர் கொடுக்கும் சாப்பாட்டை சாப்பிட்டுக் கொண்டிருக்கின்றார். இப்படித்தான் நான் அந்தக் கதையை தொடங்கிறேன்.

அன்றொருநாள் இவன் இளைஞனாக இருந்தவேளை நண்பன் ஒருவன் கூறுவான். ‘இந்த இடத்தில் ஒரு நிலம் இருக்கு. வாங்கிப்போடு. தங்கத்தை விதைத்தா தங்கமாக விளையும் இது. கொட்டைப் பாக்கை வைத்து தட்டுவதற்கு ஒரு பொட்டுக் கல் கூட இல்லாத மண் இது. வாங்கிப் போடுப்பா இலகுவாக இருக்கும்.’ என்று. அதற்கு இவன் என்ன பதில் சொல்கின்றான் என்று பாருங்கள். ‘இந்த சிங்களவன் நாட்டில் நான் நிலம் வாங்குவனா. நான் இந்தியாவில் கடல் போன்ற அந்தப் பூமியில் நிலம் வாங்கக் காசு அனுப்பிக்கொண்டிருக்கின்றேன்’ என்கிறான். இவன் அனுப்பின காசு அங்கே போய் சேர்ந்ததா, அவன் நிலம் வாங்கினானா.. என்றால் இல்லை. இப்போது ஒன்றும் இல்லாமல் இறக்கின்ற காலத்தில் இலை பொறுக்கி முதலாளியிடம் கொடுத்து சாப்பாடு வாங்கி சாப்பிட்டுக்கொண்டிருக்கின்றான். நாம் இருக்கின்ற நாடு நம்முடையது என்ற உணர்வு அவனுக்கு இருந்திருந்தால் அப்பவே அந்த நிலத்தை வாங்கியிருப்பான்தானே. அதில் ஒரு குடிசை கட்டியிருப்பான்தானே. அதெல்லாம் என்னுடைய கதைகள் எழுப்புகின்ற நுண்ணிய

கேள்விகள் சிந்தனைகள். ஆனால் அதை ஒருவரும் பார்க்கமாட்டார்கள். தெளிவத்தை என்ன சொல்கின்றார். இந்தியாவுக்கு காசு அனுப்பி ஒருவன் வீணாகப் போய் விட்டான் என்று சொல்கின்றாரா என்று கேட்பார்கள். ஒரு மரம் இருக்கின்றது. பல பேருக்கு அது மரம் என்று தெரியும். சில பேருக்கு அந்த மரத்திலேயும் அந்த இலைகளுக்கு நடுவில் ஒளிந்து இருக்கும் காய்கள் தெரியும். இன்னும் சில பேருக்கு அந்த காய்கள் பழுத்திருப்பது தெரியும். இன்னும் சில கெட்டிக்காரர்களுக்கு அந்த பழத்துக்குள் விதை இருப்பது தெரியும். ஆனால் அந்த விதைக்குள் இன்னொரு மரம் இருக்கின்றது என்பது யாருக்கு தெரிகிறதோ அவன் தான் உண்மையான விமர்சகனாக இருக்கமுடியும்.

**'கத்தியின்றி இரத்தமின்றி' சிறுகதையில் மலையாக தமிழர்கள் காந்தி போன்ற இந்தியத் தலைவர்களின் புகைப்படத்தை வீட்டில் வைத்திருக்கிறார்கள். இலங்கையைச் சேர்ந்த தலைவர்களின் புகைப்படத்தை வைக்க மறுக்கிறார்கள் என்று குறிப்பிட்டு இருந்தீர்கள். அன்றைய சமூக யதார்த்தத்தை அது பிரதிபலித்தது என்பதாக உணர முடிகிறது. அதன் பின்புலம் பற்றிச் சொல்லுங்கள்.**

கதையின்படி அந்தத் தோட்டத்தில் ஒரு டொக்டர் இருக்கின்றார். அந்த வைத்தியர் இங்கே இருக்கும் இந்தியத் தமிழர்கள் எல்லோரையும் விரட்டிவிட வேண்டும் என்று நினைக்கின்றார். துட்டகைமுனு சொன்னது சரிதான். இவர்கள் எல்லோரும் போனால்தான் எங்களுக்கு கால் நீட்டி படுக்க இடம் கிடைக்கும் என்கின்ற பேரினவாதி. அவரின் செயல்களும் பேச்சுக்களும் அவ்வாறே இருக்கும். அவர் ஒரு பாய்த் தொப்பியை தலையில் அணிந்தவாறு தடியை வீசிக்கொண்டு நடந்து போகையில் தோட்டத்தில் உள்ள நாய்கள் அவரை விரட்டிக்கொண்டு செல்லும். அப்போது அவர் தோட்டக்காட்டு நாய் என்னை விரட்டுகின்றாயா என்று சொல்லிவிட்டுத்தான் போவார். நாயைக்கூட தோட்டக்காட்டு நாய் என்று நினைக்கும்போது அங்குள்ள மனிதர்களையும் தோட்டக்காட்டான்கள் என்று தான் நினைப்பார். அவர் போய்க்கொண்டு இருக்கும்போது தோட்டத்துக்கு தலைவர் என்று ஒருவர் இருப்பார்தானே. அவரைப் பார்த்துக் கேட்கிறார். "என்ன தலைவர் இன்றைக்கு லீவா.. வேலைக்கு போகவில்லையா?" என்றவர், காந்தியின் படத்தைக்காட்டி "என்ன தலைவர்.. மாலையெல்லாம் போடுகின்றீர்கள். யார் இவர்?" என்று கேட்கின்றார். அப்போது தலைவர் "இவரைத் தெரியவில்லையா உங்களுக்கு? ஒருவன் தனது நாட்டை நேசிக்கின்றான் என்றால் மற்றவர்களுடைய நாட்டை வெறுக்கின்றான் என்று அர்த்தமில்லை என்று சொன்ன மகாத்மா காந்தி இவர். இவரைத் தெரியாதா உங்களுக்கு?" என்று சொல்கிறார்.

இவரைத் தெரியும் தெரியும். நீங்கள் காந்திக்கும், நேருவுக்கும், சுபாஸ் சந்திரபோசுக்கும்தான் மாலை போடுவீர்கள் என்கிறார்.

இந்த நாட்டிலிருந்து எங்களை அடித்து விரட்டுவோம் என்று சொல்கின்ற பண்டாரநாயக்காவுக்கும் சேனநாயக்காவுக்கும் நாங்கள் மாலை போடவேண்டுமா? அந்த உணர்வு எப்படி எங்களுக்கு வரும் என்பதுதான் கத்தியின்றி இரத்தமின்றி கதை. அதே நேரத்தில் எவ்வளவு தான் கத்தியின்றி இரத்தமின்றி என்று அகிம்சை பேசினாலும்

தோட்டத்து மக்களுக்கு விரோதமாக செயற்படும் கணக்காளரையோ அல்லது பெரிய கண்காணியையோ தலைவர் வெட்டுகின்றார். அந்தக் கத்தியில் வழியும் இரத்தம் கூட அவனை ஒரு மாதிரி பார்க்கின்றது. இதுதான் கதை.

**சோதனை என்ற கதையில் யாழ்ப்பாணத்திலிருந்து மலையக பாடசாலைகளுக்கு கற்பிக்க வரும் ஆசிரியர்கள் பற்றி எதிர்மறையான பார்வையுடன் எழுதியிருந்தீர்கள். அதற்காக கைலாசபதி 'யாழ்ப்பாணத்து வாத்தி தெளிவத்தைக்கு வில்லன்' என்றுகூட சொன்னார் அல்லவா. அதன் பின்னணி என்ன?**

இப்போது கூட 'மலையக சிறுகதைகளில் கல்வி உரிமைகள் பற்றிய கரிசனம்' என்று கல்வியாளர் முரளிதரன் ஒரு விமர்சனக் கட்டுரை எழுதியிருக்கின்றார். அதில் அவர் 'கல்விக்கான உரிமையை குறித்து போராடுதலும் பின் காலனித்துவ இலக்கியத்தின் பண்புகளில் ஒன்றே என கூறவேண்டும். அப்படிச் சொல்லுகின்ற ஒரு முழுமையான கதையாக தெளிவத்தை ஜோசப்பின் சோதனை கதை அமைகின்றது' என்று சொல்கின்றார். சோதனை கதையில் ஒரு யாழ்ப்பாணத்து ஆசிரியர் தோட்டத்துப் பிள்ளைகளுக்கு பாடம் சொல்லிக்கொடுக்கின்றார். அவருடைய குறிக்கோள் என்னவென்றால் இப்போது 50 ஆக இருக்கும் இந்த பிள்ளைகளை 100 ஆக்கிக் கொண்டால் 100 பிள்ளைகளுக்கு ஒரு ஆசிரியர் போதாது இன்னொரு உதவியாளரை போடுங்கள் என்று இன்ஸ்பெக்டரிடம் சொல்லி வீட்டில் சும்மா இருக்கும் தனது மனைவியையும் கூப்பிட்டுக்கொள்ளலாம் என்று நினைக்கின்றார். அதன் நோக்கம் மனைவியையும் கூட்டிக்கொண்டு வந்து பதவியில் அமர்த்துவதே தவிர கூடுதலான பிள்ளைகளுக்கு கல்வி கற்பிக்கவேண்டும் என்பதல்ல. ஒரு சமுதாயத்தின் கல்விக் கண்களை சின்ன வயதிலேயே குத்திவிடும் ஒரு பெருங் கைங்கரியத்தை இவர்கள் செய்கின்றார்கள் என்பதை அக்கதையின் ஊடகச் சொன்னேன். இதைத் தான் கைலாசபதி தூக்கிப் பிடித்துக் கொண்டார். யாழ்ப்பாணத்து வாத்தி தெளிவத்தைக்கு வில்லன் என்றார்.

பிற்காலத்தில் 'யார் இந்த யாழ்ப்பாணத்தான்' என்று ஒரு விரிவான ஆய்வுக்கட்டுரையை சிவத்தம்பி எழுதினார் . அதில் மலையக மக்கள் இந்த யாழ்ப்பாணத்தானைப் பற்றி என்ன நினைக்கின்றார்கள் என்பதற்கு தெளிவத்தை ஜோசப்பின் இந்த வரிகளை நான் உங்களுக்கு சமர்ப்பணிக்கிறேன் என்று கதையில் வருகின்ற சில வரிகளையும் குறிப்பிட்டிருக்கின்றார்.

**அன்றைய காலத்தில் உங்களுடைய படைப்புகள் எப்படி எதிர்கொள்ளப்பட்டன.. ஆரம்பத்தில் மு.நித்தியானந்தன், கைலாசபதி ஆகியோர் கதைகளை நிராகரித்ததாக அறிந்திருந்திருக்கிறோம்...**

அவர்கள் நிராகரித்தது மட்டுமல்ல.. இவர் ஏன் எழுதுகிறார் என்று கேட்டார்கள் இப்போது எழுதிக்கொண்டிருக்கும் லெனின் மதிவாணன், இன்னுமொரு புதிய எழுத்தாளர், அவருடைய பெயர் எனக்கு நினைவில்லை. அவர்கள் 'தெளிவத்தை ஜோசப்பும் கைலாசபதியும்' என்று ஒரு கட்டுரை எழுதியிருக்கின்றார்கள். அதில் 'தெளிவத்தை ஜோசப், கைலாசபதி தன்னுடைய கதைகளைப் பற்றி பேசவில்லை என்று சொல்கின்றார். அதை

ஒதுக்கி வைப்பதற்கான காரணம் இவருடைய கதைகளில் பாலியல் இருந்தது தான்” என்று குறிப்பிடுகிறார்கள். என்னுடைய படைப்புக்களை எவர் ஆராய்ந்து இருக்கின்றார்கள். எந்தக் கதையில் பாலியல் இருக்கின்றது என்று கண்டுபிடித்திருக்கிறார்கள். நான் என்ன எஸ்.பொ வா..? இல்லையே. இவர்கள் அப்படி அர்த்தம் கற்பிக்க முயன்றவர்கள். முயல்பவர்கள்.

பேராதனை பல்கலைக்கழக விரிவுரையாளர் ஜெயசீலன் ஜீவநதியில் எழுதிய கட்டுரையில் “தெளிவத்தை ஜோசப் ஒரு முற்போக்கான எழுத்தாளர். ஆனால் இந்த மாக்ஸிச கோட்பாடுகளை தன்னுடைய பாத்திரங்கள் மூலமாக வெளிக்கொண்டுவரும் தன்மை அவரிடம் இல்லாததால்தான் இவர்கள் அவரை கவனத்தில் எடுக்கவில்லை” என்று குறிப்பிடுகிறார். அதுதான் உண்மை. அதனால்தான் ஏசினார்கள். அது எனக்கு பிடிக்கவில்லை. நான் மரியாதையாக இருக்க விரும்புகிறவன். எழுத வந்த இடத்தில் ஏன் இவர்களிடம் ஏச்சு வாங்க வேண்டும் என்ற காரணத்தாலேயே ஒரு பத்து வருடங்கள் பேனாவை கீழே வைத்துவிட்டேன்.

**அதே மு.நித்தியானந்தன் பின்னர் நாமிருக்கும் நாடே என்ற உங்களது முதலாவது சிறுகதை தொகுப்பை பதிப்பித்து வெளியிட்டார் அல்லவா?**

எழுபதுகளின் பிற்கூறுகளில் அது நிகழ்ந்தது. அதை ஒரு மனந்திருந்தலாகவே நான் கருதினேன். மார்க்சிய முற்போக்கு அணியினரின் பிரச்சாரகராகவும் குறிப்பாக பேராசிரியர் கைலாசபதியின் வலதுகரமாகவும் திகழ்ந்த யாழ் பல்கலைக்கழக விரிவுரையாளர் மு.நித்தியானந்தன் என்னைத் தேடி கொழும்பில் நான் உத்தியோகம் பார்த்த அலுவலகம் வந்தார். வைகறை என்ற பதிப்பகத்தை நண்பர்கள் சிலருடன் இணைந்து தொடங்கி இருப்பதாகவும் முதல் நூலாக என்னுடைய சிறுகதைத் தொகுதியைப் போடவே விரும்புவதாகவும் என்னுடைய ஒப்புதல் கேட்கவே வந்ததாகவும் கூறினார். 1979 டிசம்பரில் ‘நாமிருக்கும் நாடே’ வெளிவந்தது. யாழ்ப்பாணத்தில் வெளியிடப்பட்ட முதல் மலையகத் தொகுதி என்னும் பெருமையுடன் யாழ் ரிம்மர் மண்டபத்தில் அதே 1979 டிசம்பரில் வெளியீட்டு விழாவும் நடந்தது.

மு.நித்தியானந்தன், தெளிவத்தை ஜோசப், பத்மநாப ஐயர்

எழுதத் தொடங்கி ஒரு கால் நூற்றாண்டுகளுக்குப் பிறகு வெளிவந்த எனது முதல் நூல் அது. எனக்கு, மலையகத்துக்கு ஓர் அரச சாகித்திய விருதிகைப் பெற்றுக்கொடுத்த முதல் நூல் அது. 60களில் கதைகள் எழுதப்போய் நான் சுமந்த அத்தனை சிலுவைகளையும் அதற்குக் கூடுதலான சிலுவைகளையும் என்னுடைய நூலை வெளியிடப்போய் 80களில் சுமந்தவர் நித்தியானந்தன்.

**எழுத்தின் மூலமாக சமுதாயத்தை திருத்துதல் என்பதெல்லாம் மந்திரத்தால் செய்யும் வேலை இல்லை.**

முற்போக்குப் பெரியவர்களால் அடக்கி ஒடுக்கி உட்கார்த்தி வைக்கப்பட்ட என்னை, ‘தெளிவத்தைக்கு ஈடாக எழுதக்கூடியவர்களாக இலங்கையில் இரண்டு மூன்று



...

பெயர்களையே குறிப்பிட முடியும்’ என்ற முன்னுரையுடன் அலங்காரமாகத் தூக்கி நிறுத்தியவர் நித்தி.

கண்டன விமர்சனங்களுக்கான எதிர் விமர்சனப் பதில்களின் மூலம் அவர்களை வாய் மூடச்செய்தவர் அவர். விமர்சனங்களுக்குப் பயப்படாமல் அவற்றை எதிர்கொள்ளும் மனப்பலத்தை இந்த நூல் வெளியீட்டின் மூலம் எனக்குத் தந்தவர் அவர். 83களுக்குப் பின்னான நாட்களில் அவர் இலங்கையிலிருந்தே காணாமலாக்கப்பட்டதற்கான வேர்கள் இதிலிருந்தும் வளர்ந்தவைகள்தான்.

**தொழிற்சங்கத்துடன் அல்லது கட்சிகளுடன் இணைந்து செயற்படாதது.. அல்லது அவற்றை எழுத்துக்களில் விமர்சித்தது.. இவைதான் நீங்கள் நிராகரிக்கப்பட்டதற்கான காரணமா..?**

அப்படியும் இருக்கலாம். ஆனால் முக்கியமான காரணம் அவர்களுடைய முற்போக்கு அணியில் நான் ஓடிப்போய் இணைந்துகொள்ளாததுதான். அமைப்பு ரீதியான இயக்கங்களை தெளிவத்தை கிண்டல் செய்வார் என்று கைலாசபதி சொல்லியிருக்கின்றார். பிறகு எழுத வந்த எழுத்தாளர்களுக்கு ஆதர்சனமான எழுத்தாளர் தெளிவத்தை ஜோசப் என்று சொல்லிவிட்டு ஆனால் மக்களுடைய போராட்டங்கள் அவருடைய கதைகளில் இருக்காது என்றும் சொல்கின்றார்.

இதுவரை யாழ்ப்பாணம் வராத தெளிவத்தை எப்படி யாழ்ப்பாணத்து ஆசிரியரைப் பற்றியும் யாழ்ப்பாணத்து பெண்ணைப் பற்றியும் எழுதுவார் என்றும் அவர் கேள்வி எழுப்பினார்.

மலையக தோட்டங்களுக்கு வந்த யாழ்ப்பாணத்து ஆசிரியர்கள் என்ன செய்தார்கள்

என்பதைத்தான் நான் எழுதினேன். இவர்கள் என்னை யாழ்ப்பாணத்து விரோதியாகக் காட்ட, முத்திரை குத்த முயன்றார்கள்.

இரண்டு கதாபாத்திரங்களை மாத்திரம் வைத்துக்கொண்டு என்னை யாழ்பபாணத்துக்கு எதிரானவனாகச் சொன்னால் அந்தக் கூற்றில் ஏதோ சூதுள்ளது என்று சொல்லியிருக்கின்றேன். காரணம் அதுவல்ல. வேறு ஏதோ இருக்கின்றது. ஏதாவது ஒரு காரணத்தைச் சொல்லி இவனை அடக்கி வைக்க வேண்டும் என்பதே குறி.

நான் தொழிற்சங்கங்களில் இயங்கவில்லை என்றாலும் பரவாயில்லை. முற்போக்கு அணியில் இருந்திருக்க வேண்டும். அப்போது இப்படி விமர்சித்திருக்க மாட்டார்கள். என்னைப் பொறுத்தவரை எந்த அணியிலும் இருந்து கொண்டு அவர்களுடைய கட்டுப்பாட்டுக்குள் என்னைச் சட்டம் போட்டு மாட்டுவதை நான் விரும்பவில்லை.

இப்படியான காரணங்களால் இவர்களிடம் கூடுதலாக ஏச்சு வாங்கிய ஒருவன் நான். அதை வசைபாடல் என்றுதான் சொல்லுவேன். ‘லில்லி’ என்று ஒரு கதை எழுதியிருந்தேன். ஒரு மாட்டைப் பற்றிய கதை. ‘அது’ என்று ஒரு கதை எழுதியிருந்தேன். ஒரு குரங்கைப் பற்றிய கதை. சுந்தர ராமசாமியின் கிடாரிக்கு ஈடானது என்று பேசப்பட்டது. இலக்கிய சிந்தனை பரிசு பெற்ற கதை அந்த ‘அது’. கலைமகளில் வந்தது. இங்கே மனிதர்கள் சாகின்றார்கள், இவர் மாட்டைப் பற்றியும் குரங்கைப்பற்றியும் எழுதிக்கொண்டிருக்கின்றார் என்று விமர்சனம் வைத்தார்கள்.

**கடுமையான வசைகளை வாங்கியதால் பத்துவருடம் எழுதாமல் இருந்தீர்கள் என்று சொல்கிறீர்கள். இலக்கியம் தேவையில்லை. இதனை தவிர்ப்போம் என்று நிரந்தரமாக முடிவு செய்தீர்களா..**

அப்படிக் கூறிவிட முடியாது. ஒரு விமர்சகன் எழுத்தாளனை நெறிப்படுத்தவேண்டும். வேறு வேறு காரணங்களுக்காக அவனை வசைபாடி வசைபாடி அவனை முடக்கிவிடக் கூடாது. எழுதவரும் அனைவருமே சமூகத்திற்குத் தேவையானவர்கள் என்றார் மு.தளையசிங்கம். அவரும் இவர்களால் மறுக்கப்பட்டவரே.

**இன்று திரும்பிப் பார்க்கும்போது ஒரு தாசாப்தம் எழுதாமல் விட்டுவிட்டேன் என்பது இழப்பாகத் தோன்றவில்லையா?**

எழுதாத அந்தக் காலத்தில் நான் கூடுதலான ஒரு வாசகனாக இருந்தேன். அப்போது தெரிவு செய்து வாசிக்கப்பழகிக்கொண்டேன். நாடகங்கள் பார்த்தேன்.

பாலேந்திராவின் நாடகங்கள் பற்றிய விமர்சனங்கள் அதன் பின் எழுதியவைதான். அதற்கு முந்தைய காலத்தில் சிறுகதை எழுதாதவர்கள் எழுத்தாளர்கள் இல்லை என்ற குறுகிய சிந்தனையுடன் நான் இருந்திருக்கின்றேன். மு. நித்தியானந்தன் “நாமிருக்கும் நாடே” தொகுதியைப் பதிப்பித்து வெளியிட்டு என்னை உற்சாகப்படுத்தியபின் இந்த விமர்சகர்களுக்கு பதில் சொல்கின்ற ஒரு தைரியம் எனக்கு வந்தது. புதுமைப்பித்தன் சொன்னார் “உங்களுடைய விமர்சனங்களால் உங்களை நீங்கள் அளந்து கொள்கிறீர்கள்”

என்று. அவர்கள் நீதிபதிகளும் இல்லை. நான் குற்றவாளியும் இல்லை என்னும் சிந்தனையெல்லாம் எனக்குள் அந்த 10 வருட இடைவெளியில் ஏற்பட்டவைதான்.

**அன்றைக்கு உங்களுக்கு கிடைத்ததைப்போலவே கடுமையான வசைகளை எதிர்கொள்ளும் இன்றைய இளைய எழுத்தாளர்களுக்கு உங்களுடைய அனுபவத்தின்படி என்ன ஆலோசனையை கூறுவீர்கள்?**

இப்போது அந்த மாதிரி விமர்சிக்க யாரும் இல்லை. நான் இந்த விமர்சனங்களால் அடிபட்டதால்தான் என்னால் இன்றும் நிலைத்து நிற்க முடிகின்றது. என்னுடைய எழுத்தின் ஆளுமையால் தான் இவர்களுக்கு அடங்கிப் போக முடியவில்லை என்பது எனது நம்பிக்கை. “எழுத்தாளன் என்பவன் எழுத்தை ஆளத்தெரிந்தவனாக இருக்க வேண்டும்” இப்போதைய நம் தலைமுறையினர் எந்த ஒரு எழுத்தாளருடைய தனிப்படைப்பை பற்றியும் பேசுவது இல்லை. விமர்சன ரீதியாக ஆராய்வதில்லை. இந்தியாவில் அப்படி இல்லை. அங்கே விமர்சனங்கள் மூலமாகவும் ஆய்வு மூலமாகவும்தான் அவர்கள் ஒரு எழுத்தாளனை பரவலாக கவனப்படுத்துகிறார்கள். நம்மிடையே அவை அறவே இல்லை.

**ஈழத்தில் இன்று விமர்சன மரபே இல்லை என்கிறீர்களா?**

ஈழத்தில் ஒரு காத்திரமான விமர்சனமுறை இல்லை. ஒரு எழுத்தாளன் நெறி கொள்ளும் அளவுக்கு யாரும் விமர்சனம் செய்வதில்லை. நூல் அறிமுகங்களே கூடுதலாகவும் கூடுமானவர்களாலும் செய்யப்படுகின்றன. படைப்பாளிகளை விடவும் விமர்சகர்களே கூடுதல் முக்கியத்துவமும் பிரபல்யமும் கொண்டது இலங்கை. இந்தியாவில் தமிழ் இலக்கியம் என்றதும் மனதில் எழும் பெயர்கள் புதுமைப்பித்தன், கு.பே.ரா, மௌனி என்று தொடங்கும். ஆனால் இலங்கையில் கைலாசபதி, சிவத்தம்பிதான். இலங்கையர்கோன், வைத்திலிங்கம், சம்மந்தன் என்றோ டானியல், கணேசலிங்கன், அரசரத்தினம் என்றோ வருவதில்லை.

படைப்பே முதல். படைப்பாளியே முதல்வன் என்று பேச நமது முன்னோடி விமர்சகர்கள் முன்வரவில்லை. தங்களுக்கான உச்ச இடங்களைத் தக்கவைத்துக்கொள்ள முயன்றார்களே தவிர ஒரு விமர்சனப் பரம்பரையை உருவாக்க முயலவில்லை என்பதே உண்மை. ஆனால் படைப்பாளிகள் முன்பைவிடவும் தீவிரமாக உருவாகிக்கொண்டே இருக்கிறார்கள்.

**உங்களுடைய எழுத்துலகத்திற்கான முன்னோடி என்று யாரையும் கருதுகிறீர்களா?**

எழுத ஆரம்பித்த போது நானாகத்தான் எழுதினேன். “தானே பாதையும் வெட்டி பயணமும் செய்த தெளிவத்தை சாதனையாளரே” என்று மு.நித்தியானந்தன் சொல்லியிருக்கின்றார். நாங்களெல்லாம் இலக்கியம் தெரிந்தவர்களாக இலக்கியம் படித்தவர்களாக எழுந்துவந்த பிறகு எங்களுடைய முன்னோடிகளைப் பேண வேண்டும் என்று நடேச ஐயர், மீனாட்சி அம்மாள், கே.கணேஷ், சி.வி.வேலுப்பிள்ளை, கிருஷ்ணசாமி போன்றவர்களைத் தேடித் தேடி எடுத்தோம். மலையக இலக்கியம் 1960 க்கு பின்னர்தான் எழுச்சி பெற்றது என்றாலும், அதற்கான பாதை 1930 களிளேயே போடப்பட்டிருக்கிறது. ஆனால் அந்தப் பாதையிலேதான்

இந்த எழுச்சி நடந்தது என்கிற மயக்கம் யாருக்கும் தேவையில்லை என்று இன்றைக்கும் நான் சொல்வேன்.

**அசோகமித்திரனை உங்களது எழுத்துக்கு ஓரளவு நெருக்கமானவர் என்று சொல்லலாம். வடிவ அம்சம், சொற்சிக்கனம், நடுத்தர வாழ்க்கை சார்ந்த லௌகீக பார்வை போன்றன அதற்கான காரணங்கள். உங்கள் மீது அவர் தாக்கம் செலுத்தி இருக்கிறாரா?**

மனம் திறந்து சொல்வதென்றால் நான் அசோக மித்திரன் கதைகளை அப்போது வாசித்தது கிடையாது. பின்னர் ஓரளவு வாசித்த பின்பும் அசோகமித்திரன் நல்ல ஒரு எழுத்தாளன் என்ற நினைப்பில் மாற்றமில்லை. He is a great writer. ஆனால் நான் இரசித்து படித்தவர் என்று சொன்னால் அது இந்திரா பார்த்தசாரதிதான். அவருடைய தந்திரபூமி, அதனுடைய எழுத்து நடை அதெல்லாம் எனக்கு மிகவும் பிடித்திருந்தது.

இந்திரா பார்த்தசாரதியினுடைய நாவல் "தந்திரபூமி" தீபத்தில் தொடராக வந்த என்.எஸ்.எம்.ராமையா என்னிடம் கேட்டார் "ஜோ தந்திரபூமி வாசிக்கின்றீர்களா?" என்று. அதற்கு நான் "பார்த்தசாரதிகளை எல்லாம் நான் வாசிப்பதில்லை" என்று சொன்னேன். இந்திரா பார்த்தசாரதி என்றால் நா.பார்த்தசாரதி தான் 'இந்திரா' என்று முன்னால் போட்டுக்கொண்டு எழுதுகின்றார் என்று அப்போது நினைத்திருந்தேன். பார்த்தசாரதி நல்ல பத்திரிகையாளர், ஒரு இலக்கிய செயற்பாட்டாளர் என்று ஒத்துக்கொண்டாலும் அவர் ஒரு படைப்பாளி என்று நான் ஒத்துக்கொள்ள மாட்டேன். அவர் அகிலனின் பாணிதான். அகிலன் கல்கி, உண்டாக்கிய பரம்பரை. அப்போது என் எஸ் எம் சொன்னார் "சீச்சீ பார்த்தசாரதி இல்லை. இந்திரா பார்த்தசாரதி. வாசிக்க வேண்டியவர். நீங்க கட்டாயம் வாசியுங்கள்" என்று. அந்த மாதிரி எழுத்தாளர்களை மற்றவர்களுக்கு அறிமுகம் செய்ய வேண்டும் என்பது என்னுடைய எண்ணம். நான் அப்படி நிறைய செய்திருக்கின்றேன். நான் வழிகாட்டுகின்றேன் என்று சொல்லாமலேயே மற்றைய எழுத்தாளர்களுக்கு வழிகாட்டல்களைச் செய்திருக்கின்றேன். அதன் பிறகு ஆரம்பத்தில் இருந்து வாசிக்கத் தொடங்கினால் எனக்கு இந்திரா பார்த்தசாரதி மீது ஒரு லயிப்பு வந்தது.

நான் ஆரம்பத்தில் கதை எழுதும் போது கொஞ்சம் கூடுதலாக வாசித்த எழுத்தாளர் என்றால் ஜெயகாந்தனை சொல்லலாம். உங்கள் எழுத்தில் நான் ஜெயகாந்தனை காண்கின்றேன் என்று சிலர் சொல்லியிருக்கிறார்கள் . 'அழகு தெரிந்தது' என்றொரு கதை எழுதியிருந்தேன். அந்தக் கதை வந்த அடுத்த வாரம் எனக்கு இரண்டு கடிதங்கள் வந்தன. ஒரு கடிதம் எழுதியது செந்தூரன். அக்கடிதத்தில் "கதையை வாசிக்கத் தொடங்கியதில் இருந்து கடைசி பந்தி வரும் வரை உங்களை அறைய வேண்டும் போல் தோன்றியது. ஆனால் அந்தக் கடைசி பந்தி இருக்கின்றதே! இன்றைக்கும் அந்தக் கதையை வாசித்தால் அந்தக் கடைசி பந்தியை வாசிக்கும் போது எனக்கு குரல் அடைக்கும். அந்தக் கடைசி பந்தியை வாசிக்கும் போது எங்களிடமும் ஒரு ஜெயகாந்தன் இருக்கின்றான் என்கிற எண்ணம் எனக்கு வந்தது" என்று எழுதியிருந்தார். மற்றைய கடிதம் சாரல்நாடான் எழுதியது. "ஜோ உங்களுடைய அழகு தெரிந்தது கதையை வாசித்தேன். கதையின் முழு சாராம்சத்தையும் கடைசி வரியில்

அல்லது கடைசி பந்தியில் வைப்பது"ஓ.ஹென்றியின்" பாணி என்று அவர் எழுதினார். நான் ஓ.ஹென்றி எல்லாம் நான் வாசித்தது கிடையாது.

**மிக நேரிடையாக எளிமையாக எழுதுகிறீர்கள். அப்படியொரு கொள்கையால் அவ்வாறு எழுதுகிறீர்களா? அல்லது அது உங்கள் இயல்பா?**

இயல்பாகவே எனது எழுத்து அமைவது அப்படித் தான். நான் என்னுடைய படைப்பின் உரையாடல்களுக்காக சொற்களைத் தேடுவதில்லை. என்னுடைய பாத்திரம் எதுவோ அது எப்படிப் கதைத்திருக்கும் என்பது மட்டும்தான் என்னுடைய கவனம்.

**உங்களுடைய எழுத்துகளில் காட்சி சித்தரிப்புகள் குறைவானவை. மலையக நிலப்பரப்பை நுட்பமாக பார்க்க முடிவதில்லை. அப்படி சித்தரிக்கும் சில இடங்களில் கூட அதிகம் சிரத்தை எடுப்பதில்லை. திரைப்பட கேமரா ஷொட்போல சில சட்டகங்களை மட்டும் காட்டுகிறீர்கள். படிம அம்சங்கள் உங்கள் கதைகளில் வருவதில்லை. இதனை உங்களுடைய கலை குறைபாடாக சொல்லலாமா?**

அப்படிக் கூறிவிடவும் முடியாது. கைலாசபதி கூட ஓரிடத்தில் சொல்லியிருக்கின்றார் தெளிவத்தையின் கதையில் வரும் பாத்திரங்கள் அந்தக் காட்சியின் ஊடாக மேல் எழும்புகின்றன. மலையகம் என்பதை தனியாக வர்ணிக்காமல் அந்தப் பாத்திரத்தின் ஊடாக வர்ணிப்பவர் தெளிவத்தை என்றும் சொல்லியிருக்கின்றார். அதேபோல நெல்லை கா பேரன் ஒரு நாள் ஹட்டன் போய் வந்தாராம். 'இது தான் என்னுடைய முதல் மலையக பயணம். ஆனாலும் ஏற்கனவே வந்து போன ஒரு உணர்வு எனக்கு இருந்தது. அந்த உணர்வு தெளிவத்தையின் கதைகளால் எனக்கு வந்தது என்பதை பிறகு உணர்ந்தேன்" என்று குறிபிட்டிருக்கிறார்.

அமரர் கே.டானியலும் 'பிரதேசங்களைப் படம் பிடித்துக்காட்டுவதில் இவர் வெற்றிபெற்றுள்ளார். நான் இதுவரை வாசித்த மலைப் பிரதேசங்களைக் களமாகக்கொண்ட படைப்புக்களில் காணமுடியாத மலையடிவாரங்களை தெளிவத்தை ஜோசப்பின் படைப்புக்களில் தரிசிக்கின்ற அனுபவம் அருமையானது' என்று குறித்துள்ளார்.

என்னைப் பொறுத்தவரை அந்நியமாக்கப்பட்டு அநாமதேயர்களாக விடப்பட்ட இந்த மக்களையும் உயிர்த்தியாகம் செய்து அவர்கள் உருவாக்கிய இந்த மண்ணையும் வெளிச்சத்திற்குக் கொண்டுவரவேண்டும் . வெளி உலகுக்குக் காட்ட வேண்டும் என்ற அகத்தூண்டுதல்களே எனது படைப்புக்கள் என்பேன்.

**மலைய மண்ணைச் சேர்ந்த ஒருவரை சித்தரிப்பதன் ஊடாக அவனுக்குள் ஆழ்ந்திருக்கும் ஆழ்மன இயல்புகளை, புறவய இடர்களை படைப்பில் கொண்டுவரவே விரும்பி இருக்கிறீர்கள் இல்லையா?**

ஆம். ஏனென்றால் என்னைச் சுற்றி வாழ்ந்த இந்த மலையக மக்களைப் பற்றிய கதைகள் நிறைய இருந்தன. அவர்களின் ஒவ்வொரு போராட்டமும், ஒவ்வொரு வாழ்க்கையும், அவர்கள் படும் கஷ்டங்கள் எல்லாம் கதைகள் தான். வாழ்வியல். அதனால் என்னுடைய

எழுத்தை அதற்கான ஒரு அரங்கமாக அல்லது ஒரு மேடையாக நான் ஆக்கிக்கொண்டேன். பேராசிரியர் சிவத்தம்பியின் குறிப்பு இவ்விடத்திற்குப் பொருந்தும் என நினைக்கிறேன். 'தெளிவத்தை ஜோசப்பின் எழுத்துக்கள் இல்லையேல் மலையக மக்களின் வாழ்க்கை பற்றிய எமது அறிவு குறைப்பட்டதாகவே இருக்கும். உண்மையில் அவருடைய மிக முக்கியமான சாதனை சராசரி மலையகத் தமிழன் ஒருவரின் உளப்பாங்கையும் கண்ணோட்டத்தையும் சித்தரிப்பதாகும். இதனால் இவருடைய எழுத்துக்களில் அகநிலை எதார்த்தமும் புறநிலை பார்வைத்தெளிவும் காணப்படுகின்றன'

**உங்களுடைய கதை மாந்தர்களுக்குப் பெரும் தத்துவ சிக்கல்கள் என எதுவும் இருப்பதில்லை. அவர்கள் அன்றாட நெருக்கடிகளில் அழுத்தப்பட்டு அலைக்கழிக்கப்படும் எளிய மனிதர்கள். இந்த எல்லையை நீங்கள் திட்டமிட்டு உருவாகியதா?**

இல்லை. நான் திட்டமிட்டு எனது படைப்புக்களை ஆக்குவதில்லை. என்னை பொருத்தவரையில் எங்களுக்கு தெரிந்த மக்கள், எங்களுக்கு தெரிந்த வாழ்வு அதையே இன்னும் எழுதி முடிக்கவில்லை. எனக்கு 86 வயது என்றவுடன் ஒரு பயம் வருகின்றது. மரணத்துக்கான பயம் அல்ல. இந்த மக்களைப் பற்றி இன்னும் ஏதாவது சொல்ல முடியாமல் போய்விடுமோ என்ற பயம்.

**மலையகத்திற்கு தனித்துவமான நாட்டார் வழக்கும் பண்பாடும் உண்டு. உங்களுக்கு அவற்றில் ஆர்வமும் ஈடுபாடும் உண்டா? ஏனென்றால் உங்களது கதைகளில் அவற்றைப் பெருமளவுக்கு காணமுடியவில்லை.**

ஏடேறாத பாடல்கள் என்றுதான் இவற்றை சொல்வார்கள். அந்த நாட்டார் பாடல்கள் என்னும் மண்ணிலிருந்துதான் இந்த மலைய இலக்கியம் என்னும் பயிர் முளைத்து வளர்ந்து வந்தருக்கின்றது. இந்த மலையக நாட்டார் பாடல்களைத் தேடிச் சேகரித்த பெருமை சி.வி.வேலுப்பிள்ளைக்கானது. எனது கதை மாந்தர்களை உயிர்ப்பிக்க நாட்டார் பாடல்களின் துணை எனக்கு வேண்டியிருக்கவில்லை என்பதாகவும் இருக்கலாம். என்றாலும் இடத்துக்கு ஏற்றாற்போல குறுநாவலான பாலாயி போன்ற சில படைப்புக்களில் இப்பாடல்கள் இடம்பெற்றும் உள்ளன.

**இப்போது புனைவு பரப்பில் என்ன எழுதிக்கொண்டு உள்ளீர்கள்?**

நான் கடைசியாக ஒரு கதை எழுதி ஏறக்குறைய 6 வருடங்கள் இருக்கும் என்று நினைக்கின்றேன். "வேடிக்கை மனிதர்கள் அல்ல." என்ற அந்தக் கதை என்னுடைய 'தெளிவத்தை ஜோசப் சிறுகதைகளில்' இருக்கின்றது. அதற்குப் பிறகு நான் எழுதவில்லை. அட்டவணை போட்டுக் கதை எழுத என்னால் முடிவதில்லை.

இப்போது ஒரு கதை எழுதிக்கொண்டு இருக்கின்றேன். அந்தக் கதையின் சாராம்சத்தை மாத்திரம் சொல்கிறேன். கொழும்பில் நான் குடியிருந்த வீட்டு உரிமையாளர் ஒரு சிங்களவர். இலக்கிய வாசகர். அவர் அகாலமாக இறந்து விட்டதால் அவருடைய மனைவி அந்த வீட்டை எங்களிடம் வாடகைக்குக் கொடுத்துவிட்டு செல்லும்போது வீட்டில் நிறைய சிங்களப்

புத்தகங்கள் இருந்தன. அவருடைய புத்தகங்கள் எல்லாவற்றையும் ஒரு அலுமாரியில் போட்டு “இது இருக்கட்டும். இது என்னுடைய கணவருடைய விருப்பம். அது ஒரு பக்கம் இருக்கட்டும்” என்று சொல்லிவிட்டு அவர் போய் விட்டார்.

எவ்வளவு நாள் புத்தகங்கள் அலுமாரியில் இருக்கும்? ஒரு நாள் அலுமாரி உடைந்து விழுந்தது அப்போது நான் அவருடைய மனைவியைக் கூப்பிட்டு கேட்டேன். அதையெல்லாம் எடுத்து ஒரு பக்கம் அடுக்கி வைத்துவிட்டு கரையான் அரித்ததை எல்லாம் எரித்து விடுங்கள் என்று சொன்னார். கரையான் அரித்த புத்தகங்களை எல்லாம் அள்ளிக் கூட்டி எரிக்கும் போது அவ்வளவும் மார்ட்டின் விக்கிரமசிங்கவுடைய நாவல்கள் என்பதைப் பார்த்தேன். அவ்வளவு புத்தகங்களையும் நான் அங்கு போட்டு எரிக்கும் போது, 1981 ஜூனில் எரிக்கப்பட்ட யாழப்பாண நூலகம் என்னுடைய நினைவில் வந்து வந்து போனது. ஆனால் நான் வேண்டுமென்று இந்த சிங்கள நூல்களை எரிக்கவில்லை. ஆனால் தமிழ் நூல்கள் கொழுத்தப்பட்ட அந்தத் துயர்.... அதனை மையமாகக்கொண்டு கதையாக எழுதிக்கொண்டிருக்கிறேன்.

**உங்களது படைப்புகளில் முற்போக்கு அம்சங்கள் இருக்கின்றன. ஆனால் அவை வெற்றுப் பிரச்சாரமாக அல்லாமல் கலையாக ஒலிக்கிறது. இலக்கியம் சமூக மாற்றத்திற்கான கருவி என்று கருதுகிறீர்களா?**

இலக்கியம் மனித வரலாற்றின் பதிவாக இருக்கும். நான் 1960 களில் எழுதிய கதைகளைப்பற்றி இப்பொழுது பேசுகின்றவர்கள் 1960களில் மலையகம் எப்படி இருந்தது, மலையக தோட்டத்தின் நிர்வாகம் எப்படி இருந்தது, மலையகத் தோட்டம் எவ்வாறு இருந்தது, இவர்கள் எப்படி கொழுந்தை அருந்தும் பானமாக்கினார்கள் என்று படிக்கின்றபோது தெளிவத்தை ஜோசப் அந்தப் பிரதேசத்தின் அடையாளமான, அதன் முக்கியமான எழுத்தாளர் என்று என்னைச் சொல்லுகின்றார்கள்.

ஆனாலும் முற்போக்குவாதிகளினுடைய கோட்பாட்டு ரீதியிலான கருத்துக்கள் என்னுடைய கதைகளில் இல்லை என்பதனால்தான் எனக்கு பிரச்சினை வந்தது. போர்வாளை விட கூர்மையானது எழுத்து என்று சொல்லிக்கொள்கின்றோம். அந்த ஆதி நாளில் இருந்து இன்று வரைக்கும் எழுத்தாளர்கள் மக்களுடைய பிரச்சினைகள், அதற்கான தீர்வுகள் என்பவற்றை சொல்லிக்கொண்டு தான் இருக்கின்றார்கள். இருந்தும் எந்தப் பிரச்சினையாவது தீர்ந்திருக்கின்றதா இன்றைய மனிதர்களுக்கு? இல்லை தானே. என்னுடைய ‘காலங்கள் சாவதில்லை’ நாவலை முற்போக்கு எழுத்தாளர்கள் மிகவும் மோசமாக விமர்சனம் செய்தார்கள். கூடுதலான விமர்சனத்துக்கு உள்ளான நாவல் என்பதால்தான் மறுபதிப்பு போட்டிருக்கின்றார் குமரன். அந்த நாவலைப் பற்றி பேராதனைப் பல்கலைக்கழக பேராசிரியர் அமரர் கா.அருணாசலம் தெளிவத்தை பிரச்சினைகளைச் சொல்கின்றார், ஆனால் அதற்கான தீர்வைச் சொல்கின்றார் இல்லை என்று முற்போக்காளர்கள் விமர்சிக்கிறார்கள். ஆனால், காலம் காலமாக பிரச்சினைகளையும் அதற்கான தீர்வையும் சொன்னவர்கள் எந்தப் பிரச்சினையைத்

தீர்த்திருக்கின்றார்கள்? என்று கேள்வி எழுப்பினார்.

இப்போது ஒரு மாதத்துக்கு முன்னர் கூட ஒருவர் 'பிரச்சினைகள் மாத்திரம் தான் பேசப்பட்டிருக்கின்றது தீர்வு எதுவும் இல்லையே என்று என்னிடம் கேட்டார். அப்போது நான் அவருக்குச் சொன்னேன். முதலாவது பிரச்சினை என்னவென்று தெரிய வேண்டும். மலையகத்தின் பிரச்சினைகள் என்னவென்று தெரியாதவர்கள் போய் பாராளுமன்றத்தில் அமர்ந்திருப்பதால் தான் இந்த மக்களுக்கு விடிவில்லை. விடிவுக்கான தீர்வை தேடுவதற்கு முதலில் பிரச்சினை என்னவென்று தெரிய வேண்டும். முதலில் இந்த மக்களுடைய பிரச்சினை என்ன, அவர்களுடைய தேவைகள் என்ன என்பதை முதலில் தெரிந்து கொள்ளுங்கள். பிறகு அதற்கான வழிமுறைகளை பார்க்கலாம் என்று சொல்லியிருந்தேன்.

எழுத்தின் மூலமாக சமுதாயத்தை திருத்துதல் என்பதெல்லாம் மந்திரத்தால் செய்யும் வேலை இல்லை. நான்கு கதைகளை எழுதிவிட்டு நாளைக்கு சரியாகிவிடும் என்று நினைப்பது முட்டாள்தனம். குறிப்பாக அந்தந்த மக்களுக்கு அவர்களுடைய பிரச்சினை தெரியத்தொடங்கினால் அதிலிருந்து வெளியேற சிந்திப்பார்கள். பாரதிதாசன் சொல்கின்றார். “கஞ்சி குடிப்பதற்கிலார் அதன் காரணங்கள் இவை என்ற அறிவுமிலார்” என்று. முதலாவது அந்த அறிவு வர வேண்டும். எங்களுக்கு குடிப்பதற்கு கஞ்சி இல்லை என்பதற்குரிய காரணம் என்னவென்று அறியும் அறிவு முதலில் வேண்டும். என்னுடைய படைப்புகள் அதைத் தான் செய்கின்றன. குறிப்பாக இலக்கியம் அதைத் தான் செய்யும் என்று நான் நினைக்கின்றேன்.

திலகர் இறுதியாக வெளியிட்ட “மலைகளைப் பேசவிடுங்கள்” புத்தகத்துக்கு நான் முன்னுரை எழுதியிருந்தேன். “எழுத்தும் இலக்கிய மொழியும் எதிர்த்துத் தாக்கும் போர்க்கருவி போன்றது. அதன் கூர்மையும் வேகமும் அதன் பேசு பொருளை மையமாகக் கொண்டவை. அவை இன்றும், நாளையும், நாளை மறுதினமும் என்ற எதிர்காலத்தைச் சேர்ந்தவை. அரசும் அதன் அதிகாரங்களும் அரசின் தந்துவங்களும் நெறிமுறைகளும் நேற்றை சார்ந்தவை; பழையவை” என்று ரஷ்ய கவிஞர் 'ஜோசப் பிராஸ்கி' சொல்லியிருக்கின்றார். இந்தக் கவிதையுடன் நான் என்னுடைய முன்னுரையை முடிக்கின்றேன் என்று எழுத்தியிருந்தேன். எழுத்தும் அதனுடைய மொழியும் கூர்மையானவை பலம் வாய்ந்தவை. இன்றைக்கானவை, நாளைக்கானவை, நாளை மறுதினத்துக்கானவை.

எழுத்துக்களுக்கு ஊடாக தீர்வு கேட்பவர்கள், அன்றைய மாக்ஸிச எழுத்தாளர்களில் இருந்து இன்றைய வரைக்கும் எந்தத் தீர்வை மக்களுக்குத் தேடிக் கொடுத்திருக்கின்றார்கள். அப்படி என்றால் ஏன் நாங்கள் அந்தப் பிரச்சினைகளைப் பற்றி இன்றைக்கும் எழுதிக்கொண்டிருக்கிறோம்..

**உங்கள் படைப்பின் வழியே அந்தரங்கமாக நீங்கள் தேடும் கேள்வி என்று ஏதும் உண்டா?**

படைப்பின் வழியாக நான் நிலை நிறுத்த நினைப்பது 'அறம்' அப்படி என்று ஒன்று

இருக்கின்றது என்பதைத்தான். ”அறம் இதென்றும் மறம் இதென்றும் நாம் அறிந்திருக்க வேண்டும். மனித நேய உணர்வுடன் ஆதிக்க உணர்வுகளை அழிக்க முயலவேண்டும். மனித வாழ்வின் அறம் தேடும் முயல்வினை படைப்பின் வழியே தொடர்கிறேன்



...

தெளிவத்தை ஜோசப், மனைவி ருபல்லா பிலோமினாவுடன்

**யதார்த்தவாத கதைகளை அதிகம் எழுதி இருக்கிறீர்கள். இன்று திரும்பிப் பார்க்கும் போது யதார்த்தவாத கதைகளின் போதாமை என்று எதையாவது நினைக்கிறீர்களா?**

அப்படி நினைக்கவில்லை. ஏனென்றால் மனித வாழ்வு என்பது அந்த யதார்த்தத்தின் மேல் வீடு கட்டி கூரை போட்டு இருக்கின்ற வாழ்க்கை முறை. அதை நாம் பதிந்து வைக்கின்றபோது அந்த வாழ்க்கையை மற்றவர்களுக்கு எவ்வளவு அழகாக சொல்கின்றோம் என்பதில் தான் தனித்தன்மை இருக்கின்றது. இப்படி யதார்த்தக் கதைகள் சில எடுபடாமல் போவதற்கான முக்கிய காரணம் வறட்டுத்தனமான எழுத்து.

பெரும்பாலான இன்றைய படைப்புக்கள் உடனடி துதிபாடுதல்கள் மூலம் முன்னிறுத்தப்படுபவை. அவை எல்லாம் வெறும் சலசலப்புக்களாக மட்டுமே இருக்கும். எவ்வளவு நாட்கள் அதைப் பற்றி பேசுவார்கள் என்பதெல்லாம் தெரியாது. சி.சு.செல்லப்பாவின் வாடி வாசலை இன்றும் பேசுகின்றோம். புதுமைப்பித்தன் அந்தக்காலத்தில் எழுதியவற்றை இன்றும் பேசுகின்றோம். எத்தனை வருடங்கள் ஆகிவிட்டன என்றாலும் அதற்கான மதிப்பு இப்போதும் இருக்கின்றது. அவை எல்லாம் யதார்த்தவாத கதைகள் தானே. போதாமை எங்கிருக்கிறது என்பது புரிகிறதுதானே..

**மலையக தேசியம் இன்று ஓர் அரசியல் கருத்தியலாக வளர்ந்து நிற்கிறது. பொதுவாகவே தேசிய உருவாக்கத்தில் இலக்கியங்களுக்கு ஒரு முக்கியத்துவம்**

**இருக்கின்றது. மலையக தேசியக் கட்டுமானத்தில் உங்களுடைய எழுத்துகளுக்கும் வகிபாகம் உண்டென்று நினைக்கிறீர்களா? இப்படியொரு தேசிய சிந்தனைக்கும் எழுத்துக்குமான உறவில் உடன்படுகிறீர்களா அல்லது முரண்படுகிறீர்களா?**

மலையக தேசியம் என்கிற குரல்கள் அண்மையில்தான் எழுந்து வருகின்றன. இருப்பினும் அதற்கு முன்னைய படைப்புகளில் இருந்து அந்த தேசியத்துக்கான குரலை அவர்கள் தேடி எடுத்துக் கொள்கின்றார்கள். என்னுடையை படைப்புகளும் அப்படி பங்களித்துள்ளன என்றே நினைக்கின்றேன். 'நாம் இருக்கும் நாடு நமதென்பதறிவோம்' என்று சொல்வதிலேயே இந்த தேசியம் வருகின்றது. ஆனால் இந்த தேசியத்துக்காக நான் அந்தக் கதையை அறுபதுகளில் எழுதவில்லை. அது தான் இலக்கியம். இந்த வீட்டு திட்டங்கள் எல்லாம் வந்த நேரம் அப்போதைய பாராளுமன்ற உறுப்பினர் திலகர் மேடையில் பேசும்போது "ஒவ்வொருவருக்கும் தனியாக வீடு வேண்டும் என்ற உணர்வு எனக்கு வந்தது தெளிவத்தையின் மீன்கள் சிறுகதையை நான் வாசித்த பிறகு தான்" என்று கூறியுள்ளார். அதே 'மீன்கள்' சிறுகதையை ஜெயமோகன் தமிழில் வெளிவந்த நூறு சிறந்த சிறுகதைகளில் ஒன்றாக குறிப்பிடுகிறார். இதையெல்லாம் எதிர்பார்த்து நான் அந்தக் கதையை எழுதவில்லை. "இந்த மலையக தேசியம், அவர்களுக்கான தனி வீடு அப்படி என்ற உணர்வு எல்லாம் இந்த இலக்கியத்தினூடாகத் தான் அரசியல்வாதிகளுக்கு வந்து சேர்கின்றதே தவிர தொழிற்சங்கத்தினூடாக அல்ல" என்றும் திலகர் குறிப்பிடுகிறார். அதை மனதில் வைத்துக்கொண்டு நான் எழுதவில்லை. ஒரு அறைக்குள் ஒரு கணவனும் மனைவியும் நான்கு பிள்ளைகளை வைத்துக் கொண்டு தாம்பத்திய உறவு கொண்டு அடுத்த பிள்ளையைப் பெற்றுக்கொள்ளும் கொடுமை அந்தக் கதையில் வருகின்றது. இலக்கியம் நேற்றைக்கானது, இன்றைக்கானது, நாளைக்குமானது என்று அந்த ரஷ்ய கவிஞன் சொன்னது உண்மை தானே. இன்றைக்கு என்று வரும்போது அது தேசிய உருவாக்கத்திலும் பங்கு வகிக்கிறது.

**கடந்த காலங்களில் ஈழம் என்ற சொல் இன்றைக்கு அதன் அரசியல் அர்த்தத்தில் வடக்கு கிழக்கை மட்டும் சுட்டுவதாக சுருங்கியிருக்கிறது. ஈழ இலக்கியம் என்ற சொல்லாடல் மலையக இலக்கியத்தை அதற்குள் வைத்து நோக்குவதற்கு இடைஞ்சலாக இருக்கிறதா..?**

மலையகத் தமிழ் இலக்கியம் என்று தனியாகப் பேசப்படும் அளவுக்கு இந்த உழைக்கும் மக்களின் வாழ்வைப் பேசும் இலக்கியம் முதன்மை பெற்றிருக்கின்றது. பேராசிரியர் சிவத்தம்பி சொல்கிறார். 'ஈழத்து இலக்கியம் என்று சொன்னால் வடக்கு, கிழக்கு மற்றும் இலங்கை முஸ்லீம்களின் இலக்கியமும், மலையகம் சார்ந்த எழுத்துக்களும் வரும்' என்று. மலையக சிறுகதை வரலாறு என்ற நூலுக்கு சம்பந்தன் விருது கிடைத்தது. சாகித்திய மண்டல விருதை விடவும் சம்பந்தன் விருதுதான் பெரிதாகப்படுவதாக நான் சொல்லியிருக்கின்றேன். ஏனென்றால் என்னை எப்படி ஒரு சாரார் யாழ்ப்பாணத்துக்கு எதிரானவன் என்று முத்திரை குத்த முயற்சித்தார்களோ அதே யாழ்ப்பாணத்திலிருந்து தெளிவத்தைக்கு வந்த விருது இது. நான் யாழ்ப்பாணத்திற்கு எதிரானவன் இல்லை

என்பதை நிரூபிப்பதுபோல் வந்த விருது இது.

மலையக சிறுகதை வரலாறை நான் எழுதத் தொடங்கிய சமயம் செங்கை ஆழியான் என்னிடம் கேட்டார். மலையக சிறுகதை வரலாறு என்று எழுதுவது பிரதேசவாதம் அல்லவா என்று . அதற்கு நான் சொன்னேன் புவியியல் ரீதியாக இது பிரதேசமாக இருக்கலாம். ஆனால் ஒரு உழைக்கும் மக்களின் படைப்புக்கள் பற்றிய வரலாறையே இது சொல்ல வருகின்றது. நீங்கள் என்ன செய்ய வேண்டுமென்றால் யாழ்ப்பாணச் சிறுகதை வரலாறு என்று எழுத வேண்டும். அதே போல் திருகோணமலை, மட்டக்களப்பில் இருப்பவர்கள் கிழக்கு இலங்கை சிறுகதை வரலாறு ஒன்று எழுத வேண்டும். கொழும்பை சுற்றி வாழ்பவர்கள் மற்றும் முஸ்லிம்கள் தங்களுடைய சிறுகதை வரலாற்றை எழுத வேண்டும். இவை எல்லாம் ஒன்று சேர்ந்ததுதான் ஈழத்து சிறுகதை வரலாறாக முழுமை பெறும். இதில் பிரதேச வாதம் எதுவும் இல்லை என்று நான் அவரிடம் சொன்னேன். இது நூலாக வெளிவந்த பிறகு இதற்கு சம்பந்தன் விருது கொடுக்க வேண்டும் என்று தெரிவு செய்தவரும் அவரேதான்.

“ஈழ இலக்கியம்” என்று ஜெயமோகன் ஒரு புத்தகம் எழுதியிருக்கிறார். நான் அவுஸ்ரேலியா சென்றிருந்தபோது “ஈழ இலக்கியம் என்று ஜெயமோகன் ஒரு புத்தகம் எழுதியிருக்கிறார்தானே. அதில் உங்களுடைய இலக்கியத்தைப் பற்றி குறிப்பாக மலையக இலக்கியம் பற்றி ஒன்றும் இல்லையே” என்று என்னிடம் கேட்டார்கள். அதற்கு நான் சொன்னேன். ஈழம் என்பது தமிழ்மொழி பேசும் பல பிரதேசங்களைக்கொண்டது. அந்த நாட்டினுடைய இலக்கியத்தைப் பற்றி சொல்லுகின்ற அவருடைய முதல் நூல் இது. அடுத்தடுத்த நூல்களில் அவர் மலையக இலக்கியம் எழுதுவார் என்று அவருக்குக் கூறினேன்.

ஈழத்துத் தமிழ் இலக்கிய வரலாறுகளில் நிறையச் சந்தர்ப்பங்களில் மற்ற மற்றப் பிரதேச இலக்கியங்கள் விடுபட்டுப் போவதுபற்றி நான் சில சமயங்களில் கோபமாகச் சொல்வதுண்டு. சிவத்தம்பி அவர்கள் ஓரிடத்தில் சொல்லியிருக்கின்றார். தெளிவத்தையின் கோபம் நியாயமானதுதான். ஏனென்றால் நாங்கள் ஈழத்து இலக்கியம் என்று தலைப்பிட்டுவிட்டு யாழ்ப்பாணத்து இலக்கியத்தை மட்டும் தான் பேசியிருக்கின்றோம் என்று. உங்கள் கேள்விக்குரிய காரணமும் சிவத்தம்பியினுடைய பதிலும் ஒன்றாகவே இருக்கின்றது.

ஈழத்து இலக்கியம் என்று பேசப்படும்போது எல்லா இலக்கியங்களைப்பற்றியும் பேசினால் அந்தப் பெயர் ஒரு பிரச்சனையே இல்லை.

**“1983 அல்லது நாங்கள் பாவிகளாக இருக்கிறோம்” என்று ஒரு நாவல் எழுதி இருக்கிறீர்கள். அது 1983-ஆம் ஆண்டு தமிழர்கள் மீது இடம்பெற்ற இன ஒடுக்குமுறையை மையப்படுத்தியது. அந்த நாவல் உங்களது சொந்த அனுபவத்தை அடிப்படையாக வைத்து எழுதப்பட்டதா? இனப்பிரச்சனைக்கான போராட்டம் ஆயுதப் போராட்டமாக மாறிய பின்னர், அது மலையக தமிழர்களை எப்படியெல்லாம் பாதித்தது என்பதை உங்கள் அனுபவத்தின் ஊடாக பார்க்கிறீர்கள்?**

மலையகத்தில் இருப்பவர்கள் ஆயுத போராட்டத்தில் பங்கேற்கவில்லை என்று பொதுவாக சிலரால் சொல்லபட்டாலும், அந்த போரில் இறந்தவர்கள் மலையகத்திலிருந்து புலம்பெயர்ந்து வன்னியில் குடியேறி வசித்தவர்கள் என்று பத்திநாதன் தமிழகத்தில் ஈழ அகதிகள் என்ற ஈழ அகதிகளைப் பற்றிய வரலாற்று நூலில் குறிப்பிட்டு இருக்கிறார்.

குடைநிழல் நாவலில் நானும் எழுதியிருக்கின்றேன்.. அமிர்தலிங்கமாக இருந்தாலும் சரி, ஆனந்தசங்கரியாக இருந்தாலும் சரி.. தொண்டைமானாக இருந்தாலும் சரி, செல்லச்சாமியாக இருந்தாலும் சரி துப்பாக்கிகளோடு வரும் பொலிஸாருக்கும், இராணுவத்தினருக்கும் இவர்கள் எல்லோரும் புலிகள் தான். அவர்களுக்கு இந்த பிரதேச வித்தியாசம் எல்லாம் தெரியாது, யார் சண்டைக்கு போனார்கள் என்பதெல்லாம் தெரியாது. தமிழில் கதைக்கின்றானா? அது போதும். அரசுக்கு எதிராக கிளம்பியவர்கள் தமிழர்களாக இருந்தது தான் எங்களுக்குள்ள பிரச்சினை

1983 நாவல் என்னுடைய அனுபவத்தின் மூலமாகத்தான் வருகின்றது. அந்நேரத்தில் நான் என்னுடைய அலுவலகத்தில் மாட்டிக்கொண்டு விட்டேன். என்னுடைய மனைவி வீட்டில். மட்டக்குளி மிகவும் மோசமாக தாக்கப்பட்ட இடம். வீட்டில் என்னுடைய மனைவி இரண்டு பிள்ளைகளை வைத்துக்கொண்டு பட்ட கஷ்டங்கள் எல்லாம் அந்த நாவலில் இருக்கின்றது. என் அலுவலகத்திலிருந்து நான் வெளியே ஓடி வருவது. அருகில் இருந்த தியேட்டரில் அடைக்கலம் புகுந்தது. பிறகு அவர்கள் கொண்டுவந்து என்னை வீட்டில் விட்டது எல்லாம் ஓரளவுக்கு நிஜம்.

**சமகாலத்தில் அச்சு இதழ்கள், இணைய இதழ்கள் நிறைய வெளியாகின்றன. அவற்றை பின்தொடர்கிறீர்களா?**

நல்ல எழுத்தாளர்கள் இருக்கின்றார்கள். அவர்களுடைய கதைகளை நான் வாசிப்பதுண்டு. அவர்கள் புத்தகம் எழுதினால் அதைப்பற்றி நான் எழுதுவதுண்டு. இணைய ஊடகங்கள் பக்கம் போவதில்லை. இந்த முகப்புத்தகப் பக்கம் போகாமல் இருப்பது நல்லது என்றே நினைக்கின்றேன். நாங்களே எழுதுகின்றோம். நாங்களே முகப்புத்தகத்தில் போட்டுக்கொள்கின்றோம். நாங்களே Like போடுகிறோம். எழுதுவதெல்லாம் இலக்கியம் ஆகிவிடும் என்னும் மாயையின் உருவாக்கம். முகப்புத்தகம் பார்க்காத ஒரு எழுத்தாளர் தெளிவத்தை என்று நண்பர்கள் கூறுவதுண்டு.

நிறைய இலக்கிய பத்திகள் செய்திருக்கின்றேன். கலைமுகம், ஞானம், மல்லிகை போன்ற இதழ்களிலும், வீரகேசரி, தினகரன் போன்ற பத்திரிகைகளில் இலக்கிய பகுதிகளில் பத்திகள் எழுதியிருக்கின்றேன். நூல் அறிமுகங்கள், இலக்கியத்துக்காக பாடுபட்டவர்களின் வரலாறுகள், குறிப்புகள் போன்றவை. இதை நான் தொடர்ந்து செய்வதன் ஊடாக என்னுடைய வாசிப்பை மீளமைத்துக் கொள்கின்றேன்.

என்னுடைய மனைவி என்னை அடிக்கடி கோவித்துக்கொள்வதுண்டு. எழுத என்று ஆரம்பித்தால் எழுத மாட்டீர்கள். இருந்து தேடிக்கொண்டிருப்பீர்கள் என்று. கோவை ஞானி

இறந்ததிலிருந்து இன்று வரை தேடிக்கொண்டிருக்கின்றேன் அந்த ஞானியைப் பற்றி நான் எழுதத் தொடங்கியதால் அந்த ஞானியை வாசிக்கின்ற ஒரு உந்துதல் எனக்கு வருகின்றது. என்னுடைய பத்தி எழுத்துக்களை என்னுடைய வாசிப்பின் மீள் வரவாக கருதுகின்றேன். எழுத்து இல்லாவிட்டால் வாசிப்பதை மறந்துவிட்டிருப்பேனோ தெரியவில்லை. இப்போது ஜெயகாந்தன் புத்தகத்தை எடுத்து வாசித்தாலும் நன்றாக இல்லை. ஈர்ப்பதில்லை புனைவுகளை விட வரலாறுகள் வாசிக்கலாம்போல் இருக்கின்றது. கூடுதலாக அச்சில் வரும் புத்தகங்கள் இதழ்களைத்தான் வசிக்கிறேன். புதுப்புது எழுத்தாளர்கள் எழுதினாலும் அவற்றையும் நான் வாசிக்கின்றேன்.

**நீங்கள் இளம் எழுத்தாளர்களுக்கு வழங்குகிற முன்னுரைகளைப் பற்றிய கேள்வியோடு நேர்காணலை நிறைவு செய்வோம். அந்த முன்னுரைகளில் அவர்களுடைய படைப்புகள்பற்றி கறாரான, இறுக்கமான மதிப்பீடுகளை முன் வைக்காமல், ஊக்கப்படுத்தல் என்ற முறையில் எழுத்துகளின் தகுதியையும் மீறி அனைவரையும் பாராட்டுகிறீர்கள் என்ற ஒரு குற்றச்சாட்டை உங்கள் முன் வைத்தால் உங்களுடைய பதில் என்ன? இந்த சமரசம் தேவைதானா..?**

யாரையாவது பாராட்டுகின்றேன் என்றால் அதன் மூலமாக எனக்கு எந்த எதிர்பார்ப்பும் கிடையாது. அப்படியாகிலும் இவர் ஒரு நல்ல எழுத்தாளராக வரமாட்டாரா என்னும் ஆதங்கம் தான் (சிரிக்கிறார்). மற்றையது நான் எழுதும் போது வாங்கிய ஏச்சுக்களினால் புதிதாக எழுத வருபவர்களை ஊக்குவிக்க வேண்டும் என்று நினைக்கின்றேன்.

அனைவரையும் என்பதை என்னைத் தேடி வருபவர்கள் என்று கொண்டால் அவர்களிடம் ஓர் இலக்கிய உணர்வு, இலக்கிய அக்கறை இருப்பதாக நான் நினைப்பதிலும் அவர்களை ஊக்குவிக்க முயல்வதிலும் குற்றம் இருப்பதாகத் தெரியவில்லை அல்லவா..? மு. தளையசிங்கம் ஓரிடத்தில் கூறுகிறார். ‘எழுத்தாளன் என்று எப்போது ஒருவன் பேனாவைத் தூக்கிக்கொண்டு கிளம்புகிறானோ அவன் சமூகத்துக்குத் தேவையானவன்’ என்று.

அவனை நெறிப்படுத்தி மனித சமூகத்துக்கானவனாக மாற்றும் எனது சிறு முயல்வே இவைகள்.

# 15. உறங்கு நிலையில் ஒரு மாற்று வரலாறு: பூர்வ பௌத்தனின் கல்லறை- அசுரா நாதன்

சிறப்புக் கட்டுரை/செப்டம்பர் 2020

BY அசுரா நாதன்

நடைமுறையில் பகுத்தறிவுச் செயல்பாடென்பது பார்ப்பன புராண வரலாற்றை தொடர்ந்தும் தக்கவைக்கின்றது. புராண வரலாற்றை தொடர்ந்து எதிர்த்துக்கொண்டே இருப்பதன் ஊடாக இருப்பும், எதிர்ப்புமே தொடர்கின்றன. இவ்வாறாக தொடர்ந்து மேற்கொள்ளப்பட்டு வரும் எதிர்ப்பு நடவடிக்கைகளை ஒரு பகுத்தறிவு செயல்பாடென நாம் கூறிவிட முடியுமா?

நாட்டுப்புற பண்பாட்டுக் கலாசாரத் துறைசார்ந்த டி.தர்மராஜ் அவர்களின் ‘பார்ப்பனர் முதல் பறையர் வரை’ எனும் நூல் வாசிப்பின் ‘ஞாபகம்’ இது. இவரின் ‘நான் ஏன் தலித்தும் அல்ல’ என்ற நூலையும் வாசித்த அனுபவத் தூண்டுதலும் ‘பார்ப்பனர் முதல் பறையர் வரை’ எனும் பிரதியை கவனம் கெள்ள வைத்தது. இந்த நூலுக்காக எழுதப்பட்ட முன்னுரையைக் கடந்து, பிரதியின் முழுமையை தரிசிப்பதற்கு ஒரு வாசகன் தன்னை முதலில் தகவமைத்துக் கொள்ளவேண்டும். நான் யார்! யாராக இருந்தேன்! நான் யாராக இருக்கவேண்டும்! என இந்த நூலின் முன்னுரைக்கு நாம் வழங்கும் தார்மிக பதிலுரைப்பு அவசியமானது. நீ தலித்தாக இருக்கின்றாயா? தலித்தாக சிந்திக்கின்றாயா? தலித்துக்களுக்காக போராடுபவனா? எழுதுபவனா? ஆய்வாளனா? அறிஞனா? எந்த தோற்றத்தில், எந்த வடிவத்தில் நீ பதுங்கியிருக்கிறாய்! என தீண்டத்தகாதவன் எனும் சமூக வலியை வாழ்நாள் எல்லாம் சுமந்து கொண்டிருப்பவனின் ஆத்மாவையும் இந்த நூலின் முன்னுரையில் பேசவைக்கிறார் தருமராஜ்.

‘வரலாற்றில் நிகழ்ந்த இத்தகைய குழப்பங்களையெல்லாம் ஒதுக்கிவிட்டு குறைந்தபட்சம் சுய நலமற்ற தன்மையோடு நமது பண்பாட்டையும், அதில் நிலவும் சாதிய உணர்வுகளையும் நாம் அணுகவேண்டும் என்றே நான் விரும்புகிறேன்’. என்பதோடு தொடர்ச்சியாக நாட்டுப்புற தெய்வ வழிபாடுகள் இந்து மதத்தோடு கரைந்து போய்க்கொண்டிருக்கும் அவலத்தையும் அவதானித்து வருகின்றார். தனித்துவமாக மேற்கொள்ளப்பட்டு வந்த நாட்டுப்புற வழிபாட்டு முறைகளுக்குள்ளும் சாதியப் பாகுபாடுகள் வலிமை பெற்றிருக்கும் ஆய்வுப் பார்வையையும் முன்வைக்கின்றார். ‘இந்தச் சூழலில் சுமார் நூறு வருடங்களுக்கு முன்பு அயோத்திதாசர் முன்வைத்த தமிழ் பௌத்தம் என்ற திட்டம் மிகச் சரியானதாக இருக்கமுடியும் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது’ என்று ‘பார்ப்பனர் முதல் பறையர் வரை’ எனும் பிரதியின் வாசலில் அயோத்திதாசர் நிறுத்தப்பட்டிருக்கிறார்.

இந்த நூலின் அரூபம் அயோத்திதாச பண்டிதர். ரூபமாக திகழ்பவர் டி. தர்மராஜ். எனவே இந்த நூல் எனக்கு ஒரு ‘ஞாபகம்’. மறதி என்பது ஞாபகத்தின் எதிர்ப்பதம் அல்ல, மற்றமைகளின் ஞாபகங்களே மறதியை தோற்றுவிக்கின்றன. நினைவுகளின் இருப்பிடமே ஞாபகம். மறதிக்கும் தன்னிலைக்கும் சம்பந்தம் இல்லை. மறதியை மற்றமைதான் உருவாக்கிறது. இவ்வாறு ‘ஞாபகம்’ ‘மறதி’ எனும் சொற்பொருளின் அறிமுகத்தோடு ‘பூர்வ பௌத்தனின் கல்லறை’ எனும் பகுதி ஆரம்பமாகிறது.

இந்த நூலின் வாசிப்பு அறிமுகத்திற்கு முதலில் ஒன்றை நினைவு படுத்த வேண்டுமானால், தலித்-சாதிய வரலாற்றுத் தேடலும்-ஆர்வமும் அதன் அரசியல் நகர்வுகள் மீதான அவதானிப்புப் பயிற்சியும் அவசியமானதென்பதே. அதுமட்டும் போதாது. அயோத்திதாச பண்டிதரை அவரது கட்டுரைகளை படித்திருக்கவும் வேண்டும்.




…

நூறு ஆண்டுகளுக்கு பின்பான அயோத்திதாசரின் மீள் ‘ஞாபகம்’ என்பது தமிழகத்தில் ஒரு கலவரத்துடனேயே அறிமுகமாகியது. 1999 ம் ஆண்டு தலித் சாகித்ய அகாடமியினால் தொகுக்கப்பட்டு வெளிவந்த அயோத்திதாசரின் பிரதிகளின் வாசிப்பின் வெளிப்பாடுகள் முதலில் அவ்வாறான கலவரத்தை தூண்டும் வகையில்தான் அமைந்ததை என்னாலும் அவதானிக்க முடிந்தது. எனது நினைவில் அதற்கு முதற்காரணமாக இருந்தவர் தோழர் ரவிக்குமார். இரண்டாவது ராஜ்கௌதவமன் எனலாம். காரணமாக இருந்தவர்கள் என்பது அவர்கள் மீதான குற்றச்சாட்டாக பொருள்கொள்ள வேண்டாம். அவர்கள், அயோத்திதாச பண்டிதரின் அறிமுகத்தையும், பண்டிதரின் சாதிய தீண்டாமை ஒடுக்குமுறைகளுக்கு எதிராக

செயல்பட்ட காலத்தின் ஆதாரங்களை கட்டுரைகளாகவும் நூலாகவும் வெளிக்கொண்டு வந்தபோது அதற்கான எதர்வினைகளே பெரும் ‘விமர்சனக்-கலவரமாக’ மாறியது. இந்த ‘கலவரத்தின்’ காயங்களோடு அயோத்திதாசரை வாசிக்கும் முறையையும் அயோத்திதாசரை அவரது காலோத்தோடு இன்று இணைத்து புரிந்து கொள்ளவேண்டிய அவசியத்தை முன்வைப்பவர்களாக ஸ்டாலின் ராஜாங்கமும், இந்த நூலின் ஆசிரியர் டி. தர்மராஜ் என்பவரும் மிக முக்கியமானவர்கள். இந்த விமர்சன கலவரச் சூழலை வேறு திசைக்கு மாற்றிச் சென்றதில் ஜெயமோகனின் பங்களிப்பும் மிக முக்கியமானதாகவே நான் கருதுகின்றேன். அனைத்துக்கும் முன்பாக 1997ல் வெளிவந்த மிகச் சிறிய தொகுப்பான ‘தமிழகத்தின் தலித் அரசியல் முன்னோடிகள்’ எனும் நூல். வி.ரேவதி அவர்களால் எழுதப்பட்டது. அயோத்திதாச பண்டிதர், இரட்டைமலை சீனிவாசன், எம்.சி. ராஜா போன்ற தலித் சமூகப் போராளிகளை அறிமுகப்படுத்துவதே அதன் உள்ளடக்கமாக கருத முடிகிறது. வி.ரேவதி அவர்கள் தனது பட்டப் படிப்பின் ஆய்விற்காக மேற்கொண்ட முயற்சியாக இருப்பினும் 1999 ல் வெளிவந்த அயோத்திதாசரின் தொகுப்புகளுக்கு முன்பாக தலித் அரசியலின் முன்னோடிகளை தமிழகத்தில் அறிமுகப்படுத்திய வகையில் இச்சிறு தொகுப்பும் முக்கியத்துவம் வாய்ந்ததே. தற்போது கௌதம சன்னா அவர்களால் தொகுக்கப்பட்ட நூல்களான ‘ஆதிதிராவிடர் வரலாறு’ ‘இரட்டைமலை சீனிவாசன் எழுத்துக்களும் ஆவணங்களும்’ எனும் நூல்களும் தமிழக தலித் சமூக போராளிகளின் வரலாற்றை புரிந்து கொள்வதற்கான மிகச்சிறந்த ஆவணங்களாகும்.

மூன்று தலைப்புகளில் எழுதப்பட்ட தர்மராஜின் இத்தொகுப்பின் இறுதிப் பகுதியான ‘பூர்வ பௌத்தனின் கல்லறை’ எனும் கட்டுரையின் புரிதலின் ஊடாக எவ்வாறு அயோத்திதாசரின் பனுவலை என்னால் எதிர்கொள்ள முடிகிறது என்பதாகவே எனது விபரிப்பை புரிந்து கொள்ள வேண்டும். மேலும் அந்த கட்டுரைப்பகுதியில் முன்வைக்கப்பட்டிருக்கும் விபரிப்புக்களை, சொற்பிரயோகங்களை மீளவும் நான் விபரித்துச் செல்வதால் எளிமையான துரித வாசிப்பிற்கு அவை இடையூறாக இருக்கலாம். எனவே அக்கட்டுரையின் சாராம்சத்தை உள்வாங்கிய புரிதலில் அயோத்திதாசரை எவ்வாறு நான் எதிர்கொள்கின்றேன், புரிந்துகொண்டேன் என்பதையே சுருக்கமாக எழுத முயற்சிக்கின்றேன்.

அயோத்திதாசரிடம் எதிர்பார்க்கும் ‘முழுமை’ கிடைக்காது, அதை ‘பிறிதொன்றிடம்’ கண்டுகொள்வதுடன் புத்தகம் நிறைவடைகிறது. இருப்பினும் ‘பூர்வ பௌத்தனின் கல்லறை’ எனும் தலைப்பில் விவாதிக்கப்பட்டிருக்கும் மொழி சார்ந்த ஞாபகம், மறதி, மெய்நிகர் எனும் சொற்பொருள்களின் பிரயோகத்தன்மை என்பன எனது சுய வரிவாக்கத்திற்கு பயனுள்ளதாக அமைந்தது. மிக அவதானமாக அத்தலைப்பின் உள்ளடக்கத்தை சிறு சிறு பகுதிகளாக எழுதி வாசகர்களின் சிரமத்தை குறைப்பதற்கு முயற்சித்திருப்பதும் பாராட்டுக்குரியது.

அயோத்திதாசரின் மீள் வருகையோடு நிகழ்ந்த ‘விமர்சன கலவரத்துக்கு’ காரணமாக

இருந்த அடிப்படை சொற்கள் என்பது 'ஞாபகம்', 'மறதி' என்பதாகவே கருதவேண்டும். இந்த ஞாபகம் மறதி என்பதன் உட்கருத்தையே இக்கட்டுரையின் ஆதாராமாகவும் கொண்டு தொடருகின்றேன். அதற்கான உள்ளுனர்வின் சுய-விரிவை எனக்கு தந்ததும் டி. தர்மராஜ் அவர்களின் இந்த நூலின் இறுதிப்பகுதியான 'பூர்வ பௌத்தனின் கல்லறை' எனும் கட்டுரை என்பதையும் வாசகர்கள் மீண்டும் நினைவில் கொள்ள வேண்டுகின்றேன்.

திராவிட கழகத்தின் சாதிய தீண்டாமை ஒழிப்பு நடவடிக்கைகளுக்கு முன், இற்றைக்கு நூறு ஆண்டுகளுக்கு முன்பாகவே சாதிய தீண்டாமைப் போராட்டங்களை மேற்கொண்ட ஒரு வரலாறு ஏன் மறைக்கப்பட்டது? 1999 ல் அயோத்திதாசர் தமிழகத்தில் மீள அறிமுகப்படுத்தப்பட்டபோது இவ்வாறு ஒரு கேள்வியும் எழுந்தது. இது திராவிட இயக்கத்தின் திட்டமிட்ட செயலா! என்பதான எதிர்மறைப் புரிதலின் பலவீனங்களாலும், அயோத்திதாசரின் பிரதிகளில் காணப்படும் சொற்பொருள் மயக்கங்களுமே இன்று இரு துருவங்களாக ஒன்றை ஒன்று மறுத்தும், எதிர்த்தும் வருவதற்கான அடிப்படைக் காரணமாக கருத முடிகிறது.

அயோத்திதாசரை மீளக் கண்டெடுத்து உரையாட முற்பட்ட தருணத்தில் சாதிய தீண்டாமை போராட்டங்களை மேற்கொண்ட திராவிட பெரியாரிய சிந்தனைக்கு அவை எதிரானவை என்பதாகவும், அயோத்திதாசர் பறையர் எனும் ஒரு சாதியின் பிரதிநிதியாகவே தன்னை முன்னிறுத்தி செயல்பட்டவர் எனும் ஒரு பதட்டமான மனநிலையும் எழுந்தது. இது ஒரு வகையான அச்சம். எங்களுடைய நம்பிக்கை, எங்களுடைய உடைமைகளுக்கான அச்சுறுத்தல் எனும் மன நிலையின் ஒரு பதட்டமாகவே இதை கருத முடிகிறது. நினைவுகளின் தொடர்ச்சியான அடுக்குகளாக மனித மனம் தனக்குள் ஞாபகங்களை சேமித்து வருவதின் விளைவாகவே இவ்வாறான பதட்டம் நிலவக்காரணமாகிறது. சாதிய சமூக முரண்பாடுகளின் வரலாற்றை எவ்வகையான ஞாபகங்களால் எமது மனங்களில் நினைவுகளாக அடுக்கிக்கொண்டே இருக்கின்றோம்? வரலாறுகளால்.

திராவிட கழகத்தின் சாதிய தீண்டாமை ஒழிப்பு நடவடிக்கைகளுக்கு முன், இற்றைக்கு நூறு ஆண்டுகளுக்கு முன்பாகவே சாதிய தீண்டாமைப் போராட்டங்களை மேற்கொண்ட ஒரு வரலாறு ஏன் மறைக்கப்பட்டது?

சாதியின் இருப்பையும் அதன் தோற்றத்தையும் பார்ப்பன புராண வரலாறுகளால் உள்வாங்கிய வகையில் அதன் ஞாபகங்களே எம்மை தூண்டுகிறது. அதன் எதிர்வினைக்கான வழிமுறைக் கருத்தியலை நவீன சிந்தனைப் பயிற்சியின் ஊடாகவே எதிர்கொண்டு வருகின்றோம்.

பகுத்தறிவென்பது மிகவும் பொருள் பொதிந்த ஒரு சொல்லாகும். அதன் பயனையும் பயன்பாட்டையும் நாம் எவ்விதம் இனம் காணமுடியும்? பகுத்தறிவை பிரயோகிக்கும்போது அதன் விளைவு என்னவாக இருக்கின்றது என்பதை ஆய்வுக்குட்படுத்துவதன் மூலமாகவே பகுத்தறிவு என்பதன் சொல்லுக்கான பொருளின் பயனை நாம் புரிந்து கொள்ளலாம். சாதிய சமூக கருத்தியலுக்கு பின்புலமாக நிலைத்திருப்பதாக கருதும் பார்ப்பன புராண வரலாறுகளை எமது பகுத்தறிவுச் செயல்பாட்டினால் எதிர்கொள்வதாக இருந்தால்,

அவ்வாறான எமது பகுத்தறிவு செயல்பாடானது நாம் எதிர்கொள்ளும் பார்ப்பன புராண வரலாற்றை இல்லாமல் ஆக்கவேண்டும். நிலவும் பகுத்தறிவுச் செயல்பாடென்பதோ பார்ப்பன புராண வரலாற்றை தொடர்ந்தும் தக்கவைப்பதற்கானதாகவே இருக்கின்றது. எதிர்கொள்ளும் புராண வரலாற்றை தொடர்ந்து எதிர்த்துக்கொண்டே இருப்பதன் ஊடாக இருப்பும், எதிர்ப்புமே தொடர்ந்து வருகிறது. இவ்வாறாக தொடர்ந்தும் மேற்கொண்டு வரும் எதிர்ப்பு நடவடிக்கை என்பதை பகுத்தறிவு செயல்பாடென நாம் கூறிட முடியுமா? நிதானமாக சிந்திப்போமாயின் நாம் பார்ப்பன புராண வரலாற்றை தொடர்ந்து மீள் கட்டமைக்கும் பணிகளையே மறைமுகமாக செய்து வருகின்றோம் என புரிந்து கொள்ள முடியாதா? எதிர்ப்பதை மட்டுமே நவீன பகுத்தறிவின் அறிவியல் செயல்பாடாகவும், புராண வரலாற்றை மூட நம்பிக்கையாகவும் ஞாபகங்கள் நினைவுகளாக தேக்கி வைத்திருக்கிறது. புராண வரலாறென்பது ஒரு காலத்தில் கலை இலக்கியங்கள் வழி செழித்திருந்தது. அதை பிரஞ்சு, கிரேக்க, ஆபிரிக்க, அரேபிய படைப்பிலக்கியங்களிலும் நாம் காணமுடியும். அவை ஒரு காலத்தின் வரலாற்று நிகழ்வாக கருதவேண்டும் அவ்வளவுதான்.

அயோத்திதாசரின் புனைவுகளான ‘மாற்று வரலாற்றையும்’ புராண புனைவுக்கு நிகரான மூட நம்பிக்கை என்பதாகவே நவீனத்தின் எதிர்மறை சிந்தனையும் உள்வாங்கிக்கொண்டது. எனவே நூறு வருடத்திற்கும் மேலான அயோத்திதாசரின் தமிழகத்து ‘மறதி’ என்பது நவீன சிந்தனையின் தொடர்ச்சியான ‘ஞாபகங்களால்’ ஆனதாகவே கருதவேண்டும். எனவே ஞாபகங்களே மறதியை தோற்றுவிக்கின்றது எனும் டி. தருமராஜ் அவர்களின் வெளிச்சத்தில் அயோத்திதாசர் எனக்குள் மேலும் பிரகாசிக்கின்றார்.

அயோத்திதாசரின் இந்திரதேச சரித்திரத்தில் பிரயோகிக்கப்படும் சொற்களுக்கான பொருள் விளக்கங்களை தமிழ் பண்பாட்டு மரபுகளோடும் தமிழ்-இலக்கண இலக்கிய பிரதிகளிலும் பொருத்திப் பார்க்கும் ஆதாரங்களையும் நாம் கண்டு கொள்ளலாம். அவைகளில் சித்தர் பாடல்களும் துணைப் பலமாக அமைந்திருக்கிறது. இங்கே பலருக்கும் குழப்பமாக இருக்கும் விடயம் அயோத்திதாசர் பறையர் சமூகத்தை சேர்ந்தவர். அவர் அச்சமூகத்தின் மேம்பாட்டிற்காகவே பாடுபட்டார். பிற சமூகத்தவர்கள் பலரை (குறவர், வில்லியர், சக்கிலியர், தோட்டிகள்) தாழ்ந்த சாதிகளாக கருதினார். எனும் பார்வையில் அயோத்திதாசர் விமர்சிக்கப்பட்டார். எமது பழக்கத்தில் எமது ஞாபகங்களில் நிலைத்திருக்கும் சொற்பொருள் சார்பு நிலையே நாம் புதிதாக ஒரு ‘ஞாபகத்தை’ உள்வாங்க தடையாக அமைந்துவிடுகிறது. பறையர்கள் எனும் பூர்வ பௌத்தர்கள் தாழ்த்தப்பட்டவர்கள் என்பதற்கும் மற்றயவர்கள் தாழ்ந்து போனவர்கள் என்பதற்குமான பெருங்கதையாடல் ஒன்றை அவரது பிரதிகளுக்குள் நாம் கண்டெடுக்க முடியும். அந்தப் பெருங்கதையாடலை பின்-நவீன விசாரணைக்குள் விரித்துப்பார்த்தால் அவை மேலாதிக்க கருத்தியல் கொண்ட கதையாடல்கள் அல்ல என்பது புரியும். அதுவும் ‘பெரியாரிய திராவிடம்’ (‘பெரியாரிச திராவிடம்’ அல்ல. இங்கு பெரியாரியம் என்பது அவரது தனித்துவமான கருத்தியலை, செயல்பாட்டை மதிப்பிடுவதாகவும், எமது சுயத்தை பிறிதொன்றுடன் முழுமையாக இழந்து நிற்பதை பெரியாரிசம் என்பதாக புரிந்து கொள்கின்றேன். மார்க்சியம், மாரக்சிசம்

என்பதன் வேறுபாட்டையும் இவ்வாறாகவே புரிந்துகொண்டேன்). விரும்பிய சமூக நீதியின் உள்ளடக்கமே அயோத்திதாசரின் பெருங்கதையாடலிலும் துலங்குவதை அவதானிக்க முடியும். பிராமணம் என்பதை இந்தியாவின் பூர்வீகம் என்கிறார். அந்த பிராமணம் என்பது ஒரு தகுதி. லௌகீக வாழ்க்கையை வென்று-கடந்து வரும் நிலை. அந்த பிராமணம் எனும் தகுதிக்கு எவராலும் வரமுடியும். அதாவது பௌத்த 'சீலமான' பஞ்சீலங்களைப் பேணிக் கடந்து வருபவர்கள் எவருமே பிராமண தகுதி அடைந்தவர்களாக கருதப்படுவார்கள்.

மேலும் இந்திய செவ்வியல் மொழிப் பிரிவினர்களான பாலி மொழி பேசுபவர்கள், அனைத்தையும் கடந்த ஞான-நிலையை அடையும்போது அவர்களை அறஹத்துக்கள் என வகைப்படுத்துகின்றார். சமஸ்கிருத மொழிபேசுவர்கள் ஞானிகளாக தகுதி அடையும்போதே அவர்களை பிராமணர்கள் என்கிறார். திராவிட மொழியாம் தமிழை பேசுபவர்கள் அத்தகுதியை வந்தடையும்போது அவர்களே அந்தணர்களாகும் தகுதியுடையவர்களாகின்றனர், என்பதாகவே அயோத்திதாசரின் வகைப்படுத்தும் புனைவுகளை புரிந்து கொள்ள முடிகிறது. இவ்வாறான தகுதி நிலை அடைந்தவர்கள் சாதாரண மக்கள் மத்தியில் மதிப்பும் மரியாதையும், தானமும் பெற்று வாழ்ந்தவர்களாக கூறுகிறார். இவ்வாறான நீட்சியில்தான் 'புருசீகர்கள்' எனும் அன்னிய நாட்டினர் பிரவேசித்து சமூக நிலமையை அவதானிக்கின்றனர். சமஸ்கிருதம் பேசும் மக்களில் பிராமண தகுதிபடைத்தவர்கள் வேலை, உழைப்பு ஏதுமின்றி வசதியாக வாழ்ந்து வருவதைக் கண்டு அதுபோன்ற உழைப்பின்றி வாழ்வதற்காக மட்டுமே தம்மை பிராமணர்களாக வேசமிட்டனர். மக்கள் மத்தியிலும் அவதூறுகளையும் பரப்பி வந்தனர். இவ்வாறான வேஷப் பிராமணர்களின் புரட்டுக்களை 'பறைந்து' 'பறைந்து' அம்பலப்படுத்தி வந்த யதார்த்த பிராமணர்களே பறையர்கள் என வேசப் பிராமணர்களால் பரப்பப்பட்டார்கள். எதிர்ப்பேதுமின்றி இவ் வேஷப்பிராமணர்களின் பொய் புரட்டுக்களை நம்பி தமது சுயத்தை இழந்த சாதாரண பொதுமக்களையே தாழ்ந்து போனவர்களாக அயோத்திதாசர் கட்டமைக்கின்றார். தொடர்ந்து வேஷப்பிராமணர்களின் மேலாதிக்க சூழ்ச்சிகளை அம்பலப்படுத்தியவர்களான யதார்த்த பிராமணர்கள் (பறையர்கள்) தாழ்த்தப்பட்டார்கள். அவர்கள் தமது சுயத்தை இழந்து தாமாகவே தாழ்ந்து போகவில்லை. பிறரால் தாழ்த்தப்பட்டார்கள்.

எமக்கு நேர்ந்த சிக்கல் யாதெனில் பறையர் எனும் எமது காலத்து சொற்பொருட்-சாய்வுடன் எமது சுயத்தையும் பொருத்தி நின்று சிந்திப்பதன் விளைவுதான் இதற்கு காரணம். உலக-மொழி-விளையாட்டின் இயல்பு இது. கௌதம சன்னா அவர்களால் அண்மையில் தொகுக்கப்பட்ட நூலான 'ஆதி திராவிடர் வரலாறு' எனும் நூலை பார்த்தால் பல்வேறு சொற்பொருள்களின் ஏற்ற இறக்கங்களை புரிந்து கொள்ளலாம். திரிசிபுரம் ஆ. பெருமாள் பிள்ளை அவர்கள் 1922ல் எழுதிய கட்டுரையில் பல தகவல்களை நாம் அறியக்கூடியதாக உள்ளது. 'பறையர்', 'இந்தியா', 'பிள்ளை' எனும் சொற்களுக்கான அர்த்தங்கள் அயோத்திதாசர் அர்த்தம் ஏற்றிய சொற்களிலிருந்து மாறுபட்டிருக்கின்றது. இதில் நாம் குழம்புவதற்கு ஏதுமில்லை. மொழி விளையாட்டின் இயல்பு இது. இந்த மொழி

விளையாட்டில் எமது பங்களிப்பு எதுவாக இருக்கவேண்டும் என்பதே. சொற்பொருளின் சமூக விளைவுகளை அவதானித்து சிந்திக்க வேண்டும். இன்றைய திராவிடயிசம்' 'பொரியாரிசம்' என்பது வேசப் பார்ப்பனியத்தின் புராண வரலாறுகளை தொடரந்தும் நிலைநிறுத்தும் பணிகளையே மறைமுகமாக செய்து வருகிறது. அவர்களால் புராண வரலாற்றுக்கு மாற்றாக ஒரு மெய்நிகரை (virtuel) முன்வைக்க முடியவில்லை. கார்த்திகை தீப புராணத்தை, தீபாவளி புராணத்தை, பூநூல் புராணத்தை, அம்மன் வழிபாட்டு புராணத்தை, வர்ண சூத்திர சாதிய புராணத்தை என அனைத்து புராண வரலாற்றுச் சொற்களுக்கும் தனது சுயமான அர்த்தங்களை ஏற்றுவதனூடாக மாற்று 'ஞாபகம்' (மாற்று வரலாறு) ஒன்றை முன்வைக்கின்றார் அயோத்திதாசர். இந்த ஞாபகமானது எம்மால் தொடர்ந்து மறக்கப்பட்டு வருவதற்கு பார்ப்பனிய ஞாபகங்கள் எமக்குள் நினைவுகளாக தொடர்ந்தும் மனங்களில் அடுக்கப்பட்டுக் கொண்டே வருகிறது. இந்த ஞாபகங்களை தூண்டுவதில் தமிழகத்து 'பெரியாரிசம்' காத்திரமான பங்கை தொடர்ந்து செய்தும் வருகிறது.

பெரியாரியத்தையும் நவீன இந்தியாவின் சிந்தனையாளர்களையும் அவர்களது தனித்துவமான முக்கியத்துவங்களையும் அறியும் ஆவல் கொண்ட தலித்திய ஆர்வலர்களுக்கு நான் ராமச்சந்திர குஹா வின் 'நவீன இந்தியாவின் சிற்பிகள்' எனும் நூலை அறிமுகப்படுத்துகின்றேன். அதில் புரட்சிகர சீர்திருத்தவாதி ஈ.வே.ராமசாமி எனும் தலைப்பில் 1927ல் திருநெல்வேலி மாவட்டத்தில் பெரியார் ஆற்றிய உரை பதிவாகியிருக்கிறது. அதில் ஒரு பகுதி இவ்வாறு அமைந்திருக்கும்: "நான் சொல்லுவது உங்களுடைய அறிவு, ஆராய்ச்சி, யுக்தி, அனுபவம் இதுகளுக்கு ஒத்து வராவிட்டால் தள்ளிவிடுங்கள். ஒத்து வந்தால் காரியத்தில் கொஞ்சமாவது செய்ய முற்படுங்கள். உங்கள் சகோதரர்களுக்கும் இதைச்சொல்லி அவர்களையும் ஈடேற்றுங்கள் என்றுதான் நான் சொல்லுகிறேன். இப்படிச் சொல்லுவதனால் எனக்கு இதில் ஒரு சுயநல பலனும் இல்லை என்பதையும் அறியுங்கள். நான் எந்த மதக்காரனுக்காவது ஏஜெண்டு அல்ல, அல்லது நானும் எந்த மதக்காரனுக்காவது அடிமையும் அல்ல. அன்பு, அறிவு என்கிற இரண்டு தத்துவத்திற்குள் மாத்திரம் ஆட்பட்டவன். ஆதலால் எனக்கு பட்டதை உங்கள் முன் சொல்வதில் எனக்கு ஒரு கடமையும், ஆசையும், மகிழ்ச்சியும் இருப்பதால் சொல்லுகிறேன். மற்றபடி அதைப் பற்றிய உங்கள் கடமைகளை உங்கள் சுதந்திரத்திற்கே அதாவது உங்கள் பகுத்தறிவுக்கே விட்டு விடுகின்றேன்.

மதம் என்பது நாட்டிற்கோ ஒரு சமூகத்திற்கோ ஒரு தனி மனிதனுக்கோ எதற்காக இருக்க வேண்டியது? ஒரு தேசத்தையோ, சமூகத்தையோ கட்டுப்படுத்தி ஒற்றுமைப்படுத்துவதற்காகவா, பிரித்து வைப்பதற்காகவா? அது ஒரு மனிதனின் மனச்சாட்சிக்கு கட்டுப்பட்டதா? அல்லது ஒரு மனிதனின் மனச்சாட்சியை கட்டுப்படுத்தக்கூடியதா? மனிதனுக்காக மதமா அல்லது மதத்துக்காக மனிதனா? என்பவைகளை தயவு செய்து யோசித்துப் பாருங்கள்". எனும் பெரியார் உரை என்பது நாம் வாசிப்பதற்கு அல்ல. சிந்திப்பதற்கு. இதைப்போன்ற பெரியாரின் சிந்தனைக் கட்டுரைகளை தேர்வு செய்து தமிழகப் 'பெரியாரியம்' தொகுத்திருக்கவேண்டும். துரதிருஸ்டவசமாக

பெரியார் தனது சமகாலத்து நெருக்கடிகளை எதிர்கொண்டு பேசிய அனைத்தையும் தமிழகத்து 'பெரியாரிசம்' புனிதமாக நிலைநிறுத்துவதோடு மட்டுமல்ல சாதாரண மக்களின் நம்பிக்கைகளுக்கு எதிரானவராகவும் பெரியாரை தமிழகத்து மண்ணில் மிக ஆழமாக ஊன்றிவிட்டது. பெரியார் சுய பிரக்ஞையில் ஒரு கடவுள் மறுப்பாளர் (Atheist) சமூகப் பிரக்ஞையில் 'மனித மன-அலைக்கழிப்புகளில்-நம்பிக்கைகளில்' (Agnostic) இருந்தும் சிந்திக்கக்கூடியவர். இது குறித்த விபரத்தை இறுதியில் பார்க்கலாம்.

அயோத்திதாசரின் 'தாழ்ந்து போனவர்கள்' 'தாழ்த்தப் பட்டவர்கள்' எனும் சொற்களின் புரிதலுக்கான எனது சுய அனுபவத்தையும் இங்கு நான் பகிர்ந்து கொள்ள விரும்புகின்றேன். சோ.தர்மனின் 'கூகை' நாவலின் கதைச் சித்தரிப்பில் உலாவும் பிரதான சமூகங்களாக பள்ளர், பறையர், அருந்ததியர் உள்ளனர். அவர்களின் வாழ்வியல் துயரங்களையும், சோகங்களையும் எழுத்துக்களால் வாசக மனங்களுக்குள் செலுத்திவிடும் ஆற்றலைக் கொண்டிருக்கிறது 'கூகை' நாவல். நாவலின் காலமோ நிலவுடைமையின் பிற்-காலம். இதில் பள்ளர் சமூகமானது நிலவுடைமை ஆதிக்கத்தின் மீது தனது சுயத்தை இழக்காது ஜமீன் அதிகாரத்தை எதிர்த்து நின்று தன் பொருளாதார நிலையை மேம்படுத்திக் கொள்கிறது. அருந்ததிய சமூகமோ சாதிய சமூக ஒடுக்குமுறைக்குள் தனது சுயத்தை இழப்பதன் ஊடாக ஜமீன் அதிகாரத்தின் மீது தனது எதிர்ப்பை அதனால் செலுத்த முடியாதிருக்கிறது. எனவே அது தனது சுயத்தை ஜமீன் அதிகாரத்தின் மீது இழந்து நிற்கிறது. தன்னை தானே தாழ்த்திக் கொள்ளவும்; பழக்கப்படுத்தி வருகிறது. மாறாக பள்ளர் சமூகமானது தனது சுயத்தை இழக்காததால் தானாக அச்சமூகம் தாழ்ந்து நிற்கவில்லை. ஜமீன் மேலாதிக்க சமூகத்தாலுமே தாழ்த்தப்படுகிறது. எமது யாழ்ப்பாணத்திலும் இந்த மாறுதலை எனது சிறு வயதிலேயே அவதானித்திருக்கின்றேன். யாழ் நகரில் தோடம்பழ வியாபாரம் செய்பவர்கள் ஒரு சமூகத்தை சேர்ந்தவர்களாகவே அறியப்படவர்கள். அவர்களை உயர்-சாதியினர் எனப்படுவர்கள்; மிகவும் அச்சத்துடன்தான் எதிர் கொள்வார்கள். காரணம் தோடம்பழ வியாபாரம் செய்யும் சமூகத்தவர்கள் தம்மீது திணிக்கப்படும் சாதிய மேலாதிக்க ஒடுக்குமுறைகளை தமது வன்முறை எதிர்ப்பு நடவடிக்கைகளாலேயே எதிர்கொண்டு வந்தனர். இதனாலே அச்சமூகத்தின் மீது பிற மேலாதிக்க சாதிய சமூகத்தினர் அச்சம் கொண்டிருந்தனர். எனவே அவர்களும் தாழ்ந்து போனவர்கள் அல்ல. பிற சாதிய மேலாதிக்க சமூகங்களின் மனங்களில் மட்டுமே தாழ்த்தப்பட்டவர்களாக இருக்கிறார்கள்.

'பார்ப்பனர் முதல் பறையர் வரை' எனும் நூலானது பிரஞ்சு பின்நவீன சிந்தனையாளர்களின் வாசிப்பும் அதனை உள்வாங்கிய சிந்தனைப் பரிமாணத்திலும் அயோத்திதாசரை அணுகியிருக்கும் விதம் புரிகிறது. தர்மராஜ் அவர்கள் ஒருவகையில் அயோத்திதாசரை ஏற்றுக்கொள்பவரரகவும், மறுப்பவராகுவம் இருப்பதை உணரமுடிகிறது. அதுவே ஒரு நிறைவான விமர்சனப் பக்குவம். இவ்வாறாகவே நாம் எதிர்கொள்ளும் அனைத்து சிந்தனையாளர்களையும் ஆய்வுக்குட்படுத்த வேண்டும். ஆயினும் மிக முக்கியத்துவம் வாய்ந்த இந்த நூலின் இறுதியான எதிர்பார்ப்பென்பது ஒரு ஆளுமையிடமிருந்து அனைத்துக்குமான ஒரு 'முழுமையை' எதிர்பார்த்த ஏமாற்றம்!

பிறதொன்றின் மீதான ஏற்பும், மறுப்பும் நிகழ்வதே எவ்வித சார்பு நிலையற்ற சுய சிந்தனைச் செயல்பாட்டு விமர்சனமாக கொள்ளலாம்.

இந்த நூலின் முற்பகுதியில் நான் கண்டுகொண்ட தர்மராஜ் அவர்களின் 'சுயம்' தன்னை பிறிதொன்றோடு இணைக்கும் சார்புக் கருத்தியலுடன் நிறைவடைகிறது இவ்வாறு:

"அயோத்திதாசரின் பௌத்தத் திட்டத்தில் நாம் சந்திக்கக்கூடிய மிகப் பெரிய சிக்கல் இது தான். வெகுஜன மக்கள் திரள் பழக்கத்தின் காரணமாக பௌத்தர்களாக வாழ்கிறார்கள் என்று நிரூபிப்பது மட்டுமே அவருக்கு போதுமானதாக இருந்து விடுகிறது. நவீனத்துவ பயணத்தில் அவ்வெகுஜனம் என்ன செய்ய வேண்டும் என்ற கேள்விக்கு அவரிடம் எந்தப் பதிலும் இல்லை". இவ்வாறு சொல்வதோடு: "ஆடி மாதம் பொங்கி வரும் புதுப்புனல் கொண்டு வரும் நோய்களுக்கு வேப்பிலையே மருந்து என்றால் வெகுஜனங்களுக்கு நிச்சயமாய் விளங்கப்போவதில்லை என்று அவர் நம்புகிறார். அவர்களுக்கு வேப்பிலையில் 'அம்மா' உறைந்திருக்கிறாள் என்று சொல்வதே சாஸ்வதம். அவர்களை பழக்கப்படுத்துவதே மிகச் சரியான வழிமுறை. வேட பிராமணர்களுக்கும் பூர்வ பௌத்தவர்களுக்கும் இந்த விஷயத்தில் எந்தவொரு வேறுபாடும் இல்லை. இரண்டு பேரும் வெகுஜனங்களைப் பகுத்தறிவிற்கு அப்பாற்ப்பட்டவர்களாகவே கருதுகின்றனர். அவ்விருவரையும் பொறுத்தவரை இச்சமூகத்தின் மொத்த முரணும் பார்த்தலுக்கும் பறைதலுக்குமானது தான்". எனும் புரிதலூடாக பார்ப்பனர்கள் எவ்வாறு விஷேடமானவர்களாக கட்டமைக்கப்பட்டிருக்கின்றார்களோ அவ்வாறாகவே பூர்வ பௌத்தர்கள் என்பவர்களையும் ஒரு விஷேடமானவர்களாக அயோத்திதாசர் கட்டமைத்திருக்கின்றார் என்பதான முடிவிற்கும் தர்மராஜ் வந்துவிட்டார். எனது வாசிப்பில் அயோத்திதாசர் பேசும் யதார்த்த பிராமணர்கள் எனப்படுவோர் சாதாரணமானவர்களுக்கு நேர் எதிரானவர்களோ அல்ல. சாதாரணமானவர்களும் பஞ்சசீல கொள்கையில் தேறி முதிர்ந்து வருபவர்களையே யதார்த்த பிரமாணர்கள் என்பதாக புரிந்து கொள்ள முடியும். அவர்களையே பூர்வ பௌத்தர்களாகவும் கருதலாம்.




தர்மராஜ் அவர்கள் அயோத்திதாசர், அல்லது அவர்காலத்து பௌத்த சங்கங்களின் சமூக செயல்பாடுகளை மதங்களோடு இணைத்தும், திராவிட இயக்க காலத்து செயல்பாட்டை சமூக வடுதலை சார்ந்த செயல்பாடாகவும் இவ்வாறு காண்கிறார்: "இருபதாம் நூற்றாண்டு பௌத்த சங்கங்கள் செய்யத் தவறியதை திராவிட இயக்கங்கள் செய்து காட்டின. மத அமைப்புக்களுக்கும் விடுதலை இயக்கங்களுக்குமான ஆதார வேறுபாடு இது தான்- வெகுஜனம் அசாதாரணமானது என்றும், பகுத்தறிவோடு செயல்படக்கூடியது என்றும் விடுதலை இயக்கங்கள் நம்பின. மதங்கள் அப்படி நம்புவதில்லை". என்பதோடு இந்த பூர்வ பௌத்தனின் கல்லறை' எனும் பகுதியும், நூலும் நிறைவுபெறுகிறது. இது அயோத்திதாசர் மதத்தை முதன்மைப் படுத்துவதாகிய புரிதலால் விலக்கப்படுகிறாரா! திராவிடமும், பெரியாரிசமும் அதனிடத்தில் நிரப்பப்படுகிறதா! எனும் குழப்பம் வாசிப்பில் நிகழ்ந்து விடுவதை தவிர்க்க முடியவில்லை.

அயோத்திதாசரின் பிரதிகளில் அதிகமாக நான் கண்டுகொண்டது மதங்கள் மீதான கடும் விமர்சனங்களை இவ்வாறாக: "மதத்தைக்கொண்டுஞ் சாதியைக் கொண்டும் சீவனஞ்செய்யுங் கூட்டத்தார் பெருந்தொகையாய் இருக்கின்றபடியால் சாதிகளுஞ் சமயங்களுமற்று தேசஞ் சீர்பெறப்போகிறதில்லை. இத்தேசத்தோர் சாதியையுஞ் சமயத்தையும் எதுவரையில் துலைக்காமல் இருக்கின்றார்களோ அதுவரையில் தேசம் ஒற்றுமெய் அடையப்போகிறதும் இல்லை. இவர்களுக்கு சுயராட்சியங் கிடைக்கப்போகிறதும் இல்லை. சுயராட்சியமும் சுதேச சீர்திருத்தமும் அடையவேண்டுமானால் இத்தேசத்தின் சுயமார்க்கம் எவை என்றறிந்து அதன்மேறை நடப்பார்களாயின் சுதேச சீர்திருத்தம் உண்டாகி சுயராட்சியமுங் கிடைக்கும்". (அ.சி.தொகுப்பு-1 பக்கம் 35) அயோத்திதாசர் சிந்தனைகள் தொகுப்பு மூன்றில் கேள்வி பதில் பகுதியில் கடவுள் மதம் என்பதற்கான பாகுபாட்டை இவ்வாறு விபரிக்கின்றார்:

”வினா: மனிதனைக் கும்பிடுவோர் பௌத்தரும் சுவாமியைக் கும்பிடுவோர் யாங்களுமென்று கூறியதோர் மொழி என்னை சந்தேகத்திலாழ்த்தி யிருக்கின்றது. அவற்றை விளக்கி இவ்வடியேனை புனிதனாக்க வேண்டும்.-வீ. பாலசுந்திரம், மதுரை-

விடை: அன்பரே! தாம் வினாவிய சங்கைவீணரிடம் வாதிட்ட விழலாய சங்கையேயாம். அதாவது பன்றிகள் முன்னிலையில் முத்துக்களைப் போடாதீர்களென்னும் மகாஞானிகளின் நீதிமொழிகளை சற்று கவனித்தல் வேண்டும். குடியர்களும் விபச்சாரிகளுமானோர் முன்னிலையில் குடிக்கலாகாது, விபச்சாரஞ் செய்யலாகாது என்னும் முக்கிய போதனையாம் சத்திய தன்மத்தைப் போதிப்பதாயின் அவர்கள் செவியில் நுழையுமா, இதயத்தில் பதியுமா, ஒருக்காலும் பதியாவாம். ஏனென்பீரேல் சுவாமி சுவாமி என்னும் மொழியைச் சொல்லிக்கொண்டு பொய் சொல்லும்போது சுவாமி நம்மெப்பார்ப்பார், களவு செய்யும்போது சுவாமி நம்மெப்பாப்பார், விபச்சாரஞ் செய்யும்போது சுவாமி நம்மெப்பாப்பார், கள்ளுக்கடைக்குள் நுழையும்போது சுவாமி நம்மெப்பார்ப்பாரென்னும் உறுதியும் பயமுமின்றி வெறுமனே பொய்யைச் சொல்லித்திரியும் நம்பிக்கையற்ற மதங்களைச் சேர்ந்தவர்களாதலால் பொய்யைச் சொல்லி மெய்யை பிரழவைப்பது அவர்கள் சுவாபமாகும். மனிதனைத் தொழுவதும் சுவாமியைத் தொழுவது மாய வித்தியாசத்தை சற்று வினவுவீராயின் அவர்களது வீராப்பு தன்னிற்றானே அடங்கிப்போம். அதாவது இரிஷி பத்தினிகளைக் கற்பழித்து கோசமற்ற சுவாமியைக் கும்பிடுவதினும் விபச்சாரஞ் செய்யாதீர்களென்று போதித்த மனிதனைக் கும்பிடுவது மேலன்றோ, கோபிகாஸ்திரிகளின் கற்புகளை அழித்துவிட்டு யாமொன்றுமறியேனென்று பொய்யைச் சொன்ன சுவமியை கும்பிடுவதிலும் பொய்யை சொல்லாதீர்களென்று கூறியுள்ள மனிதனைக் கும்பிடுவது மேலன்றோ, கோடி கோடியாக மக்களைக் கூட்டி கொல்லவைத்து தானுங் கொன்று தன் தம்பியைக் கொல்லுகின்றான் அவன் கையை வாங்கி கொல்லுமென்று கூறிய கொலைபாதக சுவாமியைக் கும்பிடுவதினும் சீவயிம்சை செய்யாதீர்கள், கொலைபாதமேற்கா தீர்களென்று கூறியுள்ள மனிதனைக் கும்பிடுவது மேலன்றோ அன்னமிட ஆரம்பித்த அன்னியன் மனவியை பெண்டாள வாரம்பித்த சுவாமியைக் கும்பிடுவதிலும் அன்னியன் தாரத்தை இச்சியாதீர்கள், அன்னியன் தாரத்தையேறெடுத்தும் பாராதீர்களென்று கூறியுள்ள மனிதனைக் கும்பிடுவதுமேலன்றோ. வீடுவீடாய்த் திருடித்தின்னும் சுவாமிகளைக் கும்பிடுவதிலும் திருட வேண்டாம், அன்னியர் பொருளை அபகரிக்கவேண்டாமென்று கூறியுள்ள மனிதனைக் கும்பிடுவது மேலன்றோ. இத்தகையப் பொய்யுங் களவும் விபச்சாரமும் நிறைந்த சுவாமிகளென்று கூறி மாடுகளையுங் குதிரைகளையும் மனிதர்களையும் கருணையின்றி நெருப்பிலிட்டுச் சுட்டுத்தின்ற படுபாவக் கூட்டத்தோர் மதத்திற் சேருவதுடன் சீவகாருண்ய பெருக்கத்தையும் அன்பின் வளர்த்தியுள்ள புத்த சங்கத்திற் சேருவது மேலன்றோ….”. (பக்கம்.93) இவ்வாறு பௌத்த பஞ்ச சீல ஜீவகாருண்ய நோக்கில்தான் மனிதர்களிடம் தெய்வைத்தை காணும் சாத்தியத்தை நம்புகின்றார். எனவேதான் ஜமீன்தார் காலத்து அதிகாரச் சமூகத்தில் நிலவிய சாதிய தீண்டாமை கொடூரங்களில் இருந்து தலித் சமூகத்தை குளிர்மைப்படுத்தும் மனித-

தெய்வமாக எலிசெபத் மகாராணியை, ‘குயின் விக்டோரியாளம்மன்’ எனும் குறியீடாக வெகுஜன மக்கள் (சாதாரண மக்கள்) மத்தியில் அறிமுகப்படுத்துகிறார் என புரிந்து கொள்ள முடிகிறது.

“வேப்பிலையே மருந்து என்றால் வெகுஜனத்திற்கு நிச்சயமாய் விளங்கப் போவது இல்லை என்று அவர் நம்புகிறார். அவர்களுக்கு வேப்பிலையில் ‘அம்மா’ உறைந்திருக்கிறாள் என்று சொல்வதே சாஸ்வதம். வேட பிராமணர்களுக்கும் பூர்வ பௌத்தர்களுக்கும் இந்த விஷயத்தில் எந்தெவொரு வேறுபாடும் இல்லை. இரண்டு பேரும் வெகுஜனங்களை பகுத்தறிவிற்கு அப்பாற்பட்டவர்களாகவே கருதுகின்றனர்”.

இவ்வாறான முடிவுக்கு வரும் தர்மராஜ் அவர்களும் ‘பொரியரிசம்’ பேசும் பகுத்தறிவுடன் நெருக்கமாயிருப்பதாகவே அறியமுடிகிறது. பெரியாரியத்திடமிருந்து நாம் எவ்வாறான பகுத்தறிவை பிரித்தறிவதென்பதற்கு நான் ராமச்சந்திர குஹா வின் தொகுப்பில் உள்ள பெரியாரின் கட்டுரையை முன்பே அறிமுகப்படுத்தியிருந்தேன். பெரியார் தனது சுய பிரக்ஞையில் கடவுள் மறுப்பாளராகவும் (Atheist) சமூகப் பிரக்ஞையில் மனித ‘மன அலைக்கழிப்புகளில்-நம்பிக்கைகளில்’ (Agnostic) இருந்தும் சிந்திக்கக்கூடியவர் ஆகவும் தெரிகிறார் என்பதை.

இந்த சுய பிரக்ஞை என்பதற்கும் சமூக பிரக்ஞை என்பதற்குமான அரிய சிந்தனையை லியோ.டால்ஸ்டாயின் ‘போரும் அமைதியும்’ (டி.எஸ்.சொக்கலிங்கம் மொழி பெயர்ப்பு) எனும் நாவலின் தொகுப்பு இரண்டில் பார்க்கலாம். ஒரு தனி மனிதன் தனது சொந்த வாழ்க்கையில் மேற்கொள்ளும் காரியத்திற்கான தனது சுய பிரக்ஞையை எவ்வகையிலும் பிரயோகித்து சாதிக்கமுடியும். சமூகப் பிரக்ஞையில் அவ்வாறு சாத்தியமில்லை. நிரந்தரமானது, ஒன்றை ஒன்று சார்ந்திருப்பது, பிறருடைய அனுபவங்கள், அனுமானங்கள் என்பன தனி மனிதனின் சுய பிரக்ஞைக்கு அப்பாற்பட்டது. இதற்கான ஒரு உதாரணத்தை ‘போரும் அமைதியும்’ நாவல் இவ்வாறு முன்வைக்கிறது: ”ஒரு ஆப்பிள் பழுத்தவுடன் கீழே விழுகிறது. ஏன் அது கீழே விழுகிறது? பூமியின் மீது அதற்குள்ள கவர்ச்சியா? அதன் தண்டு வாடிப்போன காரணமாகுமா? சூரிய வெப்பத்தால் அது காய்ந்து போயிற்றா? அதன் பளு அதிகமாயிற்றா? காற்று அதை ஆட்டியதா? அல்லது அதன் கீழே நிற்கும் பையன் அதைத் தின்ன வேண்டுமென்று விரும்பியது காரணமா?

இவை ஒன்றும் காரணமல்ல எல்லா முக்கியமான, ராசாயன, பஞ்ச பூத சமபவங்கள் நேரிடுவதற்கெல்லாம், பல நிலைமைகள் ஏக காலத்தில் ஒன்று சேருவதே காரணமாகும். ஜீவ அணுத் தசைகள் கெட்டுப்போனதாலேயே, ஆப்பிள் கீழே விழுந்தது என்று தாவர சாஸ்திரி சொல்லுகிறார். அவர் சொல்லுவதும் சரிதான். ஆனால், அதே மாதிரி தான் தின்பதற்காகவே அதை வேண்டுமென்று பிராத்தனை செய்ததனால்தான், அந்த ஆப்பிள் கீழே விழுந்தது என்று அந்த குழந்தை சொல்வதும் சரிதான்… பெரிய மனிதர்கள் என்று சொல்லபடுகிறவர்கள், அந்தச் சம்பவங்களுக்கு பெயர்கள் கொடுக்கும் வெறும் அடையாளச் சீட்டுக்கள். அடையாளச் சீட்டுக்களைப்போலவே அந்தச் சம்பவத்திற்கும் அவர்களுக்கும் உள்ள தொடர்பு மிகுந்த

அற்பமானதாகும்”.

நெப்போலியன் காலத்து ஐரோப்பிய யுத்தம் தொடர்பான செய்திகள் பல்வேறுவிதமாக பார்க்கப்பட்டது. ரசிய சக்கரவர்த்தி அலெக்சான்டர் ‘அதை’ செய்ததால்தால் யுத்தம் ஆரம்பமானது. இல்லை நெப்போலியன் ஆஸ்திரியாவை கைப்பற்றியதால்தான் யுத்தம் ஆரம்பமானது. இவ்வாறாக பல்வேறு சம்பவங்களை, காரண காரியங்களை தொடர்பு படுத்திய வகையில் வரலாற்று ஆசிரியர்களும் பல விதமான மாறுபட்ட கருத்துக்களை முன்வைத்தார்கள். இதை சமூகப் பிரஜை ஒருவன் எவ்வாறு எதிர்கொள்வான்? தனக்கு நெருக்கமான, ஏற்புடையதான, நம்பிக்கையான ஒரு தகவலையே ஆதாரமாக எடுத்துக்கொள்வான். இதில் பல்வேறு சமூக தரப்பினரும் தமது நம்பிக்கைக்கு நெருக்கமான கருத்தோடு இணைந்து கொள்கின்றனர். இதனையே சுய பிரக்ஞையில் தனித்துவமாக இருப்பவர் எவராயினும் சமூகப்பிரக்ஞை எனும்போது மேற்படியான சிக்கல்களை பல்வேறு நிலைகளோடும் பொருத்திப் பார்க்க வேண்டி வருகிறது. இதற்கான ஒரு உதாரணமாகவே ஆப்பிள் விழும் தகவலை லியோ. டாஸ்டாய் மிக தெளிவாக விபரிக்கின்றார்.

இதனூடாக சமூகப் பிரக்ஞை என்பது சுய பிரக்ஞையில் இருந்து வேறுபட்டும், சிக்கலாகவும் தோன்றுகிறது. எனவே இவ்வாறான சமூகப் பிரக்ஞையை எதிர்கொள்ளும் வேறுபாடுகளையே நாம் சிந்தனையாளர்களிடமும் சமூக செயல்பாட்டாளர்களிடமும் தேட வேண்டியுள்ளது. ”வேப்பிலையில் ‘அம்மா’ உறைந்திருப்பதென அயோத்திதாசர் முன்வைப்பதும், மனிதனுக்காக மதமா அல்லது மதத்துக்காக மனிதனா? எனும் பெரியாரின் பார்வையும் அவர்களது சமூகப் பரக்ஞையோடு இணைந்தது. அந்தவகையில் இருவரும் ‘Agnostic’. அவர்கள் இருவரதும் சுய பிரக்ஞை மட்டுமே கடவுள் மறுப்பாகும். ‘பெரியாரிசமே’ தனது சுய பிரக்ஞையை, சமூகப்பிரக்ஞையோடு இணைத்து தொடர்ந்தும் சிக்கலாக்கி வருகிறது.

அயோத்திதாசரின் மாற்று வரலாற்றுப் புனைவின் தொடர்ச்சியின்மைக்கு பலவீனமாக, அது தன்னை பண்பாட்டு தளக்கிற்குள்ளாகவே மட்டுப்படுத்திக் கொண்டதும் ஒரு காரணமாக இருக்கலாம். அது தனது கருத்தை வெகுஜன மட்டத்தில் அரசியல் அமைப்பு வடிவத்தில் மேற்கொண்டதாகவும் அறியமுடியவில்லை. மாறாக திரவிடமானது தனது கருத்து வலிமையை அரசியல் அதிகார முனைப்போடும் வெகுஜன மக்களை உள்வாங்கும் வகையில் அமைத்துக் கொண்டது. இவ்வாறு அரசியல் மயப்படுத்தும் தன்மை இல்லாத அயோத்திதாசர் அவர்களின் செயல்பாடு காரணமாகவே தமிழகத்தில் இடஒதுக்கீடு எனும் கருத்தியலை பேசிய முன்னோடி எனும் வரலாற்று ‘ஞாபகமும்’ இல்லாது போனது. 1909ம் ஆண்டே அவர் இட ஒதுக்கீடு சம்பந்தமாக முன்வைத்த கருத்தை நாம் இவ்வாறு காணமுடிகிறது: ”இவ்வகையான கோரிக்கையை சரிவர நிறைவேற்றி சகல குடிகளையும் சமரசமாக இப்பிரிட்டிஷ் ராஜரீகத்தில் சகத்திற்கும், ஆட்சிக்கும் கொண்டுவரும்படியான சட்டத்தை மகா கனந்தங்கிய மந்திரி லார்ட் மார்லியவர்கள் கொண்டு வந்திருக்கின்றார். அவற்றை நமது கருணைதங்கிய கவர்னரவர்கள் அடியில் குறித்துள்ளவாறு இராஜாங்க ஆலோசனை

சங்கங்களிலும், முநிசபில் சங்கங்களிலும், ராஜாங்க உத்தியோக சாலைகளிலும், இராணுவ வகுப்பிலும், வைத்திய இலாகாக்களிலும்,போலீஸ் உத்தியோகங்களிலும், இரயில்வே இலாகாக்களிலும், கல்விலாக்காக்களிலும், அந்தந்த இலாக்காவின் மொத்தத் தொகைப்படிக்கு இவ்வகுப்பார் பிரிவனைப்படி சேர்த்து விடுவார்களானால் சகல சாதியோரும் சீரும் சிறப்பையும் அடைவார்கள். பிரிட்டிஷ் ஆட்சியும் நீடித்து சுகநிலைபெறும்.

இராஜாங்க ஆலோசனை சங்கத்துள் நூறு பெயர் நியமனமாக வேண்டுமானால் சாதிபேதமற்ற திராவிடர்களாம் இந்தியர்கள் 25-பெயரையும், சாதிபேதமுள்ள இந்தியர்கள் 25-பெயரையும், முகமதியர்கள் 25-பெயரையும், புருஷியர்கள் 13-பெயர்களையும் நேட்டிவ் கிறிஸ்டியன்ஸ்கள் 12-பெயர்களையும் நியமித்து ஆலோசனைகளை நிறைவேற்றுவதனால் சகல குடிகளும் சுகம் பெறுவார்கள்" (அ.சி.1-பக்கம்103). இவ்வாறான அயோத்திதாசரின் அபிப்பிராயத்தை நாம் இட ஒதுக்கிட்டிற்கான முன்மொழிவு அல்ல என மறுத்திட முடியுமா?

சாதிய ஒடுக்குமுறைகளுக்கு எதிரான அயோத்திதாசரால் பண்பாட்டுத்தளங்களில் ஏற்படுத்திய அதிர்வுகள் கண்டுகொள்ள முடியாதமைக்கு (மறதிக்கு) நிலைத்திருந்த ஞாபகங்களே (பார்ப்பன புராணப் புனைவுகள்) காரணமாக அமைந்திருக்கிறது. ‘இந்திரதேசம்’ எனும் மாற்றுப் புனைவை ஞாபகமாக நிலைநிறுத்த அயோத்திதாசர் மேற்கொண்ட முயற்சி பலனற்றுப் போனது.

நான் நினைக்கிறேன் ஸ்டாலின் ராஜங்கம், தர்மராஜ் போன்றவர்கள் அயோத்திதாசரை மாற்று வழியில் பொதுவெளிக்கு அழைத்து வருவதற்கு முன்பாக தகுதியான ஆளுமைகள் தமிழகத்தில் இருந்திருக்கிறார்கள். அயோத்திதாசரை இவ்வாறு ‘மெய்நிகர்’ உலகில் அறிமுகப்படுத்தும் தகுதி உள்ளவர்களாக முன்பு தலித்தியம் பின்நவீனத்தும் குறித்து பேசியவர்களாகவும் அறியப்பட்டவர்கள்; அவர்கள். ஒரு சிந்தனையாளனாக தன்னை செழுமைப்படுத்திக் கொண்டிருக்கும் ஒருவர் நவீனத்துவத்திலிருந்து பின் நவீனத்தை மதிப்பிட்டு முன்னகர்பவராகவே இருப்பார்கள். அவ்வாறான பிரான்சின் சிந்தனையாளர்கள் பலர் உள்ளனர். தர்மராஜ் தனது நூலின் பகுதித் துணைச் சிந்தனைக்கு பயன்படுத்தியிருப்பவர்கள் அனைவருமே பிரான்ஸ் தேசத்தவர்கள். அதில் அலன் பாத்யோ (Alain Badiou) மார்க்சிய சிந்தனையில் மிக வலுவாக ஊறியிருந்தவர். இருப்பினும் புதிய உலக ஒழுங்கிற்கான கொம்யூனிசம் ஒன்றிற்காக ‘மன்றாடிக்கொண்டிருந்தார்’. இருப்பினும், ஒரு வருடத்திற்கும் மேலாக நடைபெற்ற மஞ்சள் அங்கி தரித்த அரச எதிர்ப்பு போராட்டத்தை இவ்வாறு நோக்கினார்: ‘Cette protestation, me semble-t-il  un orde ancien. Elle me parait mar-que par la nostalgie d’un vieux monde’ (Alain Badiou) (‘என்னைப் பொறுத்தவரையில் இந்த எதிர்ப்பு நடவடிக்கையானது பழைய ஒழுங்கிற்கே திரும்பும் ஒரு நடவடிக்கையாகவே உள்ளது. இது பழைய உலகின் ஏக்கத்திற்கான ஒரு அறிகுறியாகவும் தோன்றுகிறது’-அலன் பாத்யோ-). எனும் பார்வையில் தாராளவாத உலகை மாற்று வழியில் சிந்திப்பதற்கு தயாரானார். ஆனால் தமிழகத்தில் பின்-நவீனத்தை அறிமுகப்படுத்தியவர்கள் பின் நவீன சிந்தனையை உள்வாங்கி இணைந்து வாழும் (Coexistence) முன்னகர்வு சிந்தனைக்கு

அவர்களால் நகரமுடியவில்லை. பின்-நவீனத்தை அறிமுகப்படுத்தியதோடு நிற்காது தமது பழய இருப்பிடத்திற்கே (முற்போக்கு-இடதுசாரி-முகாம்) மீண்டும் சென்று அமர்ந்து கொண்டனர்.

‘பார்ப்பனர் முதல் பறையவர் வரை’ எனும் நூலானது அயோத்திதாசரை புரிந்து கொள்ளவும் அவரது சிந்தனைகளை அறிந்து கொள்ளவதற்குமான நூல் மட்டும் அல்ல. இந்திய-தமிழகத்து சாதிய இருப்பை உலுப்பிய சிந்தனையாளர்கள் அனைவரையும் ஒன்றுடன் ஒன்றாக கைகோர்த்து நிற்கும் ஒரு காட்சியையே எனக்கு வழங்குகிறது. சங்கிலிக் கோர்வையாக அதன் ‘கண்ணிகள்’ எப்போதும் ஒன்றை ஒன்று விலகாது இணைந்திருக்கும்.

அயோத்திதாசரின் பூர்வ பௌத்தன் எனும் சொற்பொருளானது ஒரு ‘மத கல்லறை’, அடக்கம் செய்யப்பட வேண்டியது எனும் முடிவிற்கு வந்தடைகிறது பார்ப்பனர் முதல் பறையர் வரை’. அதில் தான் தேடும் ’முழுமையான’ சிந்தனையை திராவிட இயகத்திடமும் பெரியாரிடமும் மட்டுமே காண்பதாகவும் புலனாகிறது. ‘பூர்வ பௌத்தன்’ எனும் சொற்பொருளை ஒரு மிதக்கும் குறிப்பானாக உள்வாங்கி எம்மால் அதன் சொற்பொருளை பிறிதொரு அர்த்தத்திற்குள் ஏன் நகர்த்திச் சிந்திக்கமுடியாது? அதற்கான சான்றுகள் பல அயோத்திதாசர் சிந்தனைகளில் பதிவாகியும் இருக்கிறது! அந்த பூர்வ பௌத்தனின் கல்லறையில் ஒரு மாற்று வரலாறு உறங்கிக் கொண்டிருக்கிறது. அதை சமூகத்தின் ‘ஞாபகங்களாக’ மக்கள் மனங்களில் உறைய வைப்பதற்கான புதிய சிந்தனையாளர்களை எதிர்பார்த்திருக்கிறது… காலம்.

இந்திய சிந்தனையாளர்கள் அனைவரும் ஒருவரை ஒருவர் கைகோர்த்து நிற்பவர்கள். சில தருணங்களில் ஒருவர் மற்றவரிடமிருந்து மாறுபடுவர்களாகவும் பல தருணங்களில் இணைந்து

கைகோர்த்து நிற்பவர்களாகவுமே எம்மால் அவதானிக்க முடியும். பெரியார், ஆயோத்திதாசர், அம்பேத்கர், இரட்டைமலை சீனிவாசன், மோகன் கரம்சந்த் காந்தி, என பலரும் ஒருவரை ஒருவர் கைகோர்த்து நிற்பவர்கள்.

ஒரு சிந்தனையாளனிடமிருந்து நாம் ‘முழுமை’யை எதிர்பார்த்தால், அவரிடமே நாம் எதிர்கொள்ளும் சிக்கலுக்கான தீர்வின் ’முழுமை’யை நாம் கண்டுகொண்டால், அதன்பின் குறித்த சிக்கலுக்கான புதிய சிந்தனையாளர்கள் எமக்கு புலப்படப் போவதில்லை! அனைத்துக்குமான தீர்வை ஒருவர் வழங்கிவிட்டால் பின்வு வருபவர்களுக்கு சிந்திப்பதற்கு அவசியமில்லை. தங்கள் தங்கள் புரிதலுக்கு ’முழுமை’யாக சிந்தித்தவர்களை தொடர்ந்து பிரச்சாரம் செய்து கொண்டிருப்பதே போதுமானதாக இருக்கும். பெரியாரை, அயோத்திதாசரை, அம்பெத்கரை, கார்ல் மார்க்சை என எமக்கு ’முழுமை’ யானவர்களாக கருதும் ஒவ்வொருவரையும் நாம் பிரச்சாரம் செய்து கொண்டே இருக்கமுடியும். மாறாக நாம் கடந்து வந்த சிந்தனையாளர்களின் தனித்துவங்களையும் முக்கியத்துவங்களையும் பிரித்தறிந்து எமக்கான சுய சிந்தனையை முன்வைப்பதன் ஊடாகவே புதிய சிந்தனை தோன்றமுடியும்.

21ம் நூற்றிண்டில் நாம் யாரை இந்த சங்கிலிக் கோர்வையில் இணைக்கப் போகின்றோம். இல்லை ஒருவரின் பிரச்சாரராகவே நாம் தொடரப்போகின்றோமா?

‘பார்ப்பனர் முதல் பறையர் வரை’ எனும் நூல் இவ்வாறான கேள்விகளை நோக்கி நகர வைப்பதில் ‘தனது சக்தியை’ எமக்குள் செலுத்துகிறது.

# 16. தாரா ஸ்யாமலீ! இடையில் மூழ்கிய சிங்களச் சொற்கள்: வைதேகி நரேந்திரன்

செப்டம்பர் 2020/பனுவல்கள்

BY வைதேகி நரேந்திரன்

பண்டுகாபய மன்னனால் நிறுவப்பட்ட அனுராதபுர ஆட்சிக்காலத்தில் இந்துக்களின் காவல்தெய்வமாக வழிபடப்பட்ட பத்தினி தெய்வமானது பௌத்தர்களினால் தாராதேவியாக வணங்கப்பட்டது. தாரா, துன்பச்சூழலில் இருந்து தங்களை மீட்பாள் என்பதுவும், அவளால் சந்ததிகள் பெருகும் என்பதுவும் பௌத்தர்களின் நம்பிக்கை. பத்தினித் தெய்வமும் தாராதேவியும் பௌத்த இந்து மார்க்கங்களுக்கு இடையிலான ஊடாட்டத்தின் இன்னுமொரு சான்றாயிருந்ததை இந்தக் கட்டுரைக்கு வெளியே இங்கே கவனித்துக் கொள்ளலாம். தாராதேவியின் சிலை வெண்கலத்தால் வடிக்கப்பட்டிருந்தது. 1815இல் கண்டி இராச்சியம் வீழ்ந்தபோது சிலையை ஆங்கிலேயர்கள் கைப்பற்றுகிறார்கள். 15 ஆண்டுகளுக்குப் பிறகு 1830இல் இலங்கையை நிர்வகித்த பிரிட்டிஷ் ஆளுநர் சேர் ரொபேர்ட் பிரவுண்ட்ரிக், நாலரையடி உயரமான ஒரு வெண்கல பெண் தெய்வச்சிலையை இலங்கையிலிருந்து பிரித்தானிய அருங்காட்சியகத்திற்கு அனுப்பிவைக்கிறார். சிலையோடு அவர் எழுதி அனுப்பிய குறிப்பு பின்வருமாறு இருந்தது.

“இந்த வெண்கலத்தாலான சிலை மட்டக்களப்புக் கடற்கரையோரத்தில் கண்டெடுக்கப்பட்டது”

இதே வெண்கலச் சிலையை ஒருநாள் தற்செயலாக யூரியுப் இணையத்தில் நான் காண நேர்ந்தது. லண்டன் அருங்காட்சியகத்தின் கீழ்த் தளத்தில் ‘ஆசியப்பகுதியில்’ நாலரையடி உயரத்தில், வலது கையில் வரதமுத்திரையோடு, கருணை ததும்பும் கனத்த மார்புகளோடும், வளைந்த இடையுடனும் காட்சியளித்த தாராதேவியின் வெண்கலச் சிலையை சீனர்களும் ஒருசில இலங்கையர்களும் ஆர்வத்தோடு பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

அதே வெண்கலச் சிலையை இன்னொருநாள் நீலநிற அட்டையிடப்பட்ட ஒரு புத்தகத்தில் கண்டேன். அந்தப் புத்தகம் ‘தாரா மகே தெய்துவ’ என்ற சிங்கள நாவலின் தமிழ் மொழிபெயர்ப்பு. சிங்களத்தில் நிஷ்ஷங்க விஜயமான்ன எழுதியிருந்தார். அவருடைய ‘இரண்டாவது மனைவி’ என்ற ஒரேயொரு சிறுகதையைப் படித்திருக்கிறேன். பெண் ஒருத்தியின் செயலும் நினைவும் வித்தியாசமான நுட்பத்துடனும் மண் வாசனையுடனும் எழுதப்பட்ட சிறுகதை அது. அவருடைய இந்த நாவலை தமிழில் அனுஷா சிவலிங்கம் மொழிபெயர்த்திருந்தார். தமிழில் நாவலுக்கு தாரா ஷியாமலீ குமாரசுவாமி என்று பெயர்.

தாரா ஸ்யாமலீ குமாரசுவாமி



...

நாவலின் தலைப்பே வாசகர்களுக்கு அதன் மீதான வரலாற்றுத் தேடலை முன்வைக்கின்றது. வரலாற்றில் பௌத்த- இந்து மார்க்கங்களுக்கிடையிலான தொடர்பின் தொன்மச் சான்றாகக் கருதப்படும் தாராதேவி சிலை தொடர்பாக நாவலில் பேசப்படும் சம்பவங்களை குறியீடாக மாற்றீடு செய்ய முடிகின்றமையினால் இந்த நாவலை ஒரு குறியீட்டு தன்மை கொண்டதாகவும் அணுக முடியும்.

பானுக பண்டார இலக்கிய ரசனையும் தொன்மங்கள் சார்ந்த தேடலும் உடையவன். நாவலின் முதற் பாதியில் அவன் தன்னோடு பாடசாலையில் கூடப்படிக்கும் தாரா என்கிற தமிழ்ப்பெண்ணை நேசிக்கின்றான். பிற்பகுதியில் தாராதேவி தெய்வத்தின் சிலையைத் தேடி அலைந்தபடியே இருக்கின்றான். சிலை பௌத்த-இந்து ஊடாட்டத்தைச் சுட்டும் படிமமாக இருக்கின்றது. அந்த படிமம் இரு இனங்களை சேர்ந்த இருவருக்கிடையிலான சாதாரண காதல் கதையை தமிழ் – சிங்கள அரசியலை நோக்கியும் பௌத்த சிங்கள ஆதிக்க மனநிலையை நோக்கியும் நகர்த்துகின்றது. அதுவே நாவலின் ஆழமும் அழுத்தமும் ஆகிறது.

இந்த நாவலில் இரண்டு பாத்திரங்கள் பேசுகின்றன. இதுவே நாவலுக்கு இயல்பான ஓர் இருமுகத் தன்மையை அளிக்கின்றது. பானுக – தாரா என்ற இரண்டு பாத்திரங்களும் ஒன்றுடன் ஒன்று துல்லியமாக வேறுபட்ட, இணையான முக்கியத்துவம் உள்ளவர்களாக செயல்படுன்றனர். எதிர் எதிர் இயக்கம் கொண்டவர்களாக இவர்கள் இருவரும் இருந்த போதிலும் அந்த முரண் நாவலில் போதியளவு விரிவடையவில்லை.

மலையகத்தை சேர்ந்த “ஹன்ச பதன” என்ற அமைப்பின் கூட்டம் ஒன்றிற்கு பானுக மாயாதுன்ன என்ற பேச்சாளர் வருகின்றார். அவருடைய சிங்கள கவிதை ஒன்று கீழ்வருமாறு

அமைந்திருக்கின்றது.

கலா வெவே வத்துற ரசாய்

ஆடி லிந்தே வத்துற தரம்

தல் ஹகுறு அரங்

உதுருகறேன் அபி எனவா

பெலபீய கன்ன அம்மே

பானுகவின் மேற்சொன்ன கவிதை பின்வருமாறு தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு கூட்டத்தில் வாசிக்கப்படுகின்றது.

வற்றாத கிணற்று நீரின் ருசி

கலா ஓயா நீரளவு

அம்மா

தேங்காய் வழுக்கையுடன்

தெற்கில் இருந்து

நாங்கள்

பனங்கட்டி சாப்பிட வாறோம்

சிங்கள கவிதை தமிழில் மொழிமாற்றம் செய்யப்படும் போது அதன் அர்த்தமும் மாற்றியமைக்கப்பட்டிருக்கிறது என்பதை பானுக தெரிந்து கொள்கின்றான். சிங்கள கவிதையில் கலா வாவியின் நீரின் சுவை பிரதானப்படுத்தப்பட்டு தமிழரின் சிறுகிணற்று நீர் அப்படியல்ல என்ற அர்த்தம் தொனிக்கின்றது. ஆனால், சிங்கள கவிதையில் ஒளிந்திருக்கும் ஆதிக்க நுண்ணரசியலை உணர்ந்த தமிழ் மொழிபெயர்ப்பாளர் வற்றாத கிணற்று நீரின்

சுவையை பிரதானப்படுத்தி மொழிபெயர்ப்பை செய்திருக்கின்றார் என பானுக அறிந்து கொள்ள நேரிடுகின்றது. அந்த கவிதையை தமிழில் மொழிபெயர்த்தது ஒருகாலத்தில் தன்னுடைய பால்யவயதில் ஒருதலையாகக் காதலித்த தாரா ஷியாமலீ குமாரசாமி என்பதையும் தெரிந்து கொள்கிறான்.

நீண்ட காலமாக தொடர்பு இல்லாமலிருந்த பானுவும் தாராவும் அந்த கூட்டத்தின் முடிவில் சந்தித்துக்கொள்கின்றனர். பானுக மீதான தன்னுடைய விருப்பையும் பட்சத்தையும் ஒரு குறிப்பேட்டில் எழுதிப்பேணும் தாரா அத்தனை நீண்ட வருடங்களுக்கு பிறகு அதை பானுகவிடம் வாசிக்க கொடுக்கின்றாள்.

குறிப்பேடு வாசிக்கப்படும் போது நினைவுகள் இறந்த காலத்தை நோக்கி நகர்கின்றன. நாவல் நேர்கோடற்ற காலக்கோட்டில் பயணிக்கத் தொடங்குகிறது. இருவரும் மற்றவரைபற்றி எழுதும் குறிப்புகள் நாவலில் வாசிக்கப்படுவதன் மூலம் காலம் முன்னும் பின்னுமாக நகர்கின்றது. நாவலைச் செறிவாக்கும் உத்தியாகவும் அது இருக்கின்றது.

யாழ்ப்பாணத்தை சேர்ந்த ஆசிரியர் குமாரசாமி, மனைவி இறந்ததும் தன்னுடைய ஒரு வயது ஆண்குழந்தை கோவிந்த மித்ர குமாரசாமியுடன் மாத்தளையில் இருக்கும் தன்னுடைய தமக்கையுடன் வாழச் செல்கின்றார். அங்கு தன்னுடைய சிங்கள மாணவியை இரண்டாவதாக திருமணம் செய்துகொள்கிறார். அவர்களுக்கு தாரா ஷியாமலீ பிறக்கின்றாள். அவளுடைய அண்ணன் மித்ர தன்னுடைய இருபத்தோராவது வயதில் தனக்குள் ஓடுவது நூற்றுக்கு நூறு வீதம் தமிழ் இரத்தம் என்று கூறி 1983 கலவரத்திற்கு முன்னரே வீட்டை விட்டு ஓடிப்போகின்றான்.

தமிழ் தந்தைக்கும் சிங்கள தாய்க்கும் பிறந்த தாரா சிங்கள சூழலிலே வளர்கின்றாள். அந்தச் சூழலிலேதான் கல்வி கற்கின்றாள். அவளோடு வகுப்பில் கற்கும் பானுகவின் அணுக்கம் காரணமாக பாடாசாலை நாட்கள் மிக அழகாகத் தோன்றுகிறது. ஆனால், பாடசாலையில் தாராவுடன் ஏற்பட்ட முரண்பாடு காரணமாக அவளை “பறதெமழு” என சிங்கள மாணவர்கள் திட்டும் போதும் “இந்தியாவில் இருந்து வந்த பறதெமழு இந்தியாவிற்கே அனுப்ப வேணும்” என்ற விவாதங்கள் மூலம் முதன்முதலாக அருவருப்பான இனபேதத்தின் கோர முகத்தை தாரா எதிர் கொள்கின்றாள். அந்தக் கோரமுகம் நாவல் முழுமைக்கும் தொடர்கின்றது.

மொனராகலை மாவட்டத்தின் ஒரு குக்கிராமத்தில் வறிய குடும்பத்தில் பிறந்த பானுக அறிவுக்கூர்மையும் இலக்கிய வாசிப்பும் கொண்ட மாணவனாக ஆசிரியர் குமாரசாமியின் நன்மதிப்பை பெறுகின்றான். இருப்பினும் சிங்கள பௌத்த தீவிரவாத மனப்பான்மையை அவன் அகவயமாகக் கொண்டிருப்பது அவ்வப்போது வெளிப்படுகின்றது. என்றாலும் அவனுடைய புறவயச்செயற்பாடுகளில் அவை வெளிப்பட்டிருக்கவில்லை.

ஒரு தலையாக தாராவை காதலிக்கும் பானுக தன்னுடைய காதலை அவளிடம் தெரிவிக்கத் தயங்குவது அந்தஸ்து, பொருளாதாரம் போன்றவை சார்ந்த

தாழ்வுச்சிக்கலினாலா அல்லது அவளது தமிழ் அடையாளமா என்பதை வாசகர்களே உணர்ந்தறிய விடப்பட்டுள்ளது. அவன் பாடசாலையை விட்டு நீங்கியதும் தாராவின் தொடர்பும் அற்றுப்போகிறது.

1983 இல் இராணுவத்தில் இரண்டாம் லெப்டினன்ட் பதவியை பெறுகின்ற அவன் பின்னர் அப்பதவியை துறந்து 1983இல் இலங்கையின் சிங்கள-தமிழ் இனக்கலவரத்தைத் தூண்டும் சக்திகளோடு சேர்ந்து இயங்குகிறான். இறுதியில் தொல்பொருள் ஆராச்சியாளராகி அகழ்வுகளில் தாராதேவியின் சிலையினை தேடிக்கொண்டிருக்கும் காலத்தில் தாராவை மீண்டும் சந்திக்கின்றான்.

நாவலில் ஓரிடத்தில் 83 கலவரத்தின் போது தாராவின் குடும்பம் பதுளையிலிருந்து திரும்பிக் கொண்டிருக்கின்றார்கள். பஸ்ஸை வழிமறித்த சிங்கள இளைஞர்கள் தமிழர்களை வேறாக்கி தாக்குதலை மேற்கொள்கிறார்கள். தாராவின் குடும்பத்தினருடைய மத அடையாளத்தை உறுதி செய்ய, அச்சப்படும்போது பௌத்தர்கள் சொல்லும் சுலோகத்தை கூறச்சொல்லி அவ் இளைஞர்கள் கேட்கின்றனர்.

“இதிபிசோ (அச்சப்படும் போது பௌத்தர்கள் சொல்லும் சுலோகம்) இல்லை. துன்சூத்றையவே (பௌத்தர்கள் சொல்லும் சுலோகம்) சொன்னாலும் நான் சிங்களம் ஆவேனா?” என்று தாராவின் தந்தை குமாரசாமி அந்த சிங்கள இளைஞர்களைப் பார்த்துக் கேட்கின்றார்.

“இவன் தமிழன்” என ஆவேசப்படும் இளைஞர்களை “அவர் மேல் கை வைக்க வேண்டாம்” என குழுவிலிருந்த ஒருவன் கூறுகின்றான். அவன் பானுகவின் நண்பன். தாராவுடன் கூடப்படித்தவன். அந்தப்பயணம் முழுவதும் அந்தக் குடும்பத்துக்கு காவலாக இருக்கின்றான்



என்பதாக அந்தப்பகுதி இருக்கும்.

THARA MAGE DEWDUWA

சிங்கள -தமிழ் இனமுரண்பாடு காலங்களில் சிங்களப்பிரதேசங்களில் வாழ்ந்த தமிழருக்கு சிங்களக் காடையர்களால் நேர்ந்த அவலங்களையும் அவர்களின் எதிர்வினைகளையும் ஒரு சிங்கள நாவலாசிரியர் தன்னுடைய எழுத்தில் முன்வைப்பதை தற்காலத்தின் ஒரு தேவையாக நான் பார்க்கிறேன். அப்படி எல்லாத் தரப்பினரும் முன்வைக்க வேண்டும்.

நாவலில், தாயார் சிங்களப்பெண்ணாக இருந்தாலும்கூட தாராவை பாடசாலை மாணவர்களில் சிலர் நீ ஒரு தமிழச்சி என வேறுபடுத்துவதும் அவள் மீது வன்மம் கொள்வதும் சிறிய சிறிய சம்பவங்கள், உரையாடல்கள் மூலம் உணர்த்தப்படுகின்றது. சிங்களவர்களுக்கு எல்லாத்தமிழருமே இந்தியாவிலிருந்து வந்தவர்கள் என்ற பொதுவான கருத்தொன்று இருக்கின்றது என்பது “இந்தியாவில் இருந்து வந்த பறதெமழு இந்தியாவிற்கே அனுப்ப வேணும்” என்ற பாடசாலை விவாத தலையங்கத்தின் மூலம் தெரிகின்றது.

ஆதியிலே நெருக்கமாகவும் முரண்பாடற்றும் இருந்த சிங்கள- தமிழ் உறவு பின்னர் மண்ணுக்குள் புதையுண்டு புலப்படாத தொல்பொருள் ஆகி விடுகின்றது. அந்த தொல்பொருளை அகழ்ந்தெடுப்பதென்பதும் அதனை உயர்பீடத்தில் வைத்து மதிப்பளிப்பதென்பதும் நம் எல்லோராலும் ஏற்றுக்கொள்ள முடியாததொன்றாக இருக்கலாம். அதற்கு வெவ்வேறு காரணங்கள் நம்மிடையே இருக்கவும் கூடும் என்பதைத்தான் இந்த நாவலின் உட்பொருளென மொழிபெயர்ப்பின் வழியாக அல்லாமல் என்னுடைய நுண்ணுணர்வின் வழியாக நான் கண்டுகொள்ளக்கூடியதாக இருக்கின்றது. மொழிபெயர்ப்பின் வழியாக அல்லாமல் என்று அழுத்திச் சொல்வதற்குக் காரணம் உண்டு. குறியீடுகள் மூலம் அனுபவத்தை வாசகர்களுக்குக் கடத்துகின்ற நுட்பமான பிரதியாகிய இந்த நாவல் அதன் முழுமையான தரிசனத்தைத் தராதவகையிலே் – வாசிப்பின் பசுந்தான போக்கைத் திருகித் திருகி துன்பமான வாசிப்பு அனுபவத்தைத் தந்தவகையிலே – மொழிபெயர்ப்பு வெறும் தட்டையாக அமைந்துவிட்டது மிகவும் துரதிஷ்டவசமானது.

மொழிபெயர்ப்பாளர் ஒரு படகோட்டி போல.. ஒரு கரையிலுள்ள சொற்களின் அர்த்தத்தை மறுகரையின் சொற்களிடம் கொண்டு சேர்ப்பவர் என்றொரு கூற்று உண்டு. ஆனால் இந்நாவலின் சிங்களச் சொற்களில் இருந்து புறப்பட்ட அர்த்தங்கள் பல, தமிழ்ச்சொற்களை வந்தடைய முன்னரே நடுக்கடலில் மூழ்கிவிட்ட உணர்வையே தமிழ்மொழிபெயர்ப்பு தருகின்றது. அர்த்தங்களின் பூரணமின்மையை கொண்டே இந்த ஐயப்பாடு என்னிடம் எழுகின்றது.

எந்தெந்த இடங்களில் எந்தெந்தச் சொற்களை, சொல்லாட்சிகளைப் பயன்படுத்துகின்றோம் என்ற விழிப்புணர்வு இந்த நாவலின் மொழிப்பெயர்ப்பாளரிடம் பற்றாக்குறையாக இருக்கின்றமை சொற்களை மீள மீளப் பயன்படுத்துவதிலும், ஒன்றுக்கொன்று முரணான சொல்லாட்சிகளைப் பாவிப்பதிலும் உணரக்கூடியதாக இருக்கின்றது. இது இலக்கிய வாசிப்புப் போதாமையின் ஒரு விளைவு.

புனைவிலக்கிய மொழிபெயர்ப்புக்களைச் செய்பவர் தேர்ந்த இலக்கிய வாசிப்பும் – பரிச்சயமும் உள்ளவராக இருந்தால் மட்டுமே மூலமொழி, இலக்குமொழி இரண்டிலும் மொழியாளுமையோடு இருக்க முடியும். அதுவே ஒரு புனைவிலக்கியத்தின் மொழிபெயர்ப்பைப் பூரணத்துவப்படுத்தும். அதுவே மூல எழுத்தின் ஆசிரியரை பக்குவத்தோடு இன்னொரு மொழி வாசகர்களுக்கு அறிமுகப்படுத்தும்.

வார்த்தைக்கு வார்த்தை பிரதியிடப்படும் அகராதி தரும் உயிரற்ற அர்த்தங்கள் எந்தவிதமான மொழிப்பிரக்ஞையும் இன்றி நாவலின் பக்கங்களை நிரப்புகின்றமைக்கு கீழ்வருகின்ற பந்தி ஓர் உதாரணம்.

//நான் இந்த சிறிய பந்தியை ஒதுக்குவது உங்களை பற்றி அல்லது அவரை பற்றி எழுதுவதற்கு, இல்லை என்றால் என் பிடிவாத ஒப்பீட்டை வெளிக்காட்டுவதற்கு. அவர் என்று நான் சொன்னது புயலடித்து வந்த பையன். இப்போது நான் எழுதுவது பயனற்றதானாலும், இதை சொல்வதால் எந்த பயனும் இல்லாமல் இருந்தாலும், நான் எவ்வளவு வருத்தத்துடன் இருக்கிறேன் என்பதையும் அதன் ஆழத்தையும் உணர பயனுள்ளதாக இருக்கும்.// ( பக்கம் 57)

இன்னுமோர் உதாரணம்.

//பின்னல் கலைந்த தலை முடியுடனும் கசங்கிய சட்டையுடனும் உயர்தர மாணவன் அளவிற்கு முதிர்ச்சியடையாத அந்த மாணவன் எழும்போது தாரா மட்டுமின்றி அனைவரும் அவன் பக்கம் திரும்பினார்கள்// ( பக்கம் 44)

மாணவனுடைய பின்னல் கலைவதை தமிழ் வாசக மனது எவ்வாறு உள்வாங்கும்..? நேரடியான அர்த்தத்தில் வெறுமனே அகராதியின் துணையோடு சொற்களை மொழிபெயர்க்கும் போது நாவலின் அழகியற்பெறுமதி (Artistic value) கெட்டுப்போய் நாவல் நாராசாரமானதாகிவிடுகின்றது.

//மொளிபெயர்ப்பாளரின் அனுமதி அன்றி இப் புத்தகத்தை பிரசுரம் செய்வது குற்றமாகும்.// என்ற முன்பக்க அறிவுத்தலுடன் தொடங்கும் இந்நாவலை பிரதிமேம்படுத்துனர், ஒப்புநோக்குனர் என்ற எவருமே இல்லாமல் அஹச மீடியா வர்க்ஸ் வெளியிட்டுள்ளது. எழுத்துப் பிழைகளுடனும் இலக்கணப்பெரும்பிழைகளுடனும் வெளிவந்த இந்நாவலுக்கு சிறந்த மொழிபெயர்ப்பு நாவல் விருது கிடைத்தமை ஈழத்தின் இலக்கிய மொழிபெயர்ப்பு வரட்சியையும் இலக்கிய வாசிப்புள்ள மொழிபெயர்ப்பாளர்களின் பற்றாக்குறையையும் வெளிச்சமிட்டுக் காட்டுகிறது.

இலங்கையில் யுத்தத்திற்குப் பிறகு இன, மொழி, பண்பாட்டுத் தளங்களில் விலகியிருப்பவர்கள் தமக்குள் உரையாடவும், தம்மைப் பகிர்ந்துகொள்வதற்குமான காலமாக இக்காலத்தை நாம் பயன்படுத்தமுடியும். இதனை இன நல்லிணக்கம், இனங்களுக்கிடையிலான உறவு என்றெல்லாம் பெரிய வார்த்தைகளால் அடையாளப்படுத்தத் தேவையில்லை. ஆனாலும் இவை பரஸ்பரமான பகிர்வுகள். இது எங்களுடைய கதை. இப்போது உங்களுடைய கதையைச் சொல்லுங்கள் என்று

உட்கார்ந்திருந்து பேசுகின்ற உரையாடல்கள்.

இந்த உரையாடல் சரியாக நிகழ இலக்கியப் பிரதிகளுடைய பரிமாற்றமும் அர்ப்பணிப்பான மொழிபெயர்ப்புகளும் அவசியமாகின்றன.

தாரா ஷியாமலீ குமாரசுவாமி நாவலைப் படித்துமுடித்த பிறகு தோன்றிய பல்வேறு எண்ண அலைகளில் கீழ்வருவதும் ஒன்று.

நிஷ்ஷங்க விஜயமான்ன தமிழில் இந்தமாதிரி அறிமுகமாகியிருக்கக் கூடாது

# 17. மரணத்தை அனுமதிக்காத எழுத்து! தெளிவத்தை ஜோசப்பின் கதையுலகம்: சுரேஷ் பிரதீப்

செப்டம்பர் 2020/விமர்சனம்

BY சுரேஷ் பிரதீப்

பொது வாசிப்பில் இருந்து விலகி தீவிரமான இலக்கிய படைப்புகளுக்குள் நுழையும் ஒரு வாசகனுக்கு 'ஏன் நவீன இலக்கியம் இவ்வளவு சிக்கலாக இருக்கிறது?' என்ற கேள்வி எழுவது இயல்பே. நவீன ஆக்கங்களின் சிக்கல் தன்மைக்கு அவற்றுக்கு பின்னிருக்கும் 'ஆசிரியர்' என்ற ஒற்றை மனிதரின் குரல் காரணமாகிறது. ஒரு எழுத்தாளன் தன்னுடைய பிரத்யேகமான வாழ்க்கை சார்ந்த அடைதல்களை மொழிக்குள் கொண்டுவர முயலும்போது ஏற்கனவே புழங்கிப் புழங்கி தட்டையாகிப் போய்விட்ட மொழி அதற்கு உதவுவதில்லை. மொழியில் புதிய சாத்தியங்களை எழுத்தாளர் தனக்கென உருவாக்கிக் கொள்கிறார். இந்தத் தனித்தன்மை வாய்ந்த மொழிநடைதான் இலக்கியத்திற்குள் புதிதாக நுழையும் ஒரு வாசகனுக்குத் தடையை அளிக்கின்றது. எதிர்விளைவாக வாசிப்பு கூடக்கூட சரளமும் எளிமையும் வெளிப்படும் மொழிநடை ஒரு இலக்கிய வாசகரின் ஆர்வத்தைத் தூண்டாமல் போய்விடுகிறது. ஆனால் சிக்கலான மொழி மற்றும் வடிவத்துக்கு இணையாகவே நேரடியான மொழியும் வடிவமும் இலக்கியத்தில் எப்போதும் முக்கியத்துவம் வாய்ந்தவையாக இருந்திருக்கின்றன. ஆரோக்கிய நிகேதனத்தை சிக்கல்தன்மைக்கு உதாரணமாகக் கொண்டோம் என்றால் மண்ணும் மனிதரும் எளிமைக்கு உதாரணமாகிறது. இந்த இரட்டைத்தன்மையை கூர்ந்து நோக்கினால் உண்மை என்கிற ஒன்றை, எழுத்தாளர் எவ்வாறு அணுகுகிறார் என்பதுடன் இந்தத் தன்மை தொடர்பு கொள்வதைக் காணலாம். உண்மை சிக்கலானதாக பல படிகள் கொண்டதாக சொல்லப்படும் ஆக்கங்கள் சிக்கல் தன்மையையும், உண்மை தன்னை மிக நேரடியாக வெளிப்படுத்தும் இயல்புடையது என்று சொல்லும் ஆக்கங்கள் எளிமையையும் தேர்ந்தெடுப்பதை அவதானிக்கலாம். (இது ஒரு பெரும்போக்கான வகைப்படுத்தல் மட்டுமே)

நாமிருக்கும் நாடே

உண்மை சிக்கலானது என்று நம்பும் ஆக்கம் மையமற்றதாகவே இருக்க இயலும். நிறுவுதலை விட விசாரித்தலே அதன் புனைவுத் தருக்கத்தை கட்டமைக்கும். மாறாக உண்மை நேரடியாக வெளிப்பாடு கொள்வது என்று சொல்லும் ஆக்கங்களின் பரிமாணம் எளியதாக இருக்கிறது. கோட்பாட்டுச் சார்போ சித்தாந்தச் சாய்வோ கொண்ட ஆக்கங்களை இந்த வகைமையில் சேர்க்கலாம். ஆனால் சித்தாந்த சாய்வினை வெளிப்படுத்தும் ஆக்கங்கள் தொடர்ந்து வாசிக்கப்படுவதில்லை. அவற்றின் ஆயுள்காலம் குறுகியது.

படைப்புச் செயல்பாட்டின் அடிப்படையாக சிந்தாந்தச் சார்பைக் கொண்டிருந்தாலும் மேலதிகமாக ஒரு படைப்பாளியின் வாழ்க்கை நோக்கும் தேடலும் வெளிப்பட்டிருக்கும் படைப்புகளே தொடர்ச்சியை உருவாக்குகின்றன. ஜெயகாந்தனின் வாழ்க்கை நோக்கினை கட்டமைப்பதில் முற்போக்கு மனிதாபிமானவாதத்துக்கு பங்கு உண்டென்றாலும் அதைத் தாண்டிச் சென்று ஜெயகாந்தன் அடையக்கூடியவை அவருடைய ஆக்கங்களின் முக்கியத்துவத்தை உருவாக்குகின்றன.

மலையக எழுத்தாளரான தெளிவத்தை ஜோசப்பையும் அடிப்படையில் முற்போக்கு மனிதாபிமானவாதக் கருதுகோளின் தாக்கம் உள்ளவர் என்று வரையறுக்க இயலும். அரசாங்கத்தால் வதைக்கப்படும் எளியோர்தான் தெளிவத்தை ஜோசப்பின் மீன்கள் கதைத் தொகுப்பிலும் குடைநிழல் நாவலிலும் பாத்திரங்களாக உள்ளனர். அவர்களுடைய வலியைப் பேசிய விதத்தில்தான் தெளிவத்தை ஜோசப்பின் ஆக்கங்கள் முற்போக்கு மனிதாபிமானவாதம் என்ற எல்லையில் இருந்து தன்னை விடுவித்துக் கொண்டு கலையம்சம் அடைகின்றன.

கடந்த முப்பதாண்டு காலத்தில் எழுதப்பட்ட ஈழத்தின் முக்கியமான ஆக்கங்கள் அனைத்திலும் போரும் அரசாங்கமும் அவை மனிதர்களிடத்தில் உருவாக்கும் சிதைவுகளும் விரிவாகப் பேசப்பட்டுள்ளன. கலாமோகன் , ஷோபாஷக்தி போன்ற முன்னோடிகளின் ஆக்கங்களில் வெளிப்படும் பிறழ்வும் இறுக்கமும் பகடியும் ஒரு வகையில் கடந்த நாற்பதாண்டுகால ஈழ வரலாற்றை பார்க்கும்போது புரிந்து கொள்ளக்கூடியதாக இருக்கிறது. ஈழ இலக்கியங்கள், பிற பிரதேசங்களின் தமிழ் வாசக மனதில் உருவாக்கும் அமைதியின்மைக்கு உலகின் வேறெந்த தமிழர் வாழும் பகுதியும் ஈழம் அளவுக்கு போர்களையும் அது சார்ந்த புலப்பெயர்வுகளையும் எதிர்கொண்டதில்லை என்பது ஒரு காரணமாகிறது. இன்னும் அரை நூற்றாண்டு காலமாவது போரின் நினைவுகள் நேரடியான உணர்ச்சிகளாக ஈழப்படைப்புகளில் வெளிப்படலாம். அது தவிர்க்க முடியாததும் கூட. ஆனால் போர்குறித்தும் புலப்பெயர்வு குறித்தும் ஒரு ஆக்கம் பேசுவதாலேயே கவனம் பெற்ற கலையம்சம் குறைந்த ஆக்கங்களும் இருக்கின்றன.

தெளிவத்தை ஜோசப் சிறுகதைகள்

இந்த தடத்தில் இருந்து விலகி ஈழத்தை வேறொரு கோணத்தில் சித்தரிப்பவர்களில் அ.முத்துலிங்கம் முக்கியமானவர். தெளிவத்தை ஜோசப்பின் ஆக்கங்களும் ஈழத்தின் பொதுவான உணர்வுச்சூழலில் இருந்து பெரும்பாலும் விலகியே பயணிக்கின்றன. இந்த விலகலுக்கு இரண்டு காரணங்களைச் சொல்ல முடியும். ஒன்று தெளிவத்தை ஜோசப் இலங்கையில் போர்ச்சூழல் உருவாவதற்கு முன்னிருந்தே எழுதி வருகிறார். அ.முத்துலிங்கத்திற்கும் இது பொருந்தும். மற்றொன்று ஈழத்தமிழர் என்ற அடையாளத்துக்குள் மலையகத்தவரான தன்னை எவ்வாறு பொருத்திக் கொள்வது என்ற கேள்வியும் ஈழ எழுத்தின் பொதுத்தன்மையில் இருந்து ஜோசப்பை விலக்குகின்றன.

தெளிவத்தை ஜோசப் புனைவுலகை கட்டமைக்கும் பண்புகளாக மூன்று விஷயங்களை




…

குறிப்பிடலாம். ஒன்று குறைத்துச் சொல்லுதல்: தெளிவத்தை ஜோசப்பின் சிறுகதைகள் மிகக் குறைந்த பக்களிலேயே எழுதப்படுகின்றன. மிகச் சரளமாக வாசித்துச் செல்லும்படியான மொழியையே பயன்படுத்துகிறார். ஆனாலும் மிகக் குறைந்த பக்கங்களிலேயே முழு வாழ்க்கைச் சூழலையும் மிகத் துல்லியமாக தெளிவத்தை ஜோசப் சித்தரித்துச் சென்றுவிடுகிறார். குடைநிழல் நாவலில் சிறையில் இருக்கும் கதைசொல்லி தன் அம்மாவின் கடந்தகாலத்தை நினைத்துப் பார்ப்பதாக ஒரு அத்தியாயம் வருகிறது. தோட்டக் கங்காணியான அவன் தந்தை, தோட்ட முதலாளியான ஆங்கிலேயன், அப்பாவின் நம்பகத்தன்மை வாய்ந்த கையாள், தோட்டத்தின் நிலை என அந்த ஒரு அத்தியாத்திற்குள்ளாகவே ஒரு முழுமையான சித்தரிப்பைக் கொடுத்து விடுகிறார்.

/ “நீ ஆயிரம் காரணம் சொல்லு நான் நிறுக்கப் போறதில்லை”இது கணக்கப் பிள்ளை

“ஆளுங்க எல்லாம் குளிர் பிடிச்சு செத்தா?”

“மண்ணை ஈரமாத்தான் இருக்கு…குழி வெட்ட லேசாத்தான் இருக்கும்”/

கத்தியின்றி ரத்தமின்றி சிறுகதையில் இடம்பெறும் இதுபோன்ற கூர்மையான பல வரிகளை மீன்கள் சிறுகதைத் தொகுப்பு முழுக்க மீண்டும் மீண்டும் அடையாளம் காண முடிகிறது.

இரண்டாவதாக குறிப்பிட்டுச் சொல்ல வேண்டிய அம்சம் இக்கதைகளில் இடம்பெறும் சிங்களர்கள். இருப்பியல், பயணம் போன்ற கதைகள் சிங்களப்

பெரும்பான்மைவாதம் தமிழர்கள் மேல் கவிந்திருப்பதை ஆர்ப்பட்டமின்றி சொல்லிச் செல்கின்றன. அதேசமயம் குடைநிழல் நாவலில் கதைசொல்லிக்கு உதவும் சிங்கள முஸ்லிம் வீரன் இயல்பாகவே ஒரு நாயகத்தன்மையை அடைந்துவிடுகிறான். இக்கதைகளில் பெரும்பாலான முக்கிய பாத்திரங்கள் சிங்களம் அறிந்தவர்களாகவும் சிங்களர்களுடன் உரையாடக்கூடியவர்களுமாகவே காட்டப்படுகின்றன. குடைநிழல் நாவலில் கதைசொல்லிக்கு அவன் மகனை தமிழ்ப் பள்ளியில் சேர்ப்பதா சிங்களப்பள்ளயில் சேர்ப்பதா என்ற குழப்பம் எழுதுகிறது. இலங்கையை முழு மனதோட ஆதரிக்க முடியாத தன்னுடைய அம்மாவை கதைசொல்லியின் மகன் வெறுக்கிறான். கிரிக்கெட் போட்டியின் போது கூட தமிழகத்தில் இருந்து வந்தவளான அவன் தாய் இலங்கையை ஆதரிக்காமல் இந்தியாவை ஆதரிப்பது அவனைத் தொந்தரவு செய்கிறது. சிங்கள அடையாளம் ஒரு நிழல் போல இவர் கதைகளை தொடர்ந்து கொண்டே இருக்கிறது.




…

மீன்கள்

மூன்றாவதாக இக்கதைகளில் மிக வெற்றிகரமாக பயன்படுத்தப்பட்டுள்ள மார்க்ஸிய வாழ்க்கை நோக்கைச் சொல்ல வேண்டும். மழலை, அம்மா என ஒரு சில கதைகளைத் தவிர்த்து பிற எல்லாக் கதைகளின் பின்புலமாகவும் தனிமனிதக் கரிசனமும் அதற்குப் பின்னிருக்கும் அதிகாரம், ஆளுதல், ஆளப்படுதல் என்பன சார்ந்த ஆசிரியரின் பார்வையுமே வெளிப்படுகின்றன. பெரும்பாலான முற்போக்கு

ஆக்கங்கள் தனித்தன்மையை எப்புள்ளியில் இழக்கின்றனவோ அதற்கு முந்தைய புள்ளிவரை நெருங்கிப் போகிறவையாக தெளிவத்தை ஜோசப்பின் கதைகள் உள்ளன. மீன்கள் தொகுப்பில் உள்ள கதைகள் முதலினைக் கையில் வைத்திருப்பவர்களால் வதைக்கப்படுகிறவர்களைப் பேசும் கதைகளைக் கொண்ட தொகுப்பு என்றால் குடைநிழல் அதிகாரத்தால் துன்புறுத்தப்படுகிறவர்களின் கதையாக விரிகிறது.

இப்புனைவுகளில் முதலாளித்துவம், பேரினவாதம் இரண்டுக்கும் பெரிய வேறுபாடுகளை நம்மால் காண முடிவதில்லை. மீன்கள் , மனிதர்கள் நல்லவர்கள், சிலுவை போன்ற கதைகள் சுரண்டலை பாதிக்கப்படுகிறவர்களின் பார்வையில் இருந்து பேசுகின்றன. பாவ சங்கீர்த்தனம் சுரண்டுகிறவர்களின் வாழ்க்கையின் வியர்த்தத்தை பேசுவதாக அமைகிறது. உழைப்புச் சுரண்டல் என்பது நிரந்தரத் தன்மை கொண்டதாக நீடித்திருப்பதையும் அதற்கு எதிராக எழும் லட்சியவாதம் என்பது பெயரளவிலான ஆசுவாசத்தை மட்டுமே உழைப்புச் சுரண்டலுக்கு ஆளாகிறவனுக்கு கொடுக்க இயலும் என்பதை சற்று கசப்பான பகடி தொனிக்க கத்தியின்றி ரத்தமின்றி கதை பேசுகிறது.

குறைத்துச் சொல்லல், சிங்களப் பாத்திரங்களை புனைவுகளில் உலவவிடுதல், கோட்பாட்டுச் சார்பு என்ற மூன்று அம்சங்களையும் கடந்து தெளிவத்தை ஜோசப்பின் புனைவுகள் முக்கியத்துவம் பெறுவது மனிதனின் வாழ்க்கைப்பாடுகள் மிகுந்த கரிசனத்துடனும் நாகரிகத்துடனும் முன்வைக்கப்பட்டிருப்பதால் தான் என்று கருதுகிறேன். இக்கதைகளில் யாருமே செல்வத்தின் உச்சத்தில் திளைப்பவர்கள் அல்ல. அதேநேரம் ஒன்றுமே இல்லாத அடையாளமற்ற விளிம்புநிலை மனிதர்களும் அல்ல. இவர் பாத்திரங்கள் அனைவருக்குமே அடையாளங்களும், அதைக்கடந்து வேறொன்றை நோக்கி நகர வேண்டும் என்ற உந்துதலும் இருக்கின்றன. வாழ்க்கை மீதான அத்தகைய தீராத பிடிப்பினை வெளிப்படுத்துவதாலோ என்னவோ இக்கதைகளில் எங்குமே மரணங்களே நிகழ்வதில்லை. நவீனத்துவம் தமிழில் தலைகாட்டத் தொடங்கும் ஒரு காலகட்டத்தில் எழுதிய படைப்பாளியின் எழுத்துக்களில் மரணங்களே இல்லாதது ஒரு ஆச்சரியமளிக்கும் அம்சமே. ஈழ நிலத்தில் போர் தொடங்கி தமிழர்களின் மீது சந்தேகப் பார்வை விழுந்து அந்த துவேஷத்தை மையமிட்டு நடக்கும் குடைநிழலிலோ, எளியோர்களின் வாழ்வே மீண்டும் மீண்டும் சொல்லப்படும் மீன்கள் தொகுப்பிலோ நாம் எங்குமே மரணத்தைக் காண முடிவதில்லை. புனைவில் நிகழும் திடீர் மரணங்கள் எப்போதும் சுவாரஸ்யத்தையோ அதிர்ச்சியையோ அளிக்கக்கூடியவை. மௌனியின் கதைகளில் இத்தகைய ‘திடீர் மரணங்களை’ அதிகமாகக் காணலாம். மரணம் ஒரு படைப்பின் விசாரத்திற்கான தளத்தை சுருக்கி விடுகிறது. மௌனியின் பிரபஞ்சகானம் உள்ளிட்ட பிரபலமான கதைகளில் மரணமே ஒரு பூடகத்தன்மையை கதைக்குள் உருவாக்கியிருப்பதை அவதானிக்க முடிகிறது. ஆனால் தெளிவத்தை ஜோசப் தன் கதைகளை முழுமையான விசாரத்திற்கென திறந்து வைக்கிறார். எந்நேரமும் மரணம் நிகழலாம் என்ற பதற்றத்துடன் நகரும் அம்மா கதையில் கூட கதைசொல்லியின் அம்மாவின் மரணம் எதிர்காலத்திற்கு தள்ளிவைக்கப்படுகிறது. நிகழப் போகும் அம்மாவின் மரணத்தை எதிர்கொண்டுவிடலாம் என்று மகன் ஆசுவாசம் கொள்ளும் இடத்தில் கதை முடிகிறது.

அவன் ஆசுவாசம் எதனால் என்று யோசிக்கும்போது இக்கதை மேலும் விரிவடைகிறது.

வாசகன் உள்நுழைவதற்கான இதுபோன்ற பல இடைவெளிகளை இயல்பாகக் கொண்டிருக்கும் தெளிவத்தை ஜோசப்பின் கதையுலகம் தன்னுடைய வாயில்களை மரணத்தினாலோ உச்சகட்ட வன்முறையினாலோ மூடிக்கொள்ளாமல் விசாரத்திற்காக தன்னை திறந்து வைத்திருப்பதாலேயே முக்கியத்துவம் வாய்ந்ததாகிறது.

# 18. அலைதலும் அடையாளச் சிக்கலும்: பவனீதா லோகநாதன்

செப்டம்பர் 2020/பனுவல்கள்

BY பவனீதா லோகநாதன்

இந்த உலகம், நிலமாக இருந்தபோது சகலருக்குமானதாக இருந்தது. தேசங்களாக மாறியபோது நாம் எல்லைகளுக்குள் சிறைப்படுத்தப்பட்டோம். யார் எங்கு வாழவேண்டும், எங்கு நடமாடவேண்டும் என்பதை நாம் தீர்மானிக்க முடியாது. அமைப்புகள், விதிமுறைகள், ஆவணங்கள், உரிமைகள் என்று சுருங்கிப்போன மனிதவாழ்வை நினைத்து எனக்கு எந்தப்பெருமையும் இல்லை. இன்னும் சொல்லப்போவதானால் எந்த உணர்வும் இல்லை.

இத்தகைய சூன்யவெளிக்கு எல்லை என்பது எங்கிருக்கிறது?

1

Frankfurt விமான நிலையம்.

வரிசையில் நின்றிருந்தேன். என் விமானத்திற்கான நேரம் நெருங்கிவிட்டதால் எனக்குள் மெல்ல பதற்றம் ஆரம்பித்தது. வரிசை மெல்ல நகர்ந்தது. ஒரு வழியாக எனது இடம்வந்ததும் நிம்மதியுடன் அதிகாரிகளை நோக்கி எனது ஆவணங்களை சமர்ப்பித்தேன். இருவரும் என் ஆவணங்களை சரிபார்க்க ஆரம்பித்தனர்.

என் ஆவணங்களை பார்த்தவாறே “உங்களை நாங்கள் அனுமதிக்க முடியாது, விசாரிக்க வேண்டும். இப்படி நில்லுங்கள். மற்றவர்களை அனுப்பிவிட்டு விசாரிக்கின்றோம்” என்றார்.

“என்ன பிரச்சினை…சகல ஆவணங்களும் இருக்கிறது தானே?”

“உங்கள் மீது சந்தேகமாக இருக்கிறது, உங்களை அனுப்ப முடியாது. ஏற்கனவே உங்களை போன்ற இலங்கை தமிழர்கள் சட்ட விரோதமாக நுழைகின்றனர். உங்களை போன்றவர்கள் எங்கள் நாட்டில் நுழைவதை அனுமதிக்க முடியாது” அதிகாரி கண்டிப்புடன் சொன்னார்.

எனக்குள் கலவரம் ஏற்பட்டாலும் சமாளித்துகொண்டு தைரியமாகப் பேசினேன். “நான் சுற்றுலாப் பயணி இல்லை. பெர்லின் திரைப்பட விழாவுக்கு berlinale talents க்கு தேர்வு செய்யப்பட்டு வந்திருக்கிறேன். அவர்கள் எனக்கு கொடுத்த ஸ்பொன்சர் கடிதம் அந்த ஆவணங்களில் இருக்கிறது. பயிற்சி முடிந்ததும் நான் எனது நாட்டுக்கு திரும்பி விடுவேன்”

“அவர்கள் கடிதம் கொடுத்தால் நாங்கள் அனுப்பிவிட வேண்டுமா? அதெல்லாம் முடியாது. இது என்ன நிகழ்ச்சியில் கலந்துகொள்ள 400 யூரோக்கள் தருவதாக இருக்கிறது. எங்கள்

நாட்டு பணத்தை உங்களுக்கு நாங்கள் ஏன் தரவேண்டும்? உங்களுக்கெல்லாம் தர வேண்டிய அவசியம் இல்லை” அதிகாரி கோபத்தில் கத்த ஆரம்பித்தார்.

“நான் சில லட்சங்கள் செலவு செய்து இங்கு வந்திருகின்றேன். அவர்கள், உணவுக்கும் போக்குவரத்துக்கும் சிறு உதவித் தொகைப்போல வழங்குகின்றனர். அதை நாங்கள் கேட்கவில்லை. அவர்களாக வழங்குகின்றனர். ஏன் வழங்க வேண்டும் என்று நீங்கள் அவர்களிடம் கேளுங்கள்” என்று சொன்னேன்.

“இரண்டு அதிகாரிகளும் ஜேர்மனிய மொழியில் பேச ஆரம்பித்தனர். என்ன சொல்கிறார்கள் என்று புரியாத நான், எனக்கு ஜேர்மனிய மொழி தெரியாது. ஆங்கிலத்தில் சொல்லுங்கள். எனது விமானத்திற்கான Gate open செய்து விட்டனர். எனக்கு விமானம் தவற விடப்பட்டால் சிரமமாகிவிடும். தயவு செய்து ஆவணங்களை பாருங்கள். எல்லாமே சரியாக இருக்கிறது” என்று சொன்னேன்.

“விமானம் கிளம்புவது எங்கள் பிரச்சினை இல்லை. இலங்கையர்கள் எங்கள் நாட்டில் நுழைந்து சட்டவிரோதமாக குடியேறுவது வழக்கமாகிவிட்டது. இப்படி ஏதாவது ஒரு காரணத்தில் நுழைந்து, திரும்பி போகாமல் தங்கிய பலரை எங்களுக்கு தெரியும். உங்களை எல்லாம் உள்ளே விடாது நாட்டுக்கு திருப்பி அனுப்ப வேண்டும்” என்றார்.

விசாரணைக்காக நான் நிற்கவைக்கப்பட்டேன். வரிசை முழுவதுமாக முடிந்து மற்ற பயணிகள் கிளம்பி சென்றனர். எனது விமானம் புறப்படும் நேரம் முடிந்து 5 நிமிடங்கள் ஆகியிருந்தது. நான் எப்படியாவது பெர்லின் போக வேண்டும் திரைப்பட விழாவில் கலந்து கொள்ளவேண்டும். பதற்றபடாமல் இதை சமாளி என்று எனக்கு நானே நம்பிக்கையூட்டிகொண்டேன்.

எனக்கான விசாரணை ஆரம்பமானது. எவ்வளவு சொல்லியும் அதிகாரிகள் கேட்பதாக இல்லை. ஒரு கட்டத்தில், ஒரே ஒருமுறை பெர்லின் திரைப்படவிழா berlinale talents அமைப்புக்கு பேசிப்பாருங்கள். அவர்களிடம் என்னை பற்றி விசாரியுங்கள் என்று சொன்னேன். நீண்ட நேரமாகப் பேசிய பின்னர் திரைப்பட விழாவுக்கு அழைப்பெடுத்தார். அவர்கள் எனது தகவல்களை உறுதிப்படுத்தினார்கள். ஆனாலும் அதிகாரிகள் என்னை அனுப்ப முடியாது நான் சட்டவிரோதமாக தங்கிவிடுவேன் என்று திரும்ப திரும்ப சொன்னார்கள். என்னை திருப்பி அனுப்புவதற்காக எழுதுகையில் மீண்டும் berlinale talents நிர்வாகத்திலிருந்து அழைப்பு வந்தது. நீண்டநேரம் அவர்களோடு பேசிய பின்னர் அதிகாரி மீண்டும் எனது ஆவணங்களை எடுத்து சரிபார்த்தார். மிக கூர்மையான பார்வையோடு அவற்றை நீண்ட நேரம் திரும்ப திரும்ப பார்த்தவர், கண்களில் மகிழ்ச்சியோடு “உங்களுக்கு, நாங்கள் வழங்கிய கால அளவில் 7 மணிநேரம் overstay ஆகிறது. அந்த நேரம் விமான நிலையத்தில் இருந்தாலும் நீங்கள் நாட்டை விட்டு தாண்டமாட்டீர்கள். ஆகவே உங்கள் டிக்கட்டை மாற்றி ஒரு நாள் முன்னரே கிளம்ப வேண்டும். இல்லையேல் overstay அடித்து இனி இந்த நாட்டில் நுழைவதற்கு பூரணமாக தடைவிதித்து அனுப்புவோம்” என்று ஏளனப் பார்வையோடு சொன்னார்.

எனக்கு என்ன செய்வது என்று தெரியவில்லை. ஒட்டுமொத்த சேமிப்பையும் பயன்படுத்தித்தான் இங்கு வந்தேன். கையில் பணமில்லாத நிலையில் என்ன செய்வது என்று புரியவில்லை. பரவாயில்லை ஏதாவது தீர்வுகள் இருக்கும். இப்போது பெர்லின் போகவேண்டும் அதுதான் முக்கியம் என்று முடிவெடுத்தேன். "சரி நான் டிக்கெட் மாற்றுகிறேன், ஒரு நாள் முன்னரே கிளம்புகிறேன். தற்போது என்னை அனுமதியுங்கள்" என்று உறுதியான குரலில் சொன்னேன். அதிகாரி எனது கடவுச்சீட்டில் அனுமதி முத்திரை வழங்க நான் உள்ளே சென்றேன். எனது விமானம் சென்று விட்டதால் அங்கிருக்கும் எனது விமானத்துக்கான வாடிக்கையாளர் சேவையை அணுகி விசாரணை காரணமாக எனது விமானத்தை தவறவிட நேர்ந்த கதையை சொல்லி, இன்னொரு விமானத்தை பதிவு செய்ய என்னிடம் பணம் இல்லை ஏதேனும் உதவி செய்ய முடியுமா என்று கேட்டேன்.

அந்த பெண்மணிக்கு என்மீது பரிதாபம் ஏற்படவே விமானப்பட்டியலைப் பார்த்து அடுத்த விமானத்தில், எனக்கு ஓர் இருக்கையை கொடுத்தார். திரைப்பட விழாவிற்குச் செல்லுங்கள் என்று வாழ்த்தி அனுப்பினார். அடுத்த விமானத்தில் பெர்லின் வந்துசேர்ந்தேன். விமானம் மாறியதால் எனது பைகளை தேட முடியவில்லை. ஒரு நாள் முழுக்க காத்திருந்து கிடைக்காது போக, கடிதம் எழுதிகொடுத்துவிட்டு கிளம்பினேன். சப்பாத்துகள், குளிருக்கான ஆடைகள், மாற்று துணி என எதுவுமே இல்லாது எப்படி சமாளிக்கப்போகிறேன் என்ற கேள்வி எழுந்தது. சரி சமாளிப்போம் என்று முடிவெடுத்து திரைப்பட விழாவின் சேவை வாகனத்தில் ஏறினேன்.

2 நாள் பயணமும் அலைச்சலும் என்னை சோர்வடைய செய்ததால் களைப்புடன் இருக்கையில் சென்று அமர்ந்தேன். 'வாழ்க்கை ஏன் இப்படி அலைக்கழிக்கின்றது. எனக்கு எதற்கு இன்னொரு நாடு? வாழ்கிற நாட்டில் நான் புலம்பெயர் இனமாக தானே இருக்கிறேன். 5 தலைமுறையாக வாழ்ந்தாலும் என் பள்ளியில், பணியிடத்தில், வேறு இடங்களில் நாங்கள் குடியேறியவர்கள், எங்களுக்கு எமது நாடு சொந்தமில்லை என்று திரும்ப திரும்ப அறிவுறுத்தப்படுகின்றது. அந்நிய இனமாகத்தான் நடத்தப்பட்டிருகின்றோம். இவங்க சட்டவிரோதமா குடியேறும் போது யாரும் நிறுத்தி வச்சு கேள்வி கேட்கிறது இல்ல. என்னை மாதிரி ஒருத்தி வெளிநாட்டுக்கு விண்ணப்பிச்சா, நம்பிக்கை இல்லை நாணயம் இல்லை என்று பேசுறது. ஐஸ்லாந்து நாடு என்னோட விசாவை நிராகரிச்சது இந்த காரணத்தை சொல்லித்தான். லண்டனில் நடந்த பயிற்சிக்கு போனபோதும் இதே போல கடுமையான விசாரணைகள் இருந்ததன. விசாரணை முடிந்து நான் தான் கடைசியா விமானம் ஏறினேன். இங்க என் விமானமே போயாச்சு. சொந்த நாட்டிலும் மற்ற நாட்டிலும் இப்படி நடத்தப்படுவது எப்ப நிற்குமோ புரியல. ஆனால் இதை மாற்றவேண்டும். காலம் நிச்சயம் என்னை மாற்ற வைக்கும்" என்று என்னை நானே ஆற்றுப்படுத்திகொண்டேன்.

வாகனம் கிளம்பியது. கார் கண்ணாடி ஜன்னல் வழியே வானத்தை பார்த்தேன். நிலம் தான் வேறு வானம் எல்லாருக்கும் ஒன்றுதான் எனத்தோன்றியது. வானில் மழை பெய்வதற்காக கருமேகங்கள் திரள ஆரம்பித்தன.

தைவானில் இறையாண்மைக்கு கட்டுப்பட்டு வளர்க்கப்பட்டவன் நான். திரையரங்கில்

தேசியகீதத்திற்கு எழுந்து நிற்க வேண்டும் என்ற சட்டமிருகிறது. இன்றைய இளைஞர்கள்அதனை அடக்குமுறையாக எதிர்கின்றனர். அவர்களோடு எதிர்த்து நிற்க பிரியப்படுகிறேன். ஆனால் அதை செய்ய முடியவில்லை ஒவ்வொருமுறையும் குற்றவுணர்வு என்னை ஆட்கொள்கிறது. அதனால் படம் ஆரம்பித்து பத்துநிமிடம் கழித்து திரையங்கில் நுழையும் வழக்கத்தை கடைபிடிகின்றேன். தேசிய விழுமியத்தை புகட்டி புகட்டி வளர்த்த ஆசிய குடும்ப அமைப்பு, அரசியல் சூழல் என்பன நம் சுயத்தை சிதைக்கிறன

2

வானில் மழை பெய்வதற்காக கருமேகங்கள் திரள ஆரம்பித்தன.

Konzerthaus Berlin கட்டிடம் மிகக் கம்பீரமாகத் தெரிந்தது. இந்த இடத்தில்தான் இயக்குனர் Ai Weiwei, 14,000 Life jacketsகளை தூணில் கட்டி புலம்பெயர்பவர்கள் பற்றிய விழிப்புணர்வை ஏற்படுத்த முயன்றார்.

Ai Weiwei- ஒரு திரைப்பட இயக்குனர் என்பதை விட திரைப்பட செயற்பாட்டாளர். சீனாவில் கலகக்காரராக புகழ்பெற்றவர் நான்கு வருடம் கடவுச்சீட்டு பறிமுதல் செய்யப்பட்டு தடுத்து வைக்கப்பட்டார். அதன் பிறகு ஜெர்மனிக்கு வந்தவர். பெர்லின் திரைப்படக் கல்லூரியில் பேராசிரியராக கடமையாற்றிகொண்டே தனது செயற்பாடுகளை முன்னெடுத்தார்.

அமெரிக்கவிலிருந்த போது தனது New York நகர அனுபவங்களை ’’New York also very lonely city. There wasn’t always happy. I had no money I hardly speak English. It was pity hopeless” என்று பதிவு செய்துள்ளார். பரபரப்பான நகரத்தை அவர் விபரித்தவிதம் புலம்பெயர் மனநிலையின் வெளிப்பாடாகவே அமைந்தது. சொந்த நாட்டில், பல இன்னல்களுக்கு உள்ளானவர், ஜேர்மனிக்கு புலம்பெயர்ந்த பின்னர் திருப்தியடைய முடியவில்லை.

உலகம் முழுவதும் 65 மில்லியன் மக்கள் சொந்த நிலத்திலிருந்து அகற்றப்பட்டும் அகன்றும் அகதிகள் என்ற பெயரில் புலம்பெயர்பவர்களாக இருப்பதை கண்டு மனம் வருந்தியவர். அதனை பதிவு செய்ய எண்ணி ஆவணப்படம் எடுக்க முடிவு செய்தார். 23 நாடுகளில் 40 முகாம்களை பதிவு செய்து உருவானது “Human Flow” ஆவணத்திரைப்படம்.

HUMAN FLOW

கடல் வழியாக ஐரோப்பா வருபவர்கள், ஆப்கானில் படிக்க முடியாது டெண்டில் வாழும் சிறுவர்கள், ஒரு பொட்டலத்தை போல கட்டி அனுப்பப்படும் கைக்குழந்தைகள் என படம் முழுவதும் அவர் காட்டும் மனிதர்களின் நிலை மனதை ரணமாக்கக் கூடியவை. ஆரம்பத்தில் இத்தகைய மக்களை அனுமதித்த ஜேர்மனி, ஒருகட்டத்தில் தடுப்பு வேலியிட்டு அனுமதிக்க மறுத்தது. அந்த தடுப்பு வேலிக்கு பின்னால், 13,000 மக்கள் காத்திருக்கின்றனர். சிறிய அளவு உணவோடு தினம் தினம் போராடவேண்டிய நிலையில் மக்கள் காத்திருக்கின்றனர். ரயில் நிலையத்தில் வசிக்கும் ஒரு பெண்மணி, “ஒவ்வொரு முறையும் ரயிலை பார்கையில் என்று இதில் பயணித்து நாட்டுக்குள் போவோம் என்று ஏக்கமாக இருக்கின்றது” என சொல்லும் போதே அவரது குரல் உடைகின்றது. தேசங்கள் தோறும் வெவ்வேறு




...

விதமான கதைகள் படம் முழுவதும் தொடர்கின்றன. இந்த ஆவணப்படத்தில் மனிதர்கள் பற்றி பேசிக்கொண்டிருக்கையில் சட்டென்று மிருகக்காட்சி சாலையில் அடைக்கப்பட்ட புலம்பெயர்ந்த புலியை காட்டுகின்றனர். புலி காட்டின் அரசன். அது இல்லாவிட்டால் இயற்கை சமநிலை மாறும். அதை அடைத்து வைத்து அகதியாக்கும் அணுகுமுறையை பதிவு செய்ய எண்ணினேன். அதனால்தான் புலியை காட்சிப்படுத்தினேன்" என்று இயக்குனர் தெரிவித்தார். அந்தக் கட்டத்தில் இந்த உலகம் எங்களுக்கு மட்டுமானதல்ல. பிற உயிர்களும் பிற உயிர்களுக்கும் உரிமை உண்டு அவை எங்களால் அச்சுறுத்தல்களுக்கு உள்ளாக்கப்பட்டு புலம்பெயர்ந்து கொண்டிருகின்றன என்று புரிந்தது.

இத்தகைய விழிப்புணர்வு மேற்கொள்ளும் பெர்லினில்தான், எனக்கு நுழைவு அனுமதி வழங்க மாட்டோம் என்று அந்த அதிகாரி சத்தம் போட்டார்.

நினைக்கையில், எனக்குள் வழக்கம்போல வெறுமை குடிகொண்டது. எனது சிந்தனைகளை மழைத் தூறல்கள் கலைத்தன. மழைக்கு ஒதுங்க பேருந்து நிலையத்தை நோக்கி நடந்தேன்.

3

மழைக்கு ஒதுங்க பேருந்து நிலையத்தை நோக்கி நடந்தேன். பேருந்து இருக்கையில் அமர்ந்துகொண்டு தூறல் விழுவதை கவனிக்க ஆரம்பித்தேன். சற்று நேரத்தில் இடப்புறம் திரும்பி பார்த்தேன். பக்கத்து இருக்கையில் அந்த மனிதர் அமர்ந்திருந்தார். வெறித்த

பார்வையுடன் பேசத்தொடங்கினார்.

மலேசியாவின் சைனா டவுனின் Petaling Street பேருந்து நிலையம்.

புன்னகையோடு பேச்சை ஆரம்பித்தார். அவர் ஒரு அமெரிக்கர் என்பதை அவருடைய ஆங்கிலம் உணரவைத்தது. தான் ஒரு இஸ்லாமியன் என்றும் வங்கி ஊழியன் என்றும் கூறினார். அமெரிக்காவில் தன்னால் வசிக்க முடியவில்லை, நிறைய பிரச்னைகள் இஸ்லாமிய நாட்டுக்கு செல்லவேண்டும் என்று முடிவெடுத்து மலேசியா வந்துவிட்டதாக கூறினார். சொல்லும்போதே குரல் தளர்ந்துவிட்டது. அதன் பிறகு அவர் எதுவும் பேசவில்லை .

எதனால் புலம்பெயர்ந்தீர்கள் என்று நானும் கேட்கவில்லை, அவரும் சொல்லவில்லை. எங்களுக்கிடையில் மிக நீண்ட மௌனம் நிலவியது.

என்ன நடந்தாலும் மனிதர்கள் வாழ்கின்றார்கள், வாழ்ந்து முடித்துவிட விரும்புகின்றார்கள். Survival என்பது மனிதர்களை எத்தனை இன்னல்களை தாண்டி இடம் பெயர்ந்து, புலம்பெயர்ந்து வாழச் செய்து விடுகிறது. என் நண்பன் அடிக்கடி சொல்வான். ஒரு நாளின் ஆகப்பெரும் கஷ்டங்கள் நிகழ்கையில் கடைசி நம்பிக்கையாக சொல்லிகொள்வேன் ‘இந்த நாள் நிச்சயம் விடியத்தான் போகிறது’ என்று.

அந்த வார்த்தைக்குள் அசாத்தியமான ஒளி இருப்பதை உணர்கின்றேன். அதை சினிமாவில் எனக்கு உணர்த்தியவர் Wang Bing. மிகவும் புகழ்பெற்ற ஆவணப்பட இயக்குனர். இவருடைய ஆவணப்படங்களில் Ta’ang உள்நாட்டு யுத்தத்தினால் மியன்மார் – சீன எல்லையில் வசிக்கும் மக்களை பற்றியது. பர்மிய இன சிறுபான்மையினரான தாங் மக்கள், உள்நாட்டு யுத்தத்தால் மியன்மார் – சீன எல்லைக்கிடையில் சிக்கியுள்ளனர். கழிவிரக்கமோ கண்ணீரோ இல்லாமல் நிர்க்கதி நிலையிலும் வாழ்கையை இயல்பாக தொடரும் அந்த மக்களின் அன்றாட செயற்பாடுகளை இந்த படத்தில் பதிவு செய்துள்ளனர்.



...

TA ANG

இந்த மக்களின் வாழ்வை மூன்று பகுதிகளாக கட்டமைத்துள்ளனர். முதலாவது கட்டத்தில், ஒரு பள்ளத்தாக்கில் ஆண்களும் பெண்களும் குழந்தைகளும் என்று தங்கள் உணவு தேவையையும் அன்றாட வாழ்வியல் தேவைகளையும் எவ்வாறு நிறைவேற்றிக்கொள்கின்றார்கள் என்பதை நாம் காணமுடியும். இரண்டாவது கட்டம், ஒரு விரிவான இரவுநேரத்தை பற்றியது. சலசலப்பு, குடும்ப விஷயங்கள், விமான சத்தம் , குழப்பம் மற்றும் தீப்பிழம்பின் ஓசை என்று அந்த உரையாடல்கள் மிக நீண்டு செல்கின்றன. இறுதிப் பகுதி அந்த மலை சரிவுகளை தாண்டி அவர்களது தேவைகளை நிறைவேற்றிக்கொள்ளும் நகர்வாக அமைந்துள்ளது.

எதிர்காலம் என்பதே நிச்சயமற்றது என்று தெரிந்தும் இவர்கள் வாழ்கின்றனர். அனைத்து பிள்ளைகளும் ஒரே குடும்பமாக வளர்வதையும் கிடைக்கின்ற வளங்களை பகிர்ந்து வாழ்வதும் எது நிகழ்ந்தாலும் தங்களை இழக்காது பயணிக்கும் அந்த மக்களின் வாழ்க்கை பெரும் அமைதியை மனதிற்குள் விதைக்கவல்லது.

மழைத்தூறல் மெல்ல குறைந்தது. அடுத்த நிகழ்வுக்கு நேரம் நெருங்க அங்கிருந்து எழுந்து தெருவில் இறங்கி நடக்கத்தொடங்கினேன்.

4

தெருவில் இறங்கி நடக்கத்தொடங்கினேன். பாதை நீண்டு கொண்டே சென்றது. Google Map பல நேரங்களில் சிக்கல்படுத்தியது. பெர்லின் நகரின் முக்கியமான ஒவ்வொரு இடத்தையும் தேடிச்சென்று பார்க்க ஆரம்பித்தேன்.

Checkpoint Charlie இடத்தை படம் பிடித்துகொண்டிருக்கையில் ஒரு இளம் பெண் வந்தாள். ஐரோப்பியர் இல்லை என்று முகம் காட்டிக்கொடுத்தது. ஒரு தாளினை நீட்டினாள். மாற்றுதிறனாளிகளின் சின்னத்தை கொண்டு ஏதோ ஜே ர்மன் மொழியில் எழுதப்பட்டிருந்தது. மாற்றுதிறனாளிகளுக்கு உதவி செய்யும் விதமாக பணம் சேர்கிறோம் என்றாள். 5 யூரோக்களை கொடுக்க முயல, 1oo யூரோக்களை தர சொல்லி கேட்டாள். இல்லை என்னிடம் அவ்வளவு பணம் இல்லை. எங்கள் நாட்டில் அது பெரிய தொகை. எனக்கு அவ்வளவு தர முடியாது என்று மறுக்க, எழுபது யூரோ தரச்சொன்னாள். என்னால் அவ்வளவு தர முடியாது என்று மறுக்க அவளது மொழியில் ஏதோ சத்தமாக பேச ஆரம்பித்தாள். என்னை சுற்றி இன்னும் பல இளம் பெண்கள் கூடி விட்டனர். என் கையிலிருந்த பத்து யூரோவை அந்த பெண் பிடிங்கிகொள்ள மற்ற பெண்கள் என்னை சுற்றி வளைத்து திட்ட தொடங்கினார்கள். நான் கூட்டத்தில் சிக்க அந்த பெண் அங்கிருந்து நழுவத்தொடங்கினாள். இவர்களுடன் இருந்தால் என் பணத்தை பறித்துவிடுவார்கள் என்று புரியவே, நான் இந்த பெண்கள் கூட்டத்தை விலத்தி ஓட ஆரம்பித்தேன். ஏமாற்றப்பட்ட கோபம் என்னை வதைத்தது. எப்படி இதுபோல ஏமாற்ற மனம் வருகின்றது. அது பிழை இல்லையா? இன்னொருவர் உழைத்த பணத்தை எப்படி அப்பாவிபோல பேசி அடித்து பிடுங்குகின்றனர் என்று மனதிற்குள்

திட்டிக்கொண்டேன்.

கோபத்தில் தொடர்ந்து வேகமாக நடக்க ஆரம்பித்தேன். இன்னொரு இடத்திலும் இதே போன்ற தாளுடன் ஒரு கூட்டம் சுற்றிகொண்டிருந்தது. அவர்களை கவனிக்க ஆரம்பித்தேன். இவர்கள் ஐரோப்பாவிற்கு புலம் பெயர்ந்தவர்களாக இருக்குமோ என்று தோன்றியது. அவர்களது முகம், உடைகள் , பேச்சு முறை எல்லாம் என்னை யோசிக்க வைத்தது . வருமானத்திற்காக இப்படி நடக்கின்றனர் போல என்று தோன்றியது. இதுபோன்ற பெரிய நகரத்தில், இவர்கள் குடிவருவதன் மூலம் வேலைவாய்ப்பு பிரச்சினைகள் ஏற்படத்தான் செய்யும். நகரம் என்பது நமக்காக என்றுமே நிற்காது. அதற்கு நாம் ஒரு பொருட்டே அல்ல என்ற போது இவர்களுக்கான தேவைகளை அது கவனிக்காது. வேலை இன்றி இதுபோன்ற வழிமுறைகளை நாட வேண்டிய கட்டாயம் அவர்களுக்கும் ஏற்பட்டிருக்ககூடும். இதனால்தான் புகலிடம் கோருபவர்களை ஐரோப்பாவை சுற்றியுள்ள சிறு தீவுகளில் குடியேற்றும் வழமை ஏற்பட்டது போலும். ”Fire at sea’’ படத்தில் அதனை பதிவு செய்திருந்தனர். இத்தாலியின் அருகிலுள்ள Lampedusa தீவில் வடக்கு ஆபிரிக்கர்களை குடியேற்றுகின்றனர். அந்த தீவில் வாழ்பவர்களையும் கடல்வழியே வருபவர்களையும் அதனை ஒழுங்கமைக்கும் முகாமை சேர்ந்தவர்களையும் இந்த படம் சித்தரிக்கின்றது. கடல் வாழ்க்கையும், ஒரு சிறுவனின் மனநிலையும் மையப்படுத்தி நகரும் இந்த படத்தில் குடியேற்றவாசிகளின் வருகையால் அந்த சமுகத்தில் ஏற்படும் மாற்றத்தையும் உயிர் பிழைத்து வரும் மக்களின் வாழ்வையும் பாசாங்கில்லாது பதிவு செய்திருக்கின்றனர். நீண்ட கடல் பயணத்தின் பின்னர் முகாமுக்கு வரும் ஒருவன் உடல் முழுவதும் ஈரமாகி உள்ளாடையுடன் களைத்துபோய் அமர்ந்திருகின்றான். உயிர் பயம் நீங்கி அவன் மெல்ல மெல்ல இயல்பு நிலைக்கு வந்து அமைதியாவதை படத்தில் பார்க்கலாம். உயிர் மட்டும் எஞ்சியுள்ள நிலையில் அவனது நிம்மதியான மனநிலையை நாம் புரிந்துகொள்ள முடியும். வாழ்வதில் இந்த மனிதர்களுக்குத்தான் எவ்வளவு ஆசை?

எனது சிந்தனைகள், என்னை விட வேகமாக பயணித்தன. ஏமாற்றப்பட்ட இயலாமை இருந்தாலும் கோபம் சற்று குறைந்தது. கோபம் குறைய களைப்பு தெரிந்தது. ஒரு இடத்தில் நின்று கொண்டேன் . வீதிகளை பார்த்தேன். அப்போதுதான் உணர்ந்து கொண்டேன். நான் நீண்ட தூரம் வந்துவிட்டேன், வழி மாறிவிட்டேன் என்று. திரும்பி போக வழி தெரியாது ஸ்தம்பித்து நின்றேன்.

5

திரும்பிப் போக வழி தெரியாது ஸ்தம்பித்து நின்றேன். லண்டன் நகரமே விரைவாக இயங்கிகொண்டிருக்க நான் மட்டும் அதில் நின்று விட்டது போலிருந்தது. ஒருவரை நிறுத்தி வழி கேட்க முனைந்தால் யாருமே நிற்கவில்லை. நம்மை அலட்சியமாக கடந்து சென்றனர். இன்னொருவரை நிறுத்தி வழி கேட்டால், இதுகூட தெரியாமலா லண்டன் வந்தீர்கள் என்று கூறிவிட்டு சென்றுவிட்டார். இலங்கையில் எத்தனை வெளிநாட்டவருக்கு நான் வழி சொல்லியிருக்கிறேன். ஏன் இப்படி நடந்துகொள்கின்றனர்? என்று தோன்றியது.

தங்கள் நேரத்தை மற்றவருக்காக விரயம் செய்வதை அவர்கள் விரும்பவில்லை என்று புரிந்தது. இன்னொரு நாட்டை சேர்ந்தவர்களை, எங்களை போன்ற ஆசிய கறுப்பு தோலை குறித்து அவர்களுக்கு வேறு அபிப்ராயங்கள் இருக்கக்கூடும் என்று தோன்றியது.

சற்றுதூரம் நடந்து மீண்டும் வழிகேட்க முனைகையில் ஏதோ வித்தியாசமாகத் தெரிய சட்டென்று இரண்டடி பின்னால் நகர்ந்தேன். ஒரு பெரிய கடையின் கண்ணாடியில் எனது விம்பம் தெரிந்தது. ஆனால் அது நான் இல்லை. எனது விம்பத்திற்கு பதிலாக ஒரு நீலக் கோர்ட்டும் சிவப்பு தொப்பியும் அணிந்த கரடி நின்று கொண்டிருந்தது. இந்த கரடியை எங்கயோ பார்த்திருக்கின்றேனே என்று தோன்ற யோசித்தேன். அந்தக் கரடி விம்பம் என்னை பார்த்து சிரிக்க எனக்கு ஞாபகம் வந்தது. இது Paddington!

Paddington கரடியை திரைப்படத்தில் பார்த்திருக்கின்றேன். இப்போது அந்த கரடியே நான் தான் என்று புரிந்ததும் சிரிப்பு வந்தது. லண்டன் நகருக்கு வந்து எதுவுமே புரியாமல் ஒன்றுமே தெரியாமல் Paddington போலத்தானே நான் அலைந்து கொண்டிருகின்றேன்.

புகலிடம்கோரி வருபவர்களை கழிவிரக்கத்தோடும் வெறுப்போடும் பார்ப்பதை தவிர்க்கவும் பிற இன மக்களை புரிதலோடு அணுகவும் குழந்தைகள் இலக்கியத்தின் கதாபாத்திரமான Paddington உதவியிருப்பதாக தோன்றியது. இன்று பெரும் பிரச்சினையாக மாறியுள்ள புலம்பெயர் மக்களின் நிலைக்காக இந்த கதாபாத்திரம் தற்காலத்திற்கு தொடர்ந்து எழுதப்பட வேண்டும் என்று தோன்றியது.

என்னை Paddingtonஆக உணர்ந்த பின்னர் ஏதோ ஒருவித மகிழ்ச்சி உள்ளூர ஏற்பட்டது. அதன் பெரிய கண்களில் நான் என்னை பார்த்தேன்.

சட்டென்று, தூறல் மெல்ல மெல்ல அதிகரித்து மழையாக மாறியது. மழையில் நனையக்கூடாது என்று டாக்ஸியை பதிவு செய்துவிட்டு காத்திருந்தேன்.

6

மழையில் நனையக்கூடாது என்று டாக்சியை பதிவு செய்துவிட்டு காத்திருந்தேன். இரவு நேரம் திரைப்படம் முடிந்து நடந்து செல்வது எனது வழக்கம். இன்று இந்த மழையில் சாத்தியம் இல்லை என்பதால் டாக்ஸியை பதிவு செய்துவிட்டேன். டாக்சி வந்தது. டாக்சியில் ஏற, மீட்டரின் எழுத்துகள் அரேபிய மொழியைப் போல இருந்ததன. நான் ஆங்கிலத்தில் பேசினாலும் டாக்சி ஓட்டும் மனிதர் அவரது மொழியில் பதில் சொன்னார். டாக்சி நகர ஆரம்பிக்க, என் நினைவுகள் Helmutஐ நோக்கி சென்றது.

Helmut ஒரு டாக்சி ஓட்டுனர். New York நகரத்தில் டாக்சி ஓட்டுகின்றார். "Night on Earth'' திரைப்படத்தில் ஒரு இரவில் 5 நகரங்களின் டாக்சி ஓட்டுனர்களின் கதைகள் காட்டப்படும். அதில் இவரும் ஒருவர்.

Yoyo டாக்ஸிக்காக காத்திருகின்றான். அவனுக்கு Helmut இன் டாக்சி கிடைக்கிறது. யோயோவின் ஆங்கிலத்தையும் அவரால் புரிந்துகொள்ள, முடியவில்லை. கிழக்கு

ஜெர்மனியை சேர்ந்த அவர் அமெரிக்காவுக்கு புலம்பெயர்ந்து வந்துள்ளார். இங்கிருக்கும் வீதிகள் அவருக்கு பழக்கமில்லை. இந்த டாக்சி ஓட்டுவதால் கிட்டும் பணம் தான் அவரது வாழ்வாதாரம் என்ற நிலை. இவருக்கு போகும் வழியை பேசிப் புரியவைப்பதில் அர்த்தமில்லை என்று உணரும் யோயோ அவரை பயணிகள் இருக்கையில் அமரச் செய்துவிட்டு தானே டாக்சியை ஓட்ட ஆரம்பிக்கின்றான். இந்த பயணத்தில் யோயோவின் அமெரிக்க நடைமுறைகளை அவர் ரசிப்பதும் . Helmut என்ற பெயரை ஹெல்மட் என்று யோயோ கிண்டல் செய்வதுமாக அந்தப்பயணம் தொடர்கிறது. இறுதியாக இறங்கும் இடம் வந்ததும் டாக்சிக்கான பணத்தை கொடுத்துவிட்டு அவர் வசிக்கும் இடத்திற்கு எவ்வாறு செல்வது என்று வழியும் சொல்வான். ஆனால் அதை புரிந்துகொள்ள முடியாத Helmut, தப்பான வீதியில் செல்ல ஆரம்பிப்பார். New York என்று கூறியபடியே பயணத்தை தொடர்வார். பயணம் நீண்டுகொண்டே செல்ல குழப்பத்தோடு என்ன செய்வது என்று தெரியாமலே பயணத்தை தொடர்வார்.

இந்த இறுதிக்காட்சி எனக்கு, என்னை நினைவூட்டியது. என் சொந்த நாட்டில் தொடர்பறுந்த ஒருத்தியாகவும் வெளிநாட்டில் அந்நியமாக்கப்பட்டவளாகவும் இருந்திருக்கின்றேன் இருக்கிறேன். Helmut போல வழிதெரியாது பலமணிநேரம் அல்லாடிய இடங்கள் அநேகம் எனலாம்.

சட்டென்று டாக்சி நிற்க, என் நினைவுகளும் நின்றன. பணத்தை கொடுத்து விட்டு இறங்கினேன். வெளியே, மழை இன்னும் நிற்கவில்லை.

7

வெளியே, மழை இன்னும் நிற்கவில்லை. உணகவகத்தில் நுழைந்தேன். மற்ற நாட்டை சேர்ந்த பலர் அமர்ந்திருக்க, நானும் அவர்களுடன் உணவருந்த ஆரம்பித்தேன்.

உணவகத்தில் எமது உரையாடல் தொடர்ந்தது.

“எல்லாம் அந்த ரேசிஸ்ட் அதிகாரியால் வந்தது. அவள் மட்டும் பிரச்சினை செய்யாமல் இருந்திருந்தால் நீ இப்படி immigration departmentக்கு அலையத்தேவை இல்லை. அவள்தான் காரணம், இந்த அதிகாரிகளே இப்படித்தான் மற்றவர்களிடம் நன்றாக பேசுவார்கள். நான் பாஸ்போர்ட் நீட்டினால் அதில் நேபாளம் என்ற பெயரை பார்த்ததும் உடனே குரல் மாறும். ஒரு மாதிரி கீழ்மைப்படுத்துவார்கள். நீ எல்லாம் எங்கள் நாட்டுக்கு வருகின்றாயா என்ற கசப்பு அவர்களிடம் வெளிப்படும். இந்த பிரச்சினை ஓரளவு குறைந்தது நான் UKக்கு குடியேறி UKபாஸ்பாேர்ட் எடுத்த பின்னர் தான்” என்று நேபாள இயக்குனர் கோபம் அடங்காமல் தவித்தாள்.

“எனக்கும் இதேபோன்ற அனுபவமிருக்கு. நான் ஆப்கான் என்பதால் பலமணிநேரம் விசாரித்தனர். புலம்பெயர்ந்து குடியுரிமை பெற்றாலும் பிரச்சினை தீரவில்லை . என் நாட்டில் ஒரு பெண் இயக்குனராக செயற்பட முடியாது. புலம்பெயர்ந்துதான் படங்களை உருவாக்க முடியும் என்ற நிர்பந்தம் இருக்கிறது. அதனால்தான் புலம்பெயர்ந்தேன். உன்னிடம்

எங்கள் நாட்டு பணத்தை ஏன் தரவேண்டும் என்று கேட்டாங்களே, அவங்க நமக்கு நிச்சயம் கொடுக்கணும் கொடுத்தே ஆகணும். எங்கள் நாட்டிலிருந்து எத்தனை வருடமா கொள்ளை அடிச்சிருக்காங்க. சுரண்டி பிழைக்கிறாங்க. நாங்கள் புகலிடம் கேட்டால் மட்டும் வலிக்குது. உடனே விரட்டுவாங்க, மறுப்பாங்க. நாங்க அப்படித்தான் வருவோம். எங்களிடம் அடிச்சி பிடுங்கி சுரண்டி உறிஞ்சி தானே இவங்க செழிப்பா வாழறாங்க. அதுல எங்களுக்கு உரிமை இருக்கு. நம்ம உரிமையை நாம கேட்கணும்" என்று உறுதியான குரலில் சொன்னாள்.

"என்னோட அனுபவம் கொஞ்சம் வேற, என் கோபம் எல்லாம் என் மீதுதான்" என்று தைவான் தயாரிப்பாளர் பேச ஆரம்பித்தார். "தைவானில் இறையாண்மைக்கு கட்டுப்பட்டு வளர்க்கப்பட்டவன் நான். திரையரங்கில் தேசியகீதத்திற்கு எழுந்து நிற்க வேண்டும் என்ற சட்டமிருகிறது. இன்றைய இளைஞர்கள்அதனை அடக்குமுறையாக எதிர்கின்றனர். அவர்களோடு எதிர்த்து நிற்க பிரியப்படுகிறேன். ஆனால் அதை செய்ய முடியவில்லை ஒவ்வொருமுறையும் குற்றவுணர்வு என்னை ஆட்கொள்கிறது. அதனால் படம் ஆரம்பித்து பத்துநிமிடம் கழித்து திரையங்கில் நுழையும் வழக்கத்தை கடைபிடிகின்றேன். தேசிய விழுமியத்தை புகட்டி புகட்டி வளர்த்த ஆசிய குடும்ப அமைப்பு, அரசியல் சூழல் என்பன நம் சுயத்தை சிதைக்கிறன. இதிலிருந்து விடுபட்டு எங்காவது ஒரு மேற்கு தேசத்தை நோக்கி ஓடிவிடத்தோன்றுகிறது. இவர்கள் எப்படி நடத்தினாலும் பரவாயில்லை ஓடிவிடவேண்டும்''

"நானும் உன்னைப்போலத்தான் ஈரானிலிருந்து ஓடினேன். அங்கு நாட்டின் சுவர்களை தாண்டி ஒன்றுமறியாத கூட்டம் நம்மை உள்ளே தள்ளுமேயன்றி வளரவிடாது. எனது குடும்பம் சிறுவயதில் நாட்டை விட்டு வெளியேறி அமெரிக்கா சென்றதால்தான் இன்று என்னை தயாரிப்பாளராக அடையாளப்படுத்திக்கொள்ள முடிந்தது"

"என் கதையும் இதேதான். நான் கனடா சென்ற பிறகுதான் என்னால் பாகிஸ்தான் சினிமாவில் நான் இருக்கிறேன் என்பதை அடையாளப்படுத்திக்கொள்ள முடிந்தது" அவளது பேச்சை இடைமறித்த மற்ற பாகிஸ்தான் இயக்குனர் "நீங்கள் சொல்கிற விஷயங்கள் சரிதான். ஆனால் அவற்றை பாகிஸ்தானில் இருந்து செய்வதற்கும் வேறு நாட்டிலிருந்து பாகிஸ்தான் அரசுக்கு எதிராக புரட்சி பேசுவதற்கும் வித்தியாசம் இருக்கிறது. நான் சொந்த நாட்டிலிருந்து பல பிரச்சினைகளுக்கு மத்தியில் பெண்களின் பாலியல் குரலை பதிவு செய்கிறேன். நீங்கள் அந்நிய நாட்டிலிருந்து அரிசயல் பேசுகின்றீர்கள். இது ஒரு வசதியான வழிமுறை" என்றாள்.

"என்னால் எனது நாட்டில் நான் நினைப்பதை செய்ய முடியாது. அச்சுறுத்தல் வந்தது குடியேறிவிட்டேன். இன்று நினைக்கிற படங்களை எடுக்க முடிகிறது. எனக்கு சினிமா எடுக்கணும் அதற்கு நான் உயிரோடிருக்கமில்லையா? நான் நிச்சயம் நாட்டுக்கு திரும்ப மாட்டேன். அங்கு சென்று வாழ துளியும் விருப்பமில்லை. என் முயற்சிகள் தொடரவே செய்யும்'' என்றாள் .

என் நிலைப்பாட்டை கேட்டனர், ''உங்களை போல எனக்கு காரணங்கள் இல்லை. எங்கள் நாட்டில் அடக்குமுறை, அதிகாரப்படிநிலை என்று எல்லாமே உண்டு. ஆனாலும்

வெளிநாட்டுக்கு வரவேண்டும் என்று நினைப்பது பணம் சம்பாதிக்க மட்டும்தான். சில வருடங்கள் வெளிநாட்டில் நன்றாக உழைத்து அந்த பணத்தை எடுத்து வந்து படம் செய்ய வேண்டும் என்று தோன்றியதை தவிர நாட்டை விட்டு புலம்பெயர வேண்டும் என்று தோன்றவில்லை . எங்கள் மக்கள் இன்னும் சொந்த நாட்டில் அரசியல்மயப்படுத்தப்படவில்லை. எங்களை எவ்வாறு அழைப்பது என்பதில் கூட ஏகப்பட்ட சிக்கல்கள் இருக்கின்றன. எனது சொந்த நாட்டில் நாங்கள் புலம்பெயர் மக்களாகத்தான் இருக்கின்றோம். எனது நாட்டில் எனக்கும் என் சமூகத்திற்கும் உரிமை வேண்டும். எங்கள் குரல்கள் பதிவு செய்யப்பட வேண்டும் என்று கருதுகிறேன்” என்று சொன்னேன். புரிந்துகொண்டார்கள்.

இளம் தலைமுறை இயக்குனர்கள் தனது சுயத்தை தேடி வெளிநாடுகளில் விரும்பி புலம்பெயர விரும்புவது அவரவர் சுய விருப்பம் என்று கடந்து போய்விட முடியாது. இவர்கள் Contemporary Cinemaவில் மாற்றத்தை ஏற்படுத்தக்கூடும் என்று தோன்றியது.

ஒரு நாட்டில் இன்னொரு சமூகம் வந்து குடியேறுவதால் நிச்சயம் பல மாற்றங்கள் ஏற்படும். அந்த நாடுகளின் சினிமா சூழலும் படங்களும் நிச்சயம் மாற்றத்துக்கு உள்ளாகும். பாம்பரியம், சுயாதீனம்,பிணைப்பு, பாலியல்,கலை முறைகள் என்று அவற்றில் மாற்றங்களை எதிர்நோக்க எதிர்கால சினிமா தயாராகி விட்டது என்றே தோன்றியது.

எங்களை போல சுயத்தை தேடி பயணிக்கின்ற கூட்டத்தின் சிந்தனைகள் சொந்த நாட்டின் வேர்களை அறுத்து எரிந்து பயணிக்க வல்லவை. அடுத்த பத்துவருட சுயாதீன படங்களில் இது பெரும் தாக்கத்தை ஏற்படுத்தக்கூடும் என்பது புரிந்தது. உலக திரைப்பட மையங்கள், கூட்டிணைவின் மூலம் படங்களை உருவாக்க எங்களுக்கு அறிவுறுத்துவதால் இத்தகைய புலபெயர் மக்களுக்கான படங்களின் சந்தை வாய்ப்பு விரிவடையவுள்ளது. புலம்பெயர்பவர்கள் தங்கள் அரசியலை எதிர்க்கவும் பாரம்பரியத்தை ஏதோ ஒரு வகையில் பற்றி பிடிக்கவும் முனையும் முரண்பாடான கதாபாத்திரங்களை தரக்கூடும். அதேநேரம் சந்தைவாய்ப்பை கணித்து பாசாங்குமிக்க புலம்பெயர் கருத்தியல் படங்கள் வருவதையும் யாராலும் தடுக்கவே முடியாது என்று தோன்றியது.

எல்லாவற்றுக்கும் மேலாக, அமெரிக்காவை களமாகக் கொண்ட Paterson திரைப்படத்தில் அமெரிக்கர்கள் இல்லாத பிற இனங்கள் படம் முழுவதும் வருவதை போல உலகத்தின் எல்லா இடங்களும் மாறினால் நன்றாக இருக்கும் என்று தோன்றியது.

ஜன்னலுக்கு வெளியே பார்த்தேன். மழை இன்னும் அதிகமாக பொழியத் தொடங்கியது.

# 19. என்ட அல்லாஹ்! காயங்களை ஆற்றும் கதைகள்: ஏபிம். இத்ரீஸ்

செப்டம்பர் 2020/பனுவல்கள்

BY ஏ. பி. எம். இத்ரீஸ்

எண்பதுக்குப் பின்னரான இலங்கையின் வாழ்வியல் வெளி வன்முறை நிறைந்த ஒன்றாகவே மேற்கிளம்புகின்றது. அரசியல் பௌத்தமும் சிங்களப் பேரினவாத எழுச்சியும் அதை எதிர்கொள்வதில் சிறுபான்மைச் சமூகங்களின் போராட்டங்களும் எமது அண்டை நாடான இந்தியாவின் வெளிப்படையான தலையீடு போன்றன யாவரும் அறிந்த விடயங்களே. இந்த இனமுரண்பாட்டுச் சூழல் தடாலடியாகத் தோன்றிய ஒன்றல்ல. ஐம்பதுகளின் நடுப்பகுதியிலிருந்து மேற்கிளம்பிய இனவாத அரசியல் தனது தர்க்க ரீதியான முதிர்நிலையை எண்பதுகளில் எட்டிவிட்டது என்பதே உண்மையாகும். இனமுரண்பாடு அல்லது இன மோதுகை இரு தேசிய இனங்களுக்கிடையே நேரடியாக நடைபெற்றாலும் மற்றொரு தேசிய இனமான முஸ்லிம் மக்களையும் மிகக் கொடூரமாகத் தாக்கியது.




...

என்ட அல்லாஹ் – சிறுகதைத்தொகுதி

சிங்களப் பேரினவாதம் சிறுபான்மைச் சமூகங்கள் மீது கட்டவிழ்த்துவிட்ட

வன்முறைக்கெதிராகப் போராடவும் பேரினவாதத்தின் கொடும்பிடியிலிருந்து தமிழினத்தை மீட்கும் பணியிலும் தமிழ்க்கட்சி அரசியல் தோற்று நின்ற வெற்றிடத்திலிருந்தே தமிழ் இளைஞர்களது ஆயுதப்போராட்டம் வெடிக்கின்றது. ஆரம்பத்தில் தமிழ்ப் பேசும் மக்களின் போராட்டமாக தோற்றம் காட்டினாலும் பின்னர் முஸ்லிம்கள் மீது வன்முறை முடுக்கிவிடப்பட்டது. நம்மவர்கள் கொல்லப்படும் போது எதற்காகக் கொல்லப்படுகிறோம் என்பதைக்கூட அறிய முடியாத நிலை இரு தசாப்த காலம் நீடித்துள்ளது. மின்கம்பங்களில் தொங்கவிடப்பட்டும் வயல்வெளிகளில் வெட்டிப்போடப்பட்டும் கடத்திச் செல்லப்பட்டு சித்திரவதை செய்யப்பட்டும் தாயின் வயிற்றைக் கிழித்து சிசுவை வெளியெடுத்து முலையரிந்து பாலூட்டிய சம்பவங்களும் உணவு சமைக்கச் சென்றவர்களே உணவாகிய கதையும் இக்காலங்களில் நடந்தேறியுள்ளன. தனித்தமிழ் இயக்கமாக சுருங்குவதற்கு முன்பு தமிழ்ப் போராட்ட இயக்கங்களில் முஸ்லிம்களில் கணிசமான இளைஞர்களும் சில யுவதிகளும் பங்கெடுத்துக் கொண்டனர்.

இக்காலப்பிரிவு இன மோதுகைகளையும் வன்முறை நிகழ்வுகளையும் வைத்து பல காலகட்டங்களாக பிரித்துப் பார்க்க முடியும். 1983 களில் சிங்கள தீவிரவாதம் நடாத்திய மிலேச்சத்தனமான தாக்குதலால் கொழும்பு, யாழ்ப்பாணம், மலையகம் வாழ் தமிழ் மக்கள் உட்பட முஸ்லிம் மக்களும் பாதிக்கப்பட்டனர்.

எண்பதுக்கு பின்னரான இலங்கையின் வாழ்வியல் வெளி வன்முறை நிறைந்த ஒன்றாகவே மேற்கிளம்புகின்றது. பெரும்பான்மை வாத எழுச்சியும் அதை எதிர்கொள்வதில் சிறுபான்மைச் சமூகங்களின் முனைப்புகளும் எமது அயலவர்களின் வெளிப்படையான தலையீடுகளும் யாவரும் அறிந்த விடயங்களே. இந்த முரண்பாட்டுச் சூழல் தடாலடியாகத் தோன்றிய ஒன்றல்ல. ஐம்பதுகளின் நடுப்பகுதியில் இருந்து மேற்கிளம்பிய இனவாத அரசியல் தர்க்க ரீதியான முதிர் நிலையை எண்பதுகளில் எட்டிவிட்டது என்பதே உண்மையாகும். இந்த இன முரண்பாடு அல்லது இன மோதுகை இரு தேசிய இனங்களுக்கிடையே நேரடியாக நடைபெற்றாலும் மற்றொரு இனக்குழுமமான முஸ்லிம் மக்களையும் மிகக் கடுமையாகத் தாக்கியது. இவ்வினப்போரில் நம்மவரகள் கொல்லப்படும் போது எதற்காக கொல்லப்படுகிறோம் என்பதைக் கூட அறியமுடியாத நிலை இரு தசாப்த காலம் நீடித்துள்ளது. இவ்வன்முறை வரலாற்றுப் பின்புலத்திலிருந்தே இக்கதைகள் வீறுகொண்டெழுகின்றன. இன முரண்பாட்டுக் காலப்பிரிவில் முஸ்லிம் அடையாளம், அவர்களின் இருப்பு, இருப்பின் இழப்பு போன்றவற்றின் வலிகளையும் வேதனைகளையும் சுமந்தவைகளாகவே இக்கதைகள் தம்மை வெளிக்காட்டிக்கொள்கின்றன.

முன்னெப்போதையும்விட எண்பதுகளுக்குப் பின், அதற்கு முந்திய காலங்களைவிட மிக அதிகமான சிறுகதைப் பிரதிகள் வெளிவந்துள்ளன. தேசிய நாளிதழ்கள், சிற்றிதழ்கள், புலம்பெயர் இதழ்கள் என பலதரப்பட்ட வெளியீடுகளில் மாதாந்தம் நாற்பதுகளுக்கும் மேற்பட்ட சிறுகதைகள் வெளியாகியுள்ளன. எண்பதுகளுக்கும் முன்பிருந்தே எழுதிவந்த திக்குவல்லைக் கமால், ப.ஆப்தீன், எஸ்.எல்.எம். ஹனீபா, அல் அஸுமத், மொயின் சமீம்

போன்றோரும் இக்காலப்பகுதியில் எழுதியுள்ளனர். இவர்களின் பெரும்பாலான கதைகள் தமிழ்த் தேசத்திலிருந்து முஸ்லிம் தேசம் தன்னைத் தனியாக உணர தலைப்படாததாக வெளிப்படுகிறது. இக்காலப்பிரிவில் எழுதவந்த இரண்டாவது வகையினரே இரு பெரும் தேசிய இனங்களின் மோதுகையால் உருவானவர்களாவர். இவர்களின் தோற்றப் பின்புலம் முன்னையவர்களின் தோற்றத்தை விட சற்று வித்தியாசமானது. இவர்களின் பேசுபொருளும் இவர்களுக்குக் கிடைத்த சூழமைவுகளும் வேறுபட்டவை.

அச்சுறுத்தல்கள், ஆட்கடத்தல்கள், கொலைகள், கூட்டுப் படுகொலைகள், விமானக்குண்டு வீச்சுக்கள், பொது இடங்களில் வெடித்துச் சிதறும் மனித வெடிகள், எரிப்புச் சம்பவங்கள், கலவரங்கள், புலம்பெயர்வு, அகதி வாழ்க்கை என இவ்விரு இனங்களின் மோதுகையால் உருவான நெருக்கடி, முஸ்லிம் வாழ்வெளியையும் கடுமையாக பாதித்தது. போரின் வன்கொடுமை இனம்பார்த்து, மதம் பார்த்து அழிப்பதில்லை. அது எல்லா மனிதர்களையும் எல்லாப் பால்நிலையினரையும் அழிக்கின்றது. கடந்த இரு தசாப்தகால தமிழ் புனைகதை எழுத்தில் இவை பதிவுபெற்றிருக்கின்றன.

இதில் பதினேழு சிறுகதைகள் தொகுக்கப்பட்டுள்ளன. இக்கதைகள் எந்த அடிப்படையில் தொகுக்கப்படுகின்றன என்பதற்கான காரணங்களையும் கூறியாக வேண்டும். இனமுரண்பாடு கால முஸ்லிம் சிறுகதைகளை ஒன்றாக தொகுப்பதே இதன் அடிப்படை நோக்கமாகும். ஆனால் பக்க அதிகரிப்பும் பதிப்புச் செலவின் உயர்வும் காரணமாக அவற்றில் கலைத்தரம் வாய்ந்த கதைகளுக்கு முன்னுரிமை கொடுக்க வேண்டியேற்பட்டது. இன முரண்பாடுகாலத்தில் எழுதிய முஸ்லிம் மற்றும் தமிழ் கதாசிரியர்களின் கதைகளையும் கணிசமான அளவு இணைத்துள்ளோம். இன முரண்பாட்டின் பல்வேறு பரிமாணங்களையும் அதன் விளைவுகளையும் பதிவு செய்யும் அனைத்து கதைகளையும் இதில் சேர்க்க முடியாமல் போய்விட்டது.

அகதியாதல், இனச்சுத்திகரிப்பு, பாரம்பரிய தொழில் பறிக்கப்படுதல், பள்ளிவாசல்கள் படுகொலை, வாழ்வெளி சுருங்குதல், தாம் அன்போடு வளர்த்த பிராணிகளைப் பிரிதல், வருடத்தில் ஓரிருமுறை வரும் பெருநாள்களைக்கூட மகிழ்ச்சியாக கொண்டாட முடியாத நிலை, பரஸ்பரம் தமது வாழ்வியல் தேவைகளின் நிமித்தம் நெருக்கமான உறவுகளை தம்மகத்தே கொண்டு வாழ்ந்த தமிழ் முஸ்லிம் மக்கள் உறவுகளைத் துண்டிக்க நேரும் தருணங்கள், கலவரங்களில் இன, மத, மொழி பேதங்கள் இன்றி பாதிக்கப்படல், உட்படுகொலை, யுத்தத்தால் குழந்தைகள், பெண்களுக்கு ஏற்படும் மனநெருக்கடி, விடுதலை இயக்கங்களில் எழுந்த எதிர்ப்புக்குரல்களை பதிவு செய்தல், பலவந்த வெளியேற்றம், போக்குவரத்து துண்டிக்கப்படல், சொந்த ஊருக்கு திரும்பிச் செல்லும் போது அங்கு எதிர்கொள்ளும் சவால்கள், ஆட்கடத்தல்கள், முஸ்லிம் சிவில் ஒழுங்குகளை இல்லாமலாக்குதல், அடையாளங்களை அழித்தல், குறுந்தேசிய வாதங்களால் எழுந்த அவலங்கள், எழுத்துச் சுதந்திரம் மறுக்கப்படல், கலவரத்தில் அநாதரவற்று நிற்கும் வயோதிப மாது, அரசியல் பௌத்தத்தின் மேலாதிக்கத்தால் மற்றமைகள் விளிம்புக்குத் தள்ளப்படல்,

பல்வேறு கனவுகளுடன் பயணத்தை ஆரம்பிக்கும் போது நிகழும் குண்டுவெடிப்புக்கள், போருக்குப் பிந்திய சூழலில் மீளவும் தொடங்கும் பேரினவாத குடியேற்றங்களும் மத அடையாளங்களை நிறுவுதலும் போன்ற பல பரிமாணங்களை இக்கதைகள் வெளிப்படுத்தி நிற்கின்றன.

இலங்கையின் இன முரண்பாட்டில் தோற்றுவாயாகக் கொள்ளப்படும் எண்பதுகளில் ஆரம்பித்த கலவரம் பற்றி பனிமலையும் பலவந்த வெளியேற்றம் அல்லது சொந்த நாட்டிலேயே அகதியாகும் நிலையை ஹனீபாவும் இரண்டு எருதுகளும், துயருறுதல், நிழல்களின் வடு ஆகிய கதைகள் உணர்த்தி நிற்கின்றன. விருந்தினர் மீளக்குடியேறுவதற்காக செல்லும் போது எதிர்கொள்ளும் நெருக்கடிகளை கூறுகின்றது. நிலம் சார்ந்த வாழ்க்கை கொண்ட மக்களை அதிலிருந்து பிரிப்பதன் வலிகளையும் வேதனைகளையும் துணிச்சல், என்ட அல்லாஹ், ஆகிய கதைகளில் காணலாம். அரசியல் பௌத்தம், மற்றமைகளை மறுத்து நிற்கும் சேதிகளை மே புதுன்கே தேசய, சோனியனின் கதையின் தனிமை, குதர்க்கங்களின் பிதுக்கம், ஆகிய கதைகளில் காணலாம். வெள்ளைத் தொப்பி பற்றிய வேதனையூட்டும் அறிக்கை, எமது அடையாளத்தின் மீதான அழிப்பையும் வன்மத்தையும் குறியீட்டு மொழியில் சொல்கிறது.

இக்கதைகளில் முஸ்லிம் புனைகதை எழுத்துக்களின் பல்வகைமாதிரியான வளர்ச்சிப் போக்கையும் அடையாளம் காண முடிகிறது. குளங்கள், நிழல்களின் வடு, குதர்க்கங்களின் பிதுக்கம், சூன்யப் பெருவெளிக் கதைகள், சோனியனின் கதையின் தனிமை ஆகியன புனைவின் உச்சங்களாக இருக்கின்றன. யுத்தத்தால் நேரடிப்பாதிப்புக்குள்ளான எழுத்துக்களும் இத்தொகுப்பில் உண்டு. யுத்தத்திற்குப் பின்னால் மறைமுகமாகத் தொழிற்படும் கருத்தியல்கள், நுண் அதிகாரங்கள், அவற்றின் வலைப்பின்னல்கள் போன்றவற்றை இனங்கண்டு எழுதும் பிரதிகளும் இத்தொகுப்பில் அடங்கியிருக்கின்றன. இவ்வின முரண்பாடு காலத்தில் எமது இலக்கிய பண்பாட்டு வெளியில் அறிமுகமாகிய நவீன, பின்நவீன இலக்கியக் கோட்பாடுகளின் செல்வாக்கையும் அவற்றில் எமது படைப்பாளிகள் கவனம் செலுத்தியிருப்பதையும் படைப்புக்களைப் பார்க்கும் போது புரிந்து கொள்ள முடிகிறது. அப்பாதிப்பு பிரதியில் உடைப்புக்களையும் ஏற்படுத்தியுள்ளது.

வன்முறை நம்மை நேரடியாகப் பாதித்த ஒன்றுதான். ஆனாலும் புரிந்து கொள்வதற்கு மிகச்சிரமமான விடயங்கள் இந்த அழிப்புப் போருக்குப் பின்னால் புதைந்துகிடக்கிறது என்ற உண்மையையும் இந்த பிரதிகள் புனைவின் உச்சத்திற்குச் செல்வதற்கு காரணமாகலாம். தீவிரமாக யதார்த்தத்தைப் பிடித்துக் கொள்வதால் வரும் படைப்புச் சிக்கல்களிலிருந்து விடுபடுவதற்காகத்தான் இவர்கள் இந்தப் புனைவின் உச்சங்களை நோக்கி செல்கின்றார்கள் போலும். அதீத புனைவுகளை நோக்கிச் செல்லும் போது யதார்த்தத்தின் பிடியை விட்டு அவர்கள் விலகிவிடுவது தெரிகிறது. கதை சொல்லி சிந்தனையால், அதன் ஆழத்தால் அடைந்த உச்சநிலைகளில் தனது இயல்பிலிருந்து பிறழ்ந்து இன்னொன்றாக ஆவதன் மூலம் தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறான்.

இலங்கையில் நடைபெற்ற போர், அவ்வளவு உக்கிரமானது. அதிலும் வடக்குக் கிழக்கு மக்கள் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டுதான் வாழ்ந்திருக்கிறார்கள். எனவே இக்காலத்தில் எழுதப்பட்ட எல்லாப் பிரதிகளும் ஒன்றையொன்று நிரப்பிக் கொண்டும் ஒரு போர்க்கால நாவலின் அங்கங்களாக நகர்வதை அவதானிக்க முடிகிறது.

ஜனநாயக விழுமியங்கள் போற்றப்படும் ஒரு வெளியில் மட்டுமே சுதந்திரமாக எழுத முடியும். ஏனெனில் கதையாடுவது அல்லது ஒன்றைப் பேசுபொருளாக மாற்றுவது என்பது சுதந்திரத்தினை உறுதிப்படுத்துவதாகும். இந்தச் சுதந்திரம் அச்சுறுத்தலுக்குள்ளாக்கப்படும் போதே எதிர்ச் செயற்பாடு என்பது தவிர்க்க முடியாதென சார்தர் கூறுகின்றார். ஒரு கதை சொல்லி யாருக்காகக் கதையாடுகின்றான் என்பதிலிருந்தான் அவனது கதையாடலின் அரசியலை, அந்தக் கதையாடலின் சமூகச் சார்பின் முற்போக்கான தன்மையைத் தீர்மானிக்க முடியும் என்பது அவரது வாதமாகும்.

பல்வேறு வகையான உள்ளடுக்குகளையும் தளைகளையும் கொண்ட சமூகம் தன்னைத்தானே விடுதலை செய்து கொள்ள முன் விடுதலைப் போராட்டத்தில் குதிக்கும் போது மற்றமைகளின் அடையாளங்களை அழிப்பதற்கே முயற்சிக்கின்றன. அக்காலப்பிரிவில் எதிர்ப்பு உதிரியாக வெளிப்படுவதைப் போல கூட்டுச் செயற்பாடாகவும் அமைய முடியும். ஒரு மேலாதிக்கக் குழு மற்றமைகளை தனது கட்டுக்குள் கொண்டு வந்து அடக்கியாள முனைகிற போதுதான் எதிர்ப்பானது ஓர் இயங்கியலாக, எதிர் ஆற்றலாக மேலெழுகிறது. இதில் குறித்த சமூகத்தின் கூட்டு மனம் அதிலிருந்து மீள்வதற்கான ஒரு பண்பாட்டு ஆயுதமாக எதிர்க்கதையாடல் உருவாகிறது. இங்கு கதைப்பிரதிகள் எதிர்ப்பின் உச்சநிலை அடையும் போது கதைக்கு முன்னர் அளிக்கப்பட்ட சட்டகங்களை உடைத்துக் கொண்டு எதிர்ப்பைக் கக்குவதைக் காணலாம். அதிகாரத்தையும் அடக்குமுறையையும் எதிர்ப்பதென்பது மற்றமையின் அதிகாரத்தை அந்த இடத்தில் கொண்டுவந்து நிறுத்திவிடலாம் என்பதால் இக்கதையாடிகள் அரசியல் தத்துவார்த்தத்தைப் பேசாமல் புனைவெழுத்துக்களால் பேசுகிறார்கள்.

தமிழின் அதிகமான புனைகதைகள் மீண்டும் மீண்டும் ஒரு வரலாற்றை கருத்தாக்கத்தின் மீது திணித்தோ அல்லது ஒழுங்குபடுத்துவதையோ செய்து வந்துள்ளது. இதனால் எமது கதைவெளி சுருக்கப்பட்டுவிட்டது என்ற விமர்சனக் குரல்களும் எழுந்து வருகின்றன. இந்த ஒழுங்குபடுத்தலால் மேலதிகச் சம்பவங்களாகவே கதைகளின் போக்கு மாறிவிட்டது. இதிலிருந்து விடுபடுகின்ற எத்தனங்களையும் பல் பரிமாணங்களை நோக்கிச் செல்வதையும் புனைவில் பின்நோக்கிப் பயணிப்பதையும் அவதானிக்க முடிகிறது. இனமுரண்பாடுகாலத்தில் தேசிய அளவிலும் புலம்பெயர் சூழலிலும் இதழியல் கலாசாரமும் முனைப்புப் பெற்றிருந்தது. இக்காலப்பிரிவில் இனமுரண்பாட்டை வெளிப்படுத்தும் படைப்புக்களுக்காக மட்டுமே பல இதழ்கள் தோன்றி மறைந்ததுண்டு. அவற்றில் ஒரு தசாப்தத்திற்கு மேலாக மிகவும் காத்திரமான மாற்றுப்பத்திரிகையாக இயங்கிய இதழ்தான் சரிநிகராகும். இவ்விதழ் பல முஸ்லிம் எழுத்துச் செயல்பாட்டாளர்களுக்கு களம்

கொடுத்தது. அப்போது பல சிறுகதைகள் வெளிவந்தன. அதன் வரலாற்றுப் பங்களிப்பு மிக முக்கியமானது.

கமராவின் வருகை ஓவியத்தை சவாலுக்கு உள்ளாக்கியதைப் போல் சினிமாவின் வருகை நாவலைப் பின்னுக்குத் தள்ளிவிட்டது எனலாம். இதைப் புரிந்துகொண்ட இலக்கியச் செயற்பாட்டாளர்களும் முன்னைய கதை சொல்லல் முறைகளில் சலிப்படைந்தவர்களும் புதுப்புது கதையாடல் முயற்சிகளில் இயங்கத் தொடங்கிவிட்டனர். ஈழத்து தமிழ் பரப்பில் ராகவன், முரளீதரன், திசேரா, மலர்ச்செல்வன், கௌரிபாலன், மிஹாத், இமாம் அத்னான், ஷாஜகான் போன்றவர்களுடன் பெருவெளி, ஜீவநதி, மறுகா, புதியசொல் போன்ற இதழ்களின் கதையாடிகள் எனப் பலரும் கதைப்பிரதிகளை எடுத்துரைப்பதிலும் கருத்து நிலையிலும் புதிய சாத்தியங்களை எட்டியிருக்கிறார்கள் என்பதை மறுக்க முடியாது. இவ்வாறான புதிய கதையுருவாக்கங்கள் நிகழும் போது திறனாய்வு முறைகளிலும் மாற்றங்கள் ஏற்பட்டு வருகின்றன. இனம், சாதி, மதம், தேசம், பாலினம் போன்ற அதிகாரங்கள் பதிந்துபோயிருக்கும் உடல்களைச் சுமந்து கொண்டு நாம் பயணிப்பதைப் போல நமது கதைப்பிரதிகளும் அவற்றை சுமந்தபடியே நிற்கின்றன. அவற்றைத் தொந்தரவு செய்யும் விதமாக, இடையீடு செய்வதாக புதிய விமர்சன முறைகள் அல்லது வாசிப்பு முறைகளும் தலைகாட்டத் தொடங்கிவிட்டன. கதைப்பிரதியை ஆடுகளமாகக் கொண்டு பிரதிபலிப்பு உள்ளொளி கோட்பாடுகளில் இருந்து விலகி, பிரதியினுள் உள்ளுறைந்திருக்கும் வன்முறைகளை தோலுரிக்கின்ற விமர்சன வாசிப்பு முறைகளும் மனிதரல்லாத மற்றைமைகள் பிரதிக்குள் எவ்வாறு வைக்கப்பட்டுள்ளன என்பதை மிக நுண்ணிதாக ஆராயும் அளவுக்கு வளர்ந்து வருகின்றது.

சிந்திய ரத்தத்துக்கு தீர்வுகள் கிடைக்காமலே இங்கே மீண்டும் மீண்டும் இரத்தம் சிந்தப்படுகின்றது. இழப்பதற்கு ஏதுமில்லை என்றிருக்கும் போதே இந்த மண்ணில் மீண்டும் போர் வெடித்துவிடுகின்றது. போரை உருவாக்குபவர்கள் யார்? ஏன் உருவாக்குகிறார்கள்? ஈற்றில் போரின் துயரத்தை சுமப்பவர்கள் யார்? போர் வியாபாரிகள் தோற்றிருக்கிறார்களா? போன்ற பல கேள்விகளுக்கு இன்று எல்லோருக்கும் விடைகள் தெரியவாரம்பித்துவிட்டன. மனித மற்றைமைகள் இப்பிரதிக்குள் இரண்டாம் மூன்றாம் பிரஜைகளாகவே ஆக்கப்பட்டுள்ளனர். இதனால் தனிமைப்படுத்தலின் அரசியலையும் பொதுமைப்படுத்தலின் வன்மத்தையும் இங்கே காணலாம். இதனால் சோகம் கவிந்திருந்தாலும் சிரிப்பின் வெடிப்பொலிகளையும் கேட்க முடிகின்றது.

பல்லின சமூகங்களில் இருந்து அல்லது பல்பண்பாடுகளில் இருந்து ஒருமிக்கும் சிந்தனைகளும் அதற்கான நிகழ்த்துகைகளுமே போருக்குப் பிந்திய இன்றைய சூழலில் நமக்குத் தேவைப்படுகின்றன. கடந்த காலங்களில் சமூகங்களுக்கும், சமூகங்களுக்கும் பண்பாடுகளுக்கும் பண்பாடுகளுக்கும் சிவில் நிறுவனங்களுக்கும் சிவில் நிறுவனங்களுக்கும் இடையில் உரையாடல் நிகழவில்லை. முரண்பாடுகள் கூர்மையடைவதை தணிப்பதற்கும் மோதுகைகளை தவிர்ப்பதற்கும் உரையாடல்

இன்றியமையாதது. மனித நேயம், கருணை, ஜீவகாருண்யம் போன்ற அறங்கள் முகிழ்க்கும் இக்கதைகள் அவ்வுரையாடலுக்கு உதவக்கூடுமென்ற அவாவினாலேயே இவை தொகுப்பாகின்றன.

சகர்ஜாத் மரணத்தின் வாயிலிருந்து தன்னையும் தன்னைப் போன்ற பெண்களையும் காப்பாற்றுவதற்காக சொன்னவை தான் ஆயிரத்தோர் இரவுக் கதைகளாகும். கதையாடல் மூலம் மன்னித்தலை மனித மனங்களில் விதைக்க முடியும் என்ற நம்பிக்கையினாலேயே அவள் ஒவ்வொரு இரவும் அம் மன்னனுக்கு கதை சொல்கிறாள். தனிமனிதர்களுக்கிடையில் மன்னிப்பு என்று தொடங்கி சமூகங்களுக்கு மத்தியில் விரிவுபடக்கூடிய சாத்தியங்களும் உள்ளன. மன்னித்தல் என்பது மற்றவர்களை மட்டுமல்ல தன்னையும் சேர்த்துத்தான் என்று சொல்கிறார்கள் இக்கதையாடிகள். கதைகளை மீளவும் மீளவும் சொல்லும் போது அது மனுட நேயத்ததை நோக்கியே நகர்கின்றது கதைகள் மாயப்புனைவுலகில் சஞ்சரிக்க வைக்கின்றன. கதைகள் நம்மை நாமே மீட்டெடுக்க உதவுகின்றன. கதைகள் நம்மை ஆறுதல்ப்படுத்துகின்றன மொத்தத்தில் கதைகள் எமது காயங்களை ஆற்றுகின்றன.

# 20. ஒரே திடல்: தக்ஷிலா ஸ்வர்ணமாலி

சிறுகதைகள்/செப்டம்பர் 2020

சிங்களத்திலிருந்து தமிழில்: எம். ரிஷான் ஷெரீப்

BY தக்ஷிலா ஸ்வர்ணமாலி AND எம்.ரிஷான் ஷெரீப்

அம்மா, கல்யாணம் செய்து கொள்ளப் போவதாகச் சொன்னதும், எங்கள் வீட்டில் பெரியதொரு திருமண வைபவம் நடைபெறுமென்றே நான் எதிர்பார்த்தேன். என்றாலும், குறைந்த பட்சம் கல்யாண விருந்தை விட்டாலும், அம்மா மணப்பெண்ணாகக் கூட மாறவில்லை. சித்தப்பா வந்து எங்களைத் தன்னோடு கூட்டிச் சென்றது மாத்திரம்தான் நடந்தது. அப்படிக் கூட்டிச் சென்றது கூட சைக்கிளில்தான். என்னை முன்னாலும், அம்மாவைப் பின்னாலும் உட்கார வைத்திருந்தார். சைக்கிள் பார் கட்டையில் வெகுதூரம் உட்கார்ந்து பயணிக்கும்போது எனக்கு சிரமமாக இருக்கும் என்று அதன் மீது ஒரு தலையணையை வைத்து அதற்கு மேல் என்னை அமர்த்தி மிகவும் பத்திரமாகத்தான் கூட்டிச் சென்றார்.



...

அம்மாவும், சித்தப்பாவும் அதற்கு முந்தைய நாளில்தான் பதிவாளர் காரியாலயத்திற்குச் சென்று திருமணம் முடித்திருந்தார்கள். அன்றும் கூட அவர்கள் திருமணம் முடித்ததாக நான் உணரவேயில்லை. வழமையாக சந்தைக்குப் போவதற்கு உடுத்துவதைப் போலவேதான் அம்மா வீட்டிலிருந்து புறப்பட்டுப் போனாள். சித்தப்பா எனப்படுபவர் அப்பாவின் தம்பியென பள்ளிக்கூடத்தில் சொல்லித் தந்தார்கள். எனினும் எனது சித்தப்பா, அப்பாவின் தம்பியல்ல.

ஆனாலும் அம்மா, எங்களைக் கூட்டிச் சென்றவரை சித்தப்பா என்றே அழைக்குமாறு என்னிடம் கூறியிருந்தாள்.

குளக்கட்டைக் கடந்து ஒற்றையடிப் பாதை வழியே நெடுந்தூரம் போனதும் சித்தப்பாவின் வீடு வந்தது. அந்த வீட்டின் சுவர்கள் இன்னும் பூசி மெழுகப்படாமல் இருந்தன. ஒருவேளை சித்தப்பாவால் தனியாகச் செய்ய முடியாமல் போயிருந்தாலும் கூட, இனி நாங்கள் மூன்று பேரும் சேர்ந்து சுவர்களைப் பூசி மெழுகலாம். சித்தப்பா என்னைத் தூக்கிக் கொண்டு வீட்டுக்குள் போனார். என்னைத் தூக்கினால் எனது கால்கள் தரையில் முட்டுகின்றன என்று கூறி இப்போதெல்லாம் அம்மா என்னைத் தூக்குவதே இல்லை.

“உட்காரு யஸோதா”

அம்மா மிகுந்த தன்னடக்கத்தோடு ஒரு பக்தையைப் போல அமர்ந்து கொண்டாள். சித்திரைப் புத்தாண்டுக்கு வீட்டுக்கு வரும் விருந்தினர்களை உபசாரம் செய்வது போல சித்தப்பா எம்மைக் கவனித்துக் கொண்டார். அம்மா தடுமாற்றத்தோடு அமர்ந்திருப்பதுபோல எனக்குத் தோன்றியது. தண்ணீரைக் கொதிக்க வைக்க, கேத்தலை அடுப்பில் வைப்பதற்காக சித்தப்பா சமையலறைக்குள் நுழைந்தார். அம்மா சமையலறைக்குப் போனபோது நானும் பின்னாலேயே சென்றேன். சித்தப்பா விறகடுப்பை ஊதிக் கொண்டிருந்தார். பள்ளிக்கூடத்துக்கு வந்த பரிசோதகரைப் போல அம்மா சமையலறையை சுற்றி வரப் பார்த்தாள்.

“என் பொஞ்சாதி இருந்த காலத்துலன்னா இதெல்லாம் நல்லா ஒழுங்கா வச்சிருந்தா”

சித்தப்பா ‘பொஞ்சாதி’ என்று சொன்னது அம்மாவையல்ல. என்றாலும், இப்போது சித்தப்பாவின் ‘பொஞ்சாதி’ என்னுடைய அம்மாதான். சித்தப்பா இப்போதும் முதல் மனைவியை ‘பொஞ்சாதி’ என்று அழைத்தற்கு அம்மாவிடம் கோபமோ, கவலையோ தென்படவில்லை. அவள் மென்மையாகப் புன்னகைத்தாள். சித்தப்பா தேநீர் ஊற்றும் வரைக்கும் சமையலறையை ஒழுங்குபடுத்தினாள். சித்தப்பா எனக்காக தேநீரில் தொட்டுச் சாப்பிடவென பிஸ்கட்டும் வாங்கி வைத்திருந்தார். சித்தப்பாவும், அம்மாவும் ஒருவரை ஒருவர் அறிமுகமில்லாதவர்கள்போல பிஸ்கட் சாப்பிட்டு தேநீரை அருந்தினார்கள். அது, அவர்களுடைய முதல் நாள் என்பதால் அப்படி இருந்திருக்கலாம். வீட்டிலென்றால் அம்மாவும் என்னைப் போலவே என்னுடன் சேர்ந்து பிஸ்கட்டை தேநீரில் தொட்டுச் சாப்பிடுவாள் எனினும் அன்று அவள் மிகவும் கௌரவமாகச் சாப்பிடுகிறாளென எனக்குத் தோன்றியது.

அம்மா, சித்தப்பாவின் முன்பாக ஒரு பக்தையைப் போல அமைதியாக இருக்க முயற்சித்த போதிலும், அம்மாவின் உண்மையான இயல்பைக் குறித்து சித்தப்பா பின்னர் அறிந்து கொள்ளக்கூடும். எனினும் அவள் செல்லம் கொஞ்சி குறும்புத்தனங்கள் செய்ததெல்லாம் எனக்காகத்தான் என்று தோன்றியது. வெளியாட்களுக்கு முன்னால் அம்மா அளவுக்கு அடக்கமான, மென்மையான வேறொருத்தியையும் காணமுடியாது. அவ்வாறிருப்பதும் தவறில்லை. என்னுடன் இருப்பதைப் போல எல்லோருடனும் அம்மாவால் இருக்க முடியாது.

அப்பா, அம்மாவைக் கை விட்டுச் சென்றது அம்மாவின் தவறால் அல்ல. அது அப்பாவின் தவறும் கிடையாது. ஶ்ரீமலி சித்தியின் தவறும் இல்லை. “நாங்கள் அனைவரும் மனிதர்கள் என்பதால் எங்கள் அனைவருக்கும் இப்படி நிகழ்ந்தது” என்று அம்மா கூறினாள். அப்பா, ஶ்ரீமலி சித்தியுடன் ஓடிப் போன பின்னரும் கூட எப்போதாவது நாங்கள் குளிக்கும் நேரம் பார்த்து எப்படியாவது குளத்தின் அருகில் வந்துவிடுவார்.

“நான் போனதுக்கு உன் மேல எந்தத் தவறும் இல்ல யஸோ” இதையே மிகுந்த தயவாக ஒவ்வொருமுறையும் தயங்கித் தயங்கிச் சொல்வார்.

அப்பா எங்களுக்காகக் கட்டிய வீட்டில் எங்களை விட்டுவிட்டே போயிருந்தார். அவர் வீட்டை விட்டுப் போன போதிலும், அம்மாவையோ என்னையோ அந்த வீட்டை விட்டுப் போகுமாறு ஒருபோதும் சொன்னதில்லை. அம்மாவிடம் என்னைத் தன்னிடம் தருமாறு கேட்காதது அவருக்கு என் மீது பாசம் இல்லாததால் அல்ல. நானும் இல்லாமல் போனால் அம்மா மேலும் தனித்துப் போவாள் என்று அவருக்குத் தெரியும்.

அம்மாவைச் சந்திக்க முன்பே அப்பாவுக்கு ஶ்ரீமலி சித்தியைத் தெரியும் என்று பாட்டி, அம்மாவிடம் கூறியதை நான் கேட்டிருக்கிறேன். பாட்டி எங்கள் வீட்டுக்கு வரும்போதெல்லாம் அப்பாவைக் குற்றம் குறை சொல்வாள். ஆனால் அம்மா ஒருபோதும் யாரிடமும் அப்பாவுக்கு எதிராக ஒரு வார்த்தை கூட கதைத்ததில்லை.

“இந்தத் தடவை பயிர்ச் சேனையும் பாழடைஞ்சு போய்க் கிடக்கு. நெல் அறுவடையையும் அப்பா எங்களுக்கே எல்லாத்தையும் தந்துட்டார். ஒழுங்கா சாப்பிடக் குடிக்க அவங்களுக்கு வழியிருக்குமோ தெரியாது” என அம்மா சோற்றுத் தட்டைக் கையில் எடுக்கும்போதெல்லாம் தினமும் அப்பாவை நினைத்துத் தனியாக பெருமூச்சு விடுவாள்.

அப்பா குளத்தருகே வருவது, ஶ்ரீமலி சித்திக்கும் தெரியும். ஒரு நாள் அப்பா, சித்தியுடன்தான் வந்தார். அன்று ஶ்ரீமலி சித்தி, அம்மாவிடம் எதையோ சொல்லிச் சொல்லி அழுதாள். அப்பாவும், நானும் குளத்தில் கரணமடித்து நீந்திக் குளித்துக் கொண்டிருந்ததால் அவர்களது உரையாடல் எனக்குக் கேட்கவில்லை. அப்பாவும், சித்தியும் புறப்படத் தயாரான போது, “நீங்க ஶ்ரீமலி தங்கச்சியைக் கூட்டிக்கிட்டு நம்ம வீட்டுக்கு வந்துடுங்க. நாங்க என்னோட வீட்டுக்குப் போக முடிவு செஞ்சிருக்கோம். நாங்க இங்க தனியா இருக்கோம்னு அம்மா எப்பவும் கூப்பிட்டுட்டே இருக்கா” என்று அம்மா, அப்பாவிடம் கூறினாள்.

அம்மா அப்படிச் சொன்னாலும் கூட, முன்பு பாட்டி எங்களை அவரது வீட்டுக்குக் கூப்பிட்ட போதெல்லாம் அம்மா முடியாதென்றே கூறி வந்தாள். அப்பா, ஶ்ரீமலி சித்தியை பயிர்ச் சேனையிலிருந்த குடிலுக்குத்தான் கூட்டிச் சென்றிருந்தார். சித்தியின் வீட்டிலும், அப்பாவின் பிறந்த வீட்டிலும் அந்தப் புதிய தம்பதிகளை ஏற்றுக் கொள்ளவில்லையாம். அதனால்தான் ஶ்ரீமலி சித்தி சேனைக் குடிலில் இருந்தாளே ஒழிய, அதில் வசிப்பது எவ்வளவு கஷ்டம் என்பது அம்மாவுக்குத் தெரியும்.

அன்றைக்கு மறுநாள் அம்மாவும், நானும் பாட்டி வீட்டுக்குப் போய் விட்டோம். அம்மா

வற்புறுத்தியதாலேயே அப்பா ஸ்ரீமலி சித்தியைக் கூட்டிக் கொண்டு எங்களுடைய வீட்டுக்கு குடியிருக்க வந்தார்.

நாங்கள் பாட்டி வீட்டிலிருந்த போதுதான் சித்தப்பா எங்களைக் கூட்டிக் கொண்டு போனார்.

‘அப்பா இருந்தாரென்றால்’ என தப்பித் தவறியேனும் ஏங்கச் செய்யாத அளவுக்கு, சித்தப்பா என்னை அளவுக்கதிகமாக நேசித்தார். அம்மாவின் மீது கூட அப்படித்தான் இருக்கக்கூடும். சந்தியிலிருக்கும் சில்லறைக் கடையில் சாமான்களை எடை போட்டுத் தரும் வேலை பார்த்து வந்த சித்தப்பாவுக்கு போதியளவு வருமானம் இல்லையென்பதால் அம்மா, அப்பாவின் வீட்டில் செய்தது போலவே இங்கும் கூடை, பாய்களை நெய்தாள்.

விடியற் காலையிலேயே எழுந்து கொள்ளும் அம்மாவுடன் சேர்ந்து வீட்டு வேலைகளைச் செய்யும் சித்தப்பா, தினந்தோறும் காலை வேளைகளில் என்னைப் பள்ளிக்கூடத்துக்கும் கூட்டிச் செல்வார். சைக்கிளில் உட்கார வைத்துத்தான் கொண்டு போவார். சில நாட்கள் பள்ளிக்கூடம் விடும் நேரத்தில் என்னைக் கூட்டிச் செல்ல அப்பா வந்திருப்பார். அப்பா என்னைக் கூட்டிச் செல்ல வந்த முதல் நாளில், ‘இப்போது என்னைக் கூட்டிச் செல்ல வரும் சித்தப்பாவுக்கு என்ன சொல்வது?’ என நான் பதறிப் போனேன். ‘என்னைக் காணாமல் சித்தப்பா பயந்து போவாரா? சித்தப்பா, அப்பாவுடன் சண்டை போடுவாரா?’ என்றெல்லாம் எண்ணிப் பயந்தேன். எனினும், அப்பா என்னை சித்தப்பா வேலை செய்யும் கடைக்குத்தான் அழைத்துச் சென்றார். அப்பா என்னைக் கூட்டிச் சென்று சித்தப்பாவிடம் ஒப்படைத்த பிறகுதான் இருவரும் பங்கு போட்டுக் கொண்டு என்னைக் கூட்டிக் கொண்டு வந்ததை நான் அறிந்து கொண்டேன்.

சித்தப்பா, என்னைச் சற்று நேரமேனும் அப்பாவிடம் கொடுத்தது, அவருக்கு நானொரு தொந்தரவாக இருந்ததால் அல்ல. சித்தப்பாவுக்கு, அப்பா மீது தோன்றிய அனுதாபத்தினால்தான். சில நாட்கள் அப்பா, ‘ஸ்ரீமலி, யஸோக்கிட்டக் கொடுக்கச் சொன்னாள்’ என்று கூறியவாறு சித்தப்பாவின் கையில் ஏதேனும் உணவுப் பொதியைத் திணிப்பார். ஸ்ரீமலி சித்தி சில நாட்கள் காலை வேளையில் வழியில் சித்தப்பாவின் சைக்கிளை நிறுத்தி, என்னிடம் பள்ளிக்கூடத்துக்குக் கொண்டு போய் சாப்பிடுமாறு கூறி வட்டக்கண்ணி மர இலையில் சுற்றிய இடியப்பப் பொதியைத் தருவாள். அன்று என்னிடம் இரண்டு உணவுப் பொதிகளிருக்கும். அன்று அம்மா சுற்றித் தந்த உணவுப் பொதியை பள்ளிக்கூடத்தில் சாப்பிட்டு விட்டு, ஸ்ரீமலி சித்தி தந்த உணவுப் பொதியை அம்மாவுடன் சேர்ந்து சாப்பிடுவதற்காக வீட்டுக்கு எடுத்துச் செல்வேன். அம்மாவுக்கு, ஸ்ரீமலி சித்தி சமைக்கும் உணவுகளென்றால் மிகவும் பிடிக்கும்.

ஒருநாள் முன்னெப்போதுமில்லாமல் அம்மா, ஜிலேபி பார்சலொன்றை என்னிடமும் சித்தப்பாவிடமும் தந்து அப்பாவின் வீட்டுக்குக் கொடுத்தனுப்பினாள். அவள் எங்களுக்காக ஜிலேபி செய்தபோது அதில் கொஞ்சத்தை ஸ்ரீமலி சித்திக்கு அனுப்பியதல்ல அது. அவள் அன்றைக்கு சித்திக்காகவே செய்து கொடுத்தாள். சித்திக்கு ஜிலேபி சாப்பிட ஆசை.

கடையில் வந்து ஜிலேபி இருக்கிறதாவென அப்பா கேட்டதாக சித்தப்பா அம்மாவிடம் கூறியிருக்கிறார். அதற்குப் பிறகே அம்மா ஜிலேபி செய்திருந்தாள்.

எனக்கொரு தங்கை பிறக்கப் போவதாக சித்தப்பா என்னிடம் வழியில் வைத்துச் சொன்னார். அப்பாவுடன் வந்து விட்டதால் ஸ்ரீமலி சித்தியை அவளது வீட்டில் புறக்கணித்துவிட்டிருந்தார்கள். அதனால் அம்மாவுக்கு சித்தியைப் பார்த்துக் கொள்ளவும், சித்தியுடைய வேலைகளைச் செய்து கொடுக்கவும் வேண்டியிருந்தது. அவள் என்னையும் அழைத்துக் கொண்டு அப்பாவின் வீட்டிலிருந்து புறப்பட்டுவந்த நாளில், மீண்டும் அந்த வீட்டில் காலடியெடுத்து வைக்கக் கூடாதென்றுதான் நினைத்திருப்பாள். எனினும் இப்போது அம்மா திரும்பவும் அந்த வீட்டுக்குப் போய் வர வேண்டியிருந்தது.

அம்மா ஒருபோதும் அங்கு தனியாகப் போகவில்லை. என்னையோ, சித்தப்பாவையோ அல்லது முன் வீட்டிலிருந்த சிறுமியையோ கூட்டிக் கொண்டுதான் அப்பா வீட்டுக்குச் சென்று வந்தாள். ஒருவேளை ஊரார் ஏதேனும் வம்பு பேச இடமிருப்பதனால் அப்படிச் செய்திருக்கலாம். ஸ்ரீமலி சித்திக்குப் பிறக்கப் போவது தங்கைதான் என்று சித்தப்பா சொன்ன போதிலும், அம்மாவும் சித்தியும் நீலம், இளஞ்சிவப்பு என இரண்டு நிறங்களிலுமே சிறு குழந்தைகளுக்கான ஆடைகளைத் தைத்து வைத்திருந்தார்கள். அம்மா என்னையும் மடியிலமர்த்திக் கொண்டு அவற்றில் பூ அலங்காரங்களைத் தைத்தாள். ஸ்ரீமலி சித்தி மருத்துவமனைக்குச் செல்லும் நாள் நெருங்கிய வேளையில் அம்மா மிகவும் நேர்த்தியாக, சித்திக்குத் தேவைப்படக் கூடிய அனைத்துப் பொருட்களையும் ஒழுங்குபடுத்திக் கொடுத்தாள்.

அம்மா, அப்பாவின் வீட்டுக்குப் போய்வந்தபோதிலும், அப்பா ஒருபோதும் எங்கள் வீட்டுக்கு வரவேயில்லை. அப்பா என்னைப் பார்க்க வந்தது கூட தெருவுக்குத்தானே ஒழிய வீட்டுக்கல்ல. எனினும் ஒருநாள் அருமை புதுமையாக அப்பா எங்கள் வீட்டுக்கு வருவதைக் கண்டேன். நான் அப்போது முற்றத்து மாமரத்தில் சித்தப்பா கட்டித் தந்த ஊஞ்சலில் ஆடிக் கொண்டிருந்தேன். அப்பா வருவதைக் கண்டதும் ஊஞ்சல் தானாகவே நின்றுவிட்டது. அதிலிருந்து எழுந்து அப்பாவிடம் ஓடிப் போகும் தைரியம் எனக்கு வராததற்குக் காரணம் அப்பா வந்த தோற்றத்தினால்தான்.

எனக்கு அதில் ஏதோ வித்தியாசம் தென்பட்டது. அப்பா சுயநினைவில் இல்லை எனத் தோன்றியது. அப்பாவை யாரோ ஏவிவிட்டதுபோல நடந்து வந்தார். அவர் ஒரு சீராக அடியெடுத்து வைத்து நடந்து வரவில்லை. எமது வீட்டுக்குத் தன்பாட்டில் வந்து விட்டதைப் போலக் காணப்பட்டார். பார்த்த இடத்தையே வெறித்துப் பார்த்தவாறு, சீவனற்றிருப்பது போலத் தென்பட்டார். அப்பா குடித்திருப்பாரோ என்றும் எனக்குத் தோன்றியது. எனினும் அப்பா ஒருபோதும் மதுபானம் அருந்தியவரல்ல. எனில், அப்பா கால்போன போக்கில் போல, தள்ளாடித் தள்ளாடி எமது வீட்டுக்கு வந்திருந்தது எதற்காக? அப்பா சுயநினைவற்றவர் போல நடந்து வந்து வாசல் படிக்கட்டின் மீது அமர்ந்து விட்டார். நான் ஏதும் செய்ய வழியற்று இருந்த இடத்திலேயே இருந்து பார்த்துக் கொண்டிருந்தேன்.

“யஸோ...”

நான் ஒருபோதும் செவிமடுத்திராதளவு துயரத்துடனான குரலில் சிரமப்பட்டு, இயன்றவரை பாடுபட்டு அப்பா, அம்மாவை அழைத்தார். அம்மா என்னை விடவும் பயந்து போய் கொல்லைப் புறத்திலிருந்து ஓடி வந்தாள்.

“ஐயோ யஸோ...”

அப்பா ஏன் இப்படி ஒப்பாரி வைக்கிறார்? அம்மா, அப்பாவின் அருகில் அமர்ந்து கொண்டாள். அப்பா, அம்மாவின் மடியில் தலை சாய்த்து வேண்டிய மட்டும் அழுது தீர்த்தார். அழுது கொண்டே ஏதேதோ கூறிப் புலம்பினார். “மலீ போயிட்டா யஸோ” என்ற வசனங்களை மாத்திரம் என்னால் ஒருவாறு பொறுக்கிக்கொள்ள முடிந்தது. அம்மா கண்களில் கண்ணீர் பெருக்கெடுத்தோட அப்பாவின் தலையை வருடிக் கொடுத்துக் கொண்டிருந்தாள்.

சித்தப்பாவின் சைக்கிள் குதிரை வேகத்தில் வந்து முற்றத்தின் மத்தியில் நின்றது. சித்தப்பாவுக்கு ஏதேனும் தகவல் கிடைத்திருக்கக் கூடும். சித்தப்பா, அப்பாவை அரவணைத்துக் கூட்டிப் போய் வீட்டினுள்ளே அமரச் செய்தார். வீட்டில் வைத்து திடீரென பிரசவ வலியெடுத்து, பிள்ளைப் பேறு சிக்கலானதில் ஸ்ரீமலி சித்தி செத்துப் போயிருந்தாள்.

ஸ்ரீமலி சித்தியைக் கவனித்துக் கொள்ள அம்மா மாத்திரமே இருந்தாள். ஆனால் அவள் செத்துப்போனபோது எல்லா உறவினர்களும் வந்திருந்தார்கள். சாவு வீட்டின் அனைத்து வேலைகளையும் சித்தப்பா பொறுப்பேற்றுச் செய்து முடித்தார். எதையும் செய்யுமளவுக்கு அப்பாவுக்கு சுயநினைவு இருக்கவில்லை. சாவு வீட்டில் வைத்து எவ்வளவுதான் அப்பாவைப் பார்க்காதிருக்க அம்மா முயன்ற போதும், அவள் அப்பாவைத்தான் பார்த்துக் கொண்டேயிருந்தாள். சனக் கூட்டம் மத்தியில் அம்மாவுக்கு, அப்பாவை ஆறுதல்படுத்த முடியாத காரணத்தால், சித்தப்பா அம்மாவுக்காக அப்பாவின் அருகிலேயே அமர்ந்திருந்தார்.

ஈமச் சடங்குகள் முடிவடைந்து ஏழாவது நாள் சடங்காக அன்னதானமும் வழங்கியதற்கு அடுத்தநாள் அம்மா விம்மியழும் ஓசை எனக்கு அறையிலிருந்து கேட்டது. சித்தப்பா, அம்மாவிடம் எதையோ தெளிவுபடுத்த முயற்சித்த போதிலும் அம்மா அதை ஏற்றுக் கொள்ளவேயில்லை.

“நானும் இதை விருப்பத்தோட சொல்லல யஸோ. ஆனா இப்ப அண்ணாக்குன்னு யாருமேயில்ல. என்னோட பொஞ்சாதியை பாம்பு கொத்தின நாள்ல இருந்து நான் தனியா இருந்த மனுஷன்தானே. யஸோவுக்கு, நான் தனியாகுறத தாங்கிக்க முடியலன்னா நான் என்னோட தங்கச்சியை குழந்தை குட்டிகளோட இங்க வந்து இருக்கச் சொல்றேன். நீங்க ரெண்டு பேரும் போயிட்டாலும் கூட நான் உங்களைக் கை விட மாட்டேன் யஸோ. நான் உங்களைப் போகச் சொல்றது யாரோ வெளியாள்கிட்ட இல்லையே. இந்த மகனோட அப்பாக்கிட்டத்தானே?!”

அன்றிரவு விடியும் வரைக்கும் கூட அம்மாவின் விம்மலோசை நிற்கவேயில்லை. அம்மா இடைக்கிடையே அழுது தீர்த்தாள். அதனால் எனக்கும் இடைக்கிடையே விழிப்பு வந்தது.

சித்தப்பா விடியும் வரைக்கும் விழித்துக் கொண்டேயிருந்தார்.

சைக்கிளில் எம்மைக் கூட்டி வந்த சித்தப்பாவே, மறுநாள் அதே சைக்கிளில் எம்மை அப்பாவின் வீட்டுக்குக் கூட்டிப் போனார். நாங்கள் போனபோது அப்பா, முன்னாலிருந்த வெற்றிலைப் பாத்தியைப் பார்த்தவாறு படிக்கட்டின் மீது அமர்ந்திருந்தார். அதற்கு முன்னர் நாம் அங்கு போன நாளில் அப்பாவும், சித்தியும் அந்த வெற்றிலைப் பாத்திக்குத்தான் பந்தல் கட்டிக் கொண்டிருந்தார்கள். நாங்கள் வரப் போவதைக் குறித்து அப்பா அறிந்திருக்கவில்லை. சித்தப்பா எமது துணி மூட்டைகளை திண்ணையில் கொண்டு போய் வைத்தார்.

“என்ன தம்பி இது?”

“குழந்தையும், யஸோவும் இங்கேயே இருக்கட்டும் அண்ணா” என எங்கேயோ பார்த்தவாறு பதிலளித்தார் சித்தப்பா. அது கோபத்தினால் அல்ல. சித்தப்பாவின் கண்களிலிருந்த கண்ணீரை அப்பாவிடமிருந்து மறைக்கத்தான். சித்தப்பா தேநீர் கூடக் குடிக்காமல் வந்தவுடனே திரும்பிச் சென்றது, அதற்கு மேலும் இங்கிருந்தால் அழுது விடுவார் என்பதால்தான்.

எனினும், சித்தப்பா நாங்கள் இல்லாத வீட்டுக்குச் சென்று எவ்வளவு அழுதிருப்பார்? ‘எம்முடன் மிகுந்த பாசம் வைத்திருப்பவரிடம் செல்ல வேண்டும்’ என்பதைத் தீர்மானித்திருக்க வேண்டியவர்கள் நானும் அம்மாவும்தானே..? என்றாலும் என்னைப் போலவே அம்மாவும், அப்பாவிடமும் சித்தப்பாவிடமும் ஒரேயளவான அன்போடு இருந்ததால் அம்மாவாலும் அதைத் தீர்மானிக்க முடியாமல் இருந்திருக்கும்.

திரும்பவும் ஒருபோதும் சித்தப்பாவுக்கு என்னை பள்ளிக்கூடத்துக்குக் கூட்டிச் செல்லக் கிடைக்காது என்று நான் நினைத்திருந்தேன். ஆனாலும் தினந்தோறும் விடிகாலையில் சித்தப்பா என்னைப் பள்ளிக்கூடத்துக்குக் கூட்டிச் செல்லவென வேலியோரமாக வந்து நின்றார். அவர் வரும்போதெல்லாம் அம்மா என்னையும் கூட்டிக் கொண்டு தினமும் வாசலிலிருந்து வேலியோரமாக வருவது எனக்குத் துணையாக அல்ல. சித்தப்பாவைப் பார்க்கத்தான். பள்ளிக்கூடம் விட்டு வரும்போதும் அம்மா நாங்கள் இருவரும் வரும்வரை வேலியோரமாக நின்று பார்ப்பாள். அப்பா தனது தவறைத் திருத்திக் கொள்ள சந்தர்ப்பம் கிடைத்து விட்டது போன்ற மகிழ்ச்சியோடு, இவையனைத்தையும் பார்த்துக் கொண்டிருப்பார். எனினும், சித்தப்பா ஒருபோதும் வேலி தாண்டவேயில்லை.

